மூக கவி இயற்றிய

# ஸ்ரீ மூக பஞ்சசதீ

மூலமும் உரையும்

ஆசிரியர்

லக்ஷ்மி ஹாலாஸ்யம்





மூக கவி இயற்றிய

# ஸ்ரீ மூகபஞ்ச சதீ

ஆசிரியர்

**லக்ஷ்மி ஹாலாஸ்யம்**




கிரி

கிரி டிரேடிங் ஏஜென்ஸி பிரைவேட் லிமிடெட்

Book Name : SRI MOOKA PANCHASHATI
Language : Sanskrit - Tamil (with meaning)

1st Edition : June 2005
2nd Reprint : Oct. 2008
Pages : 328
Price : Rs.99.00
ISBN No. : 81-7950-386-0
Book Size : Demi
Paper : Maplitho
Typesetting,
Wrapper Design,
Published by : GIRI TRADING AGENCY PRIVATE LIMITED
*Regd. Office* : Modi Niwas, Opp.Post Office, Matunga, Mumbai - 19. © (022) 2414 1344
*Admn. Office* : 134 (58/2), T.S.V. Koil Street, Mylapore, Chennai - 4. © (044) 2464 3551



***Our Branches:***

**MUMBAI**

**DOMBIVILI (E) :** Seva Dham "A" Wing, Shripal Nagar, Rajaji Path, 4th Cross, Opp.: Ponnu Guruvayurappan Temple, (Madrasi Mandir), Dombivili (E), Thane Dist. 421 201. © (0251) 244 9585

**GOREGAON (W) :** 2, Siddhi Vinayak Apts, Sita Ram Mandir Road, Bangur Nagar, Mumbai-400 104 © (022) 2876 7298

**NERUL :** S.I.E.S. Engineering & Computer College Complex, Anjaneyar Temple, Navi Mumbai - 400 706. © (022) 3252 2491

**MATUNGA :** Basement Pal Residency, Below HDFC Bank, Bhandarkar Road, Matunga, Mumbai - 400 019. © (022) 2414 3140, 2412 2316, 2417 5401, 02, 03

**CHENNAI**

**MYLAPORE :** 14 (Old 10), Kapaleeswarar Sannadhi Street-600 004. © (044) 2464 0376

**NANGANALLUR :** 14 (Old 8), 10th Street, Near Raghavendra Temple-600 061. © (044) 2267 1335

**ADYAR :** Sri Anantha Padmanabhaswamy Temple, No.2, IInd Main Road, Gandhi Nagar-600 020. © (044) 2445 1976

**KANCHIPURAM :** (i) 5&146-B, Kamakshi Amman Sannadhi Street-631 502. © (044) 2722 4415 (ii) 68, Ekambaranathar Sannadhi Street-631 502. © (044) 2723 4414

**OTHER CITIES**

**COIMBATORE :** F6, T.M.House, 92, Thiruvenkatasamy Road, R.S.Puram-641 002. © (0422) 254 1523

**MADURAI :** 15, North Tower Street, (Opp. Mottai Gopuram)-625 001. © (0452) 262 8090

**SECUNDERABAD :** Sri Subramanya Swami Devalayam, Padmarao Nagar, Skandagiri-500 061. © (040) 2750 3046

**BANGALORE :** 23/3, 5th Cross, Sampige Road, Malleshwaram-560 003 © (080) 2356 3001

***E-mail : sales@giri.in*** ***Website : www.giri.in***

# முன்னுரை

ஸ்ரீ தேவியின் துதிகளில் முக்யமானது, அனைவராலும் அனுசந்தா னம் செய்யப்படுவது, ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமா, ஸ்ரீஸௌந்தர்யலஹரி, ஆர்யாத்விஸதீ, ஸ்ரீமூகபஞ்சசதீ, தமிழில் அபிராமி அந்தாதி, பதிகம் போன்றவை. மூக பஞ்ச சதீ என்ற இந்தத் துதி, தேவியைப்பற்றிய எல்லா விளக்கங்களையும், தேவி என்பது மாத்திரமன்று, சிவ, விஷ்ணு போன்ற எல்லா தேவதைக ளின் விளக்கங்களையும் அளிக்கிறது. மேலும், மந்த்ர சாஸ்த்ரம், அஷ்டாங்க யோகம், குண்டலினி ப்ரபோதம், அத்வைதானுபவம் போன்றவை ஸ்ரீவித்யா உபாஸகர்கள் உட்பட அனைவருக்கும் ஆங்காங்கு சுவையாகச் சொல்லப்படுகிறது. இந்தத் துதியை இயற்றிய ஸ்ரீமூக சங்கரரைப் பற்றி பல வரலாறுகள் உள்ளது.

காளிதாஸர், தண்டி, பவபூதி, வரருசி போன்ற புலவர்கள் 'நவ ரத்தினங்கள்' என்ற புகழுடன் போஜராஜன் (இவர் கவியுமான வார்) அரச வையில் போற்றப்பட்டார்கள். சிறந்த புலவர் யார்? என்ற ஒரு கேள்வி எழுந்தது. தேவியே தண்டியும், பவபூதியும் கவிஞர்கள் என்று கூறினாள். காளிதாஸர் அவசரப்பட்டு அப்படியென்றால் நான் யாரடி?' என்று ஏக வசனத்தில் ஏசினார். தேவியோ அமைதியுடன் 'நீயே நான்' என்று தனக் கும் காளி தாஸருக்கும் பேதம் இல்லை, என்று தத்வமஸி என்ற மகா வாக்யத் தின் பிரதியாக அவர் இருப்ப தாகக் கூறினாள். (இது பெறற்கரிய பேறு ஆகும்.) ஆயினும் காளிதாஸர் அவசரப்பட்டு அன்னையை அவ தூறாகப் பேசிய தற்கு தண்டனையாக மறுபிறவியில் ஊமை யாகப் பிறக்கும்படி சபித்தாள். காளிதாஸர் மனம் வருந்தி மன்னிக் கும்படி வேண்ட, தேவியும் மனமிரங்கி காளிதாஸர் ஊமையாகப் பிறந்தாலும் மீண்டும் பேச்சுத்திறன், கவிபாடும் திறன் அருளுவ தாக வரமளித்தாள்.

சக்தி பீடங்களில் முதன்மையான ஸ்ரீகாஞ்சி க்ஷேத்திரத்தில் ஓர் அந்தணர் குடும்பத்தில் ஊமையாகப் பிறந்தார் காளிதாஸர். மூகர் என்ற பெயருடனேயே பால்யத்திலிருந்தே ஸ்ரீகாமாக்ஷி சன்னிதியிலேயே அமர்ந்திருப்பார். பக்கத்தி லேயே ஓர் ஸ்ரீவித்யா உபாஸகரும் வாக்ஸித்தியை வேண்டி தேவியை வழிபட்டு வந்தார். ஓர் நாள் உபாஸகரைக் கடாக்ஷிக்கும் கருணை உள்ளத்துடன் ஸ்ரீகாமாக்ஷி அம்பாள் அவர் முன் பாலையாகத் தோன்றினாள். அம்பிகையின் அதிரூப ஸௌந்தர்யத்தைக் கண்ட ஊமை 'மூகர்' எனப்படுபவர், முன் ஜன்மாவில் 'சியாமளா தண்டகம்' போன்ற பல கவிகளைச் செய்த நினைவால் உந்தப்பட்டு, தேவியைப் பாட வாய் திறந்து 'பே,பே' என்று சப்தமிட்டார். ஊமைச் சிறுவனின் உளறல் சப்தம் கேட்டு

அந்த உபாஸகர் தியானத்திலிருந்து கண் விழித்து ஊமையில் அலறுதலுக்கு இந்தக் கன்னியே காரணமென்று அவளை அவ்விடம் விட்டுப் போகும்படி கத்தினார். அவர் பாக்யம் அவ்வளவு தான்! 'சுத்த வித்யாங்குராகார த்விஜபங்க்த்தி த்வயோஜ்வலா' என்ற சுத்த வித்தையே முளைத்ததைப் போல் இரண்டு பதினாறு கொண்ட பல்வரிசைகளில் ஊறி வந்த தாம்பூல ரஸத்தை தேவி மூகரின் வாயில் சேர்த்தாள். மூகரின் வாயிலிருந்து கவிதை பெருக்கெடுத்தது, மூகர் வாய் திறந்து 'மூக பஞ்சசதீ' என்ற இந்தக் கவிதையைப் பாடினார். 'பஞ்சதசீ' என்ற தேவியின் ஸ்ரீவித்யா மந்த்ரமே 'பஞ்ச சதீ'யாக விளக்கம் பெற்று மறு உருக்கொண்டது போல் தோன்றுகிறது. இவரே பின்னர் கி.பி. 398ம் ஆண்டில், ப்ரம்ம சர்யத்திலிருந்தே, காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராசாரியரிடம் சன் யாஸ தீக்ஷை பெற்று மூக சங்கரேந்திரர் என்ற பெயருடன் 20–வது ஆசார் யராக 39 ஆண்டுகள் திகழ்ந்து தாத்ரு வருஷம் (437 கி.பி.) ச்ராவண பௌர்ணமியன்று ஸித்தி அடைந்ததாக வரலாறு கூறுகிறது.

கருணையே காஞ்சி காமாக்ஷி என்பதை கிருதயுகத்தில் 2000 ஸ்லோகங்களால் துர்வாஸமுனிவரும், திரேதாயுகத்தில் 1500 ஸ்லோகங்களால் பரசுராமரும், த்வாபரயுகத்தில் 1000 ஸ்லோகங்களால் தௌம்யரிஷியும், கலியுகத்தில் 500 ஸ்லோகங்களால் மூகசங்கரரும் போற்றியுள்ளார்கள். ஆதியில் பரமேஸ்வரன் 'காமேஸ்வரபட்டாரகர்' என்ற திருநாமம் தாங்கி, லலிதா மஹாத்ரி புரசுந்தரி பராபட்டாரிகா என்ற தீக்ஷா நாமத்தை காமாக்ஷி தேவிக்கு அளித்து ஸ்ரீவித்யா உபதேசம் செய்தார். சிறந்த ஸ்ரீவித்யா உபாஸகரான துர்வாஸ முனிவரின் பத்ததி, அதாவது பூஜாக்ரமம் காஞ்சி காமாக்ஷி கோவிலில் அனுஷ்டிக்கப்படுகிறது. துர்வாஸ முனிவர் 'க்ரோதபட்டாரகர்' ஆவார். ச்ருங்காரரஸம் சொட்டச் சொட்ட கவிகள் புனைந்ததால் காளிதாஸருக்கு ச்ருங்கார பட்டாரகர் என்ற பட்டம் கிடைத்தது. காளிதாஸரின் மறுபிறவியான மூகரின் வாயில் வந்த 'மூக பஞ்ச சதீ'யும் அதனால் ச்ருங்கார ரஸம் நிரம்பிய பாடல்களாவே இருக்கிறது போலும். தமிழில் ஐம்பெருங்காப்பியங்களை அணிகளாக்கித் தமிழ்த் தாய்க்கு செந்நாப் புலவர்கள் அணிவித்தார்கள். அதுபோல் ஸ்ரீலலிதா மஹாத்ரிபுர சுந்தரி பராபட்டாரிகாவான காமாக்ஷி தேவிக்கு நாமும் அணிவிக்கலாமா? 'ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமா' என்ற துதியை தேவிக்கு, தலைக்கிரீடம், நெற்றிச்சுட்டி சூரிய, சந்திரப்ரபை, ராக்கோடி, குஞ்சலம், ஜடைவில்லை, பூத்தைத்தஜடை, மலர்க்கூந்தல் என்று ஆக்குவோம்.

'ஸ்ரீஸௌந்தர்யலஹரி'யை காதணிகளான தாடங்கம், மாட்டல், ஜிமிக்கி, முருகு, வாளி, பச்சைக்கல், மூக்கில் மூக்குப்பொட்டுகள், புல்லாக்கு, நத்து,

கன்னத்தில் மகரிகா பத்திரம், உச்சித்திலகம், ஸீமந்தசிந்தூரம், நெற்றிப்பொட்டு, திருஷ்டிப்பொட்டு, வாயில் தாம்பூலம்;

'ஆர்யாத்விஸதீ' என்னும் ஸ்ரீநகர வர்ணனை: இந்தத் துதியை கழுத்தில் முத்து, ரத்னமாலைகள், பலவித நெக்லேஸ், அட்டிகை பதக்கம், காரை, காசுமாலை, ப்ரதமபூஷணம், ஏகாவளி, மூன்றுவடம் முகப்புடன் கூடிய சங்கிலி என்று ஆக்குவோம்.

'ஸ்ரீமூக பஞ்சசதீ' இதை இடுப்பில் ஒட்யாணம், மேகலை, மேல் கைகளில் வங்கீ, நாகவொத்து, கைகளில் நவரத்னமிழைத்த வளையல்கள், தங்கவளை, கண்ணாடி வளை, விரல்களில் மோதிரம், மருதாணி மற்றும் அபிராமி பதிகம், அந்தாதி, நவாவரணப்பாடல்கள், கால்களில் தண்டை, கொலுசு, சதங்கை, இசைபாடும் நூபுரம், விரல்களில் மெட்டி,மருதாணி இன்னும் எவ்வளவு எவ்வளவோ! என் குருவின் கடாக்ஷத்தாலும், என்னை அனவரதமும் காத்தருளும் அகிலாண்டேச்வரியின் கருணையாலும், இவ்வாறு என்னை எழுத ஊக்குவித்த 'திரு. ஐயா' என்ற விஜயஹரண் அவர்களாலும், ஏதோ எழுதி உள்ளேன். வாசகருகலம் பிழைகளைப் பொறுத்து ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இப்படிக்கு
- லக்ஷ்மி ஹாலாஸ்யம்

முகவரி :
42, சைதாப்பேட்டை ரோடு
வடபழனி, சென்னை - 600 026.
தொலைபேசி : 23722232

# ஆசி உரை

ஸ்ரீகுருப்யோ நம:

**ஸத்க்ருத தேசிக சரணா:**
**ஸபீ₃ஜ நிர்பீ₃ஜ யோக₃ நிஸ்ரேண்யா:**
**அபவர்க₃ ஸௌத₄ வலபீ₄ம்**
**ஆரோஹத்யம்ப₃ கேபி தவ க்ருபயா**

முற்பிறவியில் புண்ணியம் செய்த புண்ணியசாலிகளே, இப் பிறவியில் இறைவனை எண்ணித் துதித்துப் பாடி மகிழ்ச்சி அடைய முடியும். தெய்வ கடாக்ஷத்தால் மட்டுமே சித்தசுத்தி, ஞானம், அன்பு உடையவரான சத்குரு கிடைப்பார். ஸத்குரு வாயிலாக மந்த்ர உபதேசங்கள் பெற்று தெய்வத்தை அடைய முடியும். அவ்வாறே சிரத்தை, ஆர்வம் பணிவு உடைய சிஷ்யர்கள் கிடைக்க குருவும் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அந்த வகையில் என் சிஷ்யர்கள் என்னிடம் தாய்ப்பாசத்துடன் அன்பு செலுத்துகிறார்கள். இவ்வாறான பல சிஷ்யர்களில் ஒருவளும், பக்தியுடன் அரிய, பெரிய தத்துவ நூல்களைக் கற்றவளுமான ஸ்ரீமதி லக்ஷ்மி ஹாலாஸ்யம் 'ஸ்ரீமூக பஞ்ச சதீ' என்ற உயர்ந்த நூலுக்கு விளக்கம் எழுதி இருக்கிறாள். இவள் சிறு வயது முதலே தேவியின் பக்தியில் மூழ்கி 'ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமா' 'ஸ்ரீஸௌந்தர்ய லஹரி' என்ற தேவியின் துதிகளுக்குத் தேன் போன்ற தமிழில் தேவாரம், திருவாசகம், அபிராமி அந்தாதி, பதிகம், திருமூலர், திருமந்திரம், வள்ளலார் பாடல்கள் மற்றும் சங்க காலப் பாடல்களிலிருந்தும் விளக்கங்கள் எழுதி புத்தகமாக வெளியிட்டிருக்கிறாள். 'ஸ்ரீ மூக பஞ்ச சதீ' என்ற இந்தத் துதியானது ஸ்ரீகாமாக்ஷி பராபட்டாரிகா என்ற 'ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரசுந்தரி பராபட்டாரிகா'வின் ரூப, லாவண்யம், கருணை, பாததாமரைகளின் சிறப்பு, வரங்களை வாரி வழங்கும் வள்ளண்மை முடிவாக தேவியுடன் ஒன்றாகும் ஸாயுஜ்யம் இப்படியாக தேவியின் அனந்த கல்யாண குணங்களை விவரிப்பதுடன், நம்மை ஸ்ரீதேவியின் வாஸஸ்தானமான ஸ்ரீபுரத்திற்கே இட்டுச் சென்று விடுகிறது. லக்ஷ்மி இந்த விளக்கங்களை ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமா, ஸ்ரீசௌந்தர்யலஹரி மற்றும் பல துதிகளிலிருந்தும் திரட்டி, நமக்குத் திரட்டுப் பாலாகவே அளித்திருப்பது எனக்குப் பெருமை சேர்க்கிறது. இதுபோல் இன்னும் பல புத்தகங்கள் எழுத வேண்டும் என்ற ஆசியை வழங்குகிறேன். ஸ்ரீவித்யா உபாஸகர்கள் மட்டுமல்லாமல் அனைவரும் இந்த நூலைப் படித்து எல்லா நன்மைகளையும் அடைய வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவியைப் பிரார்த்திக்கிறேன்.

ஞானாம்பிகா ராஜேஸ்வரி
(Rajeswari sarma)

# அணிந்துரை

ஸமஸ்க்ருத ஸ்லோகத்துக்கு உரையெழுதுவதென்பது பாஷையில் பாண்டித்யம் உள்ளவர்களுக்கு மிகவும் சுலபமான காரியம். ஆனால் எந்த மொழி பெயர்ப்பிலும் மூலத்தின் கருத்தும் அழகும் பின்னமாகாமல் வார்த்தையின் தெளிவு மலர்ச்செண்டைப் போல் மனதை க்ரஹிக்க வேண்டும். மூலத்தை எழுதியவரின் மனோலயத்தில் மொழிபெயர்ப்பாளர் ஒன்றினால்தான் இது ஸாத்தியமாகும். அந்த அளவு மனங்கரைந்து உருக வேண்டும். கருத்தைக் கொண்டு வந்து விட்டாலும் அதிலுள்ள கற்கண்டு ரசத்தை அனுபவிக்க முடியவில்லையே என்று சில வேளைகளில் மொழிபெயர்ப்பாளர் முனகுவது நமக்குக் கேட்கிறது.

ஊறஊறத்தான் எந்த ருசியும் அதிகரிக்கும். அதுவும் அம்பாளுடைய கருணா கடாக்ஷத்தை அனுபவிப்பதென்றால் அந்த ஆனந்தமே தனிதான். சில ஸமயங்களில் சில காரியங்களைச் செய்து முடித்து விட்டு கடைசியில் அதைப்பற்றி எண்ணிப்பார்க்கும் போது, "இவ்வளவு ஆபூர்வமாக என்னாலா செய்ய முடிந்தது?" என்று நமக்கே ஆச்சரியமாக இருக்கும். ஆம்! உண்மைதான். ஸங்கல்பம் செய்து கொள்வதற்கும், தளராமல் அந்தக் காரியத்தில் ஈடுபடுவதற்கும் மட்டுமே நம் புத்தியை ஏகாக்ர சித்தத்தில் வைத்துக் கொள்வதற்கு நமக்குத் தெரிந்திருக்கிறது.

அனாயாஸமான சொற்பிரவாகங்களையும், அப்படியே நம்மைக் கட்டிப் போட்டுவிடக் கூடிய அர்த்த பாவங்களையும் அம்பாள்தான் நமக்கு அள்ளிக் கொடுக்க வேண்டும். எழுத்து அவளுடையதாகி விடும்போது அந்த எழுத்தாளனே அவள் ரஸிகனாகி விடுகிறான். அது மட்டுமல்ல, மொழி பெயர்ப்பு நூல் எழுதும் போது, விளக்கங்களிலும் விரிவாக்க உரையிலும், பல நூல்களிலும் மேற்கோள்கள் எடுத்துக் காட்டுவது, விஷயத்தின் ஸாராம்சத்தை எளிதில் கிரஹித்துக் கொள்ளப் பெரிதும் உதவும். அந்த வகையில், லலிதா ஸஹஸ்ரநாமம், ஸௌந்தர்யலஹரி, உபநிஷதங்கள் மட்டுமின்றி தமிழ் வேதங்களான திருமூலர் திருமந்திரம், அபிராமி அந்தாதி, அருணகிரிநாதர் திருப்புகழ், ஔவையாரின் பாடல்கள், தாயுமானவர் பாடல்கள் இந்த நூலில் மேற்கோள்கள் எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கின்றன.

"பஞ்சதச வர்ணரூபம் கஞ்சன காஞ்சீ விஹார தௌரேயம்
பஞ்ச சரீயம் சம்போர் வந்தன வைதக்த்ய மூலமவலம் பே"

இந்த ஐம்பத்தெட்டாம் ஸ்லோகத்தின் விளக்கம் மிகவும் அபூர்வமாக இருந்தது. ஒரு சொல்லின் அர்த்தத்தை எழுதும் போது அதன் தொடர்பான பல ஆயிரம் எண்ணங்களும் அலைமோதிப் பாய்ந்து வருகிறதே அந்த நயமும் வர்ணனைகளுமே அலாதி. முடிவில், "இதுபற்றி எழுதினால் விரியும்", என்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்கிறார் ஆசிரியர். பல நூல்களைப் படித்தறியும் வாய்ப்பு எல்லோர்க்கும் அவ்வளவு எளிதில் கிடைத்து விடுவதில்லை. ஆகையால் அறிந்ததை எல்லோருடனும் பகிர்ந்து கொள்ள ஆசிரியர் எந்தக் கட்டுப்பாடும் வைத்துக்கொள்ள அவசியமில்லை. திருமதி. லக்ஷ்மி ஹாலாஸ்யம் அம்பாளிடம் ஆழமான அன்யோன்யமான பக்தி கொண்டவர். அவர் பேச்சிலுள்ள சாந்தமும் இனிமையும் அவரது எழுத்திலும் பிரதிபலிக்கிறது. அவர் இன்னும் பல பாஷ்யங்களும் பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டுமென ஆசீர்வதிக்கிறேன்.

— மதி ஒளி ஸரஸ்வதி

# என்னுரை

என் குரு பூஜ்யஸ்ரீ ஞானாம்பிகா ராஜேஸ்வரி அவர்களின் ரக்த சுக்ல சரணங்களில் அடியேன் லக்ஷ்மி ஹாலாஸ்யம் பன்முறை வணங்கி 'ஸ்ரீ மூகபஞ்ச சதீ' என்ற மிகப் பெருமை வாய்ந்த ஈடு, இணையற்ற இந்த நூலை எழுதத் தொடங்கினேன். ஊமை கானம் பொழிய முயல்வது போலும், நொண்டி மலையை நடந்து கடப்பது போன்றதுமான இந்த முயற்சி என் குரு மாதாவின் ஆசிகளாலேயே நிறைவேறியது. என் குரு மாதா அவர்கள் ஸ்ரீ மூக பஞ்ச சதீ ஸ்லோகங்களை ராகப்படுத்தி வெகு இனிமையாகப் பாடுவதைக் கேட்டுத் தான், அடியேன் அந்த அர்த்த புஷ்டியான கம்பீரம், மாதுர்யம் இவற்றில் லயித்துத் தான், இந்தப் புத்தகத்தை எழுதத் தொடங்கினேன். என்குரு எனக்கு வழி காட்டியதால்தான் "ஸ்ரீவித்தை" என்னும் மிகப்பெரிய கடலின் சில துளிகளை ஸ்பரிசிக்கும் பாக்யம் கிடைக்கப் பெற்று இப்புத்தகத்தின் ஒரு சில விஷயங்களையாவது நான் விளக்க முற்பட்டேன் என்று கூறினால் அது மிகையாகாது. மீண்டும் என் குரு சரணங்களில் நமஸ்கரித்து நன்றி நவில்கிறேன்.

சிறந்த ஸ்ரீவித்யா உபாஸகரும், அமெரிக்காவில் ராசெஸ்டரில் மிகப்பெரிய அளவில் 'ஸ்ரீராஜ ராஜேஸ்வரி' கோவில் அமைத்துள்ளவருமான "சைதன் யானந்தநாத" என்ற விஜயஹரன் அவர்கள் என்னை இப்புத்தகம் எழுதும்படி ஊக்குவித்ததாலேயே நான் எழுத முற்பட்டேன். ஏற்கனவே 'ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமா' 'ஸ்ரீஸௌந்தர்ய லஹரி' என்ற இரு புத்தகங்கள் அடியேனால் எழுதப் பட்டது, இவ் விரண்டு புத்தகங்களையும் எல்லா உதவியும் செய்து வெளியிட்ட பெருமை இவரையே சாரும். அன்னாருக்கு என் மனப்பூர்வமான நன்றிகள்.

நம் அனைவராலும் 'ஸ்ரீஅம்மா' என்றும், 'அக்கா' என்றும் அன்புடன் அழைக்கப்படும், நமக்கு கண்கண்ட தெய்வமாக விளங்கும் திருமதி. மதிஒளி ஸரஸ்வதி அவர்கள் இந்நூலுக்கு முகவுரை வழங்கியது நம் பாக்யமாகும். இவர் கட்டுவித்த ஸ்ரீகிருஷ்ணர் கோவில் மைலாப்பூர் ரங்கா ரோட்டில் விளங்குகிறது. நந்தலாலா சிறுவர் சங்கம், மகளிர் தீப வழிபாட்டு மன்றம் மற்றும் கல்வித்துறை, மருத்துவம் போன்ற பல இயக்கங்கள் இக்கோவிலில் நடைபெறுகிறது. இவ்வளவு வேலைகளுக்கும் இடையில் எனக்காக நேரம் ஒதுக்கி இப்புத்தகத்தின் முகவுரை எழுதி அளித்ததற்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். அக்கா அவர்கள் கொடுத்த தைரியத்தில் தான் நானே இது போன்ற புத்தகங்கள் எழுத முற்பட்டேன். என் பணிவான நமஸ்காரங்களையும், நன்றியையும் கூறிக் கொள்கிறேன்.

இது போன்ற புத்தகங்கள் எழுதும் போதெல்லாம் எனக்கு யோஜனைகள் கூறி, சில சம்சயங்களை அகற்றி மிகவும் உதவி புரிந்த 'நந்தலாலா' அறங் காவலரான, திரு.லக்ஷ்மி நாராயணன் (திரு.கண்ணாமணி) அவர்களுக்கு என் நன்றி உரித்தாகட்டும்.

இப்புத்தகக் கையெழுத்துக் காப்பியை பிரஸ்ஸில் சேர்த்து, இது அச்சேறு வதற்கு சகல உதவிகளையும் செய்த டாக்டர். மத்வநாத் தம்பதியினருக்கு மிகுந்து நன்றி கூறிக்கொள்கிறேன்.

கிரி அச்சகத்தார் மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டு இப்புத்தகத்தை அச்சிட்டு நம் அனைவரின் கைகளிலும் தவழச் செய்ததற்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

— லக்ஷ்மி ஹாலாஸ்யம்

# ஸ்ரீ மூகபஞ்ச சதீ

## 1. ஆர்யா சதகம்

कारणपरचिद्रूपा काञ्चीपुरसीम्नि कामपीठगता ।
काचन विहरति करुणा काश्मीरस्तबककोमलाङ्गलता ॥

காரணபரசித்ரூபா காஞ்சீபுர
ஸீம்னி காமபீடகதா ।
காசன விஹரதி கருணா காச்மீர
ஸ்தபக கோமலாங்கலதா ॥

'காரண பரசித்ரூபா' வான தேவி 'கார்ய காரண நிர்முக்தா'வாக வும் ஆகிறாள். 'ஸத்-சித்-ஆனந்தம்' எல்லா உயிரிலும் ஒன்றியும், எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டும், மேலான, அதீதமான பரப்ரும்மமாகவும் விளங்குகின்றாள். பூமிதேவியின் நாபி ஸ்தானமான காஞ்சீ என்னும் நகரத்தில் காம பீடத்தில் குங்குமப்பூங் கொத்துப்போல் கருணையை வாரி வழங்கிக கொண்டு அனேக திருவிளையாடல் களைப் புரிந்து கொண்டு விளங்குகிறாள். குவித்து வைத்த குங்குமமோ, கொட்டி வைத்த குங்குமப்பூக் குவியலோ என்பதாக மூகர் நம் மனக்கண் முன்பு தேவியை நிறுத்துகிறார். இப்படி ஒரு மனோ பாவம் ஏற்பட் டால் தான், அவருடன் பின்னால் வரும் ஐநூறு ஸ்லோகங்களிலும் தொடர்ந்து செல்ல முடியும். வாருங்கள்! மணிக்கதவம் திறந்துள்ளது. மூகரின் கைபற்றி நாம் அனைவரும் காஞ்சி என்னும் மணிமாளிகையின் உள்ளே அடிமேல் அடி எடுத்து வைப்போம்.(1)

कंचन काञ्चीनिलयं करधृतकोदण्डबाणसृणिपाशम् ।
कठिनस्तनभरनम्रं कैवल्यानन्दकन्दमवलम्बे ॥

கஞ்சன காஞ்சீநிலயம் கரத்ருத
கோதண்டபாண ஸ்ருணி பாசம் ।
கடின ஸ்தநபரநம்ரம் கைவல்
யானந்த கந்த மவலம்பே ॥

காஞ்சீபுரமெனும் க்ஷேத்திரத்தையே தனது இருப்பிட மாகக் கொண்டு, தனது நான்கு திருக்கரங்களிலும் கரும்பு வில், மலரம்பு, பாசம், அங்குசம் தரித்து, கனத்த மார்பகங்களால் சிறிது சாய்ந்த திருமேனியுடன், மோக்ஷ மெனனும் ஆனந்தத்தை அளிக்கும், மனதால் எண்ணமுடியாத அந்தப்

பேரின்பத்தை உள்ளத்தால் பற்றிக் கொள்கிறேன். சென்னை, திருவல்லிக் கேணியில் அனுமந்த லாலா தெருவில் 'காமகலா' கோவிலில் 'தேவி த்ரிபங்கவடிவாக' கொஞ்சம் சாய்ந்த நிலையில் உள்ளதைக் காணலாம். காரண-பர-சித்ரூபா, சத்தை விட்டுப் பிரியாத சித்து இந்தப் பாடலில் ஆனந்தம். எனவே தேவி 'ஸத்-சித்து-ஆனந்தம்' என்பது பெறப்படுகிறது. தேவி ஸ்ரீவித்யா ஸ்வரூபிணி. எனவே முதல் இரண்டு பாடல்களும் மன்மத வித்தை யான 'க 'வில் ஆரம்பமாவது மகிழ்ச்சி தருகிறது.(2)

चिन्तितफलपरिपोषणचिन्तामणिरेव काञ्चिनिलया मे ।
चिरतरसुचरितसुलभा चित्तं शिशिरयतु चित्सुखाधारा ॥

சிந்தித பல பரிபோஷண
சிந்தாமணிரேவ காஞ்சி நிலயாமே |
சிரதர ஸுசரிதஸுலபா சித்தம்
சிசிரயது சித்ஸுகாதாரா ||

எனக்கு நினைத்த பலன்களை அளிப்பதில் தேவி சிந்தாமணி ரத்னமா கிறாள். ஞானானந்தரூபிணி, என் மனதைக் குளிரச் செய்யும் காமாக்ஷிதேவியே ஸகல ஜகத்துககும் இருப்பிடமானவள். அம்ருத மதனம் செய்த போது சிந்தாமணி, கல்பகவிருக்ஷம், காமதேனு, சந்திரன் அம்ருத கலசம், தன்வந்திரி, மஹாலக்ஷ்மி மற்றும் பல மங்கலப் பொருள்கள் வெளி வந்ததாகக் கூறு கிறோம். சிந்தாமணி என்னும் ரத்தினக் கல் நினைத்ததை அளிக்கவல்லது. தேவி யின் வாஸ ஸ்தானமோ சிந்தாமணிக்கற்களாலேயே கட்டப்பட்ட சிந்தாமணி கிரகமாகும். ஒரு சிந்தா மணியே நினைத்ததை அளிக்கும் எனும் போது சிந்தா மணி மாளிகையில் வசிக்கும் தேவி நமக்கு எப்படிப்பட்ட பேறுகளை அருள் வாள்? இதை நம்மால் அளவிட முடியாது. நம் சிந்தையில் தேவி வந்து அமர்ந்து விட்டால் அதற்கு மேல் நமக்குச் சிந்திக்க சிந்தனையே இருக்காது. சிந்தையின் மணியே சிந்தாமணி ஆகும். (3)

कुटिलकचं कठिनकुचं कुन्दस्मितकान्ति कुङ्कमच्छायम् ।
कुरुते विहतिं काञ्च्यां कुलपर्वतसार्वभौमसर्वस्वम् ॥

குடில கசம் கடினகுசம் குந்தஸ்மித
காந்தி குங்குமச்சாயம் |
குருதே விஹ்ருதிம் காஞ்ச்யாம் குலபர்வத
ஸார்வபௌம ஸர்வஸ்வம் ||

பெரிய மலைகளுக்கும் சக்கரவர்த்தியான ஹிமவானின் சகல சௌபாக்ய செல்வ மகளான ஸ்ரீதேவி சுருண்ட கூந்தல், கடினமாக ஸ்தனங்கள், முல் லையை நிகர்த்த புன்சிரிப்பு, சிவந்த மேனி இப்படி உயர்ந்த சாமுத்திரிகா லக்ஷ ணங்களுடன் காஞ்சி யில் விளங்கு கிறாள். தேவியை தியானிக்கும் போது சிவப்பு புஞ்ஜத்தில் தியானிக்க வேண்டுமென்று பெரியோர் கூறுகிறார்கள். இதுபோல் தேவியின் செம்மை நிறச்சிறப்பை லலிதா ஸஹஸ்ரநாமா, ஸௌந்தர்ய லஹறி, அபிராமி அந்தாதி போன்ற துதிகள் வற்புறுத்துகிறது. (4)

पञ्चशरशास्त्रबोधनपरमाचार्येण दृष्टिपातेन ।
काञ्चीसीम्नि कुमारी काचन मोहयति कामजेतारम् ॥

பஞ்சசர சாஸ்த்ரபோதன
பரமாசார்யேண த்ருஷ்டிபாதேன |
காஞ்சீஸீம்னி குமாரி காசன
மோஹயதி காம ஜேதாரம் ||

பஞ்சபாணனான மன்மதனது ச்ருங்காரசாஸ்திரத்தை கற்பிப்பதில் சிறந்த ஆசாரியனாக ஸ்ரீகாமாக்ஷி தேவி, ஒரு காலத்தில் காமனை எரித்த பரமேஸ்வர னையே மோஹமடையும்படி செய்கிறாள். ஹரநேத்ராக்னி ஸந்தக்த காமஸஞ் ஜீவ நௌஷதி. என்றபடி தன் அக்னிநேத்ரத்தால் சிவன் எரிக்க, தேவி தன் சந்த்ர நேத்ரத்தால் அம்ருதத்தைப் பொழிந்து மன்மதனை உண்டாக்கினாள். சிவ, சக்தி என்ற ரூபத்தில் தேவி நம் அனைவருக்கும் தாயாக வேண்டிய நிலையில் உள்ளதால், உலகை உண்டாக்கும் பணி தேவியைச் சார்ந்துள் ளதால், மன்மதனது ச்ருங்காரத்தைக் கற்பிக்கும் ஆசாரியனாகவும், மோக்ஷக் கதவைத்திறக்கும் ஞானாம் பிகையாகவும் விளங்குகிறாள். காமனை உயிர்ப்பித்தாள். உலகம் உண்டானது. (5)

परया काञ्चीपुरया पर्वतपर्यायपीनकुचभरया ।
परतन्त्रा वयमनया पङ्कजसब्रह्मचारिलोचनया ॥

பரயா காஞ்சிபுரயா
பர்வதபர்யாய பீனகுசபரயா |
பரதந்த்ரா வ்யமனயா பங்கஜ
ஸப்ரஹ்மசாரி லோசனயா ||

தாய் தன் ஸ்தனங்களின் பாலை ஊட்டிக் குழந்தையை வளர்க்கிறாள். 'ஆபீனஸ்தன...' என்றபடி தேவியை த்யானம் செய்யும்போது, நம்மை

யெல்லாம் பாலூட்டி வளர்க்கும் உலகத்தாயாக த்யானிக்கிறோம். அது உடம்பை மாத்திரம் வளர்க்கும் பால் அன்று; ஞானத்தையும் ஊட்டும் பால் ஆகும். தேவியின் கண்களைத் தாமரைக்கு ஒப்பிடுகிறோம். அபிராமிபட்டர் தேவியைத் தாமரைகளாகவே பட்டியலிடுகிறார். 1. கருணை நிறைந்த விழித் தாமரைகள் 2. முகம் என்னும் தாமரை 3. கைகள் என்ற தாமரை 4. பாத தாமரை 5. என் மனத்தாமரை 6. தாமரை மொட்டென நிற்கும் ஸ்தனங் கள் 7. தேவி அமர்ந்திருக்கும் செந்தாமரை: இவர் இப்படி ஏழு தாமரை ஸ்தானங் களை சொன்னதும் நமக்கு ஆதார கமலங்களின் ஞாபகம் வருகிறது. (6)

ऐश्वर्यमिन्दुमौलेः ऐकात्म्यप्रकृति काञ्चिमध्यगतम् ।
ऐन्दवकिशोरशेखरं ऐदंपर्यं चकास्ति निगमानाम् ॥

ஐச்வர்ய மிந்து மௌலே: ஐகாத்ம்ய
ப்ரக்ருதி காஞ்சி மத்யகதம் |
ஐந்தவகிசோர சேகரம், ஐதம்பர்யம்
சகாஸ்தி நிகமானாம் ||

காஞ்சியில் மத்யபாகத்தில் ஸ்ரீகாமாக்ஷிகோவில் அமைந் துள்ளதால், பாக்கி எல்லாக் கோவில்களின் தேவதைகளும் காமாக்ஷி தேவியைச் சுற்றி வருவது வழக்கம். ப்ரும்மத்தோடு அபேதமான ப்ரகிருதி க்ஷேத்ரமான காஞ்சியில் விளங்கும் தேவி, மூன்றாம்பிறைச் சந்திரனைத் தலையில் அணிந்து விளங்கும் சந்த்ரமௌலியான பரமேச்வரனின் சம்பத்தாக சகல வேதங்களின் தாத்பர்யமாக விளங்குகிறாள். ரிக், யஜுஸ், ஸாம, அதர்வ என்ற வேதங்கள் முறையே கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு திசைகளில் சூழ்ந்திருக்க நடுவில் லலிதா மஹாத்ரி புரசுந்தரி அமர்ந்திருககிறாள். மேலே வேத ஸாரமான உபநிஷத்துக்கள் அவை தேவியையே ப்ரதி பாதனம் செய்தவதாகக்கூறுகிறோம். இதனையே அபிராமி பட்டரும் 'அருமறைக்கு முன்னாய் நடு எங்குமாய் முடிவாய முதல்வி," என்று குறிப்பிடுகிறார். (7)

श्रितकम्पासीमानं शिथिलितपरमशिवधैर्यमहिमानम् ।
कलये पाटलिमानं कञ्चन कञ्चुकितभुवनभूमानम् ॥

ச்ரிதகம்பா ஸீமானம் சிதிலித
பரமசிவ தைர்ய மஹிமானம் |
கலயே பாடலிமானம் கஞ்சன
கஞ்சுகித புவன பூமானம் ||

கம்பா நதிக்கரை, காஞ்சீ காமாக்ஷி, பரமசிவனின் மன உறுதி யைக் குலைத்த பெருமை உடையவள். காமனை எரித்த காமாரியின் துணை கொண்டே உலக சிருஷ்டிக்காக காமனை உயிர்ப்பித்த பெருமை தேவி காமா க்ஷிக்கே உரியது. தேவியின் செம்மை நிறம் இப்பாடலிலும் பேசப்படுகிறது. சிருஷ்டி, கருணை இரண்டுமே செம்மை நிறம் தான். (8)

आदृतकाञ्चीनिलयां आद्यां आरूढयौवनाटोपाम् ।
आगमवतंसकलिकां आनन्दाद्वैतकन्दलीं वन्दे ॥

ஆத்ருத காஞ்சிநிலயாம் ஆத்யாமாரூட
யௌவனா டோபாம் |
ஆக மவதம்ஸகலிகா மானந்தா
த்வைத கந்தலீம் வந்தே ||

'நகரேஷு காஞ்சீ' என்ற சிறப்புப்பெற்ற காஞ்சியையே தனதிருப்பிடமாக ஸ்ரீவித்யா ஸ்வரூபிணியான ஸ்ரீலலிதா மஹாத்ரிபுரசுந்தரி பரா பட்டாரிகா ஆக்கிக்கொண்டு ஸ்ரீகாமா க்ஷி தேவி, தன் நாலுகைகளிலும் பாச, அங்குச, தனு, புஷ்ப பாணத்தைத் தாங்குவதால், தன் திருவடிகளாலேயே வேண்டுவோர்க்கு, வேண்டியவற்றிற்கு மேலேயே லாரி வழங்குவதாக 'ஆதி சங்கரர்' ஸௌந்தர்யலஹரியில் கூறுகிறார். பத்மாஸனத்தில் அமர்ந்து ஜீவர்களுக்கு அருளை வாரி வழங்கும் அம்பிகை, வேதமாதா தலையில் சூட்டிக் கொள் ளும் மொட்டு, அது ஒரு அழகு, மலர்ந்த மலர் அதுவும் அழகு தான். மந்தத்ரங்கள் சூக்ஷ்மமானது மொட்டுப் போன்றது. மனனம் செய்தால் மணத்தைப் பரப்பும் அந்த சைதன்யத்தை நாம் அனுபவிக்கலாம். தேவி அத்வைத தளிர்; சிவனுடன் ஒன்றி நிற்கும் போது அங்கு துவைதம் இல்லை. தளிர் என்பது செடியில் அப்பொழுது துளிர்த்த இலை. தேவியோ 'அபி-நவ-குல-சுந்தரி' நவ-புதிய, ஒன்பது இருபொருள்படும். வேதம் ஈஸ்வரரின் மூச்சுக்காற்று. தேவியோ அவர் மூச்சாகவே இருக்கிறாள். (9)

तुङ्गाभिरामकुचभरशृङ्गरितमाश्रयामि काञ्चिगतम् ।
गङ्गाधरपरतन्त्रं शृङ्गाराद्वैततन्त्रसिद्धान्तम् ॥

துங்காபிராம குசபர ச்ருங்காரித
மாச்ரயாமி காஞ்சிகதம் |
கங்காதர பரதந்த்ரம் ச்ருங்காராத்வைத
தந்த்ர சித்தாந்தம் ||

'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து' மணிவாசக் பெருமான் வாக்கு; நமக்கெல்லாம் பாலூட்டுவதால் ரமணீ யமான உன்னதமான ஸ்தனங்களை உடைய தேவி கங்காதர ரான பரமசிவனைப் பரவசப்படுத்தும் ச்ருங்கார அத்வைத சாஸ்த்ரஸித் தாந்த ரூபி; அந்த தேவியை நாம் வணங்குவோம். தேவியின் ஸ்தன்ய பானத்தினால் பெறும்பேறுபெற்ற திரு ஞானசம்பந்தர் போன்ற ஞானிகளை நாம் நினைவு கூர்வோம். (10)

काञ्चीरत्नविभूषां कामपि कंदर्पसूतिकापाङ्गीम् ।
परमां कलामुपासे परशिववामाङ्कपीठिकासीनाम् ॥

காஞ்சி ரத்னவிபூஷாம் காமபி
கந்தர்ப ஸூதிகா பாங்கீம் |
பரமாம் கலாமுபாஸே பரசிவ
வாமாங்க பீடிகாஸீனாம் ||

காஞ்சீ நகரத்திற்கு ஓர் ரத்னாபரணமாகவும், மன்மதனை உஜ் ஜீவனம் செய்த கடைக்கண் நோக்குடன் (இந்த விஷ யத்தை மூகர் அனேகமாக எல்லாப் பாடல்களிலும் கூறுகிறார்.) பரமசிவனின் இடது மடியென்னும் பீடத்தில் வீற்றிருக்கும் சித்கலா ஸ்வரூபத்தை உபாஸிக்கிறேன். சிவனையும் தன் சக்திக்கு உட்படுத்த முடியும் என்ற ஆணவம் அழிந்து தெய்வத் தன்மை யுடன் தேவி காமனை உண்டாக்கினாள். ஸுதா ஸிந்த்தோர்மத்யே ஸௌந்தர் யலஹரி 8-வது பாடல், 3-வது வரியில் 'சிவாகாரே மஞ்சே பரமசிவ பர்யங்க நிலயாம்' சிவனின் மடி என்ற மெத்தையில் எழுந்தருளி இருக்கும் 'சித்' கலா வானதேவி ப்ரும்மத்தின் 'சித்' என்ற பாகம், ஜீவர்களின் அந்தக்கரண சைதன்யம் இரண்டுமே தேவிதான். (11)

कम्पातीरचराणां करुणाकोरकितदृष्टिपातानाम् ।
केलीवनं मनो मे केषांचिद्भवतु चिद्विलासानाम् ॥

கம்பாதீர சராணாம் கருணா
கோரகித த்ருஷ்டி பாதானாம் |
கேளீவனம் மனோமே கேஷாஞ்சித்
பவது சித்விலாஸானாம் ||

கயிலையில் சிவ, பார்வதி வீற்றிருந்தனர். தேவி விளையாட்டாக ஈச்வர னின் கண்களை கைகளால் மறைத்தாள். பகவானும் கோபங்கொண்டாற் போல் நடித்து, தேவியை சத்யவ்ரத க்ஷேத்திரமென்னும் காஞ்சியில், கம்பாநதி

தடத்தில் மாமரத்தடியில் தவமிருக்கப் பணித்தார். அதன்படி தேவி கம்பா நதிக்கரையில் தவமிருக்கும் அந்தத் தேவியின் சித்விலாஸங்களுக்கு என் மனம் லீலாவனமாக ஆகட்டும். இது முகரின் வாக்கு. (12)

आम्रतरुमूलवसतेः आदिमपुरुषस्य नयनपीयूषम् ।
आरब्धयौवनोत्सवं आम्नायरहस्यमन्तरवलम्बे ॥

ஆம்ரதரு மூலவஸதே: ஆதிம
புருஷஸ்யநயன பீயூஷம் |
ஆரப்த யௌவனோத்ஸவம் ஆம்நாய
ரஹஸ்ய மந்த்ர மவலம்பே ||

ப்ரளயத்திலும் அழியாத ஜோதி லிங்கப்பரசிவ ஸ்தானமான ஒரு மாமரத்தடி ஒரே ஒரு மாங்கனி பழுக்கும் ஏக ஆம்ர விருக்ஷத்தடியில் தேவி தவமிருந்தாள். நாலு வேதங்களே அதன் நாலு பக்கக்கிளைகள். அம்மாமரத் தடியிலேயே ஈசன் அமர்ந்ததால் ஏகாம்ரேச்வரர், கச்சித்திரு ஏகம்பன் என் றெல்லாம் பெயர் பெற்றார். மாமரத்தடியில் வசிக்கும் முதற்கடிவுளான பரமேஸ் வரனுக்கு புதிய யௌவனத்துடன், அம்ருத ஸ்வபாவமான, வேதத்தின் பரம தாத்பர்யமானதேவி மிகுந்த சந்தோஷமளிக்கிறாள். அந்த தேவியை மனதில் த்யானிக்கிறேன். (13)

अधिकाञ्चि परमयोगिभिरादिमपरपीठसिम्नि दृश्येन ।
अनुबद्धं मम मानसं अरुणिमसर्वस्वसंप्रदायेन ॥

அதி காஞ்சி பரமயோகிபி:
ஆதிம பரபீடஸீம்னி த்ருச்யேன |
அனுபத்தம் மம மானஸம் அருணிம
ஸர்வஸ்வ ஸம்ப்ரதாயேன ||

மிகச் சிறந்த காமகோடி பீடத்தில் யோகிகளாலேயே தரிசிக் கத்தக்க, மிக அழகான, சிவந்தவஸ் துவான காமாக்ஷியிடம் மனம் கட்டுண்டுள்ளது. ப்ரம்மத்தின் ஒரே க்ாமம் தான் நாணயத்தின் இரு பக்கங்களைப் போல் சிருஷ் டியாகவும், லயமாகவும் உள்ளது. ப்ரும்மம் தன்னை விளக்க வந்த போது தேவி யாக, தாயாக வந்து சிருஷ்டி யோஜனையே காமகலை என்பதாகப் பரிண மித்தது. சிருஷ்டி இல்லையேல் உலகு இல்லை. காமகலையே காமகோடிப் பீடமாகும். எனவே இது பீடு பெற்ற பீடமாகும். (14)

अङ्कितशङ्करदेहां अङ्कुरितोरोजकङ्कणाश्लेषैः ।
अधिकाञ्चि नित्यतरुणीं अद्राक्षं काञ्चिदद्भुतां बालाम् ॥

அங்கித சங்கர தேஹாம்
அங்குரிதோரோஜகங்கணாச் லேஷை ।
அதிகாஞ்சி நித்ய தருணீம் அத்ராக்ஷம்
காஞ்சிதத்புதாம் பாலாம் ॥

ஏற்கனவே சொன்னபடி தேவி சிவன் கட்டளைப்படி மாமரத்தடியில் மணல் லிங்கம் பிடித்து வைத்து பூஜை, தவம் செய்தாள். தேவியின் அன்பை சோதிக்க, தன் தலையில் உள்ள கங்கையை விடுவிக்க, அது கம்பா நதியாகப் பிரவ ஹித்தது. தேவி ப்ரளயபந்தினி என்ற ரூபத்தில், முயற்சித்தும் வெள்ளம் கட்டுப்படவில்லை. மணல் லிங்கம் கரையக் கூடாது என்ற ஒரே நோக்குடன், தேவி மார்பில் அதைப் புதைத்துக் கொண்டாள். தேவியின் கொங்கைச்சுவடு, வளைத்தழும்பு இன்னும் மணல் லிங்கத்தில் உள்ளதாகச் சொல்வர். அபிராமி அந்தாதி 42. 'இடங்கொண்டு விம்மி இணைகொண்டு இறுகி இளகி முத்துவடங்கொண்ட கொங்கைமலைகொண்டிறைவர் வலிய நெஞ்சை நடங் கொண்ட என்று வெகு அழகாகக் கூறுகிறது. பரமேஸ்வரன் தேவியின் சுவடுகளை ஏற்றுக் கொள்ளவே நாடகமாடினார். தழுவக்குழைந்த தலைவனானார். இதில் தேவியை பாலை யாகக் காண்கிறோம். (15)

मधुरधनुषा महीधरजनुषा नन्दामि सुरभिबाणजुषा ।
चिद्वपुषा काञ्चिपुरे केलिजुषा बन्धुजीवकान्तिमुषा ॥

மதுரதனுஷா மஹீதர ஜனுஷா
நந்தாமி ஸுரபி பாணஜுஷா ।
சித்வபுஷா காஞ்சி புரே கேலிஜுஷா
பந்து ஜீவ காந்திமுஷா ॥

பர்வதகுமாரியான காமாக்ஷி, ஸ்ரீவித்யாஸ்வரூபிணியான லலிதா மஹா த்ரிபுரசுந்தரி பராபட்டாரிகா எனவும் ஸ்ரீராஜ ராஜேஸ்வரி எனவும் போற்றப் படுபவள். தேவி கீழ்க்கைகளில் கரும்பு, மலரம்பையும் மேல்க் கைகளில் பாச, அங்குசம் தரித்திருக்கிறாள். ராகஸ்வரூபபாசாட்யா, க்ரோதாங்காராங்கு ஸோஜ்வலா, மனோரூபேக்ஷு கோதண்டா, பஞ்சதன் மாத்ர சாயகா என்று ல.ஸ.நாமா கூறுகிறது. பாசம் என்னும் ஆயுதம் 'அபராஜிதா' என்ற குதிரை மேல் வீற்றிருக்கும் 'அச்வாரூடா' ஆவாள். குதிரைப்படைத் தலைவி; இது போல் அங்குசம் என்ற ஆயுதம் 'சம்பத்கரி' என்ற பெயரில் 'ரணகோலாஹலம்'

என்ற யானையில் அமர்ந்து யானைப்படைத் தலைவி ஆவாள். கரும்புவில் என்ற ஆயுதம் 'மந்திரிணி' என்ற ராஜமாதங்கீஸ்வரியாகவும், தேர்ப்படை அதிகாரியாகவும், பஞ்ச புஷ்ப பாணங்கள், மஹாவராஹி என்ற சேனாநாயகியாக எல்லா சேனைகளுக்கும் தலைவி. சிம்மாதனத்தில் வீற்றிருக்கும் போது ஆயுதங்களாகவும், செயல்படும் போது ரத, கஜ, துரக, பதாதி என்ற நால்வகைச் சேனைகளாகவும் விளங்குகிறார்கள். (16)

मधुरस्मितेन रमते मांसलकुचभारमन्दगमनेन ।
मध्येकाञ्चि मनो मे मनसिजसाम्राज्यगर्वबीजेन ॥

மதுரஸ்மிதேன ரமதே, மாம்ஸல
குசபார மந்த கமனேன |
மத்யே காஞ்சி மனோமே மனஸிஜ
ஸாம்ராஜ்ய கர்வபீஜேன ||

மனோஹரமான புன்முறுவல், பெருத்த குச பாரத்தால் மெதுவான நடை, மன்மதனது ஏகாதிபத்ய கர்வத்திற்குக் காரணமான ஸ்ரீகாமாக்ஷி தன் மலை போன்ற மார்பகத்தால், மெத்தென்ற குழைந்த குசங்களால் பரமேஸ்வரனின் கடினமாக மனதையும் இளக வைத்து அவரைத் தன்னுடையவராக்கிக் கொண்டு, இடப் பாகத்தில் இடம் பிடித்து அமர்ந்த கோலத்தினால் மன்மதனுக்கும் கொஞ்சம் கர்வம் ஏற்பட்டது. (17)

धरणिमयीं तरणिमयीं पवनमयीं गगनदहनहोतृमयीम् ।
अम्बुमयीं इन्दुपयीं अंबां अनुकम्पं आदिमां ईक्षे ॥

தரணிமயீம் தரணிமயீம் பவன மயீம்
ககனதஹன ஹோத்ருமயீம் |
அம்புமயீமிந்து மயீம்
அம்பாமனுகம்ப மாதிமாமீக்ஷே ||

ப்ருத்வீ, ஸூரியன், காற்று, ஆகாயம், அக்னீ, யாகஅதிகாரி, ஜலம், சந்திரன் என்று அஷ்டமூர்த்தித்வம் வாய்ந்த தேவியை (அக்ரகண்யா) முதன் முதலாகக் கணக்கிடப்படுபவளான காமாக்ஷியை கம்பா நதிக் கரையில் தரிசிக்கிறேன். இந்த அஷ்ட மூர்த்தித் துவம் சிவம், முருகன், கணபதி எல்லோக்குமே உரியது. இதே கருத்தை ஆர்யாத்விசதியிலும்

காணலாம். பவனமயீ, பாவகமயீ, க்ஷோணிமயீ, ககனமயீ, க்ருபீடமயீ, ரவிமயீ, சசிமயீ, திங்மயீ, ஸமயமயீ, ப்ராணமயீ, சிவே பாஹி. (18)

लीनस्थिति मुनिहृदये ध्यानस्तिमितं तपस्यदुपकम्पम् ।
पीनस्तनभरमीडे मीनध्वजतन्त्रपरमतात्पर्यम् ॥

லீனஸ்திதி முனிஹ்ருதயே
த்யானஸ்திமிதம் தபஸ்யது பகம்பம் |
பீன ஸ்தனபரமீடே மீனத்வஜ
தந்த்ரபரம தாத்பர்யம் ||

யோகிகளின் ஹ்ருதயத்தில் நித்யவாஸம் செய்யும் காமாக்ஷி கம்பாதீரத்தில் ஞானப்பால் நிறைந்த ஸ்தனங்களுடன் அசஞ்சல த்யானத்துடன் தவம் செய்கிறாள். தேவி நவாவரண பூஜையில் சேனாநாயகியான வாராஹி தேவிக்கு பன்னிரெண்டு நாமாக்களும், மந்த்ரிணியான ராஜமாதங்கிக்கு பதினாறு நாமாக்களும், லலிதைக்கு இருபத்தைந்து நாமாக்களும் கூறி அர்ச்சிப்பதுண்டு. அதில் கடைசி நாமா. 'ச்ருங்கார நாயிகா' என்பதாகும். லலிதையே காமாக்ஷி, எனவே ஒவ்வொரு பாடலிலும் காமனின் ச்ருங்கார சாஸ்த்ர ரஸம் சூசிக்கப்படுகிறது. லலிதை ச்ருங்கார ரஸப்ராதானை. மீனக் கொடியோனான மன்மத வித்தையின் விஸ்தாரமே தேவி தான். (19)

श्वेता मन्थरहसिते शाता मध्ये च वाङ्मनोतीता ।
शीता लोचनपाते स्फीता कुचसीम्नि शाश्वती माता ॥

ச்வேதா மந்த்ரஹஸிதே சாதா
மத்யே சவாங்மனோதீதா |
சீதா லோசனபாதே ஸ்பீதா
குசஸீம்னி சாச்வதீ மாதா ||

தேவி புன்முறுவல் பூத்த முகத்துடன் (முல்லையை நிகர்த்த புன்முறுவல், பற்கள் வெண்மையாகக் காணப்படும்) இடுப்பு பாகம் இளைத்தும, பெருத்த ஸ்தனங்களுடன் காக்ஷி அளிக் கிறாள். எண்ண அலைகள் ஒடுங்கிய மனதில் தேவி குடி கொண்டு, கண்ணோக்கில் குளிர்ச்சியாகக் காணப் படுகிறாள். பனிமலை அரசன் பெண், பனிமலைவாசியான சிவனை மாலை யிட்டதால், தேவி குளிர்ச்சியாக இருப்பது சகஜமே. (20)

पुरतः कदा नु करवै पुरवैरिविमर्दपुलकिताङ्गलताम् ।
पुनतीं काञ्चीदेशं पुष्पायुधवीर्यसरसपरिपाटीम् ॥

புரத: கதாநு கரவை புரவைரி
விமர்த புலகி தாங்கலதாம் |
புனதீம் காஞ்சீதேசம் புஷ்பாயுத
வீர்ய ஸரஸ பரிபாடிம் ||

த்ரிபுர ஸம்ஹாரம் செய்த பரமசிவனின் ஆலிங்கத்தினால் புளகாங்கிதம் அடைந்த தேவி, காஞ்சீ தேசத்தையே பரம பாவனமாக்குகிறாள். 'புஜாச் லேஷாந்நித்யம் ' ஸௌந்தர்ய லஹரி பாடலில் பரமேஸ்வரன் தன் கைகளால் தேவியின் கழுத்தை அடிக்கடி கட்டி ஆலிங்கனம் செய்வதால், தேவிக்கு புளகம் ஏற்பட்டு கழுத்தில் உள்ள ரோமங்கள் சிலிர்த்து முகம் தாமரையாகவும், கழுத்து அதன் தண்டாகவும் (தாமரைத் தண்டு முள்நிறைந்து காணப்படும்) உருவகப்படுத்தப்பட்டு விளங்குகிறது. பரமேஸ்வரனின் பராக்ரமத்தையும், மன்மதனின் பராக்ரமம் ஜெயித்து விட்டது. (21)

पुण्या कापि पुरन्ध्री पुंखित कन्दर्प संपदा वपुषा ।
पुलिनचरी कंपायाः पुरमथनं पुलकनिचुलितं कुरुते ॥

புண்யா காபி புரந்த்ரீ புங்கி$_2$த
கந்தர்ப ஸம்பதா வபுஷா |
புலினசரீ கம்பாயா: புரமதனம்
புலக நிசுலிதம் குருதே ||

இந்தப்பாடலில், மன்மதனின் சிறப்பை வளர்க்கும் சிருங்காரமாக, மிக வனப்பாக, அழகு சரீரத்தோடு கூடிய தேவி பரமேஸ் வரனைத் தன் ஆலிங் கனத்தினால் புளகமுறச்செய்வதைக் கண்டு, நாமும் இந்த எண்ண எழுச்சிகளால் ரோம புளக முறுகிறோம். (22)

तनिमाद्वैतवलग्नं तरुणारुणसंप्रदायतनुलेखम् ।
तटसीमनि कंपायाः तरुणिमसर्वस्वं आद्यं अद्राक्षम् ॥

தநி மாத்வைதவ லக்னம்
தருணாருண ஸம்ப்ரதாய தனுலேகம் |

தடஸீம்னி கம்பாயா: தருணிம
ஸர்வஸ்வமாத்ய மத்ராக்ஷம் ||

தேவியின் சிவந்தநிறம், நுண்ணிய இடுப்பு, யௌவன ஸம்பத்து இவை பேசப்படுகிறது. அணி, துகில், மாலை, பூஷணம் அனைத்திலும் செந்நிறம் வஹித்தனை போற்றி! உதிக்கின்ற செங்கதிர், உச்சித்திலகம், உணர்வு டையோர் மதிக்கின்ற மாணிக்கம், மாதுளம் போது, குங்குமத்தோயம், அபிராமி பட்டர் வியந்து அன்னையைப் போற்றுகிறார். 'வயோவஸ்தா விவர்ஜிதா' 'தருணீ, நித்ய யௌவனா' மூவா முகந்தற்கு இளையவளே! போன்ற நாமாக்கள் தேவியின் யௌவனத்தையும், 'இடை ஒடியா வண்ணம் பொருத்திய பூண் ஒக்கும் உதர மடிப்புக்கள்' என்ற வரிகள் நுண்ணிய இடையையும் நமக்குப் படம் பிடித்துக் காண்பிக்கிறது. (23)

पौष्टिक कर्मविपाकं पौष्पशरं सविधसिम्नि कम्पायाः ।
अद्राक्षं आत्तयौवनं अभ्युदयं कञ्चिदर्धशशिमौलेः ॥

பௌஷ்டிக கர்ம விபாகம் பௌஷ்பசரம்
ஸவிதஸீம்னி கம்பாயா |
அத்ராக்ஷமாத்த யௌவனம், அப்யுதயம்
கஞ்சி தர்த்த சசிமௌளே ||

தேவி மாமரத்தடியில் சிவனை பூஜித்ததாலேயே ஏகாம்பரம், ஏகாம்பரநாதர் என்றெல்லாம் அந்த மரத்திற்கும், சிவ னுக்கும் சிறப்பு ஏற்பட்டது. நெற்றிக் கண்ணால் பஸ்மமான மன்மதனை தேவி புனருற்பவம் செய்ததால் மன்மத அபிவிருத்தி, ஸ்ருஷ்டி என்ற காரியங்கள் ஏற்பட்டது. 'சுடரும் கலை மதி துன்றும் சடைமுடிக் குன்றில்' ஒன்றும் தேவியை நாம் வணங்குவோம். (24)

संश्रितकाञ्चीदेशे सरसिजदौर्भाग्यजाग्रदुत्तंसे ।
संविन्मये विलीये सारस्वतपुरुषकारसाम्राज्ये ॥

ஸமஸ்ரித காஞ்சிதேசே
ஸரஸிஜதௌர் பாக்ய துத்தம்ஸே |
ஸம்வின்மயே விலீயே ஸாரஸ்வத
புருஷகார ஸாம்ராஜ்யே ||

த்யாக ராஜ ஸ்வாமிகள் இயற்றிய ஸோபில்லு (ஜகன் மோஹினிராகம்) என்ற பாடலில் 'நாபி, ஹ்ருத், கண்ட ரஸன என்ற இடத்திலிருந்து, நாபியிலிருந்தே சப்தம் வருகிறது என்று சங்கீத சிக்ஷயில் சொல்லப்படுகிறது. நாபி ஸ்தான மான காஞ்சியில் உள்ள காமகோடிப் பீடமடம் சாரதாமடம் என்றே பெயர் பெற்றிருந்தது. தேவியின் பீடங்களில் முதலாவாதான காமகோடி பீடமே வாக்பவ கூடமாகும். காஞ்சியில் ஆதிசங்கரர் தாமே ஸர்வக்ஞ பீடமொன்றை உண்டாக்கி அதில் ஆரோஹணித்தார் என்று பெரியோர் கூறுகிறார்கள். இந்த பீடாதிபதிகளுக்கு ஸரஸ்வதி என்ற ஸந்தியாஸ பட்டத்தை பகவத் பாதர் ஏற்படுத்தியுள்ளார். ஸாரஸ்வத புருஷகாரஸாம் ராஜ்யம் என்ற மூகரின் கூற்று மிகப்பொருத்தமானதே. (25)

मोदितमधुकरविशिखं स्वादिमसमुदायसारकोदण्डम् ।
आदृतकाञ्चीखेलनं आदिमं आरुण्यभेदमाकलये ॥

மோதித மதுகர விசிகம், ஸ்வாதிம
ஸமுதாய ஸார கோதண்டம் |
ஆத்ருத காஞ்சி கேலனம்
ஆதிமமாருண்ய பேதமாகலயே||

தேவி தன் வலது முன் கையில் தாமரை, செங்கழுநீர், செவ்வல்லி, செவ்வாம்பல், மாம்பூ என்ற ஐந்து புஷ்பங்க ளையே பாணங்களாகக் கொண்டிருக்கிறாள். பூக்களிலுள்ள தேனைப்பருகும் வண்டுகள் 'ஹ்ரீம்' என்று பாடுகிறது. ஹ்ரீங்காரத்துடன் வண்டுகள் தேனை சேர்ப்பதால் தான் வண்டெச்சில் ஆன தேன் பூஜைக்கு உகந்ததாக உள்ளது. தேவி இடது முன்கையில் கரும்பையே வில்லாகக் கொண்டி ருக்கிறாள். நம் மனமே தேவி கைக்கரும்பு வில் கரும்பிலி ருந்து தான் கற்கண்டு, சர்க்கரை, வெல்லம் போன்ற இனிப்பு வஸ்துக் கள் கிடைக்கிறது. மனம் என்னும் கரும்பு வில்லில், கருணை என்ற புஷ்பங்களால் தேவி நம் விருப்பங்களை நிறைவேற்று கிறாள். நம் விருப்பங்கள் ஞாயமாகவே இருக்க வேண்டும். (26)

उररीकृतकाञ्चिपुरीं उपनिषदरविन्दकुहरमधुधाराम् ।
उन्नम्रस्तनकलशीं उत्सवलहरीं उपास्महे शम्भोः ॥

உரரீக்ருத காஞ்சிபுரீம் உபநிஷதர
விந்த குஹர மதுதாராம் |
உன்னம்ர ஸ்தனகலசீம், உத்ஸவ
லஹரீம் உபாஸ்மஹே சம்போ: ||

தாமரை மலர் எல்லா தேவதைகளுக்கும் பூஜைக்குகந்தது. பிரும்மா, லக்ஷ்மி, சரஸ்வதி போன்றவர்களின் இருப்பிடமும் ஆகும். உலகமே ஓர் தாமரை. அதன் கர்ணிகையினின்றும் பெருகும் தேன் உபநிஷதஸாரமாகும். அம்பிகையின் பால் நிரம்பிய ஸ்தன கலசங்கள், அவித்தையை அகற்றுவதால் ஒளியுடன் திகழ்கிறது. உபநிஷத்தேன், தேவியின் ஞானப் பால் இவை எல்லாமே பரமேஸ்வரரின் பேரானந்தப் பெருக் காகும். (27)

एणशिशुदीर्घलोचनं एनःपरिपन्थि सन्ततं नमताम् ।
एकाम्रनाथजीवितं एवंपददूरमेकं अवलम्बे ॥

ஏணசிசு தீர்க்க லோசனம் ஏன:
பரிபந்தி ஸந்ததம் பஜதாம் |
ஏகாம்ரநாத ஜீவிதம் ஏவம்பத
தூரமேக வலம்பே ||

மானின் மருட்சியை உடைய கண்கள், மீனின் கண்கள் என்றும் தேவியின் கண்களைக் கூறுவதுண்டு. மீன் தன் பார்வையாலேயே குஞ்சுகளை வளர்ப்பது போல் தேவி தன் கண்ணாலேயே நம்மைக்காப்பதால் மீனாக்ஷி என்றும், மற்றும் காமாக்ஷி, விசாலாக்ஷி, நீலாயதாக்ஷி என்றெல்லாம் நாம் தேவியை அழைக்கிறோம். ஸௌந்தர்யலஹரியில் 'கவீனாம் ஸந்தர்ப்ப ஸ்தபக-மகரந்தைக ரஸிகம்' கவிவாணர்களின் கவிதைப் பூங்கொத்தின் தேன், இதை தன் இருகாதுகளிலும் நிரப்பிக் கொள்கிறாள். தேவியின் கண்ணின் கரு விழிகள் குட்டி வண்டுகள் போல் காது வரை சென்று கவிதைத் தேனைக் குடிக்கிறது. பக்தர்களின் முறையீட்டைத்தன் காதுகளில் வாங்கிக் கொள்கிறாள். ஆயினும் கருணைபுரிவது என்பது கடைக்கண்ணின் வேலை. எனவே கவித்தேனை உண்ணும் அதே நேரத்தில், பக்தர்களின் முறையீட்டைக் கேட்டு அனுக்ரஹமும் செய்து, பாபங்களையும் போக்குகிறாள், நம் ஏகாம்ரநாதனின் ப்ராணரூபமான ஸ்ரீகாமாக்ஷி தேவி. (28)

स्मयमानमुखं काञ्चीमयमानं कमपि देवताभेदम् ।
दयमानं वीक्ष्य मुहुर्वयमानन्दामृताम्बुधौ मग्नाः ॥

ஸ்மயமான முகம் காஞ்சீம்,
அயமானம் கமபி தேவதாபேதம் |
தயமானம் வீக்ஷ்ய முஹு: வயமானந்தாம்
ருதாம்பு தௌ மக்னா: ||

தேவி காமாக்ஷி சிரித்த முகத்துடன கருணை நிறைந்தவளாய் காஞ்சி நகரில் உள்ள ஸ்ரீவித்யா ஸ்வருபிணீ. நாம் பன்முறை தரிசித்ததாலும் நம் மனம் ஆனந்தமென்னும் அம்ருத ஸாகரத்தில் மூழ்கி, இன்னும் இன்னும் தரிசிப்ப தையே விரும்புகிறது. (29)

कुतुकजुषि काञ्चिदेशे कुमुदतपोराशिपाकशेखरिते ।
कुरुते मनोविहारं कुलगिरिपरिबृढकुलैकमणिदीपे ॥

குதுக ஜுஷி காஞ்சிதேசே குமுத
தபோராசி பாக சேகரிதே |
குருதே மனோவிஹாரம் குலகிரி
பரிப்ருட குலைக மணிதீயே ||

தேவி ஹிமவானின் குலத்திற்கு ஓர் ஒப்பற்ற திருவிளக்கு. சூரிய னைக் கண்டால் தாமரை மலர்வதும், சந்திரனைக் கண்டால் ஆம்பல் மலர்வதும் உலக இயல். தேவி தலையில் சந்திரனை அணிந்துள் ளாள். முகத்தைத் தாமரைக்கும், கண்களை ஆம்பலுக்கும் பொருத் திப் பார்ப்பது சுவையாகவே இருக்கிறது. பெண்ணே! உன்முகத் தாமரையில், இரண்டு நீலோத்பலங்களைக் காண்கிறேன்? என்ற காளிதாஸரின் காவ்யரஸம் நினைவை நனைக்கிறது. (30)

वीक्षेमहि काञ्चिपुरे विपुलस्तनकलशगरिमपरवशितम् ।
विद्रुमसहचरदेहं विभ्रमसमवायसारसंनाहम् ॥

வீக்ஷேமஹி காஞ்சிபுரே விபுலஸ்தன
கலச கரிமபரவசிதம் |
வித்ருமஸஹசர தேஹம் விப்ரம்
ஸமவாய ஸாரஸந்நாஹம் ||

இது வரை மூகர் தேவியின் செம்மை நிறத்துக்கு குங்கு மப்பூ, குங்குமக்குழம்பு, மாதுளம்பூ இப்படி பல உவமைகளை சொன்ன வர், இப்பொழுது பவழத்தை ஒத்த சிவப்பு, என்பதாக இந்த வர்ணனை நிறைய பாடல்களில் தொடர்கிறது. 'காமகேளீ தரங்கிதா' வான 'ரதிரூபா' வானதேவீ காமவிலா ஸங்களின் ஸாரம் என்னும் ஸந்நாஹ கோலத்தோடு கூடிய ஸம்போக மூர்த்தியாகக் காஞ்சியில் விளங்குகிறாள். (31)

कुरुविन्दगोत्रगात्रं कूलचरं कमपि नौमि कम्पायाः ।
कूलङ्कषकुचकुम्भं कुसुमायुधवीर्यसारसंरम्भम् ॥

குருவிந்த கோத்ரகாத்ரம் கூலசரம்
கமபி நௌமி கம்பாயா: |
கூலங்கஷ குசகும்பம் குஸுமாயுத
வீர்ய ஸாரஸம் ரம்பம் ||

குருவிந்தம் என்ற மாணிக்கக்கற்களின் குவியலாக தேவியை த்யானித்தால் நம் மனோரதம் நிறைவேறும். தேவி யின் ஒன்றோடொன்று மோதும் ஸ்தனங்கள் மன்மதனின் வல்ல மைக்கு ஓர் எடுத்துக்காட்டு. ஈசனின் கண்ணால் எரிந்த மன்மதன் தேவியின் கண்ணால் உயிர் பெற்றெழுந்தான். காமனும், தேவ, தேவியரை சேர்க்கும் பணியில் ஈடுபட்டான். 'காமேஸ்வர ப்ரேமரத்ன மணி ப்ரதிபணஸ்தனீ, காமேஸ் வரரின் ப்ரேமைக்கு ஈடாகத் தன் இரண்டு ஸ்தனங்கள். எனவே, இரட்டிப்பாக தேவி கொடுக்கிறாள். ஆர்யா சதகம் முழுதுவமே தேவியின் ஸௌந்தர்யம், காமன் பெற்ற மகத்தான பேறுகள், பாக்கி உள்ள நாலு சதகங்களை விட அதிக மாகக் கூறப்படுகிறது. (32)

कुड्मलितकुचकिशोरैः कुर्वाणैः काञ्चिदेशसौहार्दम् ।
कुङ्कुमशोणैर्निचितं कुशलपथं शंभुसुकृतसंभारैः ॥

குட்மலித குச கிசோரை: குர்வாணை:
காஞ்சிதேச ஸௌஹார்தம் |
குங்கும சோணைர் நிசிதம், குசலபதம்
சம்பு ஸுக்ருத ஸம்பாரை:||

மலர்ந்தும், மலராதுமுள்ள மொட்டுக்களைப் போன்ற இளங் குசங்களை உடைய காஞ்சி காமாக்ஷி, முமுக்ஷு என்ற மேலோர் களுக்கு புண்ய வசத்தால் ச்ரேயோ மார்க்கம் என்ற வாசலைத் திறந்து வைக்கிறாள். சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துஸ்வாமி தீக்ஷிதர் கமலாம்பாநவாவரணம்' என்ற பாடல் தொகுதியை உருவாக்கி இருக்கிறார். ஸ்ரீவித்யா ஸ்வரூபிணியான காமாக்ஷி மஹாத்ரிபுரசுந்தரியை அடைவதற் கான மோக்ஷக் கதவை தேவி தான் திறக்க வேண்டும். 'கண்டா' என்ற ராகத்தில் அமைந்த எட்டாவது ஆவரணப் பாடலில் 'ஸதா அகண்டைக ரஸ ப்ரவாஹே; ஸந்தாபஹர த்ரிகோண கேஹே, ஸ காமேஸ்வரி சக்தி ஸமூஹே: ஸந்ததம் முக்தி கண்டா

மணி கோஷ' என்ற முக்திக்குச் செல்லும் மணிக் கதவைத் திறப்பதும், மணி அடித்து நம்மை அப்படிக்கட்டு களில் அழைத்துச செல்வதும் தேவியே ஆகும் என்று அவர் கூறுகிறார். (33)

अङ्कितकचेन केनचिदन्धङ्करणौषधेन कमलानाम् ।
अन्तःपुरेण शम्भोरलंक्रिया कापि कल्प्यते काञ्च्याम् ।।

அங்கித கசேன கேனசித் அந்தங்கர
ணௌஷதேன கமலானாம் |
அந்த: புரேண சம்போ அலங்க்ரியா
கா(அ)பி கல்ப்யதே காஞ்ச்யாம் ||

தேவி தலையில் சந்த்ரகலையைத் தரித்திருப்பதால் தேவியின் முகத்தாமரை அயர்ச்சியடையவில்லை. மாறாக விகஸித்தே இருக்கிறது. வேதமாகிற அரும்பிற்கு வீடு போல் இருக்கும் சந்த்ரசேகரனின் அந்தப்புரம் என்று ஆர்யாத் விசதி யில் துர்வாஸர் கூறுகிறார். சங்கரரின் அந்தப்புரம், அந்தர் ஹ்ருதயம் எல்லாமே தேவிதான். தேவி பஞ்ச ப்ரும்மா ஸனத்தில் காமேச்வரரின் மடியில் அமர்ந்து ராணி என்பதாக தர்பார் நடத்தும்போது அவருடைய அந்தர்ஹ்ருதயமாகவும், ராஜ ஸதஸ் என்று இல்லாமல் ஏகாந்தமான அந்தப்புரதரிசனம் எனும் போது சங்கரரின் அந்தப்புரமும், அந்தர் ஹ்ருதயமும் ஆகிறாள். (34)

ऊरीकरोमि सन्ततमूष्मलफालेन लालितं पुंसा ।
उपकम्पमुचितखेलनं उर्वीधरवंशसंपदुन्मेषम् ।।

ஊரீகரோமி ஸந்ததம், ஊஷ்மல
பாலேன லாலிதம் பும்ஸா |
உபகம்பமுசித கேலனம் ஊர்வீதர
வம்ச ஸம்பதுன் மேஷம் ||

ஒரு காலத்தில் பரமேஸ்வரன் தன் அக்னி நேத்ரத்தால் மன்மதனை எரித்துவிட்டார். ப்ரணயகலஹ காலத்தில் தேவி யின் கால்களில் நெற்றிக்கண் படும்படி வணங்கி ஊடலைத் தீர்த்தார். தேவியின் காற்சிலம்புகள் கிலி கிலி என்று ஓசை எழுப்பியதை மன்மதன் தன் வெற்றியின் ஜய கோஷமாகக் கொண்டாடினான். இப்படியாக பரமேஸ்வரன் தேவியுடன் கேளி விலா ஸங்கள், லாலனங்கள் செய்தார். (35)

अङ्कुरितस्तनकोरकं अङ्कालङ्कारं एकचूतपतेः ।
आलोकेमहि कोमलं आगमसंलापसारयाथार्थ्यम् ॥

அங்குரித ஸ்தன கோரகம்
அங்காலங்கார மேக சூதபேத: |
ஆலோகேமஹி கோமலம், ஆகம
ஸம்லாப ஸார யாதார்த்யம் ||

ரிக், யஜுஸ், ஸாம, அதர்வண, வேதங்கள் 'ப்ரஞ்ஞானம் பிரும்ம' 'அஹம் ப்ரம்மாஸ்மி' 'தத்வமஸி', 'அயமாத்மா ப்ரும்ம' என்ற மஹாவாக்யங்களாக, தேவியே அதன் லக்ஷ யார்த்தமாக 'மஹா வாக்யாம்பாளாக' ஸ்ரீவித்யா பூஜையில் பூஜிக்கப்படு கிறாள். ஏகாம்ரநாதரது இடது தொடையில் 'சிவ காமேஸ்வராங் கஸ்தாக' அமர்ந்திருக்கிறாள். ஸௌந்தர்யலஹரி 8வது பாடலி லும் 'சிவாகாரே மஞ்சே, பரமசிவ பர்யங்க நிலயாம்' என்று தேவி காமேஸ்வரர் மடியில் அமர்ந்தநிலை, நம் உள்நோக்கால் தரிசிக்க வேண்டும். (36)

पुञ्जितकरुणमुदञ्चितशिञ्जित मणिकाञ्चि किमपि काञ्चिपुरे।
मञ्जरितमृदुलहासं पिञ्जरतनुरुचि पिनाकिमूलधनम् ॥

புஞ்ஜித கருண முதஞ்சித,
சிஞ்ஜிதமணி காஞ்சி கிமபி காஞ்சிபுரே |
மஞ்ஜரித ம்ருதுல ஹாஸம் பிஞ்ஜர
தனுருசி பினாகி மூலதனம் ||

ஸௌந்தர்யலஹரி 7வது பாடல் க்வணத் காஞ்சீதாமா' தேவி கல, கல என்று ஒலிக்கும் தங்கச்சலங்கைகளுடன் கூடிய ஒட்டியாணத்தை இடுப்பில் அணிந்துள்ளாள். நம் உடம்பில் உள்ள ஆறு ஆதார கமலங்களில் மணிபூரகம், தொப்புளுக் கெதிரில் பிரகாசிக்கிறது. எப்படி காஞ்சீ பூமியின் நாபிஸ்தானமோ, அதுபோல் நாபி ப்ரதேசத்தில்படும்படி ஒட்யாணம் அணியுமிடம் மணிகள் ஒலிக்கும் மணிபூரக சக்கரம் ஆகும். தேவி மணி பூரகத் திலிருந்து அன ஹத சக்கரத்துக்கு எழுந்தருளும் போது தேவியின் கால் சலங்கை கள் கல, கல என்று சப்திக்கும். மணி பூரகத்தில் தேவியை த்யானிப்பது நல்லது. மணிபூரக சக்ரேஸ் வரி திருவானைக்காவில் உறையும் வாராஹ பீடசக்தி யான அகி லாண்டேச்வரி ஆகும். காஞ்சி ஒட்யாண பீட நிலையமாகும். (37)

लोलहृदयोऽस्मि शम्भोः लोचन युगलेन लेह्यमानायाम् ।
लालितपरमशिवायां लावण्यामृततरङ्गमालायाम् ॥

லோல ஹ்ருதயோஸ்மி சம்போ:
லோசன யுகலேன லேஹ்யமானாயாம் |
லாலித பரமசிவாயாம் லாவண்யாம்ருத
தரங்க மாலாயாம் ||

பரமேச்வரன் தன் இரண்டு கண்களாலும் ஸ்ரீகாமாக்ஷியின் ஸௌந்தர்யாமிருதத்தை பருகுவதை நாம் த்யானிக்க வேண்டும். அதனால் தான் காலடி சங்கரர் ஸௌந்தர்யலஹரி என்ற பெயரிலேயே காவ்யமாக்கினாரோ! சிவனை-பரன், என்றும் சிவையை - பரை என்பதால், நாம் இதைப் பரம்பரை என்றே நினைவு கூர்வோம். நம்மைக்குழந்தைகளாக லாலனம் செய்வதால் லலிதா ஆன தேவி தங்களுக்குள் பரஸ்பரம் லாலனம் செய்து கொள்ளுகிறார்கள். (38)

मधुकरसहचरचिकुरैः मदनागमसमयदीक्षितकटाक्षैः ।
मण्डितकम्पातीरैः मङ्गलकन्दैर्ममास्तु सारूप्यम् ॥

மதுகர ஸஹசரசிகுரை: மதனாகம
ஸமய தீக்ஷித கடாக்ஷை: |
மண்டித கம்பாதீரை: மங்கல
கந்தைர் மமாஸ்து ஸாரூப்யம் ||

கருவண்டினை நிகர்த்த கூந்தல். மன்மதனின் வேத ச்ருங் காரக் கொள்கைகளில் தேர்ச்சி பெற்ற கண்கள், ஏனென்றால் காமனை உண்டாக்கிய கருணைக்கண்கள், காமனைகளைப் பூர்த்தி செய்யும் கண்கள், காமம் குடி கொண்ட கண்கள். எனவே காமாக்ஷி என்ற பெயரே வந்தது. (பசித்த பேர்க்கெல்லாம் அபீஷ்ட வரங்களை பார்த்துக கொடுத்தாள் அம்ருதக் கண்ணால், காமாக்ஷி என்ற பெயர் கொடுத்தார் பிரம்மதேவாள் என்று லலிதாம்பாள் சோபனம் கூறுகிறது.) (39)

वदनारविन्दवक्षोवामाङ्कतटीवशंवदीभूता ।
पुरुषत्रितये त्रेधा पुरन्ध्रिरूपा त्वमेव कामाक्षि ॥

வதனாரவிந்த வக்ஷோ வாமாங்கத டீ
வசம்வதீ பூதா |
புருஷத்ரிதயே த்ரேதா, புரந்த்ரிரூபா
த்வமேவ காமாக்ஷி ||

ராத்ரி ஸூக்தத்தில் பிரும்ம, விஷ்ணு, ருத்ராதிகளின் எந்தெந்த அங்கங்களில் தேவி வசிக்கிறாள் என்பதாக சொல்லப்படுகிறது. 'பத்ம யோனி முகாப்ஜஸ்தாம் விஷ்ணு வக்ஷ: ஸ்தலே ஸ்திதாம் சிவாங்க நிலயாம் கௌரீம் வந்தே மூர்த்தித்ரயாத்மகான்' ப்ரம்மாவின் முகத்திலிருந்து 'ஜகத்' தோன்றியதால் பராசக்தி ப்ரம்மாவின் முகத்தில் இருப்பதாக சொல்கிறோம். ஒருவனை காப்பதானால் மார்புடன் அணைத்துக் கொள்வதால், காக்கும் தொழில் செய்யும் விஷ்ணுவின் மார்பிலும், ருத்ரன் அழிக்கும் போது நெற்றிக்கண் கோபம் கக்குவதை, அவர் மடியில் அமர்ந்து தேவி தணிப்பதால் மடியிலும் உள்ளதாகக் கூறுகிறோம். த்ரிமூர்த்திகளான ப்ரம்ம, விஷ்ணு, ருத்ரர் எனும் மூன்று மஹா புருஷர்களின் முக கமலம், மார்பு, இடது தொடை என்னும் இடங்களில் ஸ்த்ரீ ரூபமாக ஸரஸ்வதி, லக்ஷ்மி, கௌரியாக தேவி ஸ்ரீகாமாக்ஷியே விளங்குகிறாள். சௌந்தர்யலஹரி 97 இதற்கு மேல் ஒரு படியாக மும்மூர்த்திகள் வடிவாக விளங்கும் தேவியே அதற்கு மேற்பட்ட 'துரீயா காபித்வம் துரதிகம நிஸ்ஸீம மஹிமா' என்பதாக உலகை மயக்கும், பின் மயக்கத்தினின்றும் விடுவிக்கும் பரப்ரும்ம மஹிஷியாக விளங்குகிறாள் என்று கூறுகிறது. (40)

बाधाकरीं भवाब्धेः आधाराद्यम्बुजेषु विचरन्तीम् ।
आधारीकृतकाञ्चीं बोधामृतवीचिमेव विमृशामः ॥

பாதாகரீம் பவாத்ப்தே-
ராதாராத்யம்புஜேஷு விசரந்தீம் |
ஆதாரிக்ருத காஞ்சீம், போதாம்ருத
வீசிமேவ விம்ருசாம: ||

இந்தப் பாடல் யோக மார்க்கம் பற்றியது. நம் சரீரத்தில் மூலாதாரம் குதத்தின் பக்கம் நாலு இதழ் கமலம், ஸ்வாதி ஷ்டானம் ஆறு இதழ் கமலம் அடி வயிற்றில், மணிபூரகம் பத்து இதழ் கமலம் தொப்புள் ஸ்தானம், அனாஹதம் பன்னி ரண்டு இதழ் கமலம் ஹ்ருதயத்தில், விசுத்தி பதினாறு இதழ் கமலம் கழுத்தில், ஆக்ஞை இரு தள பத்மம் புருவ மத்தியில் ஸஹஸ்ராரம் ஆயிரம் இதழ் கமலம் தலை உச்சி, மூலா தாரத்திலிருந்து புறப்பட்ட குண்டலினி சக்தியானவள் ஸுஷும்னா நாடி வழியாக ஸஹஸ்ரத்தை அடைகிறாள். 'ஆதாராத் யம்புஜே விசரந்தீம்' என்று இது குறிப்பிடப் படுகிறது. காஞ்சி மூலாதார க்ஷேத்ரம். தேவியை த்யானிப் பவன் மறுபடி யும் பிறவியை அடைவதில்லை. (41)

कलयाम्यन्तः शशधरकलयाङ्कितमौलिं अमलचिद्वलयाम् ।
अलयां आगमपीठिनिलयां वलयाङ्कसुन्दरीं अम्बाम् ॥

களயாம்யந்த: சசதர கலயாங்கித
மௌளிம்மல சித்வலயாம் |
அலயாமாகமபீடநிலயாம்
வலயாங்க ஸுந்தரிம் மம்பாம் ||

சந்த்ர கலையை தலையில் தரித்த தேவி மாயாரஹித சித்ஸ்வரூப - காலாதீதமானவள். வேதங்களாகிய பீடத்தில் வசிப்பவள். இப்படி ஆத்ம ஸ்வரூபமான தேவி ஸகுண ரூப தரிசனமும் அளிக்கிறாள். வளைத்தழும்பு டன் கூடிய சிவனாரின் சுந்தரி என்று ஸகுண ரூப தரிசனமும் பெறு கிறோம். ஸகுண மாக தேவியை நினைத்தாலும் பூஜித்தாலும் அந்தர் முக ஸமாராத்யா பஹிர்முகஸு துர்லபா ல.ஸ. என்றபடி வெளிநோக்கி செல்லும் மனத்தையும், திருப்பி உள் முகமாக காண வேண்டும். உள்முகமாக வெற்றி கண்டவர்கள் வெளி யேயும் அம்பாளையே காண்பார்கள். (42)

शर्वादि परमसाधकगुर्वानीताय कामपीठजुषे ।
सर्वाकृतये शोणिमगर्वाय समर्प्यते हृदयम् ॥

சர்வாதி பரம ஸாதக
குர்வானீதாய காமபீட ஜுஷே |
ஸர்வாக்ருதயே சோணிம, கர்வாயாஸ்மை
ஸமர்ப்யதே ஹ்ருதயம் ||

'மஹாதேவ ஸமாரம்பம், சங்கராசார்ய மத்யமாம், அஸ்மதாசார்ய பர்யந்தம் வந்தே குரு பரம்பராம்' என்பதாக ப்ரஹ்மவித்யா ஸம்ப்ரதாயத்தில் குருபரம்பரை வந்தனத் துடன், ஸ்வகுரு, பரமகுரு, பரமேஷ்டி குரு, பராபரகுரு ஜகத்குரு ஸ்வரூப ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி குரு பாதுகா மந்த்ர ஸஹிதம் உபாஸனையைத் தொடங்குவோம். மஹா காமேஸ் வரியான காமாக்ஷிக்கு க்ருதயுகத்தில் உபதேசம் செய்த காமேச்வரரே சர்யானந்த நாதரென்னும் பரசிவானந்த நாதர் ஆவார். ஸ்ரீலலிதா மஹாத்ரிபுர சுந்தரி பராபட்டாரிகை என்ற தீக்ஷா நாமம் கொடுத்தவரே காமேஸ்வரபட்டாரகர் ஆவார். தேசிகர் பட்டாரகர், நாதர் இவை குருவின் பர்யாய நாமங்கள், நிறம், குணம், குறிகளற்ற ப்ரம்மத்தை விளக்க வந்தவள் தேவி. செக்கச்சிவந்த மேனியளாய் (ஓம்- ப்ரகாசப்ரணவம்) ஐம், ஹ்ரீம், ஸ்ரீம், க்லீம், ஸௌ என்ற விமர்சப்ரணங்க ளாகிறான். சர்வர் போன்றவர்களால் தேவி சேவிக்கப்பட்டவள். (43)

समया सांध्यमयूखैः समया बुद्ध्या सदैव शीलितया ।
उमया काञ्चीरतया न मया लभ्येत किं नु तादात्म्यम् ॥

ஸமயா ஸாந்த்யமயூகை:
ஸமாய புத்த்யா ஸதைவ சீலிதயா |
உமயா காஞ்சி ரதயா, நமயா
லப்யேத கிந்து தாதாத்ம்யம் ||

ப்ரணவத்திலிருந்து அ-உ-ம என்ற அக்ஷரங்கள் வரிசை மாறி, உ-ம-அ என்று வரும்போது உமா என்ற தேவீப்ரணவம் ஆகிறது (லிங்க புராணம்) பரானுபூதிம் பவபாசநாசினீம் ஸதாசிவஸ்யாப்யதி சோபனாட்யாம் / உமா பிதா - முததம சித்தவ்ருத்திம் நமாமி நாநாவித. லோக - வைபவாம் || (ஸூத-ஸம்ஹிதை) பர்வத ராஜனால் வாஞ்சையோடு 'உமா' என்று அழைக்கப்பட்ட காமாக்ஷி, நமக்கெல்லாம் ஸாயுஜ்யமளிக்க வேண்டும. உத்தம சித்த வ்ருத்தியே உமா ஆகும். (44)

जन्तोस्तव पदपूजनसंतोषतरङ्गितस्य कामाक्षि ।
बन्धो यदि भवति पुनः सिन्धोरम्भस्सु बम्भ्रमीति शिला ।।

ஜந்தோஸ் தவ பதபூஜன, ஸந்தோஷ
தரங்கி தஸ்ய காமாக்ஷி |
பந்தோயதி பவதி புன: ஸிந்தோ
ரம்பஸ்ஸு பம்ப்ரமீதி சிலா ||

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் பலச்ருதி 73, 74 ஸ்லோகங் களில் தேவி உபாஸனத்தின் முக்யத்வம், 'சரமே ஜன்மனி யதா ஸ்ரீவித்யா உபாஸகோ' என்று, ஒருவன் தன் கடைசி ஜன்மா வில் ஸ்ரீவித்யா உபாஸகனாகி, ஸஹஸ்ரநாம அனுஸந்தா னமும் ஏற்படுகிறது என்று கூறுகிறோம். தேவி பக்தர்களுக்கு பிறவி இல்லை என்பதைக் கூறவேஜலத்தில் கல்பாறை மிதப்பதை உவமித்துக் கூறுகிறார். (45)

कुण्डलि कुमारि कुटिले चण्डि चराचरसवित्रि चामुण्डे ।
गुणिनि गुहारिणि गुह्ये गुरुमूर्ते त्वां नमामि कामाक्षि ।।

குண்டலி குமாரி குடிலே சண்டி
சராசர ஸவித்ரி சாமுண்டே |
குணிநி குஹாரிணி குஹ்யே குரு
மூர்த்தே த்வாம் நமாமி காமாக்ஷி ||

இந்தப் பாடல் தேவியின் எல்லா மூர்த்தி பேதங்களுமே தேவியே என்கிறது. லலிதா ஸஹஸ்ரநாமம் மூலவிக்ரஹ ரூபிணி (840) என்ற நாமா இதை உறுதிப்படுத்துகிறது. 'சண்டிகா' சண்டமுண்டாஸுரநிஷூதினி, 'ராஜ ராஜேஸ்வரி' தக்ஷிணா மூர்த்திரூபிணி போன்ற நாமாக்களும் ஒரே சர்க்கரையில் செய்த பல இனிப்பு வகைகளையே குறிக்கிறது. 'குண்டலி' குண்டலங்களைக் காதில் அணிந்தவள். 'குமாரி' கையில் அம்ருத கலசத்து டன் கூடிய பாலா பரமேஸ் வரி. பாலாத்ரிபுரசுந்தரி தேவியின் அங்க தேவதை. ஸ்ரீவித்தையின் ஆரம்பமே பாலையின் மந்த்ரம் தான்.

'குடிலே' ஓம் காரமே குடிலை. அதுவே குண்டலினியு மாகும். ஒவ்வொரு உடம்பிலும் மூலாதாரத்தில் குண்டலினி சக்தி மூன்றரை சுற்றுக்களாகப் பாம்பு போல் வளையமிட்டுப் படுத்திருக்கிறாள். இதை எழுப்பி சிரஸில் சிவத்துடன் சேர்ப்பதே ஜீவனின் லக்ஷ்யமாகும். கோவில்களில் சிவனுக்கு நாகாபரணம் சாத்துவதும் இதே தத்துவம் தான். சித்தர்கள் 'ஆடு பாம்பே' என்று பாடுவதும் இது பற்றியே ஆகும். திருவெம்பாவை திருப்பள்ளி எழுச்சி செய்வதும் இதை ஒட்டியே ஆகும். மஹாகாளீ, மஹாலக்ஷ்மி, மஹாசரஸ்வதிகளின் ஸமஷ்டி வடிவமே சண்டிகா பரமேஸ்வரி ஆகும். ஸௌலப்யமான தேவியே அசுரவதத்தின் பொருட்டு பதினெட்டுக்கை துர்கை ஆகிறாள். சண்ட, முண்டரை வதம் செய்ததால் சாமுண்டா என்றும், துர்காஸப்தசதீ என்னும் எழுநூறு மந்த்ர வடிவாகவும் விளங்குகிறாள். 'சண்டீபாடம்' என்னும் இந்த தேவி மாஹாத்ம்யம் நம்நாடு முழுவதும் ஜப, ஹோம, படனம் செய்வது அனைவரும் அறிந்ததே 'சராசர ஸவித்ரீ' சராசர ஜகன்னாதையான தேவி அசைவதும், அசை யாததுமான, அனைத்துப் பொருளுக்கும் 'ஸவிது' என்னும் ஒளியாக இருக்கிறாள். ஒளிக் கடவுள் ஆன சூரியனும் தேவியே ஆகும். 'குணினி' முக்குணங்கள் கொண்ட ப்ரும்ம, விஷ்ணு, ருத்ரனும் தேவியே: நிர்க்குணியும் அவளே; மாயையும் தேவியே; அதனின்றும் விடுவிப்பளும் அவளே தான். 'குஹாரிணி' இதய குஹையில், தஹராகாசத்தில் வசிப்பவள். 'குஹ்யே' மறைவில் பிரியமுள்ளவள். மறை வானவள். 'குருமூர்த்தே' எல்லா வடிவிலும் உள்ள தேவி குருவாக வந்து ஆட்கொள்கிறாள். 'தக்ஷிணாமூர்த்தி ரூபிணி'. எனவே. ஸனகாதி ஸமாராத்யாவாக, 'சிவ ஞானப்ரதாயினி யாக' தேவி காமாக்ஷியே விளங்குகிறாள். (46)

अभिदाकृतिर्भिदाकृतिरचिदाकृतिरपि चिदाकृतिर्मातः ।
अनहन्ता त्वमहन्ता भ्रमयसि कामाक्षि शाश्वती विश्वम् ॥

அபிதாக்ருதிர் பிதாக்ருதி:
அசிதாக்ருதிரபி சிதாக்ருதிர்மாத: |
அனஹந்தா த்வமஹந்தா, ப்ரமயஸி
காமாக்ஷி சாச்வதீ விச்வம் ||

தேவி காமாக்ஷி அழிவற்ற, நிர்விகார, நிர்ப்பேத ஸ்வரூபிணி. அகண்ட, நாநாவிதத் தோற்றங்களுடன் 'அஹமித்யேவ விபாவயே' என்ற தன்னுணர்வேயாகத் திகழ்கிறாள். சிச்சக்தி யாக சேதனத்துடன், ஜடசக்தியாக ஜடாத்மிகாவாக வும் எல்லா பேதங்களாகவும் விளங்குகிறாள். (47)

शिव शिव पश्यन्ति समं श्रीकामाक्षीकटाक्षिताः पुरुषाः ।
विपिनं भवनममित्रं मित्रं लोष्टं च युवतिबिम्बोष्ठम् ॥

சிவ சிவ பச்யந்திஸமம் ஸ்ரீகாமாக்ஷீ
கடாக்ஷிதா, புருஷா: |
விபினம் பவனமமித்ரம், மித்ரம்
. லோஷ்டம் சயுவதி பிம்போஷ்டம் ||

ஸ்ரீகாமாக்ஷியின் அருளைப் பெற்றவர்கள் மாடமாளிகை, கூட கோபுரம், காட்டில் குடிசை எல்லாவற்றையும் சமமாகப் பார்ப்பார்கள். அரண்மனை வாசம் ஒரு பொருட்டல்ல. சினேகிதன், விரோதி என்ற பேதமுமில்லை. சிவந்து கோவைப்பழம் போல் காணப்படும் உதடு, அதாவது அழகிய பெண்ணின் உதடு, ஓட்டாஞ்சில்லையும் ஒன்றாகக் கருது வார்கள். மூவாசை அவர்கள் பக்கமே நெருங்காது. சிவ! சிவ! இது என்ன ஆச்சரியம்! என்கிறார். (48)

कामपरिपन्थि कामिनि कामेश्वरि कामपीठमध्यगते ।
कामदुघा भव कमले कामकले कामकोटि कामाक्षि ॥

காமபரிபந்தி காமினி,
காமேஸ்வரி காமபீடமத்யகதே |
காமதுகா பவ கமலே காமகலே
காமகோடி காமாக்ஷி ||

மன்மதனின் பகையாளியான பரமசிவனின் சக்தியான ஸ்ரீகாமேஸ்வரரின் காமினியான காமாக்ஷி, காமகோடி பீடத்தின் மத்தியில் விளங்குபவள், ஆதார கமலங்களிலும், ஸஹஸ்ர கமலத்திலும் விளங்கும் பராசக்தி, காமகலா ப்ரதர்ஸினி, தர், மார்த்த, காம, மோக்ஷ என்ற காமகோடியாக (காமத்தின் கோடிமோக்ஷம், காமகோடி) இருப்பவளும், எல்லா விருப் பங்களையும் நிறைவேற்றுவதில் காமதேனுவாகவும் (காம தேனு நாம் வேண்டியதைக் கொடுக்கும்) இம்மைக்கும், மறுமைக்கும் வேண்டிய எல்லாப் பேற்றினையும் அளிக்கி றாள். தேவி காமகலா ஸ்வரூபிணி. மூல மந்த்ரத்தின் முக் கூடங்களின் பொருளே, தனது காரணவடிவின் மூன்று கூறு களாக உடையவள். இந்த

மூன்று பிந்துக்களே மந்திரத்தின் மூன்று கூடங்களாகவும், ஸ்தூலரூபத்தில் அவயவங்களா கவும் பரிணமித்தன என்பதே காமகலாவாகும். தேவி சிவனை ஜயிக்கும் பொருட்டு காமனுக்கு உதவியாக கோடி காமர் களை உண்டாக்கி அனுப்பியதாலும் காமகோடி ஆகிறாள். (49)

मध्येहृदयं मध्येनिटिलं मध्येशिरोऽपि वास्तव्याम् ।
चण्डकरशक्रकार्मुकचन्द्रसमाभां नमामि कामाक्षीम् ॥

மத்யே ஹ்ருதயம் மத்யேநிடிலம்
மத்யே சிரோபிவாஸதவ்யாம் |
சண்டகர சக்ர கார்முக சந்த்ரஸமாபாம்
நமாமி காமாக்ஷீம் ||

மத்யான காலத்தில் ஹ்ருதயத்தில் சூரிய காந்தியைப் போல 'ஹ்ருதயஸ்தா', 'ரவிப்ரக்யா' (லலிதாஸஹஸ்ரநாமம் 595, 596) என்று தேவி அனாஹத கமலத்தில் விளங்கு கிறாள். இந்த்ர தனுஸ் என்னும் வானவில்லைப்போல் 'பாலஸ்தா', 'இந்த்ர தனுப்ரபா' (593, 594) என்று நெற்றியி லும் 'சிரஸ்திதா', 'சந்த்ரநிபா' (591,592) பிரமரந் தரத்தில், மஹாபிந்து வில், பூர்ண சந்தினாகவும் பிரகாசிக்கிறாள். ஆதார கமலங்களில் தேவியை த்யானிக்கும் முறை கூறப்பட் டுள்ளது. (50)

अधिकाञ्चि केलिलोलैः अखिलागमयन्त्रमन्त्रतन्त्रमयैः ।
अतिशीतं मम मानसं असमशरद्रोहिजीवनोपायैः ॥

அதி காஞ்சி கேலி லோலை:
அகிலாகமயந்த்ர மந்த்ர தந்த்ரமயை: |
அதி சீதம் மம மானஸம் அஸமசர
த்ரோஹி ஜீவனோபாயை: ||

சகல வேதங்களின் கூட்டமாகிய முத்துச்சிப்பி என்ற சம்படத்தில் அமைந்த முத்தாக தேவி விளங்குகிறாள். ஸ்ரீபுர வாஸியான ஸ்ரீதேவியின் ஸ்ரீநகரத்தின் நாலு பக்கங்களிலும், மேலும் கீழும் நான்கு வேதங்களும், உபநிஷதங்களும் ஸப்த கோடி மந்திரங்களை உள்ளிட்டு விளங்குகிறது. உபநிஷத் தின் பொருள் தேவியே ஆகும். வித்தை என்பது எல்லா வித்தைகளுக்கும் பொதுவான வார்த்தை. ஆனால் தேவியின் வித்தை ஸ்ரீ என்ற அடை மொழியால் குறிக்கப்படும் ஸ்ரீவித்தையாகும். அதுபோல் ஸ்ரீயந்திரம் ஸ்ரீதந்த்ரம் என்பதுமாகும். மேலும் மஹா என்ற சிறப்புப் பெயருடன் லலிதா

ஸஹஸ்ர நாமம் 226, 227, 228ல் மஹாதந்த்ரா, மஹாமந்த்ரா, மயாயந் த்ரா என்று குறிக்கப்பட்டுள்ளது. தேவி வழிபாட்டைத் தனித்துக் கூறும் ஸ்வதந்த்ரம் மஹாதந்த்ரம் ஆகும் மற்றும் குலார்ணவம், ஞானார்ணவம் போன்றவை. ஸ்ரீவித்தை எல்லா மந்த்ரங்களுக்கும் பூர்ணத்வம் அளிப்ப தால் மஹா மந்த்ரா ஆகிறது. பூர்ணாபிஷேகதீக்ஷை பெற்றவர் பிறருக்கு மந்த்ர உபதேசம் செய்வது தான் கிரமமாகும். ஸ்ரீசக்ர, பத்ம சக்ர, அம்ரு தகட, மேரு, லிங்கம் முதலியவை மஹா யந்த் ரங்கள் ஆகும். ஸ்ரீஸூக்தம் தேவிக்கு உரியது. ஸ்ரீ என்ற அடைமொழியாலேயே சிறப்பிக்கப்படு கிறது. இப்படியாக ஸ்ரீநகரின் நாலுபுறமும் ஸப்த கோடி மஹா மந்த்ரங்கள் சூழதேவி காமகோடியாக, (ஆசைகள் முடியுமிடம்) மோக்ஷ தாயினியாக விளங்குகிறாள். (51)

नन्दति मम हृदि काचन मन्दिरयन्ती निरन्तरं काञ्चीम् ।
इन्दुरविमण्डलकुचा बिन्दुवियन्नादपरिणता तरुणी ॥

நந்ததி மம ஹ்ருதி காசன
மந்திரயந்தீ நிரந்தரம் காஞ்சீம் |
இந்துரவி மண்டலகுசா பிந்து
வியந்நாத பரிணதா தருணீ ||

சூரிய, சந்திரர்கள் தேவிக்கு அணிகள் பூட்டும்போது தாங்களே இருதாடங்கங்களாகவும், இருகண்களாகவும், ஸ்தனங்களாகவும் அலங்கரித்தனர். பரம்பொருளிலிருந்து உலக சிருஷ்டி தொடங்கும் போது மூலப்ரக்ருதி, அவ்யக்தம், மஹத்தத்வம், அஹங்காரம், இவைகளின் ஸமஷ்டி வடிவான பிந்து என்னும் அபராகாமகலை இப்படி வரிசையில் ஆகாயம் முதலிய பஞ்ச பூத பீஜங்களும், அதில் நாதமென்ற சப்த குணத்தோடு கூடிய ஆகாயம் மற்றும் வாயு, அக்னி, ஜலம், பூமி ஏற்பட்டது. இவ்வாறு பஞ்சபூதங்கள் பிறக்கக் காரணமான தேவியுவதியாவாள். யுவதியிடமிருந்து பிறப்பது இயற்கை அல்லவா? எனவே ப்ரகிருதி என்ற இயற்கை, தேவி யிடம் பிறந்து, விக்ருதியாகவும் ஆயிற்று. ஒன்றாயரும்பி பலவாய் விரிந்து இவ்வுலகெங்கம் நின்றாள். அனைத்தையும் நீங்கி நிற்பாள் என்று போற்றுவோம். (52)

शम्पालतासवर्णं संपादयितुं भवज्वरचिकित्साम् ।
लिम्पामि मनसि किञ्चन कम्पातटरोहि सिद्धभैषज्यम् ॥

சம்பா லதா ஸவர்ணம், ஸமபாதயிதும்
பவஜ்வர சிகித்ஸாம் |

லிம்பாமி மனஸி கிஞ்சன கம்பாதட
ரோஹி ஸித்த பைஷஜ்யம் ||

தேவி மின்னல் கொடிபோல் நிறமுள்ள, கண்களைப் பறிக் கும் வெண்மையான ஒளி; ஃனவே ஸித்த ஔஷத மூலிகை என்கிறார். இந்த மூலிகை பிறவிப்பிணியைத் தீர்ப்பதுடன் மருந்தும் ஆகிறது. குண்டலினி சக்தியானவள் மேலேறி வரும்போது ஆக்ஞா சக்கரத்தில் தாமதியாமல் மின்னல் போல் கணநேரமே உணரப்படுவதால் 'க்ஷண ஸௌதாமினீ ' எனவும். ஸஹஸ்ரத்தில் சிவனுடன் நிலைத்திருப்பதால் 'ஸ்திரஸௌ தாமினீ' என்றும் பெயர் பெறுகிறாள். (53)

अनुमितकुचकाठिन्यां अधिवक्षःपीठं अङ्गजन्मरिपोः ।
आनन्ददां भजे तां आनङ्गब्रह्मतत्त्वबोधसिराम् ॥

அனுமித குச காடின்யாம், அதிவக்ஷ:
பீடமங்க ஜன்மரிபோ |
ஆனந்ததாம் பஜேதாம், ஆனங்க
ப்ரஹ்ம தத்வ போத ஸிராம் ||

பரமேச்வரன் மன்மதனை எரித்தார். தேவி அவனை உண் டாக்கினாள். பின் காமனாலேயே அவர்கள் ஒன்று சேர்ந்து காமேஸ்வர, காமேஸ்வரி ஆனார். தேவியைப் பரமசிவன் ஆலிங்கனம் செய்து கொள்வதால், அவர் மார்பு எனும் மணி பீடத்தில் தேவியின் கடினமான ஸ்தனங்களின் மோதுதல் ஏற் படுகிறது. 'காமேஸ்வர ஆலிங்கிதாங்கி' லலிதா த்ரிசதி கூறு கிறது. ச்ருங்காரப்ரஹ்ம தத்வ போத ப்ரவாஹமான ஸ்ரீவித்யா ஸ்வரூபிணி, காமாக்ஷிக்கு நமஸ்காரங்கள். (54)

ऐक्षिषि पाशाङ्कुशधरहस्तान्तं विस्मयार्हवृत्तान्तम् ।
अधिकाञ्चि निगमवाचां सिद्धान्तं शूलपाणिशुद्धान्तम् ॥

ஐக்ஷிஷி பாசாங்குசதர, ஹஸ்தாந்தம்
விஸ்மயார்ஹ வ்ருத்தாந்தம் |
அதிகாஞ்கி நிகம வாசாம் ஸித்தாந்தம்
சூலபாணி சுத்தாந்தம் ||

தேவி கைகளில் பாச, அங்குச, வில், பாணம் தரித்திருப்பதால் வேண்டு வோர்க்கு, வேண்டியதற்கு அதிகமாகவே தன் பாதங்களாலேயே கொடுக்கி

றாள். தேவியின் இருக்கையின் நாலு புறங்களிலும் வேதத்தின் உட்பொருளான மஹா வாக் யங்கள் விளங்குகிறது. மஹாவாக்யங்களும், வேத ஸாரமான உபநிஷத்துக்களும் தேவியையே ப்ரதிபாதனம் செய்கிறது. லலிதா தேவி பண்டவதம், தேவியின் மறுபக்கமான சண்டி, சாமுண்டா தேவிகள் செய்த மஹிஷாஸுர, சும்ப, நிசும்ப வதங்கள் செய்ததும் தேவியின் லீலைகளாகும். வேத ஸ்வரூபமான தேவியே சூலபாணியான பரமேஸ்வரரின் அந்தப் புரமாகவும் விளங்குகிறாள். (55)

आहितविलासभङ्गीं आब्रह्मस्तम्बशिल्पकल्पनया ।
आश्रितकाञ्चीं अतुलां आद्यां विस्फूर्तिमाद्रिये विद्याम् ॥

ஆஹித விலாஸ பங்கீம்
ஆப்ரஹ்ம ஸ்தம்ப சில்ப கல்பனயா |
ஆச்ரித காஞ்சி மதுலாம், ஆத்யாம்
விஸ்பூர்த்தி மாத்ரியே வித்யாம் ||

ஸ்ரீமாதா என்று லலிதாஸஹஸ்ரநாமம் ஆரம்பம். எனவே ப்ரும்மா முதல் இடைப்பட்ட புழு வரை எல்லோருக்கும் தாய் காமாக்ஷி ஆவாள். 'ஆப்ரஹ்ம கீட ஜனனி' என்றபடி தேவியே அனைவருக்கும் தாய் தேவி சிவனை சிருங்கார ரஸத்தில் தோய்த்து எடுக்கிறாள். ச்ருங்காரம் நிரம்பிய பூர்ணகிரி பீடத்தில் மணிபூரக சக்ரேஸ்வரியாக, ச்ருங்கார நாயிகாயை நம: என்று பூஜிக்கப்படுபவளாக விளங்குகிறாள். துர்வாஸ மகரிஷி காமாக்ஷியுடன் மிகுந்த தொடர்புடையவர், அவர் பூஜா முறைதான் அங்கு அனுஷ்டிக்கப் படுகிறது. தேவியை ஒளி என்றே குறிப்பிடுகிறார். 'நந்தித கிரிஸாய நமோ' 'மஹஸே நம' 'நீப பாடலாய நம:' (56)

मूकोऽपि जटिलदुर्गतिशोकोऽपि स्मरति यः क्षणं भवतीम् ।
एको भवति स जन्तुर्लोकोत्तरकीर्तिरेव कामाक्षि ॥

மூகோபி ஜடில துர்க்கதி சோகோபி
ஸ்மரதிய: க்ஷணம் பவதீம் |
ஏகோ பவதி ஸ ஜந்து: லோகோத்தர
கீர்த்திரேவ காமாக்ஷி ||

ஒருவர் ஊமையாயிருப்பினும் தேவி காமாக்ஷியை க்ஷணகாலம் நினைத்த மாத்திரம், கவிதைத்திறன், கீர்த்தி பெற்று வாழ்வார். (மூகாசாரியார் தான் பெற்ற பேற்றினைக் கூறுகிறார் போலும்) ச்ருங்காரபட்டாரகர் என்று சிறப்பிக் கப்பட்ட காளிதாஸர், காளமேகப்புலவர், கம்பர் போன்றவர் களை நினைவு கூறலாம். (57)

पञ्चदशवर्णरूपं कञ्चन काञ्चीविहारधौरेयम् ।
पञ्चशरीयं शंभोर्वञ्चनवैदग्ध्यमूलं अवलम्बे ॥

பஞ்சதச வர்ணரூபம், கஞ்சன
காஞ்சி விஹாரதௌரேயம் |
பஞ்சசரீயம் சம்போ: வஞ்சன
வைதக்த்ய மூல மவலம்பே ||

ஸ்ரீலலிதா மஹாத்ரிபுரசுந்தரியான காமாக்ஷி பராபட்டாரிகாவின் மந்த்ர மயமான ஸூக்ஷ்ம ரூபம் கூறப்படுகிறது. பஞ்ச தச வர்ணரூபம் பதினைந்து அக்ஷரங்காளல் ஆனது. பஞ்சதசீ என்னும், எல்லா வித்தைகளிலும், சிறந்ததாகப் போற்றப்படும் ஸ்ரீவித்தை என்னும் ப்ரம்மவித்தை, இதுவே, தேவியின் மூல மந்த்ராத்மிகா, மூலகூடத்ரயகலேபரா என்று போற்றப்படுவது. ப்ரம்ம வித்தையை அனுஸந்தானம் செய்யவே தேவி ஸ்ரீவித்யை என்ற ஸகுணரூபமாக ஸ்ரீகாமாக்ஷியாக காஞ்சியில் வந்து பத்மாஸனத்தில் அமர்ந்திருக்கிறாள். குணம் குறிக ளற்ற பிரம்மத்தை விளக்கவே தேவ் தாய் வடிவத்துடன் நமக் கெல்லாம் அருள் பாலிக்கிறாள். ஸ்ரீவித்யா பாலா என்னும் முதல் படியான தேவியின் மந்த்ர வடிவம், மூன்று பீஜங்களு டன் ஒன்பது வயதுக்குட்பட்ட பாலா தேவியாக த்யானிக்கப் படல் வேண்டும். பாலையின் மூன்று பீஜாக்ஷரங்களும், பஞ்சதசீ என்ற மந்தரமாக விரிவடைகிறது. காதி, ஹாதி, ஸாதி என்ற மூவகை பஞ்ச தசீ மந்த்ரங்களில் மன்மதவித்தையான காதிவித்தையே மிகச் சிறந்ததாகும். பாலையின் முதல் பீஜமான 'ஐம்' என்னும் வாக் பீஜம் தேவியின் முகமண்டல மாக க, ஏ, ஈ, ல, ஹ்ரீம் என்ற ஐந்து அக்ஷரங்களுடன், 'ஸ்ரீமத்' வாக்பவ கூடைக ஸ்வரூப முகபங் கஜா என்றும், பாலையின் இரண்டாவது பீஜம் 'க்லீம்' என் னும் காமபீஜம், ஹ, ஸ, க, ஹ, ல, ஹ்ரீம் என்ற ஆறு அக்ஷரங்க ளுடன் 'கண்டாத: கடிபர்யந்த மத்ய கூட ஸ்வரூபிணீ என்றும், பாலையின் மூன்றாவது பீஜமான 'ஸௌ:' என்னும் சக்தி பீஜம் ஸ, க, ல, ஹ்ரீம் என்ற நான்கு அக்ஷரங்களுடன் 'சக்தி கூடைகதா பன்ன கட்யதோ பாக தாரிணி' என்பதாக சக்தி கூடமாகவும் 'பஞ்சதச' என்ற இந்த மஹா மந்த்ரமானது, தேவியின் ஸூக்ஷ்மரூப மந்த்ரமாகவும், அதே சமயம் ஸ்தூலரூப அவயவங்களாகவும் லலிதா ஸஹஸ்ரநாம ப்ரமாணங்களுடன் விளங்குகிறது. வாக்பவ கூடேஸ்வரீ காஞ்சி ஸ்ரீகாமாக்ஷி, மத்ய கூடேஸ்வரீ மதுரை ஸ்ரீ மீனாக்ஷி, சக்தி கூடேஸ்வரீ திருஆனைக்கா அரசி ஸ்ரீமத் அகிலாண்டேச்வரியுமாகும். இதைப் பற்றி இன்னும் எழுதினால் விரியும். (58)

परिणतिवर्ती चतुर्धा पदवीं सुधियां समेत्य सौषुम्नीम् ।
पञ्चाशदर्णकल्पितपदशिल्पां त्वां नमामि कामाक्षी ॥

பரிணதி மதீம் சதுர்தா பதவீம்
ஸுதியாம் ஸமேத்ய ஸௌஷும் நீம் |
பஞ்சாசதர்ண கல்பித, பதசில்பாம்
த்வாம் நவாமி காமாக்ஷி ||

ஜீவன் மனதை ப்ரதானமாக்கி, அதில் எழும் ப்ரபஞ்ச, நிஷ்ப்ர பஞ்ச எண்ணங்களின்படி, இடா, பிங்கலா நாடிகளின் மத்தியில் ஓடும் சுஷும்னா நாடியில் ஆறு ஆதார கமலங் களையும் பாவிப்பது சமயமார்க்கமாகும். இதே நாடியில் பரா, ப்ரத்யக் சிதீரூபா, பச்யந்தீ, மரதேவதா, மத்யமாவைகரீரூபா என்பதாக சப்தத்தின் நாலு ரூபங்களும் விளங்குகிறது. சப்தம் இல்லையேல் மொழி இல்லை. கருத்துப் பரிமாறலும் இல்லை. வடமொழியில் எழுத்துக்கள் ஐம்பதாகும். மாத் ருகை' எனப்பெயர் பெறும். தேவி மாத்ருகா வர்ணரூபமா கவே விளங்குகிறாள். இந்த ம்ாத்ருகா வர்ணங்களே பத மாகவும் அதுவும் தேவியாகவே விளங்குகிறது. வர்ணத்தி லிருந்து பதம், மந்த்ரம் எல்லாமே தேவியின் ரூபமே 'ஐம்ப தெழுத்தே அனைத்து வேதங்களும் ஐம்பதெழுத்தே அனைத்து ஆகமங்களும்' என்பர் திருமூலர். (59)

आदिक्षन्मम गुरुराडादिक्षान्ताक्षरात्मिकां विद्याम् ।
स्वादिष्ठचापदण्डां नेदिष्ठामेव कामपीठगताम् ॥

ஆதிக்ஷன் மம குருராட்
ஆதிக்ஷாந்தா க்ஷராத்மிகாம் வித்$_4$யாம் |
ஸ்வாதிஷ்ட சாபதண்டாம்
நேதிஷ்டாமேவ காம பீடகதாம் ||

தேவியின் வடிவமே 'அ' கார'க்ஷ'காரமாகும். ஸ்ரீவித்தை யில் தேவி மாத்ருகா வர்ணரூபியாகவே போற்றப்படு கிறாள்.மேலும் ஸ்ரீவித்தையில் குருவின் முக்யத்வத்தைக் கூறுகிறார். ஸ்ரீவித்தை என்பது குரு ப்ரதான வித்தை. இந்த உபதேசம் பெற்றவர்கள் குருவை எங்கு கண்டாலும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும் என்பது மரபு. இன்னும் பல நியமங்கள் உண்டு. 'நகுரோரதிகம்' என்று வித்யாரண்ய ஸ்வாமிகள் முழங்குகிறார். தேவி காமாக்ஷி ஸ்ரீவித்யா ஸ்வரூபிணியாக காமகோடி பீடத்தில் கையில் கரும்புவில்லுடன் விளங்குவதை என் பூஜ்ய ஸ்ரீகுருவின் பரமக்ருயைால் அறிந்து கொண்டேன் என்று மூகாசாரியார் உளமுருகிக் கூறுகிறார். இந்த இடத்தில் அடியேனும் என் பூஜ்ய ஸ்ரீகுருமாதா ஸ்ரீஞானாம் பிகா ராஜேஸ்வரியின் 'பெரிய பொட்டு அம்மா' ரக்த, சுக்ல சரணங்களில்

நமஸ்கரித்து என் நன்றியைக் கூறுகிறேன். இதுபோல் என்னை எழுதப் பணித்த பூஜ்ய ஸ்ரீ. மதி ஒளி சரஸ்வதி அவர்களின் திருப்பாதங்களில் நமஸ்கரிக்கிறேன். (60)

तुष्यामि हर्षितस्मरशासनया काञ्चिपुर कृतासनया ।
स्वासनया सकलजगद्भासनया कलितशम्बरासनया ॥

துஷ்யாமி ஹர்ஷிதஸ்மர, சாஸனயா
காஞ்சிபுர க்ருதாஸனயா |
ஸ்வாஸனயா ஸகல ஜகத் பாஸனயா
கலி தசம் பராஸனயா ||

மன்மதனை அடக்கிய பரமேஸ்வரனை சந்தோஷமடையச் செய்யும் காமாக்ஷி ஸ்ரீவித்யா ஸ்வரூபிணியாகத் திகழ்வது காஞ்சி யில்தான். மன்மதனை உயிர்ப்பித்த காமாக்ஷி எல்லார் காமனையும் பூர்த்தி செய்து சகல ஜகத்திலும் ப்ரகாசிக்கிறாள். (61)

प्रेमवती कम्पायां स्थेमवती यतिमनस्सु भूमवती ।
सामवती नित्यगिरा सोमवती शिरसि भाति हैमवती ॥

ப்ரேமவதீ கம்பாயாம், ஸ்தேமவதீ
யதி மனஸ் ஸு பூமவதி |
ஸாமவதீ நித்யகிரா, ஸோமவதீ
ஸிரஸிபாதி ஹைமவதீ

சந்த்ர கலையை சிரசில் தரித்த ப்ரவதராஜ குமாரியான தேவி ஹைமவதி என்ற சிறப்புப்பெயர் தாங்கி கம்பாநதி தீரத்தில் மிகுந்த ப்ரேமையுடன் ஆத்ம ஞானமடைந்த யதிகளின் மனதில் வீற்றிருக்கிறாள். எங்கும் எதிலும் நிறைந்த தேவி அழிவற்ற நித்யமான வாக்குகளாலான வேதங் களால் புகழப்படுகிறாள். எல்லா விபூதிகளும் நிறைந்தவ ளாய்க் காணப்படுகிறாள். (62)

कौतुकिना कम्पायां कौसुमचापेन कीलितेनान्तः ।
कुलदैवतेन महता कुड्मलमुद्रां धुनोतु नः प्रतिभा ॥

கௌதுகினா கம்பாயாம்
கௌஸுமசாபேன கீலிதேனாந்த: |

குலதைவதேன மஹதா, குட்மல
முத்ராம் துனோதுந: ப்ரதிபா ||

தேவி காமாக்ஷி அவரவர் குடும்பத்திற்கு அவரவர் குல தெய்வமாகவே அருள் புரிகிறாள். நம் உள்ளத்தில் அசஞ்ச லமான பக்தி இருந்தால் போதும் உலக இயல் சுகங்களுடன், தேவி நமக்கு ஞானத்தையும் அளிக்கிறாள். தேவியின் கைகளில் கரும்புவில், பஞ்ச புஷ்ப பாணங்கள் தரித்து ராஜராஜேஸ்வரி யாக வீற்றிருக்கிறாள். நம்முடைய கோரிக்கை களை தன் கையில் இருக்கும் பாணத்தின் புஷ்பங்களாக்கி, நம் மனங்களென்னும் கரும்புவில்லில் பூட்டி வரங்களை வாரி வழங்குகிறாள். 'குட்மலமுத்ராம் துனோதுந: ப்ரதிபா' இதன் விளக்கம்: சித் என்ற கலை, அது ஜீவனில் உள்ளது. அதுவே ஆனந்தத்தின் அம்ச கலை 'கலிகா' மொட்டு, தன் னுள் மணம், அழகு இவற்றை அடக்கிக் கொண்டு, அதுவே மலர்ந்தபின் மணத்தைப் பரப்பு வது போல் நாமும் தேவியின் ப்ரேமைக்கு உட்பட்டு, 'ப்ரியம்கரீ' ஆன தேவி நாம் பிரியப் பட்டதை வலுவிலே தருகிறாள். (63)

यूना केनापि मिलिद्देहा स्वाहासहायतिलकेन ।
सहकारमूलदेशे संविद्रूपा कुटुम्बिनी रमते ॥

யூனா கேனாபி மிலத், தேஹாஸ்வாஹா
ஸஹாய திலகேன |
ஸஹகார மூலதேசே, ஸம்வித்ரூபா
குடும்பினீ ரமதே ||

ஸத்வ குணமும், ப்ரம்ம ஞானமும், ஒன்றுக் கொன்று சம்பந்தப்பட்டதே. அது 'ஸஹகாரி' என்றே, துணை என்றே சொல்லப்படுகிறது. ஒட்டு மாம்பழத்துக்கு ஸஹகாரம் என்று பெயர் உண்டு. 'ஸஹகாரமூலதேசே' காஞ்சீபுரத்தில் ஓர் மாமரத் தடியில் ஏகாம்ரநாதரோடு அம்பாள் அத்வைதமாக ஒட்டிக் கொண்டிருக்கிறாள். இப்படியே ஸத்குணமும், ஞானமும் ஒட் டியே மோக்ஷம் விளைகிறது. இது நம் பரமாசாரி யாள் வாக்கு. பரமேஸ்வரன் அக்னி நேத்ரத்தால் மன்மதனை எரித்தார். மன்மதன் சிவ தம்பதியரை சேர்த்து வைக்கவே மன்மதபாணம் வீசி னான். அக்னி என்ற தேவன் தன் இரு மனைவிகள் ஸ்வாஹா, ஸ்வதா உதவியாலேயே மன்மதனை எரித்தான். இது வேடிக்கை யான விஷயம். சக்தியுடன் சேர விரும்பாத சிவன், இரு சக்திக ளுடன் கூடிய அக்னியாலேயே அந்த விஷயத்தை சாதித்தார். பின்னால் நடந்த விஷயங்கள் யாவரும் அறிந்ததே. தேவி ஸதா சிவ குடும்பினீயாக ப்ரதோஷ காலத்தில் தன் குடும்பத்துடன் நமக்கெல்லாம் தரிசனம் அளிக்கிறாள். (64)

कुसुमशरगर्वसंपत्कोशगृहं भाति काञ्चिमध्यगतम् ।
स्थापितमस्मिन्कथमपि गोपितमन्तर्मया मनोरत्नम् ॥

குஸுமசர கர்வ ஸம்பத், கோச
க்ருஹம் பாதி காஞ்சிதேச கதம் |
ஸ்தாபித மஸ்மின் கதமபி, கோபித
மந்தர்மயா மனோரத்னம் ||

தேவி தன் கண்களால் காமனை உண்டாக்கி, சிவனையும் ஜெயிக்க வைத்ததால் அவன் கர்வம் கொண்டது வியப் பில்லை. மன்மதனின் பொக்கி ஷமேயான காமாக்ஷி, அந்த கஜானாவில் நம் மனதைப் பூட்டி வைப்போம். மன்மதன் சிவனை ஜயித்ததால் காஞ்சி சிவஜித் க்ஷேத்திரமாகிறது. (65)

दग्धषडध्वारण्यं दरदलितकुसुम्भसंभृतारुण्यम् ।
कलये नव तारुण्यं कम्पातटसीम्नि किमपि कारुण्यम् ॥

தக்த ஷடத்வாரண்யம், தரதலித
குஸும்பஸம்ப்ருதாருண்யம் |
கலயே நவதாருண்யம், கம்பாதடஸீம்னி
கிமபி காருண்யம் ||

அம்பிகையை உபாஸிப்பதில் ஷடத்வாதீதரூபிணி என்ப தாக ஆறு வழிகள் இருக்கிறது. தேவி எல்லாவற்றையும் கடந்த நிலையிலும் நிற்கிறாள். வர்ண, பத, மந்த்ர, கலா, தத்வ, புவன என்ற ஆறு அத்வாக்களில் முதல் மூன்றும் சப்த ஸ்வரூபமானதால் விமர்சமாய் சக்திரூபமாய் இருக்கிறது. கலா, தத்வ, புவனமென்ற இது மூன்றும் அர்த்த ஸ்வரூபமாய் ப்ரகாச வடிவமாய் சிவ வடிவாக விளங்குகிறது. குரு சிஷ்யனுக்கு மந்த்ர உபதேசம் செய்யும் முன் மந்த்ரத்தால் தேவியுடன் ஐக்யபாவம் பெற வேண்டி ஷடத்வசோதனம் செய்ய வேண்டும். ஏனெனில் அத்வாக்கள் பிண்டமாகிய நம் உடலி லிருந்து அகன்றால் தான் மந்த்ர சைதன்யம் நம் உடலில் தங்கும். அபிநவ-குல-சுந்தரியான தேவி புதிய யௌவனத்துடன் கருணையோடு காஞ்சியில் வீற்றிருக்கிறாள். (66)

अधिकाञ्चि वर्धमानां अतुलां करवाणि पारणां अक्ष्णोः ।
आनन्दपाकभेदां अरुणिमपरिणामगर्वपल्लविताम् ॥

அதி காஞ்சி வர்தமானாம், அதுலாம்
கரவாணி பாரணா மக்ஷ்ணோ: |
ஆனந்த பாகபேதாம், அருணிம
பரிணாம கர்வ பல்லவிதாம் ||

தேவியை நம் ஆத்மாகவாகப் பார்க்கும் ஆனந்தம், மோதம், ப்ரமோதம் என்று படிப்படியாக அதிகரிக்கும். 'போக்கும், வரவும், இரவும், பகலும், புறமும், உள்ளும் வாக்கும் வடிவும், முடிவும், இல்லாத ஒன்று வந்து தாக்கும் மனோலயம் தானே தரும் என்னைத் தன் வசத்தே காக்கும் அறுமுகவா சொல் லொணாதிந்த ஆனந்தமே' அருணகிரியார் 'கந்தரலங்காரம் இப்படித் தன் ஆனந்தத்தைக் கூறுபவர், அதையும் சொல்ல முடியாத ஆனந்தம் என்றே கூறுகிறார். ஆத்ம கோசர விருத்தி ஸ்வரூப விமர்சமென்னும் செம்மை நிறத்தின் பரிபக்வ நிலைமையால் ஏற்பட்ட கர்வத்தால் தளிர்த்து நிற்கும் தேவியை வணங்குகிறேன். (67)

बाणसृणिपाशकार्मुकपाणिममुं कमपि कामपीठगतम् ।
एणधरकोणचूडं शोणिमपरिपाकभेदमाकलये ॥

பாண ஸ்ருணி பாச கார்முக
பாணிமமும் கமபி காமபீடகதம் |
ஏணதர கோண சூடம் சோணிம
பரிபாக பேதமாகலயே ||

தேவி கைகளில் பாச, அங்குசம், மலரம்பு, வில் இவற்று டன், சந்த்ரகலை தரித்து, ப்ரம்மத்தை விளக்க வந்த விமர்ச ரூபிணியாய், சிவந்த நிறத்துடன் காக்ஷி அளிக்கிறாள். ஆத்மா அபின்ன ப்ரம்மம், அதை உணரவோ, சொல் லவோ முடியாது. அதை விளக்கவே நிறமற்ற ப்ரும்மம் சிவந்த நிறத்தை ஏற்று, அணி, துகில், மாலை அனைத்திலும் சிருஷ்டி, ராகம், இரண் டின் நிறமான செம்மையை ஏற்று காமாக்ஷியாக உருவெடுத்துள்ளது. (68)

किं वा फलति ममान्यैः बिम्बाधरचुम्बिमन्दहासमुखी ।
संबाधकरी तमसां अम्बा जागर्ति मनसि कामाक्षी ॥

கிம்வா பவதி மமான்யை:
பிம்பாதர சும்பி மந்த ஹாஸமுகீ |
ஸம்பாதகரீ தமஸாம் அம்பா
ஜாகர்த்தி மனஸி காமாக்ஷி ||

சிவந்த உதடுகளில் புன்சிரிப்புடன் கூடிய தேவி காமாக்ஷி யின் கருணையை அடைந்தபின் அன்னியர்களால் ஆக வேண் டியது எதுவுமில்லை. இதையே அபிராமிபட்டரும் 'அம்மா நீ என்னிடம் வைத்த பெருங்கருணை இருக்கும் போது தேவியின் அன்பர்களைத் தவிர மற்றவருடன் உறவு கொள்ளேன் தேவியின் அன்பர்களே தனக்கும் அன்பர்கள்' என்று கூறுகிறார். (69)

मञ्चे सदाशिवमये परशिवमयललितपौष्पपर्यङ्के ।
अधिचक्रमध्यमास्ते कामाक्षी नाम किमपि मम भाग्यम् ॥

மஞ்சே ஸதாசிவமயே, பரசிவமய
லலித பௌஷ்பபர்யங்கே |
அதிசக்ர மத்யமாஸ்தே, காமாக்ஷி
நாம கிமபி மம பாக்யம் ||

லலிதா ஸஹஸ்ரநாமம் 'ஸுமேருமத்ய ச்ருங்கஸ்தா முதல் காமாக்ஷி' வரை உள்ள விஷயம், ஸௌந்தர்யலஹரி 8-வது ஸுதாஸிந்தோர் இதன் கருத்துக்களே இந்த 70வது பாடலாகும். ஸுமேரு மத்யத்தில், ஸ்ரீநகரத்தில் சிந்தாமணி கிருஹத்தில், பஞ்ச பிர்மாஸனத்தில், மஹா வாராஹி என்ற தண்டநாதா, ராஜஸ்யாமளை என்னும் மந்த்ரிணி தேவிக ளுடன், லலிதா மஹாத்ரிபுரசுந்தரி பராபட்டாரிகா தேவி, காமேஸ்வரரின் மடியில் அமர்ந்திருக்கிறாள். தேவி அமர்ந்த ஆஸனம், ப்ருமம, விஷ்ணு, ருத்ர, ஈச்வரர்களே நாலு கால்களாகவும், ஸதாசிவன் படுக்கை, ஈசானன் தலையணை இப்படி அமைந்துள்ளது. சிந்தாமணி க்ருஹம், பத்மஅடவி, கதம்ப வனங்களாலும் சூழப்பட்டுள்ளது. ராஜ ராஜேஸ்வரியாக பஞ்ச ப்ரும்மாஸனத்தில் அமர்ந்து தர்பார் நடத்துகிற, அதே தேவி ப்ரஹ்ம தத்வத்தை லீலையில் ச்ருங்கார மூர்த்தியாக ஏகாந்தமாக அந்தப் புரதரிசனமும் தருவாள். உயர்ந்த மன அடக்கம் உள்ளவர்களுக்கு மாத்திரமே கிட்டும். ஸதாசிவ ஸ்வரூப மஞ்சம், பரமசிவமய புஷ்பப்படுக்கை, ஸ்ரீசக்ரமத்ய பிந்து ஸ்தானம், காமாக்ஷி தேவி வீற்றிருக்கும் நிலையை இப்படி த்யானிக்கும் நாமே பாக்யவான்கள். (70)

रक्ष्योऽस्मिः कामपीठीलासिकया घनकृपाम्बुराशिकया ।
श्रुतियुवतिकुन्तलीमणिमालिकया तुहिनशैलबालिकया॥

ரக்ஷ்யோஸ்மி காமபீடி லாஸிகயா
கனக்ருபாம்பு ராஸிகயா |
ஸ்ருதி யுவதி குந்தலீமணி மாலிகயா
துஹின சைல பாலிகயா ||

காமபீடமென்னும் நாடகசாலையில் நர்த்தனமிடும் காமாக்ஷி, கருணா கடாக்ஷி, வேதத்தின் விளக்கமாகவே விளங்குகிறாள். கவி இதை வெகு அழகாக வேதம் என்ற யுவதியின் கூந்தலில் அலங்கரிக்கும் 'மணிமாலை' போன்ற தேவி என்கிறார். ஹிமவானின் புதல்வியால் நாம் ரக்ஷிக்கப் படுகிறோம். (71)

लीये पुरहरजाये माये तव तरुणपल्लवच्छाये ।
चरणे चन्द्राभरणे काञ्चीशरणे नतार्तिसंहरणे ॥

லீயே புரஹர ஜாயே, மாயே
தவதருண பல்லவச்சாயே |
சரணே சந்த்ராபரணே காஞ்சி
சரணே நதார்த்தி ஸம்ஹரணே ||

சகல உயிருக்கும் தாயான தேவி அவளை அண்டியவர்களின் துயரங்களைத் துடைக்கிறாள். பிறைச்சந்திரனுடன் கூடிய முப்புரமெரித்த சிவனாரின் மனைவி, தளிர் போன்ற நிறம், அழகுடன் கூடிய மாயாஸ் வரூபிணியின் திருவடிகளில் சரணமடைகிறேன். (72)

मूर्तिमति मुक्तिबीजे मूर्ध्नि स्तबकितचकोरसाम्राज्ये ।
मोदितकम्पाकूले मुहुर्मुहुर्मनसि मुमुदिषाऽस्माकम् ॥

மூர்த்திமதி முக்தி பீஜே, மூர்த்னி
ஸ்தபகித சகோர ஸாம்ராஜ்யே |
மோதித கம்பாகூலே, முஹுர் முஹுர்
மனஸி முமுதிஷா ஸ்மாகம் ||

சகோர பக்ஷியின் ஸாம்ராஜ்யமே சந்திரன் தான். சந்திரனில் ஒழுகும் அமிர்தமே அதற்கு உணவு. அந்த நிலவைத்தலை யில் அணிந்த தேவி நமக்கு மோக்ஷமளிக்கிறாள். தர், மார்த்த, காம, மோக்ஷம் என்ற சதுர்வித புருஷார்த்தங்களையும் ஸ்ரீவித்யா ஸ்வரூபிணியான காமாக்ஷி அளிக்கிறாள். காமத்தின் கோடியான மோக்ஷத்தை காமாக்ஷி அளிப்பதால் காமகோடி ஆகிறாள். கோடிக்குப்பின் எதுவும் இல்லை. எனவே காமத் தின் எல்லையான காம கோடியை, மோக்ஷத்தை அடைந்த பின் வேறெதுவும் வேண்டியதில்லை. காசி, காஞ்சீபுர வாஸிகளே பாக்யசாலிகள். ஸ்ரீவித்யா ஸ்வரூபிணியான காமாக்ஷியை வழிபட்டால் போக, மோக்ஷம் கிட்டுகிறது. இதை ஔவையாரின் பாடலில் காண்போம். 'ஈதல் அறம், தீவினை விட்டு ஈட்டல் பொருள்; காதல் இருவர் கருத்தொருமித்து - ஆதரவு பட்டதே இன்பம்; பரனை நினைந்து இம்மூன்றும் விட்டதே பேரின்பவீடு.' (73)

वेदमयीं नादमयीं बिन्दुमयीं परपदोद्यदिन्दुमयीम् ।
मन्त्रमयीं तन्त्रमयीं प्रकृतिमयीं नौमि विश्वविकृतिमयीम्॥

வேதமயீம், நாதமயீம், பிந்து
மயீம் பரபதோத்ய திந்து மயீம் |
மந்த்ரமயீம் தந்த்ரமயீம் ப்ரக்ருதி மயீம்
நௌமி விஸ்வ விக்ருதி மயீம் ||

தேவி வேதரூபமாக நமக்கு விதி 'செய்ய வேண்டியவை' நிஷேதம் 'தள்ள வேண்டியது' என்று ஆக்ஞை இடுகிறாள். 'வேத ஜனனி ச்ருதி', 'ஸர்வ வேதாந்தஸம்வேத்யா' என்ற தேவி வேதவடிவாகவே விளங்குகிறாள். நாதரூபமாகவும் விளங்கு கிறாள். ஓம் காரத்தின் முடிவில் 'ம்' என்ற ஒலி நீட்சியாக கார்வை ஒலியாக ப்ரணவத்தின் சிரோபாகமாக இருபபது நாதம். இது அனாஹத சக்ரத்தில் யோகிகளுக்கு ப்ரத்யக்ஷம். எது நாதமோ அதுவே பிந்து, மஹாபிந்து. இடைவிடாத நாதானுஸந்தானமே வாஸனைகளை ஒழிக்கும். ஸ்ரீசக்ரத்தில் பிந்துவில் காம, காமேஸ்வரிகள் முறையே நிர்விசேஷ ப்ரம்மம், அதன் விமர்ச ஸச்சிதானந்த ஆத்ம ஸ்வரூப லலிதா பரதேவதை யுமாவர். இதனின்றும் மிஸ்ரபிந்து, இதுவே அபரபிந்து, இதனின்றே நவ ஆவரணங்களும் தோன்றியது. பரபத மென்னும் ஜ்யோதிர் லோகத்தில் சித் என்னும் சந்த்ர மயமாகவும், ஸஹஸ்ராரத்தில் மதி மண்டலமாகவும் விளங்குகிறாள். ஏற்கனவே சொன்னபடி மந்த்ர, தந்த்ர ரூபிணியாகவும் ப்ரக்ருதியாகவும், விகருதியாகவும் தேவி விளங்குகிறாள். இயற்கையும் தேவியே: செயற்கையும் தேவியே. (74)

पुरमथनपुण्यकोटी पुञ्जितकविलोकसूक्तिरसधाटी ।
मनसि मम कामकोटी विहरतु करुणाविपाकपरिपाटी ॥

புரமதன புண்யகோடீ, புஞ்ஜித
கவிலோக ஸூக்தி ரஸதாடீ |
மனஸிமம காமகோடீ, விஹரது
கருணாவிபாக பரிபாடீ ||

த்ரிபுர ஸம்ஹாரியான சிவன் செய்த புண்ணியக்குவியலே ஆன தேவி, கவிஞர்களின் வாக்குகளின் ரஸப்பெருக்காவாள், பரமேஸ்வரரின் புண்யமே தேவி; அந்தக்கரணமே தேவி; அந்தப்புரமே தேவி; ஈஸ்வரரின் ரஹஸ்ய வஸ்துவே தேவி' என்று ஆர்யாத்விஸதீயில் துர்வாஸர் தேவியை பலவாறாகப் புகழ்கிறார். முதிர்ந்த கருணையுடன் கூடிய தேவி நம் மனத்தில் வீற்றிருக்க வேண்டுகிறேன். (75)

कुटिलं चटुलं पृथुलं मृदुलं कचनयनजघनचरणेषु ।
अवलोकितं अवलम्बितं अधिकम्पातदममेयमस्माभिः ॥

குடிலம் சடுலம் ப்ருதுலம், ம்ருதுலம்,
கசநயன ஜகன சரணேஷு |
அவலோகித மவலம்பிதம்,
அதிகம்பாதட மமேய மஸ்மாபி:||

தேவியின் கருங்கூந்தல் சுருண்டிருப்பதால் முன் நெற்றி யில் விழுந்து புரளும்போது, தேவியின் தாமரை போன்ற முகத்தில் தேன் உண்ணவரும் வண்டுக் கூட்டம் போல் அழகை அதிகரிக்கச் செய்கிறது. மான் போன்ற மிரட்சிப் பார்வையுடன் கூடிய கண்கள். ஜகனத்தில் பெருத்த தோற்றம். மலை அரசன், மலையையே எடுத்து சீதனமாகக் கொடுத்தாற்போன்ற பூமியையே மறைப்பது போன்ற நிதம்பம் என்று ஸௌந்தர்யலஹரியில் கூறுகிறார். தேவியின் பாதங் களோ தாமரையை ஒளி, மென்மை, அழகு எல்லா வற்றிலும் ஜயித்ததோடல்லாமல் வாடாத்தாமரை, எனவே நித்யத் வமும் பெற்றிருக் கிறது. மனத்தில் உதித்தாலும், மனதால், அறிவால் அறிய முடியாத தேவி நமக்குப் புகலிடமாவாள். (76)

प्रत्यङ्मुख्या दृष्ट्या प्रसाददीपाङ्कुरेण कामाक्ष्याः ।
पश्यामि निस्तुलमहो पचेलिमं किमपि परशिवोल्लासम् ॥

ப்ரத்யங்முக்யா த்ருஷ்ட்யா,
ப்ரஸாத தீபாங்குரேண காமாக்ஷ்யா: |
பச்யாமி நிஸ்துல மஹோ, பசேலிமம்
கமபி பரஸிவோல்லாஸம் ||

ஸ்ரீகாமாக்ஷி தேவியின், அனுக்ரஹமென்னும் தீபப்ரகாசத் தால் ஏற்பட்ட அந்தர்முக ஆத்ம கோசர வ்ருத்தி, அதாவது சிவ வாழ்வு மலரப்பெற வேண்டுமென்றால், அதை நிறை வாக அடையும்பொழுது சித் என்னும் தேவியின் அருளா லேயே ஸத் என்ற சிவபாவத்தை அடைந்து ஸச்சிதானந்தப் பெருவாழ்வு பெற முடியும். குணம் குறிகளற்ற ப்ரம் மத்தை நாம் அறிய உதவி செய்வது ஸ்ரீவித்தை என்ற சித் உபாஸ னையேயாகும். தேவி காமாக்ஷியின் கருணை என்ற தீபத்தால் மாத்திரமே சிவ வாழ்வு மலரப் பெறும். (77)

विद्ये विधातृविषये कात्यायनि कालि कामकोटि कले ।
भारति भैरवि भद्रे शाकिनि शांभवि शिवे स्तुवे भवतीम् ॥

வித்யே விதாத்ருவிஷயே காத்யாயநி
காலி காமகோடிகலே |

பாரதி பைரவி பத்ரே, சாகினி
சாம்பவி சிவே ஸ்துவே பவதீம் ||

ப்ரும்ம ஸ்ருஷ்டிக்கு அப்பாற்பட்ட தேவி அதீத வித்யா ஸ்வரூபிணி. ஆயினும் பக்தர்களின் வேண்டு கோளுக்கி ணங்கி பர்வதகுமாரி பார்வதி, மலயத்வஜ குமாரி மீனாக்ஷி, தக்ஷனின் பெண் தாக்ஷாயணி, காத்யாயனர் குமாரி காத்யா யனி, இப்படி எல்லாம் அவதரித்தாள். கன்னிப்பெண்கள் மார்கழி மாதத்தில் காத்யாயனி நோன்பு மேற்கொண்டு, கண்ணனை வழிபட்டு, நல்ல கணவரை அடைந்து அதுவே பின்னால் பாவை நோன்பு என்று ஆண்டாள் மூலம் பிரகா சித்து திருவெம்பாவை, திருப்பாவை மலரப்பெற்றது. மேலும் உலகு மழை வளமும் பெற்றது, பகவான் ராமகிருஷ்ணர் தேவியை காளியாகவே வழிபட்டு தேவியின் எல்லா தரிசனமும் பெற்றார். தேவியின் கோரவடிவம் காளி, துர்கை போன்றதாகும். தீயோரை தண்டித்து, அடியார்க்கு அபய மளிப்பதாகவே இவ்வடிவங்கள் திகழ்கிறது. காமகோடி பீடத்தில் காமகலா ஸ்வரூபமாக விளங்குபவள் காமாக்ஷி தேவியே ஆகும். பாரதி என்னும் வித்யா ஸ்வ ரூபிணியான தேவியே, பைரவ பத்தினியான பைரவி, அவளே மங்கள ஸ்வரூபிணி, சம்புவின் சக்தியான சாம்பவியும் அவளே. ஊர்த்வ பிந்து ஒன்று, அதன் கீழ் இரட்டை பிந்து, அதற்குக் கீழே ஒரு பிந்து மூன்றிற்கும் அதிஷ்டானம் சுத்தசைதன்யம். இம்மூன்றுமே தேவியின் பஞ்சதசீ மந்த்ரத்தின் முக்கூடங்களாகவும், ஸ்தூலரூபத்தின் அவயவங்க ளாகவும் பரிணமித்தது என்பதே காமகலா ரஹஸ்யம். (78)

मालिनि महेशचालिनि काञ्चीखेलिनि विपक्षकालिनि ते ।
शूलिनि विद्रुमशालिनि सुरजनपालिनि कपालिनि नमोऽस्तु ॥

மாலினீ மஹேசசாலினீ, காஞ்சி
கேலிநி விபக்ஷகாலிநிதே |
சூலினிவித்ரும சாலினீ ஸுரஜன
பாலினி கபாலினி நமோஸ்து ||

மாலையணிந்த தேவி அகாராதி க்ஷகாராந்தம் வர்ண மாலா ஸ்வரூபிணி யுமாவாள். அக்ஷரங்களே தன் உடம்பானவள். தேவி பரமேஸ்வரனைத்தேடி அலைந்து தவமிருந்த வரலாறுகளும் உண்டு. விபக்ஷ காலிநி என்பதால் தக்ஷிணே காளி, வாமே சுந்தரி' அன்னையின் ஒரு பக்கம் நிறைந்த ஸௌலப்யம் நிறைந்தது. மற்றொருபாகம் ருத்ர பாகம் என்பதால் ஒடுக்கு வதும் தேவியே. இதன் விரிவை தச மஹாவித்தையில் காண லாம். தேவியின் ரூபபேதங்களில் கையில் சூலத்துடன், சூலினி துர்கை என்பதும் உண்டு. இந்த மந்த்ரம் க்ரஹ தோஷங்கள் விலகவும், அஞ்ஞானம் அகலவும் உதவி புரியும்.

பவழம் போன்ற மேனியுடைய தேவி, எப்பொழுதும் தேவர்களைக் காப்பாற்று வதையே காரியமாகக் கொண்டவள். கபாலம் கைக்கொண்ட கபாலினியும் தேவியே ஆவாள். (79)

देशिक इति किं शङ्के तत्तादृक्तव नु तरुणिमोन्मेषः ।
कामाक्षि शूलपाणेः कामागमतन्त्र यज्ञदीक्षायाम् ॥

தேசிக இதி கிம் சங்கே தத் தாத்ருக்
தவநு தருணி மோன்மேஷ: |
காமாக்ஷி சூலபாணே: காமாகம
ஸமய யக்ஞ தீக்ஷாயாம் ||

தேவி காமாக்ஷியின் ஈடுஇணையற்ற, வார்த்தைகளால் விளக்க முடியாத யௌவன அழகின் விகாஸம், ஒரு காலத்தில் சனகாதிகளுக்கு குருவாக (மௌன) உபதே சித்தபரமேஸ்வரனுக்கே காமதீக்ஷையில் தேவிகாமாக்ஷியே ஆசாரியனாக விளங்குகிறாள். மௌன குருவுக்கே அந்த ஜகத்குருவுக்கே தேவி காமதீக்ஷை அளிப்பது வெகு நேர்த்தி! ஆச்சர்யம்! அத்புதம்! (80)

वेतण्डकुम्भडम्बरवैतण्डिककुचभरार्तमध्याय ।
कुङ्कुमरुचे नमस्यां शङ्करनयनामृताय रचयामः ॥

வேதண்ட கும்ப டம்பர,
வைதண்டிக குசபரார்த மத்யாய |
குங்குமருசே நமஸ்யாம் சங்கர
நயனாம்ருதாய ரசயாம: ||

குங்கும நிறத்தவளான தேவி, யானை மஸ்தகத்தைத் தோற்கடிப்பது போன்ற கனத்த ஸ்தனங்கள்; ஸ்தனங்களின் கனத்தால் நுண்ணிய இடை ஒடியாமலிருக்க, இடை மும் முறை வல்லிக்கொடியால் சுற்றப்பட்டது போல் வயிற்றின் மும் மடிப்புக்கள், இதை ஏற்கனவே பார்த்தோம், சிவந்த நிறமும், பருத்த தனங்களும் சங்கரின் கண்களுக்கு ஆனந்தம் அளிக்கும் அம்ருதம் போல் விளங்குகிறது. (81)

अधिकाञ्चितमणिकाञ्चनकाञ्चीं अधिकाञ्चि काञ्चिदद्राक्षम् ।
अवनतजनानुकम्पां अनुकम्पाकूलं अस्मदनुकूलाम् ॥

அதி காஞ்சித மணி காஞ்சன, காஞ்சீ,
மதிகாஞ்சி காஞ்சி தத்ராக்ஷம் |

அவநத ஜனானு கம்பாம், அனுகம்பாறு
கூல மஸ்ம தனுகூலாம் ||

பூமித்தாயின் நாபியே காஞ்சியாகும், அகில உலகங்க ளையும் தேவி தன் வயிற்றில் வைத்துக் காப்பாற்றுகிறாள். 'அகிலாண்ட கோடி ஈன்ற அன்னையே; பின்னையும் உன்னைக் கன்னி யென மறை பேசும்' என்பார் தாயுமானவர். எனவே கற்கள் இழைக்கப் பட்ட கனமான ஒட்டியானம் இடுப் பில் அணிய வேண்டியது அவசியமே. தேவியை வந்திப்பவர் களுக்கு எல்லா அநுகூலங் கள் செய்வதுடன் ஆத்மானந்த மானதாகவும் விளங்குகிறாள். (82)

परिचितकम्पातीरं पर्वतराजन्यसुकृतसंनाहम् ।
परगुरुकृपया वीक्षे परमशिवोत्सङ्गमङ्गलाभरणम् ॥

பரிசித கம்பாதீரம்,பர்வதராஜன்
ஸுக்ருத ஸந்நாஹம் |
பரகுரு க்ருபயா வீக்ஷே, சபரமசிவோத்
ஸங்க மங்களா பரணம் ||

குருவின் கடாக்ஷத்தால் நாம் எல்லாப்பேறுகளையும் அடைவோம். ஸ்ரீவித்தை குருப்ரதான வித்தை. நம்மைப் போன்ற பாமரர்களுக்கெல்லாம் ஸ்ரீநகரம், ஸ்ரீபுரம் இதெல் லாம் வேண்டுமே என்பதற்காகவே பர்வதராஜகுமாரி காஞ் சியை ஸ்ரீபுரமாக்கித்தன் கோவிலை சிந்தாமணி க்ரஹமாக்கி, அங்கு ஸ்ரீசக்ர ஆகாரத்தில் பத்மாஸனத்தில் தான் அமர்ந்த கோலத்தையே நமக்கெல்லாம் பஞ்ச பிர்மாஸனத்தில் சிவனின் மடியில் அமர்ந்த மங்களத் திருக்கோலமாக்கி அளித்திருக்கிறாள் இந்தப் பிறவிலேயே நாம் குரு கடா க்ஷத்தால் காமாக்ஷியை ஸ்ரீவித்யாஸ்வரூபிணியாகக் காண்கிறோம். (83)

दग्धमदनस्य शम्भोः प्रथीयसीं ब्रह्मचर्यवैदग्धीम् ।
तव देवि तरुणिमश्रीचतुरिमपाको न चक्षमे मातः ॥

தக்த மதனஸ்யசம்போ:
ப்ரதீயஸீம் ப்ரஹ்மசர்ய வைதகதீம் |
தவதேவி தருணி மஸ்ரீ சதுரிம
பாகோ நசக்ஷமே மாத: ||

ஸ்வயம் பிரகாசமாய் விளங்கும் தேவி மன்மதனைச் சாம்பலாக்கிய பரமசிவனின் ப்ரஹ்மசரய விரதத்தைத்தன் யௌவன அழகால் பங்கப்படுத்

தியதுடன், நில்லாமல் 'ககன மும், வானும், புவனமும், காணவிற் காமனங்கம் தகனமுன் செய்த தவப்பெருமாற்கு தடக்கையும் செம்முகனு முந் நான்கு இரு மூன்றெனத்தோன்றிய மூதறிவின் மகனு முண்டாய தன்றோ் வல்லீ! நீசெய்த வல்லபமே' என்று அபிராமிபட்டர் நகைச் சுவையுடன் கூறுகிறார். உலகறிய காமனை எரித்த அதே பரமேஸ்வரன், ஆறுதலைகள், பனி ரெண்டு கரங்க ளுடன் முருகப்பெருமானை அன்னையின் தயவால் பெற் றெடுத்து, அம்மூதறிவு படைத்தவனைத் தனக்கு குருவாக 'குமர-குரு-பரன் என்று ஏற்றுக்கொண்டார். (84)

मदजलतमालपत्रा वसनितपत्रा करादृतखनित्रा ।
विहरति पुलिन्दयोषा गुञ्जाभूषा फणीन्द्रकृतवेषा ॥

மதஜல தமாலபத்ரா வஸனிதபத்ரா
கராத்ருத கனித்ரா ।
விஹரதி புலிந்தயோஷா குஞ்ஜா
பூஷா பணீந்த்ர க்ருத வேஷா ॥

ஒரு சமயம் ப்ரும்மா தேவர்களின் வேண்டுகோளின் படி ஸுந்தோப ஸுந்தரை அழிக்க, அழகுப் பொருள்களிலிருந்து எள் முனை அளவு எடுத்து அதை திலோத்தமை என்ற ஈடு, இணையற்ற அழகிய ஒரு பெண் ஆக்கினார். அவள் அழகில் மயங்கிய ப்ரம்மா, அவளை அடைய முயற்சித்தார். பயந்த திலோத்தமை மான் வடிவெடுத்து ஓடினாள், பிரம்மாவும் மானாகிப் பின் தொடர்ந்தார். திலோத்தமையின் அபயக் குரலைப் பரமேஸ்வரன் கேட்டு வேட உருக்கொண்டு வேதங்கள் நாய் உருக்கொண்டு தொடர்ந்து வர, மயில் தோகை, குந்து மணி ஆபரணம், மான்தோல் கையில் வில் அம்புடன் வந்தார். தேவியுடன் அதற்கேற்றபடி கறுத்த திரு மேனி, மயில் சிறகு, குந்து மணி மாலைகள் அணிந்து, யானை யின் மதத்தையே திலகமாக அணிந்து, இலைச் சருகையே வஸ்திரமாக, கையில் மண்வெட்டியுடன் நாகாபரணம் பூண்டு, அனேக வேடிச்சிகள் சூழ, சிவனைத் தொடர்ந்து வந்ததாக வரலாறு உள்ளது. பரமன் ப்ரும்மாவின் மேல்சரம் தொடுத்தவுடன், அவர் தவறை உணர்ந்து வேண்ட பரமேஸ்வரன் மன்னித்தார். இந்தப்பாடலில் உள்ள வரலாறு அது. (85)

अङ्के शुकिनी गीते कौतुकिनी परिसरे च गायकिनी ।
जयसि सविधेऽम्ब भैरवमण्डलिनी श्रवसि शङ्खकुण्डलिनी ॥

அங்கே சுகினீ கீதே, கௌதுகினீ
பரிஸரே சகாயகினீ ।

ஜயஸி ஸவிதேம்ப பைரவ மண்டலினீ
ச்ரவஸி சங்க குண்டலினீ ||

காத்யாயன ரிஷியின் பெண்ணான தேவி, அங்கிருந்து காஞ்சி வந்து அடைந்தபோது, காத்யாயனர், தேவி தவம் மேற்கொள்ள சில உபகரணங்களுடன் ஓர் விசிறியும் கொடுத்தார். அதுவே கிளியாக மாறி தேவியின் மடியில் தவழ்கிறது. காமாக்ஷி கோவிலில் 'சங்கீத ச்யாமளா' என்ற மந்த்ரிணி தேவியின் சன்னதி உள்ளது. தொடர்ந்த பாடல்களிலும் தேவியின் ருபமே ஆன தேவதைகளின் வர்ணனை வருகிறது. தேவியைச் சுற்றி உள்ளவர்கள் கானம் புரிபவர்கள். பாடகர் களாலும், பைரவ கணங்களாலும் சூழப்பட்டிருக்கிறாள். காதுகளில் சங்க குண்டலங்கள் அணிந்து, லலிதையின் மந்திரி (மந்திரிணி) எனப் பெயர்; மதுரை மீனாக்ஷி எனக்கொள்ளலாம். வைகை ராணிக்குக் கிளி உண்டு. கலைகளுக்கு இருப்பிடமானவள். (86)

प्रणतजनतापवर्गा कृतबहुसर्गा ससिंहसंसर्गा ।
कामाक्षि मुदितभर्गा हतरिपुवर्गा त्वमेव सा दुर्गा ॥

ப்ரணத ஜனதாபவர்கா க்ருத
பஹுஸர்கா ஸஸிம்ஹஸம்ஸர்கா |
காமாக்ஷி முதிதபர்கா ஹதரிபுவர்கா
த்வமேவ ஸாதுர்கா ||

ஸிம்ஹம் தேவிக்கு வாஹனமாகவும், ஆஸனமாகவும் விளங்குகிறது. 'ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேச்வரி' ல.ஸ.நாமா துர்கை என்ற அவதாரத்தில் ஸிம்ஹமே வாஹனம். இந்தப்பாடல் தேவியின் 'துர்கை' என்ற கோலத்தை விளக்குகிறது. தேவர்கள், அசுரர்கள் போரிடும் போதெல்லாம், தேவி தேவர்களை ஜயசாலி ஆக்குகிறாள். சண்ட, முண்ட, மஹிஷாஸுர, சும்ப, நிசும்ப வதம் எல்லாம் தேவி துர்கா அவதாரத்தில் நிகழ்த்திய செயல்களாகும் சிவன் பிரகாச வடிவினர் அவரை சந்தோஷப்படுத்தி நமக்களிப்பவள் தேவி; விமர்ச வடிவுடன் பல பெயர்களுடன் பலவடிவங் களுடன் தேவி நமக்கு வரமளிக்கிறாள்.

'ஜாத வேதஸே' என்று தொடங்கும் துர்காஸூக்தத்தில் 'காத்யாயனாய வித்மஹே கன்யகுமரிதீமஹீ தன்னோ துர்கிப்ரசோதயாத்' இந்த காயத்ரியின் பலன் அளவிட முடியாதது. (87)

श्रवणचलद्वेतण्डा समरोद्दण्डा धुतासुरशिखण्डा ।
देवि कलितान्त्रषण्डा धृतनरमुण्डा त्वमेव चामुण्डा ॥

ச்ரவண சலத் வேதண்டா ஸமரோத்
தண்டா துதாஸுர சிகண்டா |
தேவி கலிதாந்த்ர ஷண்டா த்ருத
நரமுண்டா த்வமேவ சாமுண்டா||

தேவி காமாக்ஷியே யுத்த களத்தில் தந்தத்தாலான குண்ட லங்கள் அணிந்து உத்தண்டமாய், ரண சண்டிகையாக நரம்பு மாலை அணிந்து, அசுரர்களின் சிரங்களைத் துணித்து கையில் மனித மண்டையை ஏந்திய சாமுண்டா வாகவும் இருக்கிறாள். காளிதேவி சண்டரையும், முண்டரை யும் சம்ஹரித்து சண்ட னின் தலையையும், முண்டனின் உடலை யும் தேவியிடம் போட்டு நின்றவுடன் தேவி நீ சண்டனையும், முண்டனையும் கொன்றதால் 'சாமுண்டா' என்ற பெயருடன் பிரக்யாதி பெறுவாய் என்று கூறினாள். (88)

उर्वीधरेन्द्रकन्ये दर्वीभरितेन भक्तपूरेण ।
गुर्वीं अकिञ्चनार्तिं खर्वीकुरुषे त्वमेव कामाक्षि ॥

உர்வீ தரேந்த்ர கன்யே தர்வீ
பரிதேன பக்த பூரேண |
குர்வீ மகிஞ்சனார்த்திம் கர்வீகுருஷே
த்வமேவ காமாக்ஷி ||

காத்யாயனர் ஆச்ரமத்திலிருந்து தேவி காஞ்சி வரும் வழியில் காசியில் கடும் பஞ்சம், அதை நீக்க தேவி அன்ன பூரணியாக சிவன் உட்பட அனைவருக்கும் பிக்ஷை அளித்தாள். காமாக்ஷியும் ஒரு நாழி நெல் கொண்டு 32 அறங்க ளையும் வளர்த்ததாக செய்தி உள்ளது. ஆதி சங்கரர் செய்த அன்னபூர்ணாஷ்டகம்! அருமையான துதி ஆகும். காசியும், காஞ்சியும் (அன்னபூரணி யும், காமாக்ஷியும்) இரண்டுமே முக்தித்தலங்கள். (89)

ताडितरिपुपरिपीडन भयहरणे निपुणहलमुसला ।
क्रोडपति भीषणमुखी क्रीडसि जगति त्वमेव कामाक्षि ॥

தாடித ரிபு பரிபீடன பயஹரணே
நிபுண ஹல முஸலா |
க்ரோடபதி பீஷணமுகீ, க்ரீடஸி
ஜகதி த்வமேவ காமாக்ஷி ||

காமாக்ஷி பராபட்டாரிகாவின் இடப்பக்கம் மஹாவாராஹி என்று இந்த தேவி வராஹமுகத்துடன் காஞ்சியில் வீற்றிருக்கிறாள். தண்டநாதா என்ற சேனாநாயகி தேவியின் கையில் பஞ்சபாணங் களாகவும், மன்மதவித்தையின் கடைசிக் கூட மான சக்திகூடேஸ் வரியாகவும், திரு ஆனைக்காவில் அகிலாண்டேச்வரியாகவும் விளங்குகிறாள்.

"ஆன வராக முகத்தி பதத்தினள்
ஈன வராகம் இடிக்கும் முசலத்தோ
டேனை யுழுபடை ஏந்திய வெண்ணகை
ஊன மறவுணர்ந்தாருளத் தோங்குமே"

திருமந்திரத்தில் உலக்கை, கலப்பை, ஏந்திய கைகள் உடைய வெண்நகையாள் ஊனுடலைக் கடந்து தியானிப்ப வர்கள் உள்ளத்தில் விளங்குபவள் என்று கூறுவார். மஹா வாராஹி எனும்போது தேவியின் படைத்தலைவி; லகு வாராஹி என்பது சப்தமாதரில் உள்ளவள் பிரும்ம, விஷ்ணு, ருத்ர, ஈச்வர, சதாசிவர் என்ற பஞ்சமவரின், ஐந்தாவதான சதாசிவ சக்தி. எனவே பஞ்சமி என்ற பெயரும் உண்டு. இந்த தேவி காசியில் கோயில் கொண்டு லலிதா ஸஹஸ்ரநாமாவுக்கு உரை செய்த திரு. பாஸ்கர ராயருக்கு காக்ஷி அளித்த வரலாறு உள்ளது. (90)

स्मरमथनवरणलोला मन्मथहेलाविलासमणिशाला ।
कनकरुचिचौर्यशीला त्वमम्ब बाला कराब्जधृतमाला ॥

ஸ்மர மதன வரண லோலா,
மன்மத ஹேலா, விலாஸ மணிசாலா |
கனகருசி சௌர்யசீலா, த்வமம்ப
பாலா, கராப்ஜ த்ருதமாலா ||

மன்மதனை எரித்த மஹாதேவனை மணக்க வேண்டி, தேவி கைகளில் மணமாலையுடன் சிவனை எதிர் நோக்கும் கோலத்தை மனதில் கொள்ளவேண்டும். 'ஸ்வயம்வரா பார்வதி' (கல்யாணி) என்ற மந்திரத்தை, விவாஹத்தை எதிர் நோக்கியுள்ளவரன், வதூக்கள் அனுசந்தானம் அல்லது அந்த ஹோம வழிபாடுகள் செய்தால் கட்டாயம் விவாஹம் நடைபெறும். தேவி கையில் முட்டிக்குக் கீழே தொங்கும் மாலையைக் கையிலேந்தி, தோழிகள் பின்தொடர சிவனை நோக்கி வரும் காக்ஷி மிகவும் ஆனந்தமானது. விவாஹம் ஆகவேண்டும். எனவே பாலா ஸ்வரூபம். (91)

विमलपटी कमलकुटी पुस्तकरुद्राक्षशस्तहस्तपुटी ।
कामाक्षि पक्ष्मलाक्षी कलितविपञ्ची विभासि वैरिञ्ची ॥

விமலபடீ கமலகுடீ புஸ்தகருத்ராக்ஷ
சஸ்தஹஸ்தபுடீ |
காமாக்ஷி பக்ஷ்மலாக்ஷீ கலிதவி பஞ்சீ
விபாஸி வைரிஞ்சீ ||

வெண்தாமரை ஆசனத்தில், வெண்பட்டுத்து, ஜபமாலை புஸ்தகம் கைக்கொண்டு, வீணையைக் கையிலேந்தி ப்ரும்ம பத்னியாக தேவியே விளங்குகிறாள். காமாக்ஷி கோவில் 'ஸசாமர ரமாவாணி ஸவ்யதக்ஷிண ஸேவிதா' வாக உற்சவ மூர்த்தி விளங்குகிறது. ஸ்ரீவித்யாஸ்வரூ பிணியே வித்யா ஸ்வரூபிணியாக விளங்குகிறாள். கல்விக்கரசி, செல்வத் துக்கரசி, எல்லாமாக விளங்கும் தேவியே விரிஞ்சனின் பத்னி வாக்தேவதையுமானவள். 'ஐம்' என்ற வாக்பீஜம், மன்மத வித்தையின் முதல் கூடம், தேவியின் முகமலர் இப்படி ஒன்றா கவும், பலவாகவும் தேவி விளங்குகிறாள். (92)

कुङ्कुमरुचिपिङ्ग असृक्पङ्किलमुण्डालिमण्डितं मातः ।
जयति तव रूपधेयं जपपटपुस्तकवराभयकराब्जम् ॥

குங்கும ருசி பிங்க மஸ்ருக், பங்கில
முண்டாலி மண்டிதம்மாத: |
ஜயதி தவரூபதேயம், ஜப பட புஸ்தக
வராபய கராப்ஜம் ||

குங்கும நிறத்தவள் தேவி. இரத்தம் சொட்டும் முண்ட மாலை அணிந்து ஜபமாலை, புஸ்தகம், வரத, அபய முத்திரை தாங்கி, (தேவி மாஹாத்யம்' அத்யாய தேவதைகளின் ரூபமாகத்தோன்றுகிறது) மஹிஷவதம் செய்ய வந்த மஹா லக்ஷ்மி எனக்கொள்ளலாம். நவாக்ஷரி என்னும் சண்டி மந்த்ரமான ரூபம்; ஆத்ம வித்யா, மஹாவித்யா, ஸ்ரீவித்யா, காமஸேவிதா, ஸ்ரீஷோடஸாக்ஷரி வித்யா' போன பாடலில் 'ஐம்' என்ற பீஜம் பார்த்தோம். இதை ப்ரும்ம சக்தியான 'ஸத்' எனக் கொள்வோம். அடுத்த ஹ்ரீம்' மஹாலக்ஷ்மி ஸத்யத்தின் அஸ்திவாரம் சரஸ்வதி அதில் பிறக்கும் ஞானம் மஹாலக்ஷ்மி. அடுத்தபாடல் மஹாகாளி பற்றியது. 'க்லீம்' என்னும் காளி வடிவுடன் 'ஐம்; ஹ்ரீம்; க்லீம்; சாமுண்டாயை விச்சே' என்று நவாக்ஷரி பூர்த்தியாகிறது. காமனைகளைப் பூர்த்தி செய்து தர்ம, அர்த்த, காமம் இந்த இஷ்டங்களை அளிப்பது இந்த மந்த்ரம். தேவர்கள், இந்த மந்த்ராத்தாலேயே தேவியை வழிபட்டு எல்லாம் அடைந்தார்கள். (93)

कनकमणि कलितभूषां कालायस कलहशीलकान्तिकलाम् ।
कामाक्षि शीलये त्वां कपालशूलाभिरा मकरकमलाम् ॥

கனகமணி கலித பூஷாம்,

காலாயஸ கலஹசீல காந்தி கலாம் |

காமாக்ஷி சிலயே த்வாம் கபால

சூலாபிராம கரகமலாம் ||

கைகளில் சூலம், கபாலம் இவற்றைத் தாங்கும் சூலினி துர்கை, காளி, எல்லாமே தேவி தான். இந்தப் பாடலில் நவா க்ஷரி பூர்த்தி, மேலும் ஸ்ரீவித்யாஸ்வரூபிணியான காமாக்ஷியின் மறுபக்கமே சண்டிகா பரமேஸ்வரி ஆகும். ஒரே பரம் பொருள் 'ஓம்' என்ற ப்ரும்ம வித்யா மந்த்ரத்தாலும், 'ஹ்ரீம்' என்ற ஸ்ரீவித்யா மந்த்ரத்தாலும் கூறப்படுகிறது. ப்ரும்மத்தையும், ப்ரும்ம சக்தியையும் பிரிக்க முடியாது. ஓம், ஹ்ரீம் இரண்டுமே உபயாத்மகம்' ஹ்ரீம் என்ற மாயா பீஜம், புவனேஸ்வரி, ஹ்ருல்லேகா, பீஜம், விதையிலிருந்து முளை, கிளை, அரும்பு, மலர், காய், கனி தோன்றுமாப்போல் மஹாகாளி, மஹாலக்ஷ்மி, மஹாசரஸ்வதி தோன்றுகின்றனர். (94)

लोहितिमपुञ्जमध्ये मोहितभुवने मुदा निरीक्षन्ते ।

वदनं तव कुचयुगलं काञ्चीसीमां च केऽपि कामाक्षि ॥

லோஹிதிம புஞ்ஜமத்யே

மோஹிதபுவனே முதாநிரீக்ஷந்தே |

வதனம் தவ குச யுகலம், காஞ்சீ

ஸீமாம் ச கேபி காமாக்ஷி ||

உலகம் என்பது உயர்ந்தோர்மாட்டே! உலகத்தையே மோஹிக்கச் செய்யும், சிவந்த நிறமுடைய அநாஹத சக்ர மத்தியில் (மனதில்) தேவியின் திருமுகத்தையும், அதற்குக் கீழே இரண்டு ஸ்தனங்களையும் ஒட்டியாணம் அணியும் கடிப்ரதேசத்தையும் சில மகான்கள் தரிசிக்கிறார்கள். 'க்லீம்' காமகலாவாகும்.

மஹாமந்த்ர ராஜாந்த-பீஜம் பராக்யம்

ஸ்வதோ ந்யஸ்த - பிந்து ஸ்வயம் ந்யஸ்த ஹார்தம்

பவத்வக்த்ர வக்ஷோஜ குஹ்யாபிதானம்

ஸ்வரூபம் ஸக்ருத் பாவயேத்ஸ - த்வமேவ ||

(தேவி புஜங்கம்-சங்கராசாரியார்) (ஸெ.ள.ல.19) முகம் பிந்தும்) காமகலா பற்றியது. ஸ்ரீசக்ர மத்தியில் காமகலாவான தேவியின் முகமாகவும், அதன் கீழ் இரண்டு ஸ்தனங்கள், அதன் கீழ், சிவனின் பாதிவடிவான' யோனியையும் த்யானிப் பவன் மூவ்வுலகையும் வசப்படுத்தலாம்' திருவாரூரில் கோவில் கொண்ட கமலாம்பிகையும் காமகலா ஆவாள். யோக நிலையில் ஆர்படி என்ற

பீடத்தில் அமர்ந்து ஸ்ருஷ்டி யோஜனை செய்கிறாள். எனவே திருவாரூரில் பிறக்க முக்தி என்பார்கள். (95)

जलधिद्विगुणितहुतवहदिशादिनेश्वरकलाश्विनेयदलैः ।
नलिनैर्महेशि गच्छसि सर्वोत्तरकरकमलदलं अमलम् ॥

ஜலதி த்விகுணித ஹுதவஹ திசா
தினேச்வர கலாச்விநேய தலை: |
நளினைர் மஹேஸி கச்சஸி
ஸர்வோத்தரகுலஸஹஸ்ரதல மமலம் ||

எங்கும் நிறைந்த ஸூக்ஷ்ம சக்தி மந்த்ரங்களில் குவிந்துள் ளது. அதுவே ஒவ்வொரு ஜீவனிலும் குண்டலினி சக்தியாக உள்ளது. தேவி பாம்பு போல் தன்னை மூன்றரை சுற்றுக்க ளாக்கி மூலாதாரத்தில் உறங்குகிறாள். நம்மைப் போன்றவர் கள் த்யானத்தாலும், யோகிகள் யோகமார்க் கத்தாலும் அவளை எழுப்பி ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்ற நிலைகளை ஸுஷும்னா மார்க்கத் தில் கடந்து ஸஹஸ்ராரத்தில் உள்ள பரசிவத்துடன் சேர்ப் பதே பிறவிப் பயனாகும் தர்மா மீட்டரில் உள்ள பாதரஸம் சூடுபட்டவுடன் ஏறுகிறது. அதன் இரு பக்கமும் மூடியிட்டது போல் ஸுஷும்னா நாடியின் இரு புறமும் குல, அகுல கமலங்களால் மூடப் பட்டுள்ளது. அம்ருதம் சிந்தாமல், சிதறாமல் இருக்கவே இந்த ஏற்பாடு. தேவி யின் பலரூபங்கள், அங்க உபாங்க, ப்ரத்யங்க தேவதைகள், மந்த்ரிணி, தண்டினி, சண்டி சாமுண்டா, சூலினி, துர்கா, ஸ்வயம்வர பார்வதி, பாலா, அதன் பின் காமகலாத்யானம், இப்பொழுது குண்டலினி ப்ரபாவம் இப்படியாக நம்மைக் கையைப் பிடித்து பல படிக் கட்டுக்களை கடத்துவித்து தேவி யிடம் சேர்ப்பிக்கிறார். இந்த விஷயம் ஸ்ரீவித்தையாகும். எனவே குரு வடிவில் தேவி ஆட்கொள்ளு வதை 'ஸத்க்ருத தேசிக' பாடலில் கூறுகிறார். (96)

सत्कृतदेशिकचरणाः सबीजनिर्बीजयोगनिश्रेण्या ।
अपवर्गसौधवलभीं आरोहन्त्यम्ब केऽपि तव कृपया ॥

ஸத்க்ருத தேசிக சரணா:
ஸபீஜ நிர்பீஜ யோக நிச்ரேண்யா |
அபவர்க்க ஸௌத வலபீம்
ஆரோஹத்யம்ப கேபிதவ க்ருபயா ||

இதுவரை தேவியை அடையவேண்டிய வழியைக்காண்பித்தவர், இப்பொழுது ஸத்குருவை அடைந்த பாக்யவான்கள், அவர்கள் குருவின்

கருணையாலேயே ஸவிகல்பம், நிர் விகல்பம் என்ற படிக்கட்டுக்களின் வழியே முக்தி என்னும் உப்பரிகையின் மேல் மாடி வரை ஏறிச் செல்லும் பாக்கிய சாலிகள் என்று கூறுகிறார். ஏற்கனவே 'குரு மூர்த்தே த்வாம் நமாமி காமாக்ஷி' என்று கூறினார். தக்ஷிணாமூர்த்தி ரூபிணீ 'ஸனகாதி ஸமாராத்யா' 'சிவஞான ப்ரதாயினி என்ற லலிதா ஸஹஸ்ரநாமம் இணைத்து தேவியை குரு வடிவில் த்யானிப்போம். (97)

अन्तरपि बहिरपि त्वं जन्तुततेरन्तकान्तकृदहंते ।
चिन्तित सन्तानवतां सन्ततमपि तन्तनीषि महिमानम् ॥

அந்தரபி பஹிரபித்வம், ஜந்து ததே
ரந்த காந்த க்ருதஹந்தே |
சிந்தித ஸந்தான வதாம் ஸந்த தமபி
தந்தனீஷி மஹிமானம் ||

காலனுக்கும் காலனான பரமேஸ்வரர், அவருடைய பராஹந்தா ஸ்ரூபிணி தேவி. "அஹமித்யேவ விபாவயே பவானீம்" பவானீ அஹமெனும் தத்துவமாக அமையும் தன்னு ணர்வாகும். எல்லா ஜீவர்களுக்கும், தேவியை இடை விடாமல் மனனம் செய்யும் உத்தமர்களுக்கும் மிகச் சிறந்த பொருளான ஆத்மஞானத்தை தேவி கொடுக்கிறாள். இதையே திருமூலர் 'உடம் பினுக்குள்ளே உத்தமன் குடி கொண்டான்' என்கிறார். (98)

कलमञ्जुलवागनुमितगलपञ्जरगतशुकग्रहौत्कण्ठ्यात् ।
अम्ब रदनाम्बरं ते बिम्बफलं शम्बरारिणा न्यस्तम् ॥

கல மஞ்ஜு ல வாகனுமித கல பஞ்ஜர
கத சுக க்ரஹெளத் கண்ட்யாத் |
அம்ப ரதனாம்பரம் தே பிம்பபலம்
சம்பராரிணா ந்யஸ்தம் ||

அம்பிகையின் உதடு கோவைப்பழம் போல் இருக்கிறது. அதை வைத்தது கையில் வில் உள்ள மன்மதன் என்ற வேடன். அம்பிகையின் மதுரமான சொல்லைக் கேட்டவுடன், அவள் தொண்டையில் ஒருகிளி இருந்து பேசு கிறது. என்று நினைத்த மன்மதன் அதைப் பிடிப்பதற்காக அங்கு கோவைக் கனியை வைத்திருக்கிறான். கண்டத்தில் எழும் ஒலிவைகரி. வைகை ராணி யான மீனாக்ஷி சங்கீத ஸ்யாமளை ஆவாள். அவள் கையில் கிளி உண்டு. 'அங்கே சுகினீ' மடியில் கிளி. இந்தப் பாடலில் தொண்டையில் கிளி. (99)

जय जय जगदम्ब शिवे जय जय कामाक्षि जय जयाद्रिसुते ।
जय जय महेशदयिते जय जय चिद्गगनकौमुदीधारे ॥

ஜய ஜய ஜகதம்ப சிவே, ஜயஜய
காமாக்ஷி ஜய ஜயாத்ரிஸுதே |
ஜய ஜய மஹேச தயிதே, ஜயஜய
சித்ககன கௌமுதீதாரே ||

உலகை எல்லாம் ஈன்றெடுத்த மங்களஸ் வரூபியே ஜய ஜய ஸ்ரீகாமாக்ஷி தேவியே! காஞ்சிபுரவாஸியே ஜய ஜய பர்வதராஜனின் த்வப்புதல்வியே ஜய ஜய காமேஸ்வரர் என்னும் மஹேஸ்வரரின் காதலியே ஜய ஜய சித்என்னும் வானத்தில் விளங்கும் வெண்ணிலவே ஜய ஜய என்றும் எப்பொழுதும் என் மனதில் நிலை பெற்று விளங்கு வாயாக. (100)

आर्याशतकं भक्त्या पठतां आर्याकटाक्षेण ।
निःसरति वदनकमलाद्वाणी पीयूषधोरणी दिव्या ॥

ஆர்யா சதகம் பக்த்யா படதா
மார்யா க்ருபா கடாக்ஷேண |
நிஸ்ஸரதி வதன கமலாத் வாணீ
பீயூஷதோரணீ திவ்யா ||

இந்த நூறு துதிகளும் ஆர்யா என்னும் தேவியாகும் பரதேவதையின் ஸ்துதிகளான 'ஆர்யா ஸதகம்' என்று பெயர் கொண்டு விளங்குகிறது. இதைப் பக்தியுடன் பாராயணம் செய்வோருக்கு அவர்கள் முகத்தாமரையினின்றும் பொழியும் தேன் போன்ற வாக்கு, என்றும் பதினாறு வயது கொண்ட ஆர்யா தேவியின் கடைக்கண் பார்வையால் தங்கு தடை இன்றி அமிர்த வெள்ள மாகப் பெருகிக் கொண்டிருக்கும். (101)

# 2. பாதாரவிந்த சதகம்

महिम्नः पन्थानं मदनपरिपन्थिप्रणयिनि
प्रभुर्निर्णेतुं ते भवति यतमानोऽपि कतमः ।
तथापि श्रीकाञ्चीविहृतिरसिके कोऽपि मनसो
विपाकस्त्वत्पादस्तुतिविधिषु जल्पाकयति माम् ॥

மஹிம்ன: பந்தானம் மதன பரிபந்தி ப்ரணயினி
ப்ரபுர் நிர்ணேதும் தே பவதி யதமானோபி கதம: |
ததாபி ஸ்ரீ காஞ்சி விஹ்ருதிரஸிகே கோபி மனஸோ
விபாகஸ் த்வத்பாத ஸ்துதிவிதிஷு ஜல்பாகயதி மாம் ||

மன்மதனை எரித்த மகாதேவன்; தேவி பர்வதராஜன் பெண்ணாக வந்து பரமேஸ்வரனை தவமிருந்து மணந்தாள். பரமேஸ்வரனும் பார்வதியை மனமுவந்து மிகுந்த தாபத்து டனே விவாஹம் செய்து ஸ்கந்தோபத்தியும் ஆயிற்று. இது எல்லாம் தேவியின் திருவிளையாடல். மன்மதனைத் திரும்ப உண்டாக்கியது தேவி காமாக்ஷி அல்லவா! இப்படிப் பட்ட மஹிமை பொருந்திய தேவி காமாக்ஷியின் பெருமையைக் கூறுவது சாத்தியமில்லை. எனினும் ஏதோ ஒரு ஆசையால் (இந்த இடத்தில் மூககவியின் வாக்காக; இதை நான் கூறவில்லை.) காமாக்ஷியின் தம்பலப்ரஸாதம் பெற்றவரே தான் எப்படிக் கூறமுடியும் என்று சொல்லும் போது, நாமெல்லாம் எம்மாத்திரம்? தேவியின் பாததாமரைகளைப் பற்றிக் கூறுவதற்கு நல்வாக்கு அளிக்கவேண்டும். 'அவன் அருளால் அவன்தாள் வணங்கி' தேவியின் அருளா லேயே அவளை வணங்கமுடியும். வணங்கினாலே அருள் பெற முடியும். இதில் எது காரியமோ, எது காரணமோ தெரிய வில்லை. (1)

गलग्राही पौरंदरपुरवनीपल्लवरुचां
धृतप्राथम्यानां अरुणमहसां आदिमगुरुः ।
समिन्धे बन्धूकस्तबकसहयुध्वा दिशि दिशि
प्रसर्पन्कामाक्ष्याश्चरणकिरणानां अरुणिमा ॥

கலக்ராஹீ பௌரந்தரபுரவனீ பல்லவ ருசாம்
த்ருத ப்ராதம்யானாம் அருணமஹஸா மாதிமகுரு: |

ஸமிந்தே பந்தூக ஸ்தபக ஸஹ யுத்வா திசிதிசி
ப்ரஸர்ப்பன் காமாக்ஷ்யா: சரண கிரணானா மருணிமா ||

தேவியின் பாதங்களின் செந்நிறம் எப்படியெல்லாம் இருக்கிறது என்று வர்ணிக்கிறார். தேவ லோகத்து நந்த வனத்து மரங்களின் தளிர்களின் காந்தியை தோற்கடிப்பது போல், அவ்வளவு சோபையுடனும் மிருதுவாகவும் விளங்கு கிறது. செம்பரத்தை என்னும் மலர் 'ஜபாபுஷ்ப நிபாக்ருதி' லலிதாஸஹஸ்ரநாமா 'ஜபாபுஷ்பச்சாயா' என்று ஸௌந்தர்ய லஹரியில் பல இடங்களிலும் தேவியின் செம்மை நிறத்துடன் ஒப்பிட்டுப் பேசப்பட்டிருக்கிறது. தேவியின் பாதங்களின் செம்மை நிறத்தை உதய சூரியனின் சிவந்த காந்தி, அந்த சிவந்த காந்தியானது சிவப்புக்கே முதன்மையாக, குருவாக விளங்குகிறது. என்று மூககவி சிவப்பை மிகவும் வற்புறுத்திக் கூறுகிறார். காமாக்ஷியின் பாத கிரணங்களின் செம்மை, திக்கு,திகந்தங்களிலெல்லாம் வியாபித்து பிரகாசிக்கிறது. (2)

मरालीनां यानाभ्यसनकलनामूलगुरवे
दरिद्राणां त्राणव्यतिकरसुरोद्यानतरवे ।
तमस्काण्डप्रौढिप्रकटनतिरस्कारपटवे
जनोऽयं कामाक्ष्याश्चरणनलिनाय स्पृहयते ॥

மராலீனாம் யானாப்யஸன கலனா மூலகுரவே
தரித்ராணாம் த்ராண வ்யதிகாஸுரோத்யான தரவே |
தமஸ்காண்ட ப்ரௌடி ப்ரகடன திரஸ்காரபடவே
ஜனோயம் காமாக்ஷ்யா: சரண நலினாய ஸ்ப்ருஹயதே ||

தேவிகால் சிலம்பின் ஒலி அன்னங்களுக்கு பாடம் சொல் வது போல் உள்ளது. எனவே தேவியின் நடைதான் அன்னங்க ளுக்கு நடை சொல்லிக் கொடுக்கும் குருவாக உள்ளது. தரித்திரர்களைக் காப்பதில் தேவலோகத்தில் உள்ள கற்பக விருக்ஷமாகவும். அக்ஞானமென்னும் இருட்டை, அந்த இருள் என்னும் தோற்றத்தையே முற்றும் ஒழிக்கும் வன்மை யோடு கூடியதாகவும், அப்படிப்பட்ட பாத கமலங்களை யடைய என் மனம் அவாவுகிறது. ஸெ.ளல. 3-வது பாடல் 'தரித்ராணாம் சிந்தாமணி குணநிகா' ஜடானாம். சைதன்ய-ஸ்தபக-மகரந்த ஸ்ருதிஜரீ' இந்த அடிகளில் இதே கருத்துக் காணப்படுகிறது. தேவியின் பாதகமலம் தேவியின் பாதங்க ளில் வணங்குவர்களின் (பாத ஒளி தலையில்படுவதால்) அக்ஞானமென்னும் இருட்டை விரட்டுகிறது. (3)

वहन्तीं सैन्दूरीं सरणिमवनम्रामरपुरी-
पुरंध्रीसीमन्ते कविकमलबालार्कसुषमा ।

त्रयीसीमन्तिन्याः स्तनतटनिचोलारुणपटी
विभान्ती कामाक्ष्याः पदनलिनकान्तिर्विजयते ॥

வஹந்தீஸைந் தூரீம் ஸரணிமவநம்ராமரபுரீ
புரந்த்ரீ ஸீமந்தே கவிகமல பாலார்க்க ஸுஷமா |
த்ரயீ ஸீமந்தின்யா: ஸ்தனதடநிசோலாருணபடீ
விபாந்தி காமாக்ஷ்யா: பதநலின காந்திர் விஜயதே||

தேவியை நமஸ்கரிக்கும் தேவஸ்திரீகளின் வகுடுகளில் பிரகாசியா நின்ற குங்குமத்தின் இயல்பை தேவியின் பாதங் கள் அடைகிறது. 'ஸ்ருதிஸீமந்த ஸிந்தூரிக்ருத பாதாப்ஜ தூளிகா' ல.ஸ. நாமா; ஸ்ருதி என்னும் முன் உச்சிப் பொட்டு, வகிடின் ஆரம்பத்தில் உள்ள குங்குமம் தேவியின் பாத தாமரைக ளில் உதிர்ந்து (பட்டு) தேவியின் பாத தூளிகளா கிறது. கவிகளை செந்தாம ரைக்கு ஒப்பிட்டு பாதங்களை உதய சூரியனுக்கு ஒப்பிட்டு, தேவியின் பாத த்யானத்தால் கவிகளின் கற்பனா புஷ்பம் மலர்வதாக, வெகு அழகான அமைப்பு, ரிக், யஜுஸ் ஸாம வேத வடிவினள். லலிதா ஸஹஸ்ர நாமாவும்'த்ரயீ' என்றே வேதமாதவைக் குறிப்பிடு கிறது. வேதமாதா தேவி யைக் குனிந்து வணங்கும் போது, தேவியின் திருவடித்தாமரைகளின் சிவந்த காந்தி யானது வேத மாதாவின் ஸ்தன பாரங்களில் ப்ரதிபலித்து சிவப்பு ரவிக்கை அணிந்தாற் போல் பிரகாசிக்கிறது. ரிக்-என்ற பத்ய ரூபமாக விளங்கும் தேவி ஸாம, என்ற கீதி ரூபமாகவும், யஜுஸ் என்ற கத்ய ரூபமாகவும் விளங்கும் தேவியின் பாதங் களை வணங்கினால் மட்டுமே அந்த வேதங்களின் பரமதாத் பர்யங்களும், அர்த்தங்களும் மனதில் தெளிவாகும். (4)

प्रणम्रीभूतस्य प्रणयकलहत्रस्तमनसः
स्मरारातेश्चूडावियति गृहमेधी हिमकरः ।
ययोः सांध्यां कान्तिं वहति सुषमाभिश्चरणयोः
स्तयोर्मे कामाक्ष्या हृदयमपतन्द्रं विहरताम् ॥

ப்ரணம்ரீ பூதஸ்ய ப்ரணய கலஹ த்ரஸ்த மனஸ:
ஸ்மராராதேஸ் சூடாவியதி க்ருஹமேதீ ஹி மகர: |
யயோ: ஸாந்த்யாம் காந்திம்
வஹதி ஸுஷமாபிஸ் சரணயோ:
ஸ்தயோர் மே காமாக்ஷ்யாஹ்ருதய
மபதந்த்ரம் விஹரதாம் ||

மன்மதனை ஜெயித்த மஹாதேவரும் தேவியுடன் பிரணய கலஹம் என்ற ஊடல் பூசல் விளையும்போது நடுக்கத்துடன் தேவியை நமஸ்கரிக்க, அவரது திருமுடியில் நிலை பெற்று விளங்கும் சந்திரன், தேவியின் சிவந்த பாதங்களின் செவ்வொளியால் சந்தியா காலத்து செவ்வண்ணத்தைப் பெறுகிறான். தேவி காமாக்ஷியின் அந்த சிவந்த தெய்வத் தாமரைப் பாதங்களில் என் மனது எப்பொழுதும் விளையாடிக் கொண்ட நிலை பெற்றிருக்கட்டும். தேவி கோபத்தால் தன் நாதனைக் கண்ணெடுத்துக் கூடப் பாராமல் இருக்கவே, தேவியின் பாதங்களில் சிவன் தலை வைத்து வணங்க நாம் தேவியின் பாதத்தாமரையில் சந்திரனைப் பார்க்கிறோம். (5)

ययोः पीठायन्ते विबुधमुकुटीनां पटलिका
ययोः सौधायन्ते स्वयमुदयभाजो भणितयः ।
ययोर्दासायन्ते सरसिजभवाद्याश्चरणयोः
तयोर्मे कामाक्ष्या दिनमनु वरीवर्तु हृदयम् ॥

யயோ: பீடாயந்தே விபுத முகுடீனாம் படலிகா
யயோ ஸௌதாயந்தே ஸ்வயமுதய பாஜோ பணிதய: |
யயோர் தாஸாயந்தே ஸரஸிஜ பவாத்யா: சரணயோ:
தயோர்மே காமாக்ஷ்யா தினமனு வரீவர்த்து ஹ்ருதயம் ||

தேவதைகளின் மகுடங்களின் வரிசைகள் எவைகளுக்கு ஆஸனங்களோ, தாமாகவே ஏற்பட்ட வேதங்கள் எவைக ளுக்கு உப்பரிகையோ, நான்முகன் போன்றவர் எந்தப் பாதங்க ளுக்கு தாஸர்களோ, அந்தப் பாதங்களில் என் மனம் விளங் குட்டும். ஸௌந்தர்யலஹரி 25-வது பாடல் 'த்ரயாணாம் தேவானாம்' இந்தப்பாடலில் தேவியின் பாதத்தில் மும்மூர்த்தி களும் கைளைக் குவித்து வணங்கிக்கொண்டிருப்பதால் தேவிக்குப் போட்ட புஷ்பங்களானது மும்மூர்த்தி களையும் பூஜித்ததாகிறது. என்று தேவியின் பாதங்களில் சகலதேவர் களும் எப்படி பூஜிக்கிறார்கள் என்று வெகு அழகாகக் கூறு கிறார். ஒருவராலும் எழுதப்படாமல் உண்டான வேதங்கள். (6)

नयन्ती संकोचं सरसिजरुचं दिक्परिसरे
सृजन्ती लौहित्यं नख किरण चन्द्रार्धखचिता ।
कवीन्द्राणां हृत्कैरवविकसनोद्योगजननी
स्फुरन्ती कामाक्ष्याश्चरणरुचिसंध्या विजयते ॥

நயந்தீ ஸங்கோசம் ஸரஸிஜ ருசம் திக் பரிஸரே
ஸ்ருஜந்தி லௌஹித்யம் நககிரண சந்த்ரார்த்த கசிதா |
கவீந்த்ராணாம் ஹ்ருத்கைரவ விகஸனோத் யோகஜனனீ
ஸ்பு புந்தீ காமாக்ஷ்யா: சரணருசி ஸந்த்யா விஜயதே ||

காமாக்ஷியின் பாதங்கள் செந்தாமரையின் காந்தியை ஜயிக்கும் படியாயும், திக்குகளிலெல்லாம் அந்த செம்மை நிறம் பிரதிபலிப்பதாகவும், இருக்கிறது, நகங்களை பிறைச் சந்திரனுக்கு ஒப்பிட்டு, அப்படிப்பட்ட காந்தியோடு கூடிய பாதங்கள் என்கிறார் . ஹ்ருதயத்தைத் தாமரை மலருக்கு ஒப்பிட்டு ஹ்ருதய தாமரை என்று சொல்வதுண்டு . இந்த இடத்தில் தேவியின் பாததாமரைகள், கவிவாணர்களின் ஹ்ருதயமென்னும் செவ்வல்லிப் பூக்களுக்கு இது மலர்ச்சி யைத் தருகிறது என்கிறார். அம்பிகையின் பாதங்களின் காந்தியை ஸந்தியா காலத்துக்கு ஒப்பிடவே பாததாமரைகள் தலை கவிழ்கின்றன. பாதகாந்தி எங்கும் பரவி சிவந்து நிற்பதால், நகங்கள் பாதிச்சந்திரர்களாகிறார்கள். மாலையில் மலரும் ஆம்பல் போல் கவிகளின் மனம் நிலவொளியில் மலர்கிறது. (7)

विरावैर्माञ्जीरैः किमपि कथयन्तीव मधुरं
पुरस्तादानम्रे पुरविजयिनि स्मेरवदने ।
वयस्येन प्रौढा शिथिलयति या प्रेमकलह-
प्ररोहं कामाक्ष्याश्चरणयुगली सा विजयते ॥

விராவைர் மாஞ்ஜீரை: கிமபி கதயந்தீவ மதுரம்
புரஸ்தா தானம்ரே புரவிஜயினி ஸ்மேர வதனே |
வயஸ்யேவ ப்ரௌடா சிதிலயதியா ப்ரேம கலஹ
ப்ரரோஹம் காமாக்ஷ்யா: சரணயுகலீ ஸாவிஜயதே ||

திருமூலர் திருமந்திரத்தில் முப்புரஸம்ஹாரம் பற்றிக் கூறுகிறார். கமலாக்ஷன், வித்யுன்மாலி, தாரகாக்ஷன், என்ற மூன்று அஸுரர்கள் தங்கம், வெள்ளி, இரும்புக் கோட்டைகளில் அரசாக்ஷி செய்ததாக சொல்வது உண்டு. முப்புரங்களையும் சிரிப்பினாலேயே எரித்த பரமசிவன் தேவியின் திரு முன்னே புன்முறுவல் சிந்த திருமுகத்தோடு வணங்கிநிற்கிறார். அவ்வாறு பரமேஸ்வரன் தேவியை வணங்கி நிற்கும் இடம் ப்ரணய கோப காலத்தில் என்று கூறுவது வழக்கம். முப்புரத்தையும் எரித்த சிவனின் ப்ரணய கலஹத் தைத் தீர்த்து வைக்க ஒரு தோழி, தூது போவது சிலம்பின் ஒலிகள் என்ற திறமை மிக்க பேச்சால் இருவரையும் பரஸ்பரமாக்குகிறது. எனக்கொள்ளலாம்.



5

அப்படிப்பட்ட சரண கமலங்கள் எனக்கு புகலிடங்கள் சர்வோத்கிருஷ்டமாய் விளங்கட்டும். (8)

सुपर्वस्त्रीलोलालकपरिचितं षट्पदकुलैः
स्फुरल्लाक्षारागं तरुणतरणिज्योतिररुणैः ।
भृतं कान्त्यंभोभिर्विसृमरमरन्दैः सरसिजैः
विधत्ते कामाक्ष्याश्चरणयुगळं बन्धुपदवीम् ॥

ஸுபர்வ ஸ்திரீ லோலால கபரிசிதம் ஷட்பதகுலை:
ஸ்புரல் லாக்ஷா ராகம் தருண தரணி ஜ்யோதி ரருணை: |
ப்ருதம் காந்த்யம் போபி: விஸ்ரும ரமருந்தை: ஸரஸிஜை:
விதத்தே காமாக்ஷ்யா: சரணயுகலம் பந்து பதவீம் ||

தேவியை நமஸ்கரிக்கும் தேவமாதர்களின் அசைந்து ஒளிரும் வண்டு போன்ற கூந்தல்களோடு கூடியதாயும், லாக்ஷாரஸம் என்னும் ஒளி பொருந்திய செம்பஞ்சுக் குழம்பின் பூச்சுக்களால் பிரகாசிப்பதும், நீர்த்திவலைகள் பொருந்தியதுமான தேவியின் பாதகமலங்கள் தாமரை மலர்களுக்கு ஸமானமாக உள்ளது. சூரியனைக் கண்ட தாமரை மலரும். செம்பஞ்சுப் பூச்சு அதன் சிவந்த ஒளி பாலசூரியனின் காந்தியை ஒத்திருக்கிறது. கூந்தல் என்ற கரு வண்டுக் கூட்டம், பாதங்கள், என்னும் தாமரையின் மகரந்தப் பொடிகளை நுகர்வதற்கு மொய்ப்பது போலும் இருக்கிறது. (9)

रजः संसर्गेऽपि स्थितं अरजसामेव हृदये
परं रक्तत्वेन स्थितमपि विरक्तैकसुलभम् ।
अलभ्यं मन्दानां दधदपि सदा मन्दगतितां
विधत्ते कामाक्ष्याश्चरणयुगमाश्चर्यलहरीम् ॥

ரஜஸ் ஸம்ஸர்கேபி ஸ்தித மரஜஸாமேவ ஹ்ருதயே
பரம் ரக்தத்வேன ஸ்திதமபி விரக்தைக சரணம் |
அலப்யம் மந்தானாம் தததபி ஸதா மந்த கதிதாம்
விதத்தே காமாக்ஷ்யா: சரணயுக மாஸ்சர்ய லஹரீம் ||

காமாக்ஷியின் கழலிணைகள் தனக்கு ரஜஸ்ஸின் (மகரந் தப்பொடியாகிய புழுதியின்) ஸம்பந்த மிருந்தாலும், ரஜோ குணம் இல்லாதவர்களின் ஹ்ருயத்திலேயே தேவிகுடி கொண்டுள்ள உண்மையைக் கூறுகிறது.

தேவியின் பாதங் கள் தாமரைபோன்ற சிவந்த நிறத்தோடு (ராகம்-சிவப்பு) விளங்கினாலும், பற்று (ராகம்) அற்றவர்களுக்கே புகலிடமாக உள்ளது. அப்படி மந்த நடை: மெதுவான நடை என்றாலும் 'மந்த' புத்தியுள்ள வர்களால் அடைய முடியாதவள். இப்பாடல் முழுவதும் 'ராகம்' 'மந்தம்' இது போல் இரு பொருட் சொற்கள் அமைந்தது. இது ஓர் ஆச்சர்யம் எதிரிடை அர்த்தங்கள் நிரம்பிய சொற்றொடர். (10)

जटाला मञ्जीरस्फुरदरुणरत्नांशुनिकरैः
निषीदन्ती मध्ये नखरुचिझरीगाङ्गपयसाम् ।
जगत्त्राणं कर्तु जननि मम कामाक्षि नियतं
तपश्चर्यां धत्ते तव चरणपाथोजयुगली ॥

ஜடாலா மாஞ்சீரஸ் புரதருண ரத்னாம் சுநிகரை:
நிஷீ தந்தீ மத்யே நகருசி ஜரீ காங்க பயஸாம் |
ஜகத்ராணம் கர்த்தும் மமஜனனி காமாக்ஷி நியதம்
தபஸ்சர்யாம் தத்தே தவ சரண பாதோஜ யுகலீ ||

ஜகத்தை ரக்ஷிப்பதையே தேவி தவமாகக் கொண்டுள் ளாள். தேவியின் தாமரைப் பாதங்கள், பாதங்களில் அணிந்துள்ள சிலம்புகளின் செம்மணிகளின் அதாவது இரத்தினக் கற்கள் பரல்களாக உடைய சிலம்பு, அச்செம்மணிகளின் ஒளிக்கற்றைகள் நகங்களில் பரவுதலால், செஞ்சடைகள் போன்ற தோற்றம் ஏற்படுகிறது. தேவியின் கருணை கங்கை யின் பிரவாஹம் போல், கால் நகங்களிலிருந்து அருவி போல் பாயும் காந்தி வெள்ளமாகிய கங்கையின் பிரவாஹத்தின் மத்தியில் அமர்ந்து ஜகத்தை ரக்ஷிப்பதை தவமாகக் கொண்டு தேவி விளங்கும் கோலம், அச்செஞ்சடைப்பரமன், கங்காதர ரைப் போலவே என் கண்களுக்குத் தோற்ற மளிக்கிறது. 'உன்னில் சிவத்தைக் காண்கின்றேன்' 'சிவத்தில் உன்னைக் காண்கின்றேன்.' (11)

तुलाकोटिद्वन्द्वक्वणितभणिताभीतिवचसोः
विनम्रं कामाक्षी विसृमरमहः पाटलितयोः ।
क्षणं विन्यासेन क्षपिततमसोर्मे ललितयोः
पुनीयान्मूर्धानं पुरहरपुरंध्री चरणयोः ॥

துலா கோடி த்வந்த்வ க்வணித பணிதா பீதி வசஸோ:
வினம்ரம் காமாக்ஷீ விஸ்ருமர மஹ: பாடலி தயோ: |

க்ஷணம் வின்யாஸேன க்ஷபிததமஸோர் மேலலிதயோ:
புனீயான் மூர்த்தானம் புரஹர புரந்த்ரீ சரணயோ: ||

திரிபுர ஸம்ஹாரம் செய்த பரமசிவ பத்னீ காமாக்ஷி தேவியின் திருப் பாதங்களில் ஒலிக்கும் இரண்டு நூபுரங்களும் அதன் ஒலியால் நம்மை 'ரக்ஷிக்கிறேன்' என்று அபய வாக்குத் தருவதுபோல் தோன்றுகிறது. காமாக்ஷீ தேவியின் தாமரைப் பாதங்கள் சிவந்த ஒளி நிறைந்து இருளை நீக்குகிறது. 'நகதீதிதி ஸஞ்ஜன்ன நமஞ்ஜன தமோகுணா' லலிதா ஸஹஸ்ரநாமா தேவியின் பாதங்களில் வணங்குபவர்களின் 'தமோ' குணத்தை நீக்கி விடுகிறாள் ஒளிபட்டவுடன் இருள் ஓடவேண்டியதுதானே! மேன்மையும், அழகும் நிறைந்த அந்தப்பாதங்களை, மூககவி வேண்டுகிறார், க்ஷணப்பொழுது என் தலைமீது வைத்து வணங்கிய சிரஸை பரிசுத்த மாக்கட்டும் என்பதாக, நாமும் அவரைப் பின்பற்றுவோம். பக்தர்கள் தேவியின் பாதங்களில் வணங்கும் போது, தேவி கால்சிலம்பொலி 'அஞ்சேல்' என்று சொல்கிறது. (12)

भवानि द्रुह्येतां भवनिविडितेभ्यो मम मुहुः
तमोव्यामोहेभ्यस्तव जननि कामाक्षि चरणौ ।
ययोर्लाक्षाबिन्दुस्फुरणधरणाद् दूर्जटिजटा-
कुटीरा शोणाङ्कं वहति वपुरेणाङ्ककलिका ॥

பவானீ த்ருஹ்யே தாம்பவ நிபிடிதேப்யோ மமமுஹு:
தமோ வ்யாமோஹேப்யஸ் தவ ஜனனி காமாக்ஷி சரணௌ|
யயோர் லாக்ஷா பிந்துஸ்புரண தரணாத் தூர்ஜடி ஜடா
குடீரா சோணாங்கம் வஹதி வபுரேணாங்க கலிகா ||

சிவ பத்னி, பவபத்னியான பவானீ என்ற காமாக்ஷியே! தேவியின் நாமங்கள் வெகு ரம்யமானவை. அதிலும் பவானீ என்ற நாமா எனக்கு மிகப்பிடிக்கும். ஸௌந்தர்யலஹரி 22வது பாடல் 'பவானித்வம் தாஸே' 'பவானித்வமிதிய:' இந்த இரண்டு பவானித்வம், பவானி-த்வம் என்ற சிலேடைகளை அனுபவிப்பதில் தான் எத்தனை ஆனந்தம்! ஜடாபாரம் தாங்கும் பரமசிவனின் சடையாகிய வீட்டில் வசிக்கும் அந்த நிலவின் களங்கத்தை எடுத்து நெற்றிப்பொட்டாக, திலகமாக தேவி அணிந்து கொண்டிருக்கிறாள். சிவன் தேவியை வணங்கும்போது சிவனின் தலை ஜடைமுடியில் உள்ள சந்திரனின் கலைகளானது தேவியின் மயிலாஞ்சிக்குழம்பு பூசப்பட்ட பாதங்களில்படுகிறது. ஏற்கனவே சிவந்த பாதங்கள், லாக்ஷா ரஸத்தால் இன்னும் சிவப்பு, அதற்குமேல் சந்திர கலை பிரகாசித்தால் அது எப்படி இருக்கும்! பிறப்புக்களைத் தரும் அஞ்ஞான இருளைப் போக்க, அதுவும்

தொடர்ந்து வரும் பிறப்புக்கள், அந்த 'தமம்' என்னும் இருளைப் போக்க அவ்வளவு பிரகாசங்களும் துணை புரிய வேண்டும். (13)

पवित्रीकुर्युर्नः पदतलभुवः पाटलरुचः
परागास्ते पापप्रशमनधुरीणाः परशिवे ।
कणं लब्धुं येषां निजशिरसि कामाक्षि विवशा
वलन्तो व्यातन्वन्त्यहमहमिकां वासवमुखाः ॥

பவித்ரீகுர்யுர்ந: பததலபுவ: பாடலருச:
பராகாஸ் தே பாபப்ரசமன துரீணா: பரசிவே |
கணம் லப்தும் யேஷாம் நிஜசிரஸி காமாக்ஷி விவசா
வலந்தோ வ்யாதந் வந்த்யஹமஹமிகாம்மாதவமுகா:||

தேவி காமாக்ஷி த்ரிபுர சுந்தரியின் பாததூளியான மகரந்தத் துளிகளில் ஒரு துளியாவது அவர்கள் சிரஸிலே பெறுவதற் காக மாதவன், மற்றும் தேவர்கள் தங்களை முற்றும் மறந்து தேவியைச் சூழ்ந்து கொண்டு அருளை அடைய முந்து கிறார்கள் ஸௌந்தர்ய லஹரி 2வது பாடல் 'தனீயாம்ஸூம் பாம்ஸூம்' 3-வது 'அவித் யானாமந்தஸ்திமிர' இந்தப் பாடல் களில் தேவியின் பாத தூளி மஹிமை பற்றிப் பேசப்படுகிறது. பிரும்ம, விஷ்ணு, ருத்ரர் மும்மூர்த்திகளும் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் மூன்று காரியங்களும் நடை பெற தேவியின் பாததூளியாலேயே, அதனைக் கையிலும், சிரஸிலும், உடம்பி லும் வஹித்து அவரவர் கடமையாற்று கிறார்கள்.தேவியின் பாத ரஜஸ்மும் மூர்த்திகளுக்குத் தான் என்பதல்ல. மனிதர்க ளுக்கும் அவித்யையகற்றுவதாகவும், சிந்தாமணிக் குவியலாகவும், பிறவிப் பணியை அகற்றுவ தாகவும், அமைகிறது. தூளிக்கே இந்தப் பெருமை, பாத வண்மையை வர்ணிக்கப் போகுமோ! (14)

बलाकामालाभिर्नखरुचिमयीभिः परिवृते
विनम्रस्वर्नारीविकचकचकालाम्बुदकुले ।
स्फुरन्तः कामाक्षि स्फुटदलितबन्धूकसुहृदः
तडिल्लेखायन्ते तव चरणपाथोजकिरणाः ॥

பலாகா மாலாபிர் நகருசிமயீபி: பரிவ்ருதே
விநம்ர ஸ்வர்நாரீ விகசகச காலாம் புதகுலே |
ஸ்புரந்த: காமாக்ஷி ஸ்புடதலிதபந்தூக ஸூஹ்ருத:
தடில்லே காயந்தே தவ சரணபாதோஜ கிரணா: ||

தேவியின் திருவடித் தாமரைகளின் வீசும் ஒளிக்கிரணங்கள்; நகங்களின் வெண்மையான ஒளியை கொக்குகளின் வரிசைகளுக்கும், தேவியின் பாதங்களை நமஸ்கரிக்கும் வேத மாதர்களின் விரிந்த கருங்கூந்தல் கார் மேகங்களுக்கும் ஒப்பிடப்படுகிறது. மேகங்களில் தோன்றும் மின்னலோ, மேகங்களின் ஓரவாட்டில் தோன்றும் வெள்ளிக் கோடோ என்று காண்கிறது. இப்பொழுது தேவியின் பாதங்கள் செக்கச் சிவந்த செம்பரத்த மலர்கள், கால் நகங்கள் மின்னற் கொடிகள், தேவமாதரின் கூந்தல் கார்மேகம், இப்படிப்பட்ட வர்ணனை மனதைக் கொள்ளை கொள்கிறது. (15)

सरागः सद्वेषः प्रसृमरसरोजे प्रतिदिनं
निसर्गादाक्रामन्विबुधजनमूर्धानमधिकम् ।
कथंकारं मातः कथय पदपद्मस्तव सतां
नतानां कामाक्षि प्रकटयति कैवल्यसरणिम् ॥

ஸராக: ஸத்வேஷ: ப்ரஸ்ருமர ஸரோஜே ப்ரதிதினம்
நிஸர்கா தாக்ராமன் விபுத ஜன மூர்த்தான மதிகம் |
கதங்காரம் மாத: கதய பதபத்மஸ் தவஸதாம்
நதானாம் காமாக்ஷி ப்ரகடயதி கைவல்ய ஸரணீம் ||

தேவி காமாக்ஷியின் பாதங்கள் சிவந்த நிறத்தை உடைய தால் ராகத்தை உடையதாகவும், அதே சமயம் தாமரையைப் பழிப்பதால் தாமரையிடம் த்வேஷமுடையதாகவும், இருக்கிறது. ஞானிகளோ ராகத்தையும் த்வேஷத் தையும் விட்டவர் கள், ஆயினும் தேவியின் செந்நிறப் பாதங்கள், தாமரையிடம் த்வேஷமுடைய பாதங்கள் ஞானிகளுக்கும் தேவர்களுக்கும் அவர்கள் தலைமீது தன் பாதங்களைப் பதித்து கைவல்யத் தையே அளித்து விடுகிறது. இது விந்தையே! ராக, த்வேஷங் களுக்கு ஆசார்யஸ்தானம் வஹிக்கிறது. ஸ்ரீ மேல்பத்தூர் நாராயண பட்டத்ரீ' இயற்றிய 'ஸ்ரீபாத ஸப்ததீ' என்ற தேவி யின் பாத வர்ணனைத்துதியில் இதே கருத்து 23-வது பாடலில் வைக்கப்பட்டி ருக்கிறது 'ராகத்வேஷ' என்று தொடங்குகிறது. (16)

जपालक्ष्मीशोणो जनित परमज्ञाननलिनी-
विकासव्यासङ्गो विफलितजगज्जाड्यगरिमा ।
मनःपूर्वाद्रि मे तिलकयतु कामाक्षि तरसा
तमस्काण्डद्रोहि तव चरणपाथोजरमणः ॥

ஜபாலக்ஷ்மீசோணோ ஜனித பரமஜ்ஞான நலினீ
விகாஸ வ்யாஸங்கோ விபலித ஜகஜ் ஜாட்ய கரிமா |
மன: பூர்வாத்ரிம்மே திலகயது காமாக்ஷி தரஸா தமஸ்
காண்ட த்ரோஹீ தவசரண பாதோஜ ரமண: ||

தேவி காமாக்ஷியின் சரணங்கள் என்ற தாமரை, சூரியனைக் கண்டதும் மலர்வதால் தாமரையின் காதலன் சூரியன் என்று மூககவி வெகு அழகாகச் சொல்கிறார். சூரியனிடம் செவ்வொளி (ஜபா) உள்ளதால் (செம்பரத் தைக்கு ஜபாபுஷ்பம் என்ற பெயர் உண்டு) செம்பரத்தை போன்ற சிவப்பு நிறமுடைய வனாய் சூரியன் தாமரையை மலரச்செய்வதில் நோக்கமுடைய வனாய் (தேவி யின் பாதங்கள் கைவல்யத்தையே அளிக்கும் ஞானி யாகும்) உலகத்தின் இருளை, தமோ குணத்தை நீக்கும் ஞான சூரியன் ஆக விளங்குகிறான். மனமென்னும் உதய பர்வதம் அங்கே நெற்றியில் இடப்பட்ட குங்குமம் போல் தாமரையின் காதலனான, செம்பரத்தப்பூவின் செவ் வொளியாக ஞான சூரியன் ப்ரகாசிக்கட்டும். சூரியோதயம் வந்தால் இருள் நீங்கி மக்களிடம் சோம்பல் நசித்துப் போவதைப் போல், தேவியின் பாதங்களை தியானித்தால் அஞ்ஞானம் நீங்கி மௌட்யத் தன்மை நசித்து விடுகிறது. இவ்விதமாக பாதங்கள் சூரியனுக்கு ஒப்பிடப்படுகிறது. (17)

नमस्कुर्मः प्रेङ्खन्मणिकटकनीलोत्पलमहः-
पयोधौ रिङ्खद्भिर्नखकिरणफेनैर्धवलिते ।
स्फुटं कुर्वाणाय प्रबलचलदौर्वानलशिखा-
वितर्कं कामाक्ष्याः सततमरुणिम्ने चरणयोः ॥

நமஸ்குர்ம: ப்ரேங்கன் மணிகடக நீலோத்பல மஹ:
பயோதௌ ரிங்கத்பி: நககிரண பேனைர் தவலிதே |
ஸ்புடம் குர்வாணாய ப்ரபலசல தௌர்வானலசிகா
விதர்க்கம் காமாக்ஷ்யா: ஸததமருணிம்னே சரணயோ: ||

தேவியின் கால் நகங்களின் வெண்ணிற காந்தி அலை மோதி எழுகின்ற நுரைகளைப்போல் பளிச்சென்ற ஒளியுடன் மின்னுகிறது. பாதங்களில் அணிந்த ரத்னகடகம் என்ற காற்சிலம்புகளில் உள்ள நீல ரத்னங்களின் காந்தி வீசுவதா கவும் உள்ளது. தேவியின் திருவடிகளின் செம்மை நிறமோ அந்த அலைமோதும் சமுத்திரத்தின் எரிகின்ற வடவைத் தீயின் ஜ்வாலைபோல உள்ளது. (18)

शिवे पाशायेतां अलघुनि तमःकूपकुहरे
दिनाधीशायेतां मम हृदयपाथोजविपिने ।
नभोमासायेतां सरसकवितारीतिसरिति
त्वदीयौ कामाक्षि प्रसृतकिरणौ देवि चरणौ ॥

சிவே பாசாயேதாம் அலகுனிதம: கூபகுஹரே
தினாதீசாயேதாம் மமஹ்ருதய பாதோஜவிபினே |
நபோ மாஸாயேதாம் ஸரஸகவிதா ரீதி ஸரிதி
த்வதீயௌ காமாக்ஷி ப்ரஸ்ருதகிரணௌ தேவி சரணௌ||

பரமசிவ பத்னியான மங்கள ஸ்வரூபிணி காமாக்ஷி தேவியின் இரு சரணங்களும் அஞ்ஞானம், அறியாமை என்னும் இருள் நிறைந்த பாழுங் கிணற்றிலிருந்து கரையேற உதவும் தாம்புக்கயிறு போல் விளங்குகிறது. தமோகுணம் என்ற இருட்டிலிருந்து தேவியின் ஒளி பொருந்திய பாதங்கள் நம்மைக் காப்பற்றுகிறது. ஹ்ருதயம் என்ற தாமரைக் காட்டில் விளங்கும் சூரியனாக தேவி விளங்குகிறாள். இவ்வளவு நேரம் தேவியின் பாதங்களைத் தாமரையாக்கி சூரியன் அதை மலர்த்துவதாக வர்ணனை அமைந்தது. இப் பொழுது ஹ்ருதய தாமரையை மலர்த்தும் சூரியனாக தேவி விளங்குகிறாள். சூரியன் நிற்கையில் முடியும் மாதத் திற்கு ஸிம்ஹமாச மென்றும், சிராவ ணமாஸமென்றும், ஆவணி மாதமென்றும் பெயர். நான் வேண்டிக் கொள்கிறேன் தேவியிடம்; ரஸம் நிறைந்த கவிதையாகிற நதியின் ஜலத்தை பெருகச் செய்வதில் மழைக்காலமாகட்டும். (19)

निषक्तं श्रुत्यन्ते नयनमिव सद्वृत्तरुचिरैः
समैर्जुष्टं शुद्धैरधरमिव रम्यैर्द्विजगणैः ।
शिवे वक्षोजन्मद्वितयमिव मुक्ताश्रितमुमे
त्वदीयं कामाक्षि प्रणतशरणं नौमि चरणम् ॥

நிஷக்தம் ச்ருத்யந்தே நயனமிவ ஸத்வ்ருத்தருசிரை:
ஸமைர் ஜுஷ்டம் சுத்தை ரதரமிவ ரம்யைர் த்விஜகணை:|
சிவே வக்ஷோ ஜன்மத் விதயமிவ முக்தாச்ரித முமே
த்வதீயம் காமாக்ஷி ப்ரணதசரணம் நௌமி சரணம் ||

தேவியின் கண்கள் காது வரை வியாபித்துள்ளது போல் பாதங்களும் வேதங்களின் சிரோபாகமான உபநிஷத்தத்தில் நிலைபெற்றிருக்கிறது: வேதமாதாவின் தலை வகுட்டில் தேவியின் திருவடித்தூளிகள் சிந்தூரமாகப் பதிந்துள்ளது தேவமாதாவின் தலைப்பகுதியில் உபநிஷதங்கள் தலை வகிடாக உள்ளது. வகிட்டில் அம்பாளின் பாததூளி சிவப் பாகக் காணப் படுகிறது. தேவியின் உதடுகள் ஒன்றோ டொன்று ஒத்து பல் வரிசைகளோடு சேர்ந்திருக்கிறது. தேவியின் திருப்பாதங்களில் த்விஜர்கள் என்ற இருபிறப் பாளர்கள் வணங்கி நிற்கிறார்கள், பற்கள் விழுந்து முளைப்பதால் அதுவும் த்விஜர்கள் ஆகிறது ப்ராமணனும் உபநயன சம்ஸ்காம் செய்யப்படுவதால் மறுபிறப்பை அடைகிறார்கள். பூணூல் என்னும் ஸம்ஸ்காரத்தை அடைந்த பின் வைதிக கர்மா செய்யும் தகுதி ஏற்படுகிறது. இப்படியாக இருபிறப்பாளர் அந்தணர்கள் என்பது பெறப்படுகிறது. நல் முத்தாரங்களால் பிரகாசிக்கும் மார்பை உடையவள் தேவி முக்தர்களுக்குப் புகலிடமானவளும் தேவியே தான் . இவ் வாறு இப்பாடல் முழுவதும் ஸ்ருத் யந்தம், த்விஜகண, முக்த எல்லாமே இரண்டு பொருள்படும்படி அமைக்கப்பட்டுள்ளது. (20)

नमस्या संसज्जन्नमुचि परिपन्थि प्रणयिनी-
निसर्गप्रेंखोलत्कुरलकुलकालाहिशबले ।
नखच्छाया दुग्धोदधिपयसि ते वैद्रुमरुचां
प्रचारं कामाक्षि प्रचुरयति पादाब्जसुषमा ॥

நமஸ்யாஸம் ஸஜ்ஜன் நமுசி பரிபந்தி ப்ரணயினீ
நிஸர்க ப்ரேங்கோலத் குரல குலகாலாஹி சபலே |
நகச்சாயா துக்தோததி பயஸிதே வைத்ரும ருசாம்
ப்ரசாரம் காமாக்ஷி ப்ரசுரயதி பாதாப்ஜ ஸுஷமா ||

நமுகி என்ற அசுரன் இவன் எந்த ஆயுதத்தாலும் அழியாத வரம் பெற்ற வன். இந்திரன் பகவானிடம் இவன் அழிவை வேண்ட தண்ணீரில் உண்டாகும் நுரை காய்ந்தது, அதைக் கொண்டு இந்திரன் நமுசி என்ற அசுரனை அழித்த தாக வரலாறு உள்ளது. நமுசியை ஸம்ஹரித்த இந்த்ராணியின் கூந்தல்கற்றை, கற்றையாக கருநாகங்கள் போல் தேவியை நமஸ்கரிக்கும்போது அசைந் தாடு கிறது சசிதேவி கூந்தலில் அணிந்துள்ள ரத்னாபரணங்களின் ஒளி தேவியின் நககிரணங்களாகிய பாலாழியின் பாலிலே பிரதிபலித்து, தேவியின் திருவடித் தாமரைகளின் பவழம் போன்ற சிவப்பை மிகுதியாகப் பரப்புகிறது. (21)

कदा दूरीकर्तुं कटुदुरित काकोल जनितं
महान्तं सन्तापं मदनपरिपन्थि प्रियतमे ।

क्षणात्ते कामाक्षि त्रिभुवन परीतापहरणे
पटीयांसं लप्स्ये पदकमलसेवामृतरसम् ॥

கதா தூரீ கர்த்தும் கடுதுரித காகோல ஜனிதம்
மஹாந்தம் ஸந்தாபம் மதனபரிபந்தி ப்ரியதமே |
க்ஷணாத்தே காமாக்ஷி த்ரிபுவனபரீதாப ஹரணே
படீயாம்ஸம் லப்ஸ்யே பதகமல ஸேவாம்ருத ரஸம் ||

மன்மதனை அழித்த பரமசிவனுக்கு மிகவும் இன்பமான காமாக்ஷி இவ்வாறு கூறுவது எதிர்மறையாகும். ஆயினும் மறுபடியும் மன்மதனை தேவியே உஜ்ஜீவனம் செய்து மாரனும் தேவ, தேவியரை சேர்த்து வைத்தான். எனவே மன்மதனை அழித்த பரமசிவனுக்கு மிகவும் இன்பமான காமாக்ஷி என்ற கூற்று மிகப் பொருத்தமானதே. கடுமையான பாவங்கள் செய்வதால் மனிதன் அதை அனுபவிக்கும்போது மிகுந்த துன்பமடைகிறான். தேவியின் பாதங்கள் நம்மை இக்கஷ்டங்களினின்றும் கடத்துவிக்கிறது. (22)

ययोः सान्ध्यं रोचिः सततमरुणिम्ने स्पृहयते
ययोश्चान्द्री कान्तिः परिपतति दृष्ट्वा नखरुचिम् ।
ययोः पाकोद्रेकं पिपठिषति भक्त्या किसलयं
म्रदिम्नः कामाक्ष्या मनसि चरणौ तौ तनुमहे ॥

யயோ: ஸாந்த்யம் ரோசி: ஸதத
மருணிம்னே ஸ்ப்ருஹயதே
யயோ: சாந்த்ரீ காந்தி: பரிபததி
த்ருஷ்ட்வா நகருசிம் |
யயோ: பாகோத்ரேகம் பிபடிஷதி
பக்த்யா கிஸலயம்
ம்ரதிம்ன: காமாக்ஷ்யா மனஸி
சரணௌ தௌ தனுமஹே ||

தேவி காமாக்ஷியின் இரண்டு சரணங்களும் மிகச் சிவந்து காணப்படுவதால் ஸந்த்யா காலத்தில் வானத்தில் ஏற்படும் அந்த ஒளி நிறைந்த சிவப்பை ஸந்த்யா காலம் தேவியிட மிருந்தே பெறுகிறது. தேவியின் நிறமே சிவப்பு. 'அணி துகில் மாலை, பூஷணம் அனைத்திலும் சென்னிறம் கொண்டாய்

தாயே? என்று லலிதா ஸஹஸ்ரநாம உரை கூறுகிறது. தேவியின் கால் நககாந்தியோ சந்த்ரனுடைய காந்தியைத் தோற்கடித்து நாலு பக்கமும் சிதறுண்டு போகும்படி செய் கிறது. பாதங்களின் விளங்கும் அத்தகைய சரணங்களை நாம் த்யானம் செய்வோம். 'பாலென்பது மொழி, பஞ்சென்பது பதம்' (கந்தரலங்காரம்) பஞ்சஞ்ச மெல்லடியார் (அபிராமி அந்தாதி) செம்பஞ்சுக் குழம்பைப் பூசும் பஞ்சும் அம்மெல் லடியை வருட அஞ்சம்.(23)

जगन्नेदं नेदं परमिति परित्यज्य यतिभिः
कुशाग्रीयस्वान्तैः कुशलधिषणैः शास्त्रसरणौ ।
गवेष्यं कामाक्षि ध्रुवं अकृतकानां गिरिसुते
गिरामैदंपर्यं तव चरणपद्मंविजयते ॥

ஜகன் நேதம் நேதம் பரமிதி பரித்யஜ்ய யதிபி:
குசாக்ரீயஸ் வாந்தை: குசல திஷணை: சாஸ்த்ரசரணௌ|
கவேஷ்யம் காமாக்ஷி த்ருவ மக்ருத கானாம் கிரிஸுதே
கிராமை தம்பர்யம் தவ சரண பத்மம் விஜயதே ||

உலகத்தில் எல்லாப் பொருள்களையும் இறைவனே தோற்றுவிக்கிறான் ஆனால் அந்த இறைவனைத் தோற்று விப்பவர் யாரும் இல்லை. தானே தோன்றி தானே மறைந்து, 'அலகிலா விளையாட்டுடையான், அவன் தாள்சரண்' என்றபடி தேவியை சிருஷ்டி செய்தவர் யார்? அந்த அழகான சிவந்த மென்மையான ஒளி மிகுந்த பாதங்களைச் செய்தவர் யார்? அப்பரம் பொருளே தான். இதைத்தான் லலிதா ஸஹஸ்ரநாமா 'பஞ்சக்ருத்ய பராயணீ என்று புகழ்கிறது. முற்றும் துறந்த யதீந்த்ரர்கள் சாஸ்த்ர மார்க்கத்தில் மங்களமான புத்தியடைய வர்களாய், மிகக் கூர்ந்த மதிநுட்பம் உடையவர்களாய், 'சிதக்னி குண்ட ஸம்பூதா' லலிதா ஸஹஸ்ரநாமா' அறிவாம் மனக்குழ உதித்தாய் போற்றி! என்று தேவி உபாஸகர்கள் புகழ்கிறார்கள். 'நின்னிற் சிறந்தது நின் இணையடி' என்று பரிபாடல் கூறுகிறது. குனிந்த நோக்குடன் இறைவனின் பாததரிசனம் பெற்றவர்களே பாக்யவான்கள். (24)

कृतस्नानं शास्त्रामृतसरसि कामाक्षि नितरां
दधानं वैशद्यं कलितरसं आनन्दसुधया ।
अलङ्कारं भूमेर्मुनिजनमनश्चिन्मयमहा-
पयोधेरन्तस्स्थं तव चरणरत्नं मृगयते ॥

க்ருத ஸ்நானம் சாஸ்த்ராம்ருதஸரஸி காமாக்ஷி நிதராம்
ததானம் வைசத்யம் கலிதரஸ மானந்த ஸுதயா |
அலங்காரம் பூமே முனிஜன மனஸ் சின்மய மஹா
பயோதே ரந்தஸ்தம் தவ சரண ரத்னம் ம்ருகயதே ||

முனிவர்களின் மனம் சாஸ்திரமென்னும் அமிர்தப் பொய் கையில் ஸ்நானம் செய்து, ஏற்கனவே தெளிந்த மனம் தான், இன்னும் அதிகத் தூய்மையைப் பெற்று, ஆனந்தம் என்ற அமிர்த நீரோட்டம், இதுவே, பூமியைச் சுற்றியுள்ள மஹா ஸமுத்ரம், அதன் நடுவே 'சித்' என்னும் தேவியின் சரணாங் கள் ரத்னமாக விளங்குகிறது. ஸமுத்ரத்தில் ரத்னங்கள் கிடைப்பது இயற்கை தேவி ஸத்-சித்-ஆனந்தம்; இந்தப் பாடலில் சூசிப்பிக்கப்படுகிறது. ஸத் என்ற சிவத்தை விட்டுப் பிரியாத 'சித்' என்னும் தேவி, இதனால் கிடைப்பதோ ஆனந்தம். ஸத்-சித்-ஆனந்தம்; இந்த மூன்றும் தான் தேவி யின் முப்பெரும் நிலைகள். 'சித்' என்ற ஒரு குறிப்பினால் மீதி எல்லாமே பெறப்படுகிறது. (25)

मनोगेहे मोहोद्भवतिमिरपूर्णे मम मुहुः
दरिद्राणीकुर्वन्दिनकरसहस्राणि किरणैः ।
विधत्तां कामाक्षि प्रसृमरतमोवञ्चनचणः
क्षणार्धं सान्निध्यं चरणमणिदीपो जननि ते ॥

மனோகேஹே மோஹோத்பவ திமிரபூர்ணே மமமுஹு:
தரித்ராணீகுர்வன் தினகர ஸஹஸ்ராணி கிரணை: |
விதத்தாம் காமாக்ஷி ப்ரஸ்ருமர தமோ வஞ்சன சண:
க்ஷணார்த்தம் ஸான்னித்யம் சரணமணி தீபோஜனனிதே||

தேவி காமாக்ஷியின் சரணங்களை ரத்ன தீபத்துக்கு ஒப்பிடுகிறார் கவி. தேவியின் சரணங்களின் பிரகாசம் நம் அஞ்ஞானம் என்னும் பேரிருட்டை நீக்கட்டும். ஆயிரக்கணக் கான சூரிய ஒளியையும் தோற்கடிக்கும் அப்படிப்பட்ட பிரகாசம் பொருந்தியது தேவியின் பாதங்களின் ஒளி. மனதில் ஆசையால் ஏற்படும் அந்தகாரத்தை விரட்டி சில கண மேனும் ஆன்ம ஒளி ஏற்பட பிரார்த்திக்கும் பாடல் இது. (26)

कवीनांचेतोवन्नस्वररुचिसंपर्कि विबुध-
स्रवन्तीस्रोतावत्पटुमुखरितं हंसकरवैः ।

दिनारम्भ श्रीवन्नियतमरुणच्छायसुभगं
मदन्तः कामाक्ष्याः स्फुरतु पदपङ्केरुहयुगम् ॥

கவீனாம் சேதோவன் நகரருசி ஸம்பர்க்கி விபுத
ஸ்ரவந்தீ ஸ்ரோதோவத் படுமுகரிதம் ஹம்ஸகரவை: |
தினாரம்ப ஶ்ரீவன் நியதம் அருணச்சாய ஸுபகம்
மதந்த: காமாக்ஷ்யா: ஸ்புரது பதபங்கேருஹ யுகம் ||

கவிகளின் மனதுபோல் கடுமையற்ற இன் சொற்களில் ஆசையுடையதாகி, நகரருசி - நகங்களின் ருசி, அதாவது காந்தி; ந+கர+ருசி= கொடுமையற்ற பொருள்களில் ஆசை; இருபொருள்பட கூறும் ப்ரயோகம் இது. இதை அடுத்து ஹம்ஸகரவை: என்ற பதமும், அன்னப்பறவையின் சப்தங்க ளால், நூபுரங்களின் சப்தங்களால் என இரு பொருள்படும்; அருணச்சாய-இதுவும் அருணணின் ஒளி, சிவந்த ஒளி எனபதாகும். தேவியின் கால் நூபுரங்களின் ஒலி, அன்னப் பறவை சப்தம் போன்ற ஒலி, நதியைப்போல் ஆர்ப்பரித்து செல்வதாகி உதய காலத்தில் அருணனின் சாயல்போல் மிகச் சிவந்த நிறத்துடன் கூடிய தேவியின் திருவடித்தாமரைகள் என் நெஞ்சில் எப்பொழுதும் குடி கொண்டு பிரகாசிக்க வேண்டுகிறேன். (27)

सदा किं सम्पर्कात्प्रकृतिकठिनैर्नाकिमकुटैः
तटैर्नीहाराद्रेरधिकं अणुना योगिमनसा ।
विभिन्ते संमोहं शिशिरयति भक्तानपि दृशां
अदृश्यं कामाक्षि प्रकटयति ते पादयुगलम् ॥

ஸதாகிம் ஸம்பர்க்காத் ப்ரக்ருதிகடினை: நாகி மகுடை:
தடை: நீஹாராத்ரே: அதிகமணுனா யோகிமனஸா: |
விபிந்தே ஸம்மோஹம் சிசிரயதி பக்தானபி த்ருசாம்
அத்ருச்யம் காமாக்ஷி ப்ரகடயதி தே பாதயுகலம் ||

தேவியின் பாதங்கள் மிக, மிக ம்ருதுவானவை, ஜனங் களின் மோஹத்தைப் பிளந்தெறிவதாக அமைந்துள்ளதே! அந்தப் பாதங்கள் கொஞ்சம் கடினமாயிருந்தால் தானே அவ்வாறு செய்ய முடியும். தேவ லோகத்தவர் தேவியின் பாதங்களில் எப்பொழுதும் வணங்குவதால் கிரீடங்கள் தேவியின் கால்களில் பட்டு கிரீடத்தின் கடினத்தன்மை கொஞ்சம் ஏற்பட்டிருக்கும் இது அழகான யுக்தியாகும். தேவி பனிமலை யரசனின் பெண். ம்ருதுவான

பாதங்கள் மோஹத்தைப் பிளக்கிறது. பாத தாமரைகள் பக்தர்கள் மனம் குளிரும் படி வரங்களை வாரி வழங்குகிறது. ஸூக்ஷ்மரூப அனுபவத் துடன் தேவியின் நிர்க்குணநிலை கிட்டுகிறது. இவையெல் லாம் நமக்குக் காமாக்ஷியின் இன்னருளால் பொற்கரிய பாக்யமாகும். யோகிகள் பரமாணு பரிணாமமுள்ள தங்கள் மனத்தால் தேவியின் பாதங்களை தியானிப்பதால். அந்த மனம் ஸூக்ஷ்ம வஸ்து பரிச்சயத்தால் கண்ணுக்குப் புலப்டாப் பொருள்களையும் பாதங்கள் காட்ட வல்லது என்று மூக கவி பேசுகிறார்.(28)

पवित्राभ्याममम्ब प्रकृतिमृदुलाभ्यां तव शिवे
पदाभ्यां कामाक्षि प्रसभमभिभूतैः सचकितैः ।
प्रवालैरम्भोजैरपि च वनवासव्रतदशाः
सदैवारभ्यन्ते परिचरितनानाद्विजगणैः ॥

பவித்ராப்யாம் அம்ப ப்ரக்ருதி ம்ருது லாப்யாம் தவசிவே
பதாப்யாம் காமாக்ஷி ப்ரஸப மபிபூதை: ஸசகிதை: |
ப்ரவாலை ரம்போ ஜைரபி சவனவாஸ வ்ரததசா:
ஸதைவாரப்யந்தே பரிசரித நானாத்விஜ கணை: ||

ப்ராம்மணர்கள் த்விஜர்கள், அதாவது இருபிறப்பாளர்கள். பறவைகளும் அப்படியே. முட்டை, குஞ்சு என்ற இருநிலை. பூஜை செய்வதற்கு தாமரை முதலிடம் வஹிக்கிறது. தளிர்கள் பறவைகளுக்கு மிகமுக்யம். வனவாசத்தில் முனிவர்களுக்குத் தளிர்களே உணவர்கிறது துளிர்களும், தாமரைகளும் தேவி யின் பாதங்களுக்கு அழகிலும் காந்தியிலும் ஒப்பாகாது. அவைகள் ஜலத்திலே இருப்பதைப் பார்த்தால், பாதகாந்தி யைப் பெற வேண்டி வனவாசவ்ரதம் அனுஷ்டிப்பது போல் உள்ளது. (வஞ்-ஜலம் வனம்-காடு). (29)

चिराद्दृश्या हंसैः कथमपि सदा हंससुलभं
निरस्यन्ती जाड्यं नियतजडमध्यैकशरणम् ।
अदोषव्यासङ्गा सततमपि दोषाप्तिमलिनम्
पयोजं कामाक्ष्याः परिहसति पादाब्जयुगली ॥

சிராத் த்ருச்யா ஹம்ஸை: கதமபி ஸதா ஹம்ஸ ஸுலபம்
நிரஸ்யந்தீ ஜாட்யம் நியதஜடமத்யைக சரணம் |
அதோஷ வ்யாஸங்கா ஸததமபி தோஷாப்தி மலினம்
பயோஜம் காமாக்ஷ்யா: பரிஹஸதி பாதாப்ஜயுகலீ ||

ஸௌந்தர்யலஹிரி 38வது பாடல் 'ஸமுன் மீலத் ஸம்வித் கமல மகரந்தைக ரஸிகம்' நன்றாய் மலர்ந்த ஞானத் தாமரை யின் மகரந்தம் ஒன்றையே விரும்பியனுபவிப்பவர்கள், அவர்கள் மனதாகிய மானஸரஸில் நீந்தும் அன்னங்களாக தேவ, தேவியரை 'ஹம' என்று சிவனையும் 'ஸ' என்று சக்தியையும் உபாஸிக்கும் மஹான்கள் ஹம்ஸர்கள், பரமஹம்ஸர்கள் என்று சிறப்புப்பெயர் பெறுகிறார்கள். ஸ்ரீ வித்யையின் உயிர்நாடி. 'ஹம்ஸ ஹம்ஸாய வித்மஹே, பரம்ஹம் ஸாயதீமஹி; தன்னோஹமஸ ப்ரசோதயாத்' என்ற ஹம்ஸ காயத்ரியே யாகும். ஹம்ஸங்கள் ஜலத்திலேயே வசித்தாலும் அதன் உடம்பில் தண்ணீர் ஒட்டுவதில்லை. அதுபோல் ஹம்ஸர்களும் உலகின் மத்தியில் இருந்தாலும், தோஷம் ஸ்பர்சம் எதுவும் அவர்களைத் தொடுவதில்லை. ஜலத்தின் மத்தியிலேயே வசிக்கும் ஹம்ஸங்கள். மாலைப்பொழுதில் கூம்பும் தாமரை மலர்களைப் பரிஹஸிக்கிறது. தாமரை ஹம்ஸங்களுக்கு எப்போதும் ஸுலபம் பாதத் தாமரையோ பரமஹமஸர்களும் பெற அரியவை; 'ஜடம்' என்னும் ஜலத்தி லேயே தாமரை இருக்கிறது. பாதகமலங்களோ அண்டிய வரின் ஜாட்யத்தைப் (அஞ்ஞானத்தை) போக்குகிறது 'தோஷம்' என்ற மாலை நேரத்தோடு கூடி தாமரை வாடி விடும். பாத தாமரைக்கோ 'தோஷத்தின்' குற்றங்களின் சம்பந்தமே கிடையாது. (30)

सुराणां आनन्दप्रबलनतया मण्डनतया
नखेन्दुज्योत्स्नाभिः विसृमरतमःखण्डनतया ।
पयोजश्रीद्वेषव्रतरततया त्वच्चरणयोः
विलासः कामाक्षि प्रकटयति नैशाकरदशाम् ॥

ஸுராணாமானந்த ப்ரபலநதயாமண்டனதயா
நகேந்து ஜ்யோத்ஸ்னாபி: விஸ்ருமரதம: கண்டனதயா |
பயோஜ ஸ்ரீத்வேஷ வ்ரதரததயாத் வச்சரணயோ:
விலாஸ: காமாக்ஷி ப்ரகடயதி நைசாகர தசாம் ||

தேவி காமாக்ஷியின் இரண்டு பாதங்களின் ஒளியானது தேவர்களுக்கு அமிர்தம் அடைந்ததைப் போன்ற ஆனந்தத்தை அளிக்கிறது. தேவர்கள் அம்பிகையின் பாதாரவிந்ததத்தில் வணங்கும்போதெல்லாம் தேவியின் கால் நக ஒளி அவர்கள் முடிமேல்பட்டு, இருளை, அதாவது அக்ஞானத்தை அடியோடு அழிந்துவிடுகிறது. தாமரையான பாதங்கள் சந்திரனுடன் மிகவும் சிநேகம் கொண்டு சந்திரனின் ஒளியையே பெற்றிருக்கிறது. இது மிகவும் ஆச்சர்யம்! சந்திரன் தேவலோகத்து ஆவரணம்போல் அம்ருத நிதி, எனவே தேவர்களுக்கு ஆனந்தமளிக்கிறது. அம்பாளின் பாதங்கள் வணங்கும் தேவர்களின் சிரோ பூஷணமாகவும் மனோரத வெற்றியாகவும் உள்ளது. சந்திரன் புற இருளைப் போக்கும். தேவியின் பாதநக ஒளி நலவுபோல் நம் அக இருளை நீக்கும். (31)

सितिम्ना कान्तीनां नखरजनुषां पादनलिनः
च्छवीनां शोणिम्ना तव जननि कामाक्षि नमने ।
लभन्ते मन्दारग्रथितनवबन्धूककुसुम-
स्रजां सामीचीन्यं सुरपुरन्ध्रीकचभराः ॥

ஸிதிம்னா காந்தீனாம் நகர ஜனுஷாம் பாதநலின
ச்சவீனாம் சோணிம்னா தவ ஜனனி காமாக்ஷி நமனே |
லபந்தே மந்தார க்ரதித நவபந்தூக குஸும
ஸ்ரஜாம் ஸாமீசீன்யம் ஸுரபுர புரந்த்ரீக சபரா: ||

தேவ லோகத்து ஸ்திரீகள் தேவியின் பாதாரவிந்தங்களில் வணங்கும் போது அவர்களின் கூந்தல்களின் மேல் தேவியின் கால் நகங்களின் வெண்மையான ஒளி விழுவதாலும். அதே சமயம் திருவடித் தாமரைகளின் செந்நிறக்காந்திகளும் அதன் மேல் வீச, அது எப்படிக் காணப்படுகிறது. என்றால் புதிய மந்தார மலர்களை சேர்த்துக் கோத்த செம்பரத் தம்பூ மாலை களை தேவியின பாதங்களில் சூட்டினாற்போல் காணப் படுகிறது. வெண்மையும், சிவப்பும் சிவ, சக்தியின் சூசகம். (32)

स्फुरन्मध्ये शुद्धे नखकिरणदुग्धाब्धिपयसां
वहन्नब्जं चक्रं दरमपि च लेखात्मकतया ।
श्रितो मात्स्यं रूपं श्रियमपि दधानो निरुपमां
त्रिधामा कामाक्ष्याः पदनलिननामा विजयते ॥

ஸ்புரன் மத்யே சுத்தே நககிரண துக்தாப்தி பயஸாம்
வஹன் னப்ஜம் சக்ரம் தரமபி சலேகாத் மகதயா |
ச்ரிதோ மாத்ஸ்யம் ரூபம் ச்ரியமபிததானோ நிருபமாம்
திரிதாமா காமாக்ஷ்யா: பதநலினநாமா விஜயதே ||

தேவி காமாக்ஷியின் திருவடித் தாமரை என்று பெயர் கொண்ட மஹா விஷ்ணு மூன்று இருப்பிடங்களை உடைய வர். சங்கு, சக்கரம், தாமரை இவை களைக் கைகளில் தரித்தி ருக்கிறார். தேவியின் பாதங்களில் சங்கரேகை, சக்கர ரேகை, பத்மரேகை மத்ஸ்ய ரேகை இவைகள் ஒப்பற்ற அழகு, காந்தியுடன் நக காந்தியில் நடுவே ப்ரகாஸிப்பதால் வானம், வைகுண்டம், பூமிமூன்று இடங் களிலும் விளங்கும் மஹா விஷ்ணுவின் மூன்று மூர்த்தங்களும் தேவியின்

பாதங்களில் ஒருங்கே அமைந்ததைப் போல் இருக்கிறது. தாமரை லக்ஷ்மி ஸ்திரவாஸம் செய்யுமிடம். வைகுண்டத்தில் மஹாவிஷ்ணு லக்ஷ்மி என்னும் ஸ்ரீதேவியை தரித்துக் கொண்டு விளங்கு கிறார். பூமியிலே மச்சிய ரேகையை மேற்கொண்டும், வானத்தில் திருப்பாற்கடலில் பரிசுத்தமான வெண்மை ஒளியாகவும் ஸ்ரீமஹா விஷ்ணுவானவர். 'த்ரிதாமா' என்ற மூன்று இருப் பிடங்களையும் தேவியின் பாதங்களிலேயே பெற்று விளங்குகிறார். (33)

नख श्रीसन्नद्धस्तबकनिचितः स्वैश्च किरणैः
पिशङ्गैः कामाक्षि प्रकटितलसत्पल्लवरुचिः ।
सतां गम्यः शङ्के सकलफलदाता सुरतरुः
त्वदीयः पादोऽयं तुहिनगिरिराजन्यतनये ॥

நகஸ்ரீ ஸந்நத்த ஸ்தபக நிசித: ஸ்வைஸ் சகிரணை:
பிசங்கை: காமாக்ஷி ப்ரகடித லஸத் பல்லவருசி: |
ஸதாம் கம்ய: சங்கே ஸகலப லதாதா ஸுரதரு:
த்வதீய: பாதோயம் துஹினகிரி ராஜன்ய தனயே ||

தேவி பர்வத ராஜனின் திருக்குமாரியாவாள். தேவியின் திருப்பாதங்கள், நகங்களின் காந்தியாலேயே தொடுக்கப்பட்ட பூங்கொத்துக்கள், அந்த நகஒளியில் பாதத்தின் செம்மை பரவவே அது வெளிறிய சிவப்பு வர்ணத்தை அடைந்து, அந்தப் பாதங்களிலிருந்து பரவும் கிரணங்கள் தளிர்களின் மென்மை, காந்தியைத் தெரிவிப்பதே போல் தன்னை வழிபடுபவர்களுக்கு எல்லா பலன்களையும், நலன்களையும் அள்ளிக் கொடுக்கும் கல்பக விருக்ஷம்போல் விளங்குகிறது. தேவலோகத்து கல்பக விருக்ஷம், காமதேனு போன்றவைகள் நாம் விரும்பியதை அளிக்கும். கல்பக விருக்ஷத்தின் புஷ்பம் போன்ற வெண்மையான நகம்; பாதம் துளிர்போல மென்மை, சிவப்பு; அண்டினவர்களுக்கு சகல செல்வங்களையும் வாரிக்கொடுக்கும் கல்பக விருக்ஷமே ஆகும். (34)

वषट्कुर्वन् माञ्जीरजकलकलैः कर्मलहरी-
हवींषि प्रोद्दण्डं ज्वलति परमज्ञानदहने ।
महीयान् कामाक्षि स्फुटमहसि जोहोति सुधियां
मनोवेद्यां मातस्तव चरणयज्वा गिरिसुते ॥

வஷட்குர்வன் மாஞ்ஜீரஜ கலகலை: கர்மலஹரீ
ஹவீம்ஷி ப்ரோத்தண்டம் ஜ்வலதி பரமஜ்ஞான தஹனே |

மஹீயான் காமாக்ஷி ஸ்புட மஹஸி ஜோஹோதி ஸுதியாம்
மனோவேத்யாம் மாதஸ்தவ சரணயஜ்வா கிரிஸுதே ||

தேவி காமாக்ஷியின் திருவடிகளை, யாக கர்த்தாவாக இப்பாடலில் காண்கிறோம். ஞானிகளின் மனம் என்னும் யாகசாலையில் மிக உக்ரமாக கொழுந்து விட்டெரிந்து சுடர் விடும் பாமஞானம் என்ற ஹோம அக்னியில், கர்மாக்களாகிய நெய்யே ஆஹூதியாக தேவியின் பாதச்சிலப்பின் 'கலகல' சப்தமே வஷட்காரங்களாக ஹோமம் செய்கிறார்கள். 'ஞானாக்னி; ஸர்வ கர்மாணி பஸ்மத்குருதே அர்ஜுன' என்ற கீதா வாக்யத்தை நினைவு கூர்வோம்.(35)

महामन्त्रं किञ्चिन्मणिकटकनादैर्मृदु जपन्-
क्षिपन्दिक्षु स्वच्छं रखरुचिमयं भास्मनरजः ।
नतानां कामाक्षि प्रकृतिपटुरुच्चाट्य ममता-
पिशाचीं पादोऽयं प्रकटयति ते मान्त्रिकदशाम् ॥

மஹா மந்த்ரம் கிஞ்சின் மணிகடக நாதைர் ம்ருதுஜபன்
க்ஷிபந்தி க்ஷுஸ்வச்சம் நகருசிமயம் பாஸ்மனரஜ: |
நதானாம் காமாக்ஷி ப்ரக்ருதிபடுருச்சாட்ய மமதா
பிசாசீம் பாதோயம் ப்ரகடயதி தே மாந்த்ரிக தசாம் ||

காமாக்ஷி தேவியின் திருவடிகள் உள்ளபடியே மிகத் திறமை வாய்ந்தது. தேவியின் பாதங்களில் மணிகளை உள்ளே வைத்திருக்கும் தண்டைகள் அலங்கரிக்கிறது. தண்டை மணிகளின் இனிய சப்தங்கள் ஏதோ மஹா மந்திரத்தை ஜெபிப்பதுபோல இருக்கிறது. நகங்களின் வெண்ணிற காந்தியோ விபூதியை சுற்றிலும் தூவிக்கொண்டு, தேவியின் பாதங்களில் வணங்குவோர்களின் மமதை என்ற பிசாசை விரட்டி அடிக்கும் மந்த்ரவாதியாகவும் ஸ்ரீ காமாக்ஷியின் மலர்ப்பாதங்கள் விளங்குகிறது. தேவியின் பாதங்களில் வணங்குபவர்களிடமிருந்து பிசாசுபோல் விடாமல் பிடித்திருக்கும் அஹங்கார, மமகாரம் விலகிப்போகிறது. பாதங்களே மந்த்ரவாதி; நூபுர சப்தமே மந்த்ரங்கள்; நகங்களின் வெண்ணி றக் காந்தியே அவன் தூவும் வீபூதி. (36)

उदीते बोधेन्दौ तमसि नितरां जग्मुषि दशां
दरिद्रां कामाक्षि प्रकटमनुरागं विदधती ।
सितेनाच्छाद्याङ्गं नखरुचिपटेनांघ्रियुगली-
पुरन्ध्री ते मातः स्वयमभिसरत्येव हृदयम् ॥

உதீதே போதேந்தௌ தமஸி நிதராம் ஜக்முஷி தசாம்
தரித்ராம் காமாக்ஷி ப்ரகட மனுராகம் விதததீ |
ஸிதேனாச்சாத்யாங்கம் நகருசி படேனாங்க்ரி யுகலீ
புரந்த்ரீ தேமாத: ஸ்வயமபி ஸரத்யேவ ஹ்ருதயம் ||

தேவியின் திருவடிகளை குலஸ்திரி, காந்தை என்று வர்ணித்து, நகங்களின் காந்தியை தானே நாடிவரும் ஸ்திரீயாகக் கூறுகிறார். இதயத்தில் தேவியின் திருவடிகளை த்யானித்தால் அப்பொழுதே ஞானமென்னும் சந்த்ரோதயம் ஏற்பட்டு மனத்தின் கண் உள்ள மாசுகள் முற்றிலும் ஒழிக்கப்படுகிறது. அந்த பக்தனுக்கு மேலும் ஓர் பரிசு கிடைக்கிறது அது என்ன வென்றால் தேவியின் நக காந்திகள் அருள் வெள்ளமாகப் பெருகி வலுவிலே வந்து அவனை அணைத்துக் கொள்கிறது. மிக அருமையான பாடல் இது. சந்த்ரோதயத்தில் தன்னை பிறர் அறியாவண்மை வஸ்த்ரத்தால் மறைத்து, பிராண நாயகனைத்தேடிச் செல்லும் ஸ்திரீ அபிஸாரிகை ஆவாள். ஹ்ருதயம் என்னும் காதலன், ஞானோ தயமே சந்த்ரோதயம், அஞ்ஞான நாசமே இருள் நீக்கம், கால்ச் சிவப்பே காதல், நகவெளுப்பே வஸ்த்ரம். (37)

दिनारम्भः संपन्नलिन विपिनानां अभिनवो
विकासो वासन्तः सुकवि पिकलोकस्य नियतः ।
प्रदोषः कामाक्षि प्रकटपरमज्ञान शशिनः
चकास्ति त्वत्पादस्मरणमहिमा शैलतनये ॥

தினாரம்ப: ஸம்பந் நலின விபினானா மபினவோ
விகாஸோ வாஸந்த: ஸுகவி பிகலோகஸ்ய நியத: |
ப்ரதோஷ காமாக்ஷி ப்ரகட பரம ஜ்ஞான சசின:
சகாஸ்தி த்வத் பாத ஸ்மரண மஹிமா சைல தனயே ||

தேவி காமாக்ஷி மலையரசனின் பெண். தேவியின் ஸ்மர ணம் தாமரைக் காடுகள் மலர்வதற்குக் காரணமான உதய சூரியனாகவும், (சூரியனைக் கண்டவுடன் தாமரை மலரும்) இனிமையான குரலில் வஸந்தகாலத்தில் பாடும் குயில்கள் போல் கவிவாணர்கள் தேவியின் ஸ்மரண விசேஷத்தால் கவிகளை இயற்றிப் பாடுகிறார்கள். பௌர்ணமியன்று வானில் பூர்ண சந்திரன் தோன்றுகிறது. அமுதத்தைப் பொழியும் நிலவில் தேவி பரம ஞானமாக விளங்குகிறாள். 'சந்த்ர மண்டல மத்யகா' என்று லலிதா ஸஹஸ்ரநாமா கூறு கிறது. தேவிநாம் மனதால் நினைத்த மாத்திரத்தில் மனதில் எழுந்தருளுவதால் திருவடியின் மஹிமையை இப்படிக் கூறுகிறோம்.

धृतच्छायं नित्यं सरसिरुहमैत्रीपरिचितं
निधानं दीप्तीनां निखिलजगतां बोधजनकम् ।
मुमुक्षूणां मार्गप्रथनपटु कामाक्षि पदवीं
पदं ते पातङ्गीं परिकलयते पर्वतसुते ॥

த்ருச்சாயம் நித்யம் ஸரஸிருஹ மைத்ரீ பரிசிதம்
நிதானம் தீப்தீனாம் நிகில ஜகதாம் போத ஜனகம் |
முமுக்ஷூணாம் மார்க்க ப்ரதநபடு காமாக்ஷி பதவீம்
பதம் தே பாதங்கீம் பரிகலயதே பர்வதஸுதே ||

மலைமகளான காமாக்ஷியின் பாதங்களை தாமரை மல ருக்கு ஒப்பிட்டோம். இந்தப் பாடலில் தாமரையை மலர் விக்கும் சூரியனோடு உவமிக்கிறார். தேவியின் பாதங்கள் சாயையோடு விளங்குவதால் அதாவது மிக அழகாக உள்ளதால் சூரியபத்னியான சாயா தேவியை நிகர்த்தும், சூரியனுக்கு சினேகமான தாமரையாகவும், எல்லா ஒளிகளுக்கும் மூலமான சூரியனின் உறைவிடமாகவும், விளங்குகிறது. தேவியின் பாதங்கள், ஒளியில் சூரியனாக விளங்குவதால், மனத்தின் கண் உள்ள இருட்டினை விலக்கி மோக்ஷம் விரும்புவோர்க்கு 'போதம்' என்ற பேரின்பத்தை அடைய சரியான வழியைத் தெளிவாகக் காட்டி மிகத்திறமையுடன் தன்னிடம் உள்ள சூரியத் தன்மையைத் தெரிவிக்கிறது. உபமான, உபமேயத்தை மாற்றி அமைப்பதால் சொல்ல வந்த பொருளில் அழுத்தம், அழகு, பொருள் புதைவு, புதுமை, பொலிவு இவ்வளவும் ஏற்படுகிறது. (39)

शनैस्तीर्त्वा मोहाम्बुधिमथ समारोढुमनसः
क्रमात्कैवल्याख्यां सुकृतिसुलभां सौधवलभीम् ।
लभन्ते निश्रेणीमिव झटिति कामाक्षि चरणम्
पुरश्चर्याभिस्ते पुरमथनसीमन्तिनि जनाः ॥

சனைஸ் தீர்த்வா மோஹாம்புதிமதஸமாரோடு மனஸ:
க்ரமாத் கைவல்யாக்யாம் ஸுக்ருதி ஸுலபாம்ஸௌத
வலபீம் |
லபந்தே நிச்ரேணீமிவ ஜடிதி காமாக்ஷி சரணம்
புரஸ் சர்யாபிஸ் தே புரமதன ஸீமந்தினி ஜனா:||

பரமேஸ்வரன் நம்மீது கருணை கொண்டு நோக்கினால் மும்மலங்களும் அழிந்து விடும். இதையே ஒரு சிரிப்பாலேயே த்ரிபுர தஹனம் செய்து த்ரிபுராரி என்ற பெயரையும் பெற்றான். த்ரிபுர மதனனான பரமேஸ்வரனின் பத்தினி ஸ்ரீகாமாக்ஷிதேவி. அனவரதமும் தேவியை வந்திப்பவர்களை அஞ்ஞான மென்னும் சமுத்திரத் தினின்றும் கடத்துவித்து ஸாலோக, ஸாமீப்ய, ஸாரூப்ய: ஸாயுஜ்ய, கைவல்யம் என்னும் நிலைகளை அடைந்து புண்ய சாலிகள் தேவியின் மோக்ஷம் மென்னும் திருமானிகையின் நுழை வாயிலை அடைந்து அதன் படிக்கட்டுக்களை புரச்சரணம். பூஜை, புனஸ்காரங்கள் துணை கொண்டு கடந்து தேவியின் மோக்ஷ மாளிகையை அடைகிறார்கள். 'த்ரிபுரம்' இதைக் கடைந்து பரமசிவன் ·பராசக்தியை அடைந்ததாலும் அவருக்குப் புரமதனன் என்ற பெயர் பொருந்தும். (40)

प्रचण्डार्तिक्षोभप्रमथनकृते प्रातिभसरित्-
प्रवाहप्रोद्दण्डीकरण जलदाय प्रणमताम् ।
प्रदीपाय प्रौढे भवतमसि कामाक्षि चरण-
प्रसादौन्मुख्याय स्पृहयति जनोऽयं जननि ते ॥

ப்ரசண்டார்த்தி க்ஷோப ப்ரமதனக்ருதே ப்ராதி பஸரித்
ப்ரவாஹ ப்ரோத்தண்டீ கரண ஜலதாய ப்ரணமதாம் |
ப்ரதீபாய ப்ரௌடே பவதமஸி காமாக்ஷி சரண
ப்ரஸாதௌன்முக்யாய ஸ்ப்ருஹயதி ஜனோயம் ஜனனிதே||

'அம்பிகையை வணங்கினால் அதிக வரம் பெறலாம்' என்பர் சான்றோரும். எப்படிப்பட்ட மனக்கலக்கம், துயர் எல்லாம் தீர்க்க வல்லவள் தேவி ஸ்ரீகாமாக்ஷி அன்னையே ஆவாள். தேவியை வணங்குபவர்களின் அருள் தாகத்தைத் தணிக்கும் மேகமாகவும், ஸம்ஸாரமாகிய அடர்ந்த இருளில் ஒளிவீசும் தீபமாகவும் தேவி விளங்குகிறாள். லலிதா ஸஹஸ்ர நாமாவில் 742 முதல் 749 நாமாக்களில் தேவியின் கருணை பேசப்படுகிறது. (41)

मरुद्भिः संसेव्या सततमपि चाञ्चल्यरहिता
सदाऽऽरुण्यं यान्ती परिणतिदरिद्राणसुषमा ।
गुणोत्कर्षान्मञ्जीरजकलकलैस्तर्जनपटुः
प्रवालं कामाक्ष्याः परिहसति पादाब्जयुगली ॥

மருத்பி ஸம்ஸேவ்யா ஸததமபி சாஞ்சல்ய ரஹிதா
ஸதாருண்யம் யாந்தீ பரிணதி தரித்ராண ஸுஷமா |

குணோத்கர்ஷாத் மஞ்ஜீரஜ கலகலை: தர்ஜனபடு:
ப்ரவலாம் காமாக்ஷ்யா: பரிஹஸதி பாதாப்ஜயுகலீ ||

தேவி காமாக்ஷியின் திருவடிகள் இரண்டும் தேவர்களால் எப்பொழுதும் வணங்கப்பெற்று அசைவின்றி சாஞ்சல்யமாக செந்நிறத்துடன் அழகுடன் விளங்குகிறது. மருத்து என்பது இருபொருள் சொல்லாக ஆளப்படுகிறது. மருத்து-தேவர்கள், காற்று. தேவி தேவர்களால் அடையப்பெற்றவள். தேவியின் பாதங்கள் தளிரைப்போல் அசைவதும், தன் பாதங்களின் சிலம்பின் கல, கல, ஓசையால் பயமுறுத்துவதுபோல், ஏளனம் செய்வதுபோல் தோன்றுகிறது. அம்பிகையின் பாதங்களில் அழகியதளிர்களின் குணங்களும் அவற்றில் இல்லாத அதிக குணங்களும் இருக்கின்றபடியால் அந்த குணங்களையும் விஞ்சி பரிஹஸிப்பதுபோல் உள்ளது. என்கிறார். காற்றடித்தால் தளிர் அசையும். தேவியின் பாதங்களோ வாயு பகவானால் சேவிக்கப் படுவதோடு கூட ஸ்திரமாய் சஞ்சல மற்றும் உள்ளன, தளிர் காந்தி சில நாட்களே இருக்கும் பாதங்களின் மனோஹாரமான சிவப்பு எப்பொழுதும் மாறுதல் இல்லாத காந்தியோடு கூடியவை. (42)

जगद्रक्षादक्षा नलिनरुचिशिक्षापटुतरा
सुरैर्नम्या रम्या सततमभिगम्या बुधजनैः ।
द्वयी लीलालोला श्रुतिषु सुरपालादिमुकुटी-
तटीसीमाधामा तव जयति कामाक्षि पदयोः ॥

ஜகத் ரக்ஷா தக்ஷா ஜல ஜருசி சிக்ஷாபடுதரா
ஸுரைர் நம்யா ரம்யா ஸதத மபிகம்யா புதஜனை: |
த்வயீலீலா லோலா ச்ருதிஷுஸுரபாலாதிமுகுடீ
தடீஸீமா தாமா தவ ஜயதி காமாக்ஷி பதயோ: ||

தேவி காமாக்ஷியின் பாதங்கள் ஜகத்தை ரக்ஷிக்கும் திறமை பெற்றது. தாமரையை நிறம், ஒளி, மென்மை, வாஸனை எல்லாகுண விசேஷங்களிலும் ஜயித்தது தேவியின் திரு வடித்தாமரைகள் ஞானிகள் என்னும் உயர்ந்த மனமுடையோர்கள் மனத்தின் கண் எப்பொழுதும் வீற்றிருக்கும், மண நாறு சீரடிகள் என்று புகழப்படுவது தேவியின் தாமரைப்பாதங்களே ஆகும் 'ச்ருதி ஸீமந்த ஸிந்தூரிக்ருத பாதாப்ஜ தூலிகா' 'ஸகலாகம ஸந்தோஹ சுக்தி ஸம்புட மௌக்திகா, 'ஸர்வ உபநிஷதுத்குஷ்டா' என்றெல்லாம் லலிதா ஸஹஸ்ர நாமா தேவியை வேத வடிவாகவே காண்பிக்கிறது. வேதங்கள் மறைகள் என்று கூறப்படுவது, தேவ, தேவர் இரண்டு பேருமே மறைந்தே காணப்படும் இடம் மறையேயாகும். 'அறிந்தேன் எவரும் அறியா மறையை அறிந்து

கொண்டடேன்' அபிராமி அந்தாதி (3) என்றும் வணங்குவது மலர்த்தாள் எழுதா மறையின் அரும் பொருளே (10) வானந்தமான வடிவுடை யாள் மறை நான் கினுக்கும் தானந்தமான சரணா விந்தம் (11) அறைகின்ற நான் மறை நின் அடியோ முடியோ (20) இப்படியாக தேவி வேத வடிவானவள் என்று பல இடங்களில் பேசப்படுகிறது. அப்படி வேதங்களில் உலாவி வரும் தேவி யின் திருவடிகள் தேவராஜனான இந்திரன் முதலானவர்களின் கிரீடங்களை உறைவிடமாகக் கொண்டிருக்கிறது. (43)

गिरां दूरौ चोरौ जडिमतिमिराणां कृतजगत्-
परित्राणौ शोणौ मुनिहृदयलीलैकनिपुणौ ।
नखैः स्मेरौ सारौ निगमवचसां खण्डितभव-
ग्रहोन्मादौ पादौ मम मनसि कामाक्षि कलये ॥

கிராம்தூரெள சோரெள ஜடிமதிமிராணாம் க்ருதஜகத்
பவித்ராணௌனசோணௌமுனிஹ்ருதயலீலைகநிபுணௌ|
நகை: ஸ்மேரெள ஸாரெள நிகம வசஸாம் கண்டித பவ
க்ரஹோன் மாதெள பாதெள தவ ஜனனி காமாக்ஷி கலயே||

தேவியின் பாதங்கள், அவற்றின் பெருமையை நம்மால் வர்ணித்து முடியாதவை. 'மனோவாசமாகோசரா' மனத்தாலும், வாக்காலும் வர்ணிக்க இயலாதவை. நம் மனத்தில் அஞ்ஞான மென்னும் இருட்டைப்போக்கும் சூரியன் போன்ற பாதங்கள். 'நிஜாக்ஞாரூப நிகமா' வேதங்களின் ஆக்ஞா ரூபமாக இருப்பது தேவிதான் ஸம்ஸாரத்தை ஒரு பிசாசுக்கு ஒப்பிடுகிறார். அந்த சம்சாரக் கஷ்டத்தை தேவியின் திருவடி தியானத் தினாலே போக்குக் கொள்ள முடியும். (44)

अविश्रान्तं पङ्कं यदपि कलयन् यावकमयं
निरस्यन्कामाक्षि प्रणमनजुषां पङ्कमखिलम् ।
तुलाकोटिद्वन्द्वं दधदपि च गच्छन्नतुलतां
गिरां मार्गं पादो गिरिवरसुते लङ्घयति ते ॥

அவிச்ராந்தம் பங்கம் யதபி கலயன் யாவகமயம்
நிரஸ்சன் காமாக்ஷி ப்ரணமன ஜுஷாம் பங்க மகிலம் |

துலாகோடி த்வந்தம் தததபிச கச்சன் அதுலதாம்
கிராம் மார்க்கம் பாதோ கிரிவர ஸுதே லங்கயதிதே ||

பர்வத ராஜன் மஹா பாக்யவான், பர்வதங்களில் மிக சிரேஷ்டமான மலை ராஜன் பர்வதராஜன் ஆவான். அந்தப் பர்வதகுமாரி பார்வதி தேவியின் திருவடிகளானது எப் பொழுதுமே செம்பஞ்சுக் குழம்பாலான 'லாக்ஷாரஸம்' என்ற பூச்சைக் கால்களில் பூசிக்கொண்டிருக்கிறது. தேவியின் பாதார விந்தங்கள் சேறு போன்ற செம்பஞ்சுக்குழம்பை பூசிக் கொண்டிருந்தாலும், தன்னை வழி படுவோர்களைச் சம்சாரம் என்ற சேற்றிலிருந்து காப்பாற்று கிறாள். சேற்றில்தான் செந் தாமாரை பூக்கிறது. சேற்றில் முழுகியவர்களை சேற்றிலேயே உதித்த தாமரைத் தாள் கொண்ட அன்னை காப்பாற்றுகிறாள் என்பது விசேஷநயம் பொருந்தியது. மேலும் பங்கம் என்னும் பாபத்தைப் போக்குகிறது. தேவியின் பாதங்களில் 'கல கல' என்று ஒலிக்கும் சிலம்புகள் இசைபாடுகின்றன. 'துலாகோடித் வந்தம்' என்னும் இரண்டு சிலம்புகள் என்று குறிப்பிடும் அதையே 'துலா' தராசுத் தட்டுக்கள் என்றும் கொள்ள லாம். தேவியின் பாதங்களாகிய தராசில் வந்து வணங்குபவர்களின் குணா திசயங்களை தராசில் நிறுத்திப் பார்க்காமல் தேவி கருணையை வாரி வழங்குகிறாள். (45)

प्रवालं सव्रीडं विपिनविवरे वेपयति या
स्फुरल्लीलं बालातपमधिकबालं दधति या ।
रुचिं सांध्यां वन्ध्यां विरचयति या वर्धयतु सा
शिवं मे कामाक्ष्याः पदनलिनपाटल्यलहरी ॥

ப்ரவாலம் ஸவ்ரீடம் விபினவிவரே வேபயதியா
ஸ்புரல் லீலம் பாலாதப மதிகபாலம் வததியா|
ருசிம் ஸாந்த்யாம் வந்த்யாம் விரசயதி யா வர்த்தயதுஸா
சிவம்மே காமாக்ஷ்யா:பதநலின பாடல்யலஹரீ||

காமாக்ஷி தேவியின் திருவடித் தாமரையின் செந்நிற காந்தியானது காட்டில் செடி, கொடிகளில் தோன்றும் இளந்தளிர்களை வெட்க முறச் செய்து, அத்தளிர்கள் ஏதோ ஓர் ஓரமாக நடுங்கிக்கொண்டு நிற்கின்றது. தேவியின் பாத காந்தியானது உதயசூரியனை மிகச் சிறியதாகச் செய்து விடுவதால் சூரியனே (சிசு) ஒரு குழந்தை போல் ஆகி விட்டான். காலைச் சூரியனின் கதி இப்படி என்றால் மாலை அந்தி வானத்து செக்கச் சிவந்த சூரிய ஒளியோ ஒன்றுக்கும் உதவாத குழந்தை இல்லாத வாழ்க்கை போல் செய்து விடுகிறது. பரவாயில்லை! காலை சூரியனையாவது ஒரு குழந்தைக்கு ஒப்பிட்டுக்

கூறியவர் மாலைச்சூரியனை 'மலடி' (குழந்தை இல்லாதவள்) என்று கூறி விட்டார். இது போன்ற உவமைகளைக் காண்பது மிக ஆபூர்வம். இவ்வளவு வைபவம் பொருந்திய தேவியின் திருவடித் தாமரைகளி லிருந்து அலை, அலையாகப் பெருகும் அந்த செந்நிற வொளியானது நமக்கு சகல சௌபாக்யத்தையும் அளிக்கட்டும். (46)

किरञ् ज्योत्स्नारीतिं नखमुख रुचा हंसमनसां
वितन्वानः प्रीतिं विकचदरुणाम्भोरुहरुचिः ।
प्रकाशः श्रीपादस्तव जननि कामाक्षि तनुते
शरत्कालप्रौढिं शशिशकलचूडप्रियतमे ॥

கிரஞ் ஜ்யோத்ஸ்னா ரீதிம் நகமுகருசா ஹம்ஸ மனஸாம்
விதன்வான: ப்ரீதிம் விகச தருணாம் போருஹருசி: |
ப்ரகாச: ஸ்ரீ பாதஸ்தவ ஜனனி காமாக்ஷி தனுதே
சரத்கால ப்ரௌடிம் சசிசகல சூட ப்ரியதமே ||

சந்த்ர கலையைத் தலையில் சூடிய பரமசிவனின் காதலி யான ஸ்ரீ காமாக்ஷி தேவியின் திருவடியின் நகங்களின் முன் பாகங்கள் நிலவுபோல் ஒளிவீசுகிறது. ஹம்ஸர்கள் என்று கூறப்படும் ஸன்னியாசிகளின் மனதுகளிலே நிலவைப் பொழிந்து கொண்டும், அப்பொழுதே மலர்ந்த தாமரையின் காந்தியைப் பரப்பிக் கொண்ட ஒளியும், அழகும் பெற்று சரத்கால நிலவின் தண்ணளியுடன் பிரகாசிக்கிறது. ஐப்பசி யும், கார்த்திகையும் சரத்காலத்து மாதங்கள் சரத்கால நிலாவா னது, சிவந்து மலர்ந்த தாமரை தெளிவான நீரில் விளையா டும் ஹம்ஸங்கள் இவற்றால் மனோஹ்ரமாயிருக்கும் இதே போல் தேவியின் பாதங்கள் ஹம்ஸர்களுக்கு மிகுந்த ஆனந்தம் அளிக்கிறது. (47)

नखाङ्कूरस्मेरद्युतिविमल गङ्गाम्भसि सुखं
कृतस्नानं ज्ञानामृतं अमलं आस्वाद्य नियतम् ।
उदञ्चन्माञ्जीरस्फुरणमणिदीपे मम मनो
मनोज्ञे कामाक्ष्याश्चरणमणिहर्म्ये विहरताम् ॥

நகாங்கூர ஸ்மேர த்யுதி விததி கங்காபஸி ஸுகம்
க்ருத ஸ்நானம் ஜ்ஞானாம்ருத மமல மாஸ்வாத்ய நியதம்|
உதஞ்சன் மஞ்ஜீர ஸ்புரணமணிதீபே மம மனோ
மனோஜ்ஞே காமாக்ஷ்யா: சரணமணிஹர்ம்யே விஹரதாம்||

தேவியின் சரண கமலங்களின் காந்தி வீசும் நகங்கள் என்ற முளைகளின் புன்முறுவல் என்ற ஒளிவீசும் தூய கங்கை ஜலத்தில் சுகமாக நம் மனங்கள் ஸ்நானம் செய்யட் டும். ஞானம் என்ற அமுதத்தைப் பருகட்டும் கங்கா தீர்த்த ஸ்நானம், அம்ருதரஸ பானம் இத்துடன் கங்கைக் தடத்தில் ஓர் மணி விளக்கைப் போல் தேவியின் பாதச் சிலம்புகளின் காந்தி ஒளி ஊட்டி மனதிற்கு இன்பம் அளிக்கிறது. தேவியின் பாதமென்னும் மோக்ஷ சாம்ராஜ்யத்தின் சிறந்த மாளிகையின் மேன்மாடத்தில் நாம் என்றென்றும் ஏறியிருந்து களிப்புற்றிருப் போமாக! பாதங்களே திருமாளிகை; ரத்ன ஆபரணங்களே தூண்டாமணி விளக்கு; நக காந்திகளே கங்கா ப்ரவாஹம்; அதை உபாஸிப்பதனால் ஏற்படும் ஞானமே அமுதம். (48)

भवाम्भोधौ नौकां जडिमविपिने पावकशिखां
प्रणम्रेन्द्रादी नामधिमुकुटं उत्तंसकलिकाम् ।
जगत्तापज्योत्स्नामकृतकवचः पञ्चरपुटे
शुकस्त्रीं कामाक्ष्याः मनसि कलये पादयुगलीम् ॥

பவாம் போதெள நெளகாம் ஜடிம விபினே பாவகசிகாம்
அமர்த்யேந்த்ரா தீனாமதி முகுடம் உத்தம்ஸ கலிகாம் |
ஜகத் தாபே ஜ்யோத்ஸ்னாம் அக்ருதகவச: பஞ்ஜரபுடே
சுகஸ்த்ரீம் காமாக்ஷ்யா மனஸி கலயே பாத யுகலீம் ||

பிறவி என்னும் பெருங்கடல் அதைக் கடந்து அஞ்ஞானத்தைத் தவிர்த்து இறைவனை அடைய ஆன்மா முயற்சிக்க வேண்டும். 'பிறவிக் கடல் நீந்துவாரர், நீந்தார் இறைவனடி சேராதார்' என்ற திருக்குறளை நினைவுகூர்வோம். சீர்காழி என்னும் திருப்பதி திருஞான சம்பந்தர் ஞானப்பால் பருகிய ஸ்தலம், அங்கு இறைவனின் திருநாமமே 'தோணியப்பர்' 'பவக்கடல் என்னும் கடலைக் கடக்க அருள் மரக்கலம் கொடுக்கும் இறைவன் என்று பெரியோர்கள் பாடுகிறார்கள். தேவி அஞ்ஞானத்தை அழிக்கும் அக்னி ஜ்வாலை, தேவர்களின் முடிகளுக்கு ஆபரண புஷ்பம். தாபமகற்றும் நிலா. வேதமென்னும் கூண்டின் பெண்கிளி. லலிதா த்ரிசதி (215) ஹ்ரீங்கார-பஞ்ஜர சுகி 'ஹ்ரீம்காரம் எனும் கூண்டில் உறையும் பச்சைக்கிளி என்று கூறுகிறது. (49)

परात्मप्राकाश्यप्रतिफलनचुञ्चुः प्रणमतां
मनोज्ञस्त्वत्पादो मणिमुकुरमुद्रां कलयते ।
यदीयां कामाक्षि प्रकृतिमसृणाः शोधकदशां
विधातुं चेष्टन्ते बलरिपुवधूटीकचभराः ॥

பராத்ம: ப்ராகாச்ய ப்ரதிபலன சுஞ்சு: ப்ரணமதாம்
மனோஜ்ஞ: த்வத்பாதோ மணிமுகுர முத்ராம் கலயதே |
யதீயாம் காமாக்ஷி ப்ரக்ருதிமஸ்ருணா: சோதக தசாம்
விதாதும் சேஷ்டந்தே பலரிபுவதூடீ கசபரா: ||

இந்தப்பாடலில் தேவியின் திருவடிகளை நிலைக் கண் ணாடிக்கு ஒப்பிட்டுப் பார்க்கிறோம்.

'அருணாம் கருணாதரங்கிதாக்ஷீம்
த்ருத பாசாங்குச புஷ்பபாண சாபாம்
அணிமாதி பிராவ்ருதாம் மயூகை:
அஹமித்யேவ விபாவயே பவானீயம்

'அஹமித்யேவ' தேவி அஹம் என்ற பதத்தின் லக்ஷ்யார்த்தமாக பரமாத்ம ஸ்வரூபத்தை வெளிப்படுத்தும் கண்ணாடியாக தேவி விளங்குகிறாள். இந்திரன் ஒரு சமயம் 'வலன்' என்ற அசுரனை வதைத்தான். வலன் ஏற்கனவே சிவ பிரானிடம் கேட்டுக்கொண்ட வரத்தின்படி வலனின் ரத்தம் மாணிக் கங்கள், பற்கள் முத்துக்கள், ரோமம் வைடூரியம், எலும்புகள் வைரம், பித்தம் மரகதம், நிணம் கோமேதகம் தசை, பவளம், கண்கள் நீலம், கபம் புஷ்பராகம் இப்படியாக நவரத்தினங்களாயிற்று. இந்திரனுக்கு 'வலாரி' என்ற புகழ் ஏற்பட்டது. இந்திரனின் மனைவி இந்திராணி, தேவியின் பாதங்களில் தலை வைத்து வணங்கும் போது, தேவியின் கண்ணாடி போன்ற பாதங்களை சசிதேவியின் அடர்ந்த கூந்தல் துடைத்து சுத்தம் செய்வதுபோல் தோன்றுகிறது. தேவியின் பாதங்களின் சிலம்பின் கல, கல ஒலி மணி கட்டிய கண்ணாடி என்று சொல்லும்படி அமைகிறது. சசிதேவியின் கூந்தல் தேவியின் பாதங்களில் புரள்கிறது. (50)

अविश्रान्तं तिष्ठन्नकृतक वचःकंदरपुटी-
कुटीरान्तः प्रौढं नखरुचिसटालीं प्रकटयन् ।
प्रचण्डं खण्डत्वं नयतु मम कामाक्षि तरसा
तमोवेतण्डेन्द्रं तव चरणकण्ठीरवपतिः ॥

அவிச்ராந்தம் திஷ்ட்டன் அக்ருத கவச: கந்தரபுடீ
குடீராந்த: ப்ரௌடம் நகருசி ஸடாலீம் ப்ரகடயன் |
ப்ரசண்டம் கண்டத்வம் நயது மம காமாக்ஷி தரஸா
தமோ வேதண்டேந்த்ரம் தவ சரண கண்டீரவ பதி: ||

வேதங்கள் யாராலும் இயற்றப்படாமல் அநாதியான வஸ்து ஆகும் அந்த வேதம் என்ற குகையில் உட்புறத்தில் தனது இருப்பிடத்தை அமைத்துக் கொண்டு, தேவியின் பாதங்கள் என்ற சிங்கம் தன் ஒளி பொருந்திய பிடறி மயிரை உதறுவது, தேவியின் பாத நகங்களின் ஒளி நாலு பக்கத்திலும் பரவுவதுபோல் தோற்றமளிக்கிறது தேவியின் திருவடியை சிங்கத்திற்கு ஒப்பிட்டுக் கூறுகிறார். அந்த சிங்கத்திருவடி, நம்முடைய அஞ்ஞானத்தை தமோ குணத்தை சிங்கம் அந்த யானையை எதிர்ப்பது போல் பிளந்து எறி யட்டும். யானை உருவத்தில் மிகப்பெரியதாக இருந்தாலும், மிருகேந்திர னான சிங்கம் யானையை வீழ்த்திவிடும். ஸ்வப்னத்தில் சிங்கத் தைக் கண்ட யானை இறந்துவிடும். 'சிம்ம சொப்பனம்' என்று கூறுவதுண்டு. யானைக்கு மதம் பிடித்தால் யானைப் பாகன் அங்குசம் என்ற ஆயுதத்தால் அதை அடக்கு வான். தேவியின் கையில் உள்ள அங்குசம் மனிதனின் தமோகுணமான மதத்தை அடக்கவே ஏற்பட்டிருக்கிறது. மனிதனின் தமோ குணத்தை அடக் கும் இந்தப் பாடலில் தேவியின் பாதங்களே சிம்ம வடிவில் அடக்குவதாக வெகு நயமான முறையில் சொல்லியிருக்கிறார். லலிதா த்ரிசதி (216) 'ஹ்ரீங் கார கந்தராஸிம்ஹ்யை' ஹ்ரீம்கார மென்னும் குகையில் வசிக்கும் பெண் சிங்கம். வேதங்கள் 'அபௌருஷேயங்கள்' எனவே 'அக்ருத-வச' என்றார். (51)

पुरस्तात्कामाक्षि प्रचुररसमाखण्डलपुरी-
पुरंध्रीणां लास्यं तव ललितमालोक्य शनकैः ।
नखश्रीभिः स्मेरा बहु वितनुते नू पुररवैः
चमत्कृत्या शङ्के चरणयुगली चाटुरचनाः ॥

புரஸ்தாத் காமாக்ஷி ப்ரசுரரஸ மாகண்டலபுரீ
புரந்த்ரீணாம் லாஸ்யம் தவலலித மாலோக்ய ஸனகை: |
நகஸ்ரீபி: ஸ்மேரா பஹுவிதனுதே நூபுரரவை:
சமத்க்ருத்யா ஸங்கே சரணயுகலீ சாடுரசனா: ||

தேவி காமாக்ஷியின் சரணங்களை ஒரு ஸ்திரீயாகக் காண்கிறோம். தேவி யின் திருமுன் இந்த்ரலோக ஸ்திரிகள், அவர் களின் சிலர் நடனம் செய்வதற்கே ஏற்பட்டவர்கள், மிக அழகாக, ரஸமாக லாஸ்யம் என்னும் நர்த்தனத்தைச் செய் கிறார்கள். அதைக்கண்ட தேவியின் பாதங்களின் நகங்கள், முல்லை அரும் பைப் போன்ற புன்சிரிப்பு, மெல்லெனச் செய்வதுபோல் மிளிர்கிறது. அந்த நர்த்தனத்தைப் பாராட்டு வது போல் அந்த நக ஒளி சிந்தும். சிரிப்பு அமைகி றது. ஆயினும் பாராட்டுதல் என்று பார்த்தோமானால் 'பேஷ்' 'சபாஷ்' போன்ற வார்த்தைகளும் வேண்டும். அந்தப் பாராட்டிப் பேசும் பாஷையை தேவியின் கால் சிலம்புகளின் ஓசை செய்கிறது. சிலம்புகளின் ஒலிகள் மெச்சும் கவிகள்' என்ற தனிப்பாடல்களை சமத்காரமாக இயற்றுகின்றன. (52)

सरोजं निन्दन्ती नखकिरणकर्पूरशिशिरा
निषिक्ता मारारेर्मुकुटशशिरेखाहिमजलैः ।
स्फुरन्ती कामाक्षि स्फुटरुचिमये पल्लवचये
तवाधत्ते मैत्रीं पथिकसुदृशा पादयुगली ॥

ஸரோஜம் நிந்தந்தீ நககிரண கர்பூரஸிஸிரா
நிஷிக்தா மாராரே: முகுட சசிரேகா ஹிமஜலை: |
ஸ்புரந்தீ காமாக்ஷி ஸ்புடருசிமயே பல்லவசயே
தவாதத்தே மைத்ரீம் பதிக ஸுத்ருஸா பாதயுகலீ ||

தாமரையைப் பழிக்கும் சரணங்கள் ஒருஸ்திரீக்கு ஒப்பி டப்படுகிறது. கால் நகங்களின் கிரணங்கள் பச்சைக் கற்பூரம் போல் வாஸனை குளிர்ச்சி பெற்று ஒளி வீசுகிறது. மன்மதனை அழித்த சிவனின் தலையிலணிந்துள்ள சந்திர கலையினின்றும் பெருகும் பனித்திவலை தன்னிடமிருந்து வெளிப் படுகின்ற காந்திகள் ஆகிய தளிர்களின் மீது பரவும் ஒளியாகவும் காணப் படுகிறது. பொருள் ஈட்ட நாயகன், நாயகியை விட்டுப்பிரிந்து சென்ற நிலை யில் அந்த ஸ்திரீ விரக வேதனையில் பீடிக்கப்பட்டு சரீரம் உஷ்ணத்தாபம் அடைந்து சந்தனக் குழம்பை பூசிக்கொள்கிறாள். இளந்தளிர்ப்படுக்கையும் அவள் தாபத்தைத்தீர்க்கவில்லை. பாலும் கசந்து, படுக்கையும் நொந்த நிலை யில் தேவியின் பாதங்கள் காணப்படுகிறது. (53)

नतानां संपत्तेरनवरतमाकर्षणजपः
प्ररोहत्संसारप्रसरगरिमस्तम्भनजपः ।
त्वदीयः कामाक्षि स्मरहरमनोमोहनजपः
पटीयान्नः पायात् पदनलिनमञ्जीरनिनदः ॥

நதாநாம் ஸம்பத்தே: அனவரத மாகர்ஷண ஜப:
ப்ரரோஹத் ஸம்ஸார ப்ரஸாகரிம ஸ்தம்பன ஜப: |
த்வதீய: காமாக்ஷி ஸ்மரஹர மனோமோஹன ஜப:
படீயாந்ந: பாயாத் பத நலின மஞ்ஜீர நிநத: ||

தேவியின் பாதங்கள் தன்னை வணங்குபவர்களுக்கு எல்லாவித செல்வத்தையும் அளிக்கிறது. 'தன ஆகர்ஷண யந்த்ரம்' என்பதாக ஒன்று உண்டு. அது இருக்குமிடத்தில் தன் ஸம்ருத்தி ஏற்படும் தேவியின் கண்கள்

பற்றி ஸௌந்தர் யலஹரியில் பதினோரு ஸ்லோகங்கள் உள்ளது. அதில் கல்யாணீ என்ற நகரின் பார்வை 'ஆகர்ஷணம்' ஆகும். அதே போல் மற்றப் பார்வை விசேஷங்களும் அந்தந்த நகர் பேரிலேயே அமைந்திருக்கும். ஸம் ஸாரம் என்பது நம்மைப் பாசத்தில் அழுத்துவதால், அந்தப் பந்தத்தை வளர விடாமல் செய்யும் 'ஸ்தம்பன்' சக்தி ஆக தேவியின் பாதங்கள் வர்ணிக்கப்படு கிறது. பரமேஸ்வரன் மன்மதனை மூன்றாம் கண்ணால் எரித்தார். தேவி காமாக்ஷியாக ஆவிர்பவித்து காமனைத் தன் கண்களால் கடாக்ஷித்து பரமசிவனும் மோஹமுற்று தேவியை மணந்து கொண்ட இந்த வரலாறில் 'மோஹனம்' என்ற மந்த்ரமும் விளங்குகிறது. இப்படிப்பட்ட 'ஆகர்ஷணம் ஸ்தம்பனம், மோஹனம்' என்ற மந்த்ரங்களின் வடிவாகவே தேவியின் கண்கள் மாத்திர மல்லாது, பாதங்களும் விளங்குகிறது. (54)

वितन्वीथा नाथे मम शिरसि कामाक्षि कृपया
पदाम्भोजन्यासं पशुपरिबृढप्राणदयिते ।
पिबन्तो यन्मुद्रां प्रकटमुपकम्पापरिसरं
दृशा नानद्यन्ते नलिनभवनारायणमुखाः ॥

விதன்வீதா நாதே மம ஸிரஸி காமாக்ஷி க்ருபயா
பதாம் போஜந்யாஸம் பசு பரிப்ருட ப்ராண தயிதே |
பிபந்தோ யன்முத்ராம் ப்ரகட முபகம்பா பரிஸரம்
த்ருசா நானந்த்யந்தே நலின பவ நாராயண முகா: ||

## திருமந்திரம் திருமூலர்

பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப்போல் பசு, பாசம் அனாதி
பதியினைச் சென்றணுகா பசு, பாசம்
பதி அணுகில் பசு பாசம் நில்லாவே

ஜீவகோடிகள் பசுக்கள், ஜீவர்கள் பாசம் மிக்கவர்கள், பசுவுக்கு பசி, தாகம் தவிர வேறெதும் தெரியாது. நாமும் உண்பதும், உறங்குவதுமாக இருந்து விட்டால் மனிதப்பிறவி வீணாகிவிடும். பசுக்களாகிய நம்மைப் பாசத்தி னின்றும் கடத்துவித்து தன்னுடன் இறைவன் இணைத்துக் கொள்வதால் 'பசுபதி' ஆகிவிடுகிறார். பரமேஸ்வரரின் இன்னுயிர்க் காதலியான காமாக்ஷி தேவி எம்பிராட்டி, எம் அன்னையை வணங்குகிறேன். தேவியின் திருவடிச் சுவடுகள் கம்பா நதியின் பக்கத்திலே, கரைகளிலே, தெளிவாகப் பதிந்துள் ளது. தாமரையில் அமர்ந்த பிரம்மாவும், தாமரையைத் தரித்த ஸ்ரீமந்நாராய ணனும் தேவியின் திருவடி அடையாளங் களைத் தரிசித்து, களித்து அதை தரிசித்த பேற்றினாலும், அதை மனதால் பூஜித்த புண்யத்தாலும் ஸகல

ஸம்பத்துக் களையும் பெற்று ஆனந்த மெய்துகிறார்களோ, அந்தத் தாமரைப் பாதத்தை எங்கள் தலைமீதும் வைத்துக் கருணை புரிய வேண்டும். (55)

प्रणामोद्यद्बृन्दारकमुकुटमन्दारकलिका-
विलोलल्लोलम्बप्रकरमयधूमप्रचुरिमा ।
प्रदीप्तः पादाब्जद्युतिविततिपाटल्यलहरी-
कृशानुः कामाक्ष्या मम दहतु संसारविपिनम् ॥

ப்ராணா மோத்யத் ப்ருந்தாரக முகுட மந்தாரகலிகா
விலோலல் லோலம்ப ப்ரகரமயதூம ப்ரசுரிமா |
ப்ரதீப்த: பாதாப்ஜ த்யுதி விததி பாடல்ய லஹரீ
க்ருஸானு: காமாக்ஷ்யா மமதஹது ஸம்ஸார விபினம்||

தேவி காமாக்ஷி த்ரிபுரசுந்தரி தாமரைத் தாள்களில் தேவர்கள் அனவரதமும் முடிகள் தோயும் வண்ணம் வணங்கித் துதிக்கிறார்கள். தேவர்கள் முடியில் மந்தாரமலர் மாலை சூடியுள்ளனர். மந்தாரமாலையில், தேன் உண்ணும் வண்டுக் கூட்டம் கருப்பாக புகைபோல் அடர்த்தியாகக் காணப்படுகிறது. புகை என்று ஒன்று வந்தால் அங்கு அக்னி இருக்க வேண்டும். தேவியின் திருவடித்தாமரையின் ஒளித்திரள் என்னும் செந்நிறம் எங்கும் பரவி நிற்பதால் அதுவே அக்னியாகிறது. தேவியின் பாதங்களின் செம்மை நிற அக்னியானது நமது ஸம்ஸாரம். பந்தம் என்ற காட்டை எரித்து ஒழித்து நம்மைப் பாவனமாக்கட்டும். (56)

वलक्षश्रीरृक्षाधिपशिशुसदृक्षैः तव नखैः
जिघृक्षुर्दक्षत्वं सरसिरुहभिक्षुत्वकरणे ।
क्षणान्मे कामाक्षि क्षपितभवसंक्षोभगरिमा
वचोवैचक्षण्यं चरणयुगली पक्ष्मलयतात् ॥

வலக்ஷஸ்ரீ: ருக்ஷாதிப சிசு ஸத்ருக்ஷைஸ் தவ நகை:
ஜிக்ருக்ஷு: தக்ஷத்வம் ஸரஸிருஹ பிக்ஷுத்வ கரணே|
க்ஷணான் மே காமாக்ஷி க்ஷபிதபவ ஸம்க்ஷோப கரிமா
வசோ வைசக்ஷண்யம் சரணயுகலீ பக்ஷ்மலயதாத் ||

தேவி காமாக்ஷியின் கால் நகங்கள் நக்ஷத்ர நாயகனான சந்திரனுடைய இளம் பிறையைப்போல் இருக்கிறது. தேவ, தேவியாரின் சிரஸில் இளம்பிறை துண்டப்பிறையாகக் காணப்படுகிறது. இங்கு ஸ்ரீகாமாக்ஷியின் பாதங்களி

லேயே வெண் ணிலா குடிகொண்டிருக்கிறது. சூரியனைக் கண்ட தாமரை மலரும். நகங்களில் வெண்ணிலா நிறைந்துள்ளது. எனவே பாததாமரையை ஏழையாக்கும் திறமை பெற்றிருந்தும், வணங்கியவர்களின் பாவங்களை ஏழையாக்குவதில் தேர்ச்சி பெற்றவை. ஒரு க்ஷணத்தில் ஸம்ஸாரமான துக்க மய இருளை அழித்துவிடும் தேவியின் சரணயுகளங்கள், சந்தர மண்டலங் களாகவே விளங்குகிறது. அமிர்தம் பொழியும் அந்த நிலவு மண்டலம் நமக்கு வாக்கின் தெளிவை செழிக்கச் செய்யட்டும். (57)

समन्तात्कामाक्षि क्षततिमिरसंतानसुभगान्
अनन्ताभिर्भाभिर्दिनमनु दिगन्तान्विरचयन् ।
अहंताया हन्ता मम जडिमदन्तावलहरिः
विभिन्तां संतापं तव चरणचिन्तामणिरसौ ॥

ஸமந்தாத் காமாக்ஷி க்ஷத்திமிர ஸந்தான ஸுபகான்
அநந்தாபிர் பாபி: தினமனு திகந்தான் விரசயன் |
அஹந்தாயா ஹந்தா மம ஜடிம தந்தாவலஹரி:
விபிந்தாம் ஸந்தாபம் தவ சரண சிந்தாமணி ரஸௌ ||

தேவியின் பாதங்கள் சிந்தாமணி என்னும் ரத்னம் போல் எல்லையற்ற காந்தியுடன் விளங்குகிறது. தேவியின் பாத ஒளிபட்டு திக்குத் திகந்தங்கள் எல்லாம் இருளை அழித்து மனோஹரமான அழகு எங்கும் பரவுகிறது. சிந்தா மணி என்னும் ரத்னம் நினைத்ததை எல்லாம் அளிக்கவல்லது. தேவர்களும், அஸுரர்களும் அம்ருத மதனம் செய்தபோது பாற்கடலிருந்து காமதேனு, கற்பக வ்ருக்ஷம், பாரிஜாதம், சிந்தாமணி இன்றும் பல, வேண்டியதை அளிக்க வல்ல பொருள்கள் வெளிப் பட்டது. ஸ்ரீமஹாலக்ஷ்மியும் பாற்கடலிலிருந்து வந்து மஹா விஷ்ணுவை மணந்து கொண்டாள். பாற்கடலில் பிறந்தது ஒரு சிந்தா மணி ரத்னம். ஆனால் ஸ்ரீலலிதா மஹா த்ரிபுர சுந்தரியின் ஸ்ரீபுரமாளிகையோ சிந்தாமணிக்கற்களாலேயே கட்டப்பட்டது. 'சிந்தாமணி க்ரஹம' என்றே அந்த மாளிகைக்குப் பெயர். தேவியே நம் சிந்தையின் மணி ஆவாள். ஸௌந்தர்யலஹரி 33வது ஸ்லோகத்தில் 'சிந்தாமணி குண நிபத்தாக்ஷ-வலயா: 'என்று குறிப்பிடப்படுகிறது. அஞ்ஞானம் என்னும் யானையை ஸம்ஹரிக்கும் சிங்கம்போல் அகங்காரங் களை முற்றும் ஒழித்து ஸம்ஸார துக்கமெனும் தாபத்தை ஸ்ரீதேவி காமாக்ஷி போக்கியருள வேண்டும் என்று வேண்டுவோம். (58)

दधानो भास्वत्ताममृतनिलयो लोहितवपुः
विनम्रामां सौम्यो गुरुरपि कवित्वं च कलयन् ।

गतौ मन्दो गङ्गाधरमहिषि कामाक्षि भजतां
तमःकेतुर्मातस्तव चरणपद्मो विजयते ॥

ததானோ பாஸ்வத்தாம அம்ருத நிலையோ லோஹிதவபு
வினம்ராணாம் ஸௌம்யோ குருரபி கவித்வம்சகலயன்|
கதௌ மந்தோ கங்காதர மஹிஷி காமாக்ஷி பஜதாம்
தம: கேதுர்மாத: தவ சரண பத்மோ விஜயதே||

'வரை ராஜனுக்கிரு கண்மணியாயுதித்த மலைவளர் காதலிப்பெண் உமையே' என்று தாயுமானஸ்வாமிகள் பாடுகிறார். கங்கா, உமா இருவரும் பரமேஸ்வர பத்தினிகள். கங்கையைத் தலையில் தாங்கி கங்காதரர் என்ற சிறப்பைப் பெற்றார். கங்காதரரான பரமசிவனின் ராணி காமாக்ஷி தேவி யாவாள். இதையே ஸௌந்தர்ய லஹரியில் 97 வத பாடலில் 'ப்ரப்ரும்ம மஹிஷீ' என்று குறிப்பிடுகிறார். தேவி காமாக்ஷியின் திருவடித்தாமரை ஒளி மிகுந்த தன்மையால் சூரியனாகவும், அமிர்தமயமாய் உள்ளதால் சந்திரனாகவும், சிவப்பு நிறத்தால் செவ்வாயாகவும் தன்னை வந்து வணங்கு பவர்களுக்கு ஸௌம்யம் பொருந்திய புதனாகவும், புத்திமான் என்ற ரீதியில் குருவாகவும், கவித்தன்மையில் சுக்கிரனா கவும், மந்த கதி நடையால், சனியின் தன்மை, தன்னைப் பூஜிப்பவர்களுக்கு அவர்கள் அஞ்ஞானத்தை அழித்து ஞானம் அளிக்கும் தன்மையில் ராகு, கேதுக்களா கவும் இவ்வாறு நவக்கிரஹங்களுமாய் சிறந்து விளங்குகிறது. தேவியின் திருவடிகளைப் பூஜிப் பவர்கள், நவக்ரஹங் களையும் பூஜிக்கும் பலனும் பெறுகிறார்கள். திருஞான சம் பந்தர் இயற்றிய கோளறு பதிகம், அருணகிரியார் செய்த நாள் என் செய்யும் என்ற அலங்காரப்பாடல், 'சேயவன் புந்தி' என்ற அந்தாதியிலும் இதே கருத்து உள்ளது. (59)

नयन्तीं दासत्वं नलिनभवमुख्यान् असुलभ-
प्रदानाद् दीनानाममरतरुदौर्भाग्यजननीम् ।
जगज्जन्मक्षेमक्षयविधिषु कामाक्षि पदयोः
धुरीणामीष्टे कस्तव भणितुमाहोपुरुषिकाम् ॥

நயந்தீம் தாஸத்வம் நளினபவ முக்யான் அஸுலப
ப்ரதானாத் தீனானாம் அமரதரு தௌர்பாக்ய ஜனனீம்|
ஜகஜ் ஜன்ம க்ஷேமக்ஷய விதிஷு காமாக்ஷி பதயோ:
தூரீணாமீஷ்டே கஸ்தவ பணிது மாஹோ புருஷிகாம் ||

தாமரையில் உதித்த ப்ரும்ம தேவர், மற்றும் உள்ள தேவர் கள் எல்லோரும் தேவியின் ஆணைக்குக் கட்டுப்பட்டவர்கள் தான். தேவி ராஜராஜேஸ்வரி. எட்டு திக் பாலர்களான இந்திரன், அக்னி, யமன், நிருதி, வாயு, குபேரன், ஈசானன், இவர்கள் ராஜாக்கள் ப்ரும்ம, விஷ்ணு, ருத்ரன் ராஜ ராஜாக்கள், திக் பால தலைவன் இந்திரன் ராஜராஜன். காமேஸ்வரரும் ராஜராஜன். குபேரன் ராஜராஜர் இவர்கள் அனைவருக்கும் தேவி ஈச்வரி ஆவாள். ஏழை எளிய வர்களுக்கு அரிய பொருள்களை அளிக்கும் கல்பகவிருக்ஷத்தை இழிவுபடுத் துவது போல் தேவியின் பாதங்கள் கல்பக விருக்ஷத்தைவிட இன்னும் அதிக மாகவே வாரிவழங்கும் வள்ளண்மை பெற்று விளங்குகிறது. 'ஸ்ரீமாதா, ஸ்ரீமகா ராக்ஞீ, ஸ்ரீமத்ஸிம்ஹாஸ னேச்வரீ' லலிதா ஸஹஸ்ரநாமாவின் முதல் மூன்று நாமாக் கள். 'ஸ்ரீமாதா'-பிறவியைக் கொடுக்கும் தாய். ப்ரும்மா படைத்தல் நாயகன். தேவி பஞ்சக்ருத்ய பாராயணி. 'ஸ்ரீ மஹாராக்ஞீ' படைத்த உயிர்களை நாட்டுக்கு நாயகனான அரசன் காக்கிறான். 'ஸ்ரீமத் ஸிமஹாஸனேஸ்வரி' ராஜ தர்பாரில் அமர்ந்து அரசன் குடிமக்களை விசாரித்து நியாயம் வழங்குகிறான். ரக்ஷிக்கும்போது விஷ்ணுரூபிணி, ஸிம்ஹா னத்தில் அமர்ந்து ருத்ரரூபியாக தண்டனைகள் வழங்கு கிறாள். இப்படியாக தேவி ஸ்ருஷ்டி, ஸ்ருதி ஸம்ஹார காரியங்களை ப்ரும்ம, விஷ்ணு, ருத்ரர் மூலம் நடத்துகிறாள். அதற்கு மேலும் ஈச்வர, ஸதாசிவரூபத்தில் ஒடுக்கிய உலகை மறுபடி வெளியே கொண்டு வந்து அனுக்ரஹமும் செய்கிறாள். (60)

जनोऽयं संतप्तो जननि भवचण्डांशुकिरणै:
अलब्ध्वैकं शीतं कणमपि परज्ञानपयस: ।
तमोमार्गे पान्थस्तव झटिति कामाक्षि शिशिरां
पदाम्भोजच्छायां परमशिवजाये मृगयते ॥

ஜனோயம் ஸந்தப்த: ஜனனி பவசண்டாம் ஸு கிரணை:
அலப்த் வைகம் ஸீதம் கணமபி பரக்ஞான பயஸ: |
தமோ மார்க்கே பாந்தஸ் தவ ஜடிதி காமாக்ஷி சிசிராம்
பதாம் போஜச்சாயாம் பரமசிவ ஜாயே ம்ருகயதே ||

உலக வாழ்க்கை என்பது மிகக் கஷ்டமானது. கதிரவனின் சுடர்கள் நம்மைச் சுடுவதுபோல் மிகுந்த வெப்பமாக நம்மை வெதும்பித்தவிக்க வைக்கிறது. இந்த உலக இயல் கவலை என்னும் வெப்பத்தை ஞானம் என்னும் குளிர்ந்த தண்ணீர் தான் தணிக்கும் அதை ஒரு சொட்டுகூட அடைய முடியாமல் அஞ்ஞான மென்னும் இருளில் திரிந்து உழலும் தேவியின் தாஸர்களாகிய நாம் தேவியின் திருவடித் தாமரைகளின் குளிர்ந்த நிழலை அடையவேண்டும். தேவி கருணை புரிந்தருள வேண்டும். 'சண்டாம் ஸுகிரணை' சூரியன் தகித்தாலும் வழி மாத்திரம் இருளாகவே உள்ளது. 'அம்

போஜம்' நீரில் தோன்றும் தாமரை. இந்தப்பதத்தால் தாகம் தணிக்கத் தண்ணீரும் உண்டு என்பது தெரிகிறது உத்தம ஞானமே ஜலம். (61)

जगत्यम्ब श्रीमन्नखकिरणचीनांशुकमयं
वितानं बिभ्राणे सुरमुकुटसंघट्टमसृणे ।
निजारुण्यक्षौमास्तरणवति कामाक्षि सुलभा
बुधैः संविन्नारी तव चरणमाणिक्यभवने ॥

ஜகத்யம்ப ஸ்ரீமந்நககிரண சீனாம் சுக மயம்
விதானம் பிப்ராணே ஸுரமுகுட ஸங்கட்ட மஸ்ருனே |
நிஜாருண்ய க்ஷௌமாஸ் தரணவதி காமாக்ஷி ஸுலபா
புதை: ஸம்விந்நாரீ தவ சரண மாணிக்ய பவனே||

தேவி காமாக்ஷியின் கால் நக ஒளிகள் சீன தேசத்து வெண் பட்டுப்போல் மேற்கட்டு, விதானம் என்று சொல்வோம், பள, பள, வென்று மின்னும்படி காக்ஷி அளிக்கிறது. அந்தக் காலத்தில் சீன தேசத்திலிருந்து பட்டு இறக்குமதியாயிற்று என்ற வரலாற்றையும் நாம் தெரிந்துகொள்கிறோம். தேவர்களின் கிரீடங்கள் நவரத்தினங்கள் பதித்த தங்கத் தாலான. வெண்பட்டில் கற்களின் பிரகாசம் நன்றாகவே டால் அடிக்கும். தேவர்கள் காமாக்ஷி தேவியின் செந்நிறம் வாய்ந்த பட்டுப் போன்ற பாதங்களில் பணிவதால் கீழே சிவந்த பட்டு, அதில் இத்தனை கற்கள், தங்கத்தின் பிரதிபலிப்பு; தேவியின் பாதங்கள் மாணிக்க மாளிகையாகவே விளங்குகிறது. ஸம்வித் என்றும் ஞானம் இந்த ரூபமான தேவி மஹாபிந்து வில் ஸ்ரீசக்ரமத்தியில் விளங்குபவள், ஞானிகளால் எளிதிலே சென்றடையக் கூடியவளாக விளங்குகிறாள். ஞானமே ஸ்திரீ. தேவியின் பாதங்களே ரத்னபவனம், பாதங்களின் சிவப்புக்காந்தி பட்டு, விரிப்பு; நகங்களின் வெண் கிரணமே விதானம் இப்படியான வர்ணனை அருமையிலும் அருமை. (62)

प्रतीमः कामाक्षि स्फुरिततरुणादित्यकिरण-
श्रियो मूलद्रव्यं तव चरणमद्रीन्द्रतनये ।
सुरेन्द्राशामापूरयति यदसौ ध्वान्तमखिलं
धुनीते दिग्भागानपि च महसा पाटलयते ॥

ப்ரதீம: காமாக்ஷி ஸ்புரித தருணாதித்ய கிரண
ஸ்ரியோ மூலத்ரவ்யம் தவ சரண மத்ரீந்த்ர தனயே |

ஸூரேந் த்ராஸாமா பூரயதி யதஸௌ த்வாந்த மகிலம்
துனீதே திக்பாகானபி ச மஹஸா பாடலயதே ||

பர்வத ராஜகுமாரி, மலையரசனின் பெண் தேவி காமாக்ஷி தன்பாத ஒளியால் எல்லாத் திசைகளையுமே சிவந்த நிறமாக்குகிறாள். தேவியின் திருவடியானது உதித்து எழும் பாலசூரியனின் கிரணங்களின் காந்திக்கு அடிப்படைக் காரணமாகிய மூலவஸ்து. அதாவது சூரியன் என்றே நினைக்கி றோம். தேவேந்திரனின் திசையாகிய கிழக்குத்திசையில், சூரியன் தன் கிரணங்களை நிரப்புவதுபோல் தேவியின் இந்தத் திருவடிகளானது தன்னை வணங்குபவர்களின் ஆசையை நிறைவேற்றுகிறது. தேவேந்திரன் தேவியை வணங்க ஸ்ரீநகரத்தை அடைந்தான். அஷ்டமா ஸித்திகளை அடைந்து திரும்பினான் என்று வரலாறு உ.ள்ளது. தேவியின் பாதச்செவ்வாளி அக்ஞானத்தை அகற்றுகிறது. கிழக்கு மட்டுமல்லாமல் எல்லா திசைகளிலும் உள்ள எல்லா தேவர்களுக்கும் அருளை வழங்குகிறாள். அருண நிறத்தையும் வீசுகிறாள். கருணையின் நிறம் சிவப்பு. (63)

महाभाष्यव्याख्यापटुशयनमारोपयति वा
स्मरव्यापारेर्ष्यापिशुननिटिलं कारयति वा ।
द्विरेफाणामध्यासयति सततं वाऽधिवसतिं
प्रणम्रान्कामाक्ष्याः पदनलिनमाहात्म्यगरिमा ॥

மஹா பாஷ்ய வ்யாக்யா படுஸயன மாரோபயதி வா
ஸ்மர வ்யாபாரேர்ஷ்யா பிசுன நிடிலம் காரயதி வா |
த்விரேபாணா மத்யாஸயதி ஸததம் வா நிவஸதிம்
ப்ரணம்ரான் காமாக்ஷ்யா: பத நலின மாஹாத்ம்ய கரிமா||

தேவி காமாக்ஷியின் பாதத்தாமரைகளை வணங்குபவர் கள் மஹா பாஷ்யம் என்னும் வியாக்கியானத்தை இயற்றிய பதஞ்சலியாக அவதரித்த ஆதி சேஷனைப் படுக்கையாகக் கொண்டு அதில் அமரும் மஹா விஷ்ணுவைப் போல் ஆவார்கள். மன்மதனை நெற்றிக் கண்ணால் எரித்த பரமேஸ்வரன் என்ற பெரிய தெய்வமாகவும் ஆக்கும். வண்டுகள் உறையும் தாமரையில் வசிக்கும் நான்முகன் என்ற ப்ரம்ம தேவனாகவும் செய்துவிடும். மும்மூர்த்திகளும் கூட தேவியின் பாத தூளியாலேயே தங்களுடைய தொழில்களை ஆற்ற வல்லவராகி றார்கள். அவ்வாறே ப்ராக்ருத ஜனங்களான நாமும் தேவியின் திருவடிகளில் பணிந்து இக, பரசுகம் பெறுவோம், திருவடி தன்னை வணங்குபவர்களுக்கு ப்ரம்ம, விஷ்ணு, சிவன், என்ற மும் மூர்த்திகளின் அருளையும் கூட்டுவிக்கும். (64)

विवेकाभ्यःस्रोतः स्नपनपरिपाटी शिशिरिते
समीभूते शास्त्रस्मरणहलसंकर्षणवशात् ।
सतां चेतः क्षेत्रे वपति तव कामाक्षि चरणो
महासंवित्सस्यप्रकरवरबीजानि कृषिकः ॥

விவேகாம்பஸ் ஸ்ரோத: ஸ்நபன பரிபாடீ சிசிரிதே
ஸமீபூதே சாஸ்த்ர ஸ்மரண ஹல ஸங்கர்ஷண வசாத் |
ஸதாம் சேத: க்ஷேத்ரே வபதி தவ காமாக்ஷி சரணோ
மஹா ஸமவித் ஸஸ்ய ப்ரகர வரபீஜம் கிரி ஸூதே ||

காமாக்ஷியின் திருவடி என்னும் வெள்ளநீரைப் பாய்ச்சுவ தற்கான பாசன வாய்க்கால்களை வகுப்பதான விவேகம் என்னும் சாதனத்தால் நீர்வள முடையதாயும், சாஸ்திரங் களாகிய கலப்பைகளைக் கொண்டு செயல்படுத்தல் ஆகிய உழதல் காரணமாக ஸமமாகச் செய்யப்பட்டதாயுமுள்ள ஸம நோக்குள்ளவர்களான நல்லவர்களுடைய சித்தமாகிய வயலிலே ஸம்வித் ஞானமாகிய சிறந்த பயிரை விளைவிக்கும் திறமை வாய்ந்த நல்ல விதையை விதைக்கின்றது சாஸ்திரப் பயிற்சியும், விவேகமும் மனதைப் பண்படுத்தும் ஆயினும் தேவிபாத ஸ்மரணம் மனத்தில் பக்தியை ஊன்றச் செய்து ஆத்ம ஞானமடைய வழி செய்யும். ஸாதுக்களுடைய மனதே வயல் அதில் விவேகமென்னும் நீரைப் பாய்ச்சி சாஸ்த்ர ஞானம் என்னும் கலப்பை கொண்டு உழுது பண்படுத்தினால், தேவியின் சரணார விந்தத்தில் பயிர்கள் செழிப்பாக வளரும் என்று கவி பேசுகிறார். (65)

दधानो मन्दारस्तबकपरिपाटीं रखरुचा
वहन् दीप्ताः शोणाङ्गुलिभिरपि चाम्पेयकलिकाः ।
अशोकोल्लासं नः प्रचुरयतु कामाक्षि चरणो
विकासी वासन्तः समय इव ते शर्वदयिते ॥

ததானோ மந்தார ஸ்தபக பரிபாடீம் நகருசா
வஹன் தீப்தா: சோணாநங்குலி பிரபி சாம்பேய கலிகாம்|
அசோகோல்லாஸம் ந: ப்ரசுரயது காமாக்ஷி சரணோ
விகாஸீ வாஸந்த: ஸமய இவதே ஸர்வதயிதே||

பிரளய காலத்தில் எல்லாவற்றையும் ஒடுக்கும் ஹரன் என்ற பரமசிவனின் காதலியான காமாக்ஷியின் கால் நகங்கள் காந்தியால் மந்தார விருக்ஷப் பூங்கொத்துப் போன்றும், 'மருதாணியிலும், லாக்ஷாரஸப்பூச்சாலும் சிவந்த விரல்கள் ஒளிவீசும் சண்பக மொட்டுகளின் காந்தியோடும், வஸந்த காலத்தைப்போல் தேவியின் பாதங்கள் நமக்கு இன்பத் தையே கொடுக்கிறது. சோகம் = துன்பம், அசோகம்-துன்ப மற்ற வாழ்வு. தேவியின் பாதங்களை பூஞ் சோலைக்கு ஒப்பிடு கிறார். மந்தார, செண்பக அசோகம் துன்பமில்லாத பேரின்பம் நிறைந்த வாழ்வையே தேவியின் பாதங்கள் தருகிறது. (66)

नखांशुप्राचुर्यप्रसृमरमरालालिमहितः
स्फुरन्मञ्जीरोद्यन्मरकतमहः शैवलयुतः ।
भवत्याः कामाक्षि स्फुटचरणपाटल्यकपटो
नदः शोणाभिख्यो नगपतितनूजे विजयते ॥

நகாம் சுப்ராசுர்ய ப்ரஸ்ருமர மராலாலி தவல:
ஸ்புரன் மஞ்ஜீரோத்யன் மரகத மஹஸ்சை வலயுத |
பவத்யா: காமாக்ஷி ஸ்புடசரண பாடல்யகபட:
நதஸ்ஸோணோபிக்யோ நகபதி தனூஜே விஜயதே||

மலையரசனின் மகளான காமாக்ஷியின் திருவடிகளின் பரிசுத்தமான செம்மை நிறத்தை அடைந்துள்ள 'சோணம்' என்னும் பெயரை உடைய நதியானது (மேற்கு முகமாகச் செல்லும் புழை) தேவியின் கால் நகங்களின் காந்தியாகிய அன்னப்பறவைகளின் வரிசையாகிற (வெண்மை நிற காந்தி அன்னப்பறவைக்கு ஒப்பிடப்பட்டது) தேவியின் கால் சிலம்புகளில் நிறைக்கப் பட்ட மரகதமணியின் ஒளி அந்த நதியில் பாசி போல் காணப்படுகிறது. தேவியின் பாதங்கள் 'சோணம்' என்ற சிவந்த நதி, நதியில் அன்னங்கள் சஞ்ச ரிப்பது இயற்கை; தேவியின் கால் நகங்கள் ஒளியுடன் கூடிய வெண்மையானது, அன்னங்கள் போலவும், காற் சிலம்பின் மரகத மணிகளின் சாயை அந்த சிவந்த பாதத்தில் விழ அது, மெத் தென்ற வெல்வெட் போன்ற பாசிபோல் அமைகிறது சிவப்பு, வெண்மை, பச்சை ஒளிவீசுவது போன்ற பாத கமலங்கள். நினைக்க நினைக்க இனிமையாக இருக்கிறது. (67)

धुनानं पङ्कौघं परमसुलभं कण्टककुलैः
विकासव्यासङ्गं विदधदपराधीनमनिशम् ।
नखेन्दुज्योत्स्नाभिर्विशदरुचि कामाक्षि नितरां
असामान्यं मन्ये सरसिजमिदं ते पदयुगम् ॥

துனானம் பங்கௌகம் பரமசுலபம் கண்ட கருலை:
விகாஸ வ்யாஸங்கம் வித ததபராதீன மநிசம் |
நகேந்து ஜ்யோத்ஸனாபி: விஸதருசி காமாக்ஷி நிதராம்
அஸாமான்யம் மன்யே ஸரஸிஜ மிதம்தே பதயுகம் ||

தேவியின் பாதங்களைத் தாமரைக்கு ஒப்பிடுகிறோம். தாமரை சேற்றில் விளைகிறது. ஆயினும் மாத தாமரைகளோ 'பங்க்கம்' என்னும் பாபச்சேற்றி னின்றும் நம்மைத் தூக்கி எடுத்து நிறுத்துகிறது. வாழ்வில் நமக்கு யாராவது தீங்கு செய்தால், அவரை நம் வாழ்வின் முள் (தைத்தால் வலிக்கும்) என்று குறிப்பிடுவோம். ஆயினும் இந்தத் தாமரைத்தண்டில் உள்ள முள்ளோ தேவியின் தாமரை பாதத்தைத் தாங்கி நிற்கிறது. அப்பொழுது எப்படி 'முள்' நமக்குத் தீங்கிழைப் பவன் என்று கூறமுடியும்? தேவியின் பாதங்கள் (சூரிய, சந்திரர் என்ன எல்லாதேவதைகளுமே தேவிக்கு உட்பட்ட வர்கள்) யாரையும் நாடாமல் (தாமரை மலர் சூரியன் உதய மாவதே தேவியால்தான்.) சுதந்திர முடையதாய் எப்பொழுதும் மலர்ச்சியும், அழகு நிறைந்தது ம.ன சந்த்ர ஒளிபோன்ற காந்தி பொருந்திய தேவியின் சரணார விந்தங்கள் சேற்றிலே தோன்றி சேற்றை அகற்றி, முள்ளில் நின்று நம்வாழ்வின் முட்களை அகற்றி, தான் மலர்வதற்கு சூரியனை நாடினாலும், சந்திரனைக் கண்டாலும் வாடுவதுமான தாமரைமலர் போல் அல்லாத ஓர் ஒப்பற்ற, அதிசயத் தாமரை மலர் என்று நாம் அவள் தாள்களை வழிபடுவோம். (68)

करीन्द्राय द्रुह्यत्यलसगतिलीलासु विमलैः
पयोजैर्मात्सर्यं प्रकटयति कामं कलयते ।
पदाम्भोजद्वन्द्वं तव तदपि कामाक्षि हृदयं
मुनीनां शान्तानां कथमनिशमस्मै स्पृहयते ॥

கரீந்த்ராய த்ருஹ்யதி அலஸ கதி லீலாஸு விமலை:
பயோஜை: மாத்ஸர்யம் ப்ரகடயதி காமம் கலயதே |
பதாம் போஜத்வந்த்வம் தவ ததபி காமாக்ஷி ஹ்ருதயம்
முனீனாம் ஸாந்தானாம் கதமனி ஸமஸ்மைஸ் ப்ருஹயதே||

தேவியின் திருவடிகள் இரண்டும் தாமரைப் புஷ்பங்கள், புஷ்பங்கள் பூமியில் நடந்தால் எப்படியிருக்கும்? அதுபோல் மெத்து, மெத்தென்று மெதுவாக நடப்பதில் கஜேந்திரனைத் தோற்கடிக்கிறது. தேவியின் பாதங்கள் தாமரை மலர்களிடம் பொறாமை கொள்கிறது. நாம் என்ன? மிக உயர்ந்த ஞானிகளும் தேவியின் பாதங்களில் மிகுந்த ஆசை கொள்கிறார்கள். தேவி யின் பாதங்கள் போகம், மோக்ஷம் என்ற இரண்டையுமே தருவதால் முனிவர் கள் அப்பாதங்களில் விழுந்து வணங்கியே மோக்ஷத்தைப் பெறுகிறார்கள்.

ஸ்ரீ வித்தை போக, மோக்ஷம் இரண்டையுமே தரவல்லது. தேவி காமாக்ஷி ஸ்ரீவித்யா ஸ்வரூபிணி. வேண்டுவார்க்கு வேண்டுவது தரவல்லவள். தேவி யின் பாதங்கள் யானை போன்ற நடையால், தாமரை யைப் பழிக்கும் குணத் தால், ஞானிகளின் ஆசைக்கு இருப்பிடமாக உள்ளதால் துரோஹம், அஸூயை காமம் ஆகிய குணங் களைக் கொண்டிருந்தும் ரிஷிகள் விரும்புவது அதிசயமே. (69)

निरस्ता शोणिम्ना चरणकिरणानां तव शिवे
समिन्धाना संध्यारुचिरचलराजन्यतनये ।
असामर्थ्यादेनं परिभवितुमेतत्समरुचां
सरोजानां जाने मुकुलयति शोभां प्रतिदिनम् ॥

நிரஸ்தா சோணிம்னா சரணகிரணாநாம் தவசிவே
ஸமிந்தானா ஸந்த்யாருசிரசல ராஜன்ய தனயே |
அஸாமர்த்யாத் ஏனம் பரிபவிது மேதத் ஸமருசாம்
ஸரோஜானாம் ஜானே முகுலயதி சோபாம் ப்ரதிதினம் ||

தேவி மலையரசனின் பெண், பரமசிவ பத்தினி மங்களமே வடிவான சிவை என்னும் சிவகாமி ஆவாள். தேவியின் திருவடிகளின் செம்மையான காந்தி யானது மாலைக் காலத் தின் செவ்வான ஒளியைத் தோற்கடிக்கும்படி அவ்வளவு செம்மையாக இருக்கிறது. இதனால் ஸந்த்யா கால சிவந்த வானம் கோபமடைந்து, தன்னை அவமதித்த தேவியின் பாதச் செம்மையை ஒன்றும் செய்ய முடியாமல், கோபத்தை யாரி டம் காட்டலாம் என்று பார்த்து, மாலை வேளையில் தாமரை கள் கூம்பிவதை அந்த சந்த்யா காலக் கோபத்திற்கு இலக் காக்குகிறார். இது கவியின் மகத்தான சாதுரியம். (70)

उपादिक्षद्दाक्ष्यं तप चरणनामा गुरुरसौ
मरालानां शङ्के मसृणगतिपलालित्यसरणौ ।
अतस्ते निस्तन्द्रं नियतममुना सख्यपदवीं
प्रपन्नं पाथोजं प्रति दधति कामाक्षि कुतुकम् ॥

உபாதிக்ஷத் தாக்ஷ்யம் தவ சரணநாமா குருரஸௌ
மராலானாம் ஸங்கே மஸ்ருண கதிலாலித்ய ஸரணௌ|
அதஸ்தே நிஸ்தந்த்ரம் நியதமமுனா ஸக்ய பதவீம்
ப்ரபன்னம் பாதோஜம் ப்ரதிதததி காமாக்ஷி குதுகம் ||

தேவியின் திருவடி என்ற ஆசாரியர் ஹம்ஸர்களாகிய ஸன்னியாஸிக ளுக்கு, அழகிய நடை முறையை, ஒழுக்கத்தை திறமையான முறையில் உப தேசிக்கிறார் என்று தோன்றுகிறது. அப்படியாக ஹம்ஸங்கள் என்று குறிப்பிடப் படும் பரமஹம்ஸர்கள் எப்பொழுதும் ஊக்கத் தோடு, இந்தத் திருவடி என்ற ஆசாரியரிடத்தில், நெருங்கிய தோழமை கொண்ட தாமரையிடத்தில் ஆவல் கொள்கிறார்கள். தாமரை மலரிலும் இடையறாத அன்பும், பக்தியும் கொண்டு அதைத் தேவியின் திருவடிகளாக பாவித்து பக்தி செலுத்துகிறார் கள். அம்பிகையின் நடை அழகைப்பார்த்தால் அழகிய நடை உடைய ஹம்ஸங் களும் தேவியிடமிருந்துதான் கற்றுக் கொண்டிருக்கவேண்டும். எனவே தேவி யின் பாதத்தாமரைகளே அன்னங்களின் குரு. எனவே குருவின் பாதத் தோடு சமமாக இருக்கும் தாமரையிடமும் ஹம்ஸம் சினேகமாக இருக்கிறது. (71)

दधानैः संसर्गं प्रकृतिमलिनैः षट्पदकुलैः
द्विजाधीशश्लाघाविधिषु विदधद्भिर्मुकुलताम् ।
रजोमिश्रैः पद्मैर्नियतमपि कामाक्षि पदयोः
विरोधस्ते युक्तो विषमशरवैरिप्रियतमे ॥

ததானை: ஸம்ஸர்கம் ப்ரக்ருதிமலினை: ஷட்பதகுலை:
த்விஜா தீசல்லாகா விதிஷூ விததத்பி: முகுலதாம் |
ராஜோமிச்ரை: பத்மை: நியதமபி காமாக்ஷி பதயோ:
விரோதஸ்தே யுக்தோ விஷமசரவைரி ப்ரியதமே ||

ஆதியில் மன்மதனை எரித்தவர் பின் மன்மதனின் வசப் பட்டு தேவியிடம் மிகுந்த காதல் கொண்டார். சந்திரனின் ஒளியால் தாமரை வாடிச் சுருங்குகிறது. கறுப்பு என்பதை மாசு என்று சொல்வதால் கருநிறக் வண்டுக் கூட்டம் தாமரையை மொய்ப்பதை இங்கு மலினம் என்று குறிப்பிடுகிறார். தேவியின் திருவடிகளோ தாமரை ஆகும். சந்திரனைக் கண்டதாமரை வாடுகிறது. மலினம் தாமரைக்கு விரோதம் போன்ற சொற்கள் தாமரைப் புஷ்பம் வண்டுகளில் சூழப் பட்டதால் மலினத்தையும், சந்திரனைக் கண்டதால் மூடிக் கொண்டும், மகரந்தப்பொடி நிரம்பியும் இருக்கிறது நேரிடை யாக தேவியின் பாதத்தாமரைகள் மலின மின்றியும் நககாந்தி என்ற சந்த்ரிகையில் விகஸித்தும் உள்ளதால் தாமரையை பரிஹஸிப்பதாக உள்ளது. (72)

कवित्वश्रीमिश्रीकरणिपुणौ रक्षणचणौ
विपन्नानां श्रीमन्नलिनमसृणौ शोणकिरणौ ।
मुनीन्द्राणामन्तःकरणशरणौ मन्दसरणौ
मनोज्ञौ कामाक्ष्या दुरितहरणौ नौमि चरणौ ॥

கவித்வ ஸ்ரீ மிஸ்ரீகரண நிபுணௌரக்ஷணசணௌ
விபன்னானாம்ஸ்ரீமந்நலினமஸ்ருணௌஸோணகிரணௌ|
முனீந்த்ரானாம் அந்த: கரணசரணௌமந்த்ஸரணௌ
மனோஜ்ஞௌ காமாக்ஷ்யா துரிதஹரணௌ
நௌமிசரணௌ ||

கவிதை செய்வது என்பது பெறற்கரிய பாக்யமாகும். அந்தக் கவிதா லக்ஷ்மியைக் கூட்டுவிக்கும் தேவியின் ஸ்ரீபாதங்கள் வந்திக்கத்தக்கவை. துன்பமுற்றவர்களைக் காப்பாற்றும் தாமரைப் பாதங்கள்; அழகிய தாமரைகளைப் போன்ற எழில், சிவந்தகாந்தி, சோபை பொருந்திய திரு வடிகள். முனி மானஸ ஹம்ஸிகா' ஸமுன் மீலத் ஸம்வித. கமல மகரந்தைக-ரஸிகம்' 'மஹதாம் மானஸசரம் என்றபடி முனிவர்களின் அந்தக் கரணங்களையே தேவிதன் இருப்பிடமாகக் கொண்டிருக்கிறாள். ஹம்ஸததைப் பழிக்கும் மென் னடை, காண்பவர்களின் மனதிற்கு ஆனந்தம், எல்லாப் பாபங் களையும் அழிக்கின்றதுமான ஸ்ரீதேவி காமாக்ஷியின் சரணங் களில் நமஸ்கரிக்கிறேன். (73)

परस्मात्सर्वस्मादपि च परयोर्मुक्तिकरयोः
नखश्रीषु ज्योत्स्नाकुलिततुलयोस्ताम्रतलयोः ।
निलीये कामाक्ष्या निगमनुतयोर्नाकिनतयोः
निरस्तप्रोन्मीलन्नलिनमदयोरेव पदयोः ॥

பரஸ்மாத் ஸர்வஸ்மாதபிச பரயோ: முக்தி கரயோ:
நகஸ்ரீபிர் ஜ்யோத்ஸ்னாகலிததுலயோ: தாம்ரதலயோ: |
நிலீயே காமாக்ஷ்யா நிகமநுதயோ: நாகிநதயோ:
நிரஸ்தப்ரோன் மீலன்னலின மதயோ ரேவ பதயோ:||

சிறந்த பொருள் அனைத்திலும் சிறந்தவள். லலிதாஸ ஹஸ்ர நாமா 'நிஸ்துலா' (184) ஒப்பில்லாதவள். இதற்கு ஸமானம் என்று சொல்லக்சுடிய வஸ்து எதுவுமில்லை. 'ஹேது த்ருஷ்டாந்த வர்ஜிதம்' திரிபுரோபனிஷத். 'ஸமாநாதிக வர்ஜிதா' (198) ஒப்பாரும், மிக்காரும் இல்லாதவள். ஒப்பார் இல்லாத போது மிக்கார் எப்படி இருக்கமுடியும்? தேவி காமகோடி ஆவாள். தர், மார்த்த, காம, மோக்ஷ சதுர்வித புருஷார்த்தத்தையும் கொடுப்பவள். காமத்துக்கு அடுத்தது மோக்ஷம். காமத்தின் கோடி மோக்ஷமாவதால் தேவி காம கோடியாக இருக்கிறாள். தாமரை போன்ற சிவந்த அடித் தலங்கள் என்னும் பாத தாமரைகளுக்கு நகங்களின் காந்தியே நிலவாகிறது. மூககவி வெகு அழகாக தாமரையில் கொழுப்பை அடக்கும் பாதங்கள் என்கிறார். (74)

स्वभावादन्योन्यं किसलयमपीदं तव पदं
म्रदिम्ना शोणिम्ना भगवति दधाते सदृशताम् ।
वने पूर्वस्येच्छा सततमवने किं तु जगतां
परस्येत्थं भेदः स्फुरति हृदि कामाक्षि सुधियाम् ॥

ஸ்வபாவாதன்யோன்யம் கிஸலயமபீதம் தவபதம்
ம்ரதிம்னா சோணிம்னா பகவதி ததாதே ஸத்ருசதாம் |
வனே பூர்வஸ்யேச்சா ஸததமவனே கிம்து ஜகதாம்
பரஸ்யேத்தம் பேத: ஸ்புரதி ஹ்ருதி காமாக்ஷி ஸுதியாம்: ||

தேவி பகவதி காமாக்ஷியின் பாதங்கள் தளிரைப் போன்றே மென்மையாகவும் சிவந்தும் காணப்படுகிறது. தளிர்களுக்கு வனத்தில் வசிப்பதால் வனத்தில் ஆசை. ஆனால் தேவிக்கோ 'அவனத்தில்' உலக ரக்ஷையில் தான் ஆசை. மகான்களின் மனதில் இப்படித்தான் தோன்றுகிறது. தேவி பகவதி யாவாள். சிவன் பகவான் ஆவார். 'பகம்' என்ற சொல்லுக்கு பல பொருள்கள் உண்டு. பக சப்தத்தால் த்ரிகோணரூபமான சக்ரம் தேவியின் ஸ்வரூபம் தேவியின் பாதங்கள் துளிர் போல் மிருது, சிவப்பு நிறம் இப்படி இருந்தாலும், சில பேதங்களும் உண்டு. துளிரோ காட்டில் இருக்கும். பாதங்களோ ரக்ஷணம் என்னும் உலகரக்ஷணத்திற்கே ஏற்பட்டது. (75)

कथं वाचालोऽपि प्रकटमणिमञ्जीरनिनदैः
सदैवानन्दार्द्रान्विरचयति वाचंयमजनान् ।
प्रकृत्या ते शोणच्छविरपि च कामाक्षि चरणो
मनीषानैर्मल्यं कथमिव नृणां मांसलयते ।।

கதம் வாசாலோபி ப்ரகடமணி மஞ்ஜீரநிநதை:
ஸதை வானந்தார்த்ரான் விரசயதி வாசம்யம ஜனான்|
ப்ரக்ருத்யா தே ஸோணச்ச விரபிச காமாக்ஷி சரணோ
மனீஷாநைர்மல்யம் கதமிவ ந்ருணாம் மாம்ஸலயதே ||

தேவியின் சரணங்களில் மணிச் சிலம்புகள் தெளி வான இனிய ஒலியை இசைக்கிறது. தேவியின் பாதங்கள் வாரி, வாரி வழங்குவதால் எப்போதும் அசைவுடன் சிலம்புகள் ஒலியுடனேயே இருக்கிறது. காமாக்ஷி த்ரிபுரசுந்தரி பராபட் டாரிகை. காஞ்சியில் பத்மாஸனத்தில் அமர்ந்து நான்கு கைகளிலும் பாசம், அங்குசம், மலரம்புகள், கரும்புவில் தாங்கி ராஜதார்பார் நடத்துகிறாள்.

அவளைத்தேடி வருபவர்களுக்கு வரங்கள் வாரி வழங்க வேண்டுமே, கைக ளில் மேற்கூறியவற்றைத் தாங்குவதால் அள்ளிக்கொடுக்கும் வேலையைத் தேவியின் திருவடிகளே செய்கிறது. முனிவர்கள் மௌனமாய், தியா னத்தில் ஏகாந்தத்தை விரும்புவர்கள் தேவியின் காலணி சப்தம் கேட்டு மகிழ்கிறார் களே! பாதத்தின் சிவந்த நிறமோ புத்திக்கு வெண்மையை (சுத்தியையும் தெளிவையும்) அளிக்கிறதே! இதென்ன ஒவ்வாப் பொருத்தம்! (76)

चलत्तृष्णा वीचीपरिचलनपर्याकुलतया
मुहुर्भ्रान्तस्तान्तः परमशिववामाक्षि परवान् ।
तितीर्षुः कामाक्षि प्रचुरतरकर्माम्बुधिममुं
कदाहं लप्स्ये ते चरणमणिसेतुं गिरिसुते ॥

சலத் த்ருஷ்ணாவீசி பரிசலன பர்யாகுலதயா
முஹீர்ப்ராந்தஸ்தாந்த: பரமசிவ வாமாக்ஷி பரவான் |
திதீர்ஷு: காமாக்ஷி ப்ரசுரதர கர்மாம்புதிமமும்
கதாஹம் லப்ஸ்யேதே சரணமணிஸேதும் கிரிஸுதே ||

பரமேஸ்வரனின் இடப்பக்கத்தில் தேவி உறைகிறாள். நம் எல்லோர் சரீரத்திலும் தேவி இடது பாதியில் வசிக்கிறாள். பவம் என்னும் கடலைக் கடக்க தேவியின் சரணமாகிய ரத்ன மயமான ஸேது என்னும் அணைக்கட்டு உதவ வேண்டும். ஆசை என்ற கடல் கரைகாணல் அரியது. காலம் முழுவதும் ஆசையில் மூழ்கிகரை சேருமுன்பே காலன் என்பவன் வந்து நம்மை அழைத்தேகுகிறான். தேவியை நினைப்பவர்களுக்கு அவள் தன் பாதத்தை நம் தலை மேல் வலிய வைத்து ஆண்டு கொள்கிறாள் 'பாதித்திரு உரு பச்சென்றவர்க்கு' அதாவது அர்த்த நாரீச்வர வடிவுடன் தேவி காக்ஷி தருகிறாள். இது அருணகிரியாரின் வாக்கு. (77)

विशुष्यन्त्यां प्रज्ञासरिति दुरितग्रीष्मसमय-
प्रभावेण क्षीणे सति मम मनःकेकिनि शुचा ।
त्वदीयः कामाक्षि स्फुरितचरणाम्भोदमहिमा
नभोमासाटोपं नगपतिसुते किं न कुरुते ॥

விசுஷ்யந்த்யாம் ப்ரஜ்ஞாஸரிதி துரிதக்ரீஷ் மஸமய
ப்ரபாவேண க்ஷீணேஸதி மமமன: கேகிநி சுசா |

த்வதீய: காமாக்ஷி ஸ்புரிதசரணாம் போத மஹிமா
நபோமா ஸாடோபம் நகபதிஸுதே கிம் நகுருதே ||

கார் மேகங்கள் மழையைப் பொழிவது போல் கருணை என்ற மழையைப் பெய்ய வேண்டும் என்று வேண்டுகிறோம் பாபங்கள் என்பது கோடை காலத்து வெயிலாக மாறி பிரக்ஞை என்ற நதியைத் தண்ணீர் இல்லாமல் வற்றச்செய்து, மன மெனும் மயிலானது (மேகத்தைக் கண்ட மயில் குதூகலத் துடன் மழை வருவதை எதிர் நோக்கி ஆடும்) துக்கத்தால் மெலிந்து வாடி விடுகிறது. அது சமயம் தேவியின் திவ்யத் தாமரைப் பாதங்கள். கருமுகிலாக மாறி ஆவணி மாதத்து மழையாகப் பெய்கிறது. (78)

विनम्राणां चेतोभवनवलभीसीम्नि चरण-
प्रदीपे प्राकाश्यं दधति तव निर्धूततमसि ।
असीमा कामाक्षि स्वयमलघुदुष्कर्मलहरी
विघूर्णन्ती शान्तिं शलभपरिपाटीव भजते ॥

வினம்ராணாம் சேதோபவனவல பீஸீம்னி சரண
ப்ரதீபே ப்ராகாஸ்யம் தததி தவ நிர்தூததமஸி |
அஸீமா காமாக்ஷி ஸ்வயமலகுது ஷ்கர்மலஹரீ
விகூர்ணந்தீ சாந்திம் சலப பரிபாடீவ பஜதே||

தேவியின் பாதங்களை வணங்கும் உத்தமர்களின் மனமெனும் வீட்டின் மேன்மாடி என்னும் உப்பரிகையிலே, தேவியின் சரணங்கள் என்ற நல் விளக்கானது இருளை விரட்டிப் பிரகாசத்தை அளிக்கிறது. அளவில்லாத, எண்ணிறந்த கொடிய தீவினைக் கூட்டங்கள் விளக்கில் விழும் விட்டில் பூச்சிகளைப் போல் தேவியின் பாதமெனும் தீபத்தில் தீவினைக் கூட்டங்கள் பொசுங்கி விடுகின்றன. (79)

विराजन्ती शुक्तिर्नखकिरणमुक्तामणितते:
विपत्पाथोराशौ तरिरपि नराणां प्रणमताम् ।
त्वदीय: कामाक्षि ध्रुवमलघुवह्निर्भववने
मुनीनां ज्ञानाग्नेररणिरयमंघ्रिर्विजयते ॥

விராஜந்தீ சுக்திர் நககிரண முக்தா மணிததே:
விபத்பாதோரா சௌதரிரபி நராணாம் ப்ரணமதாம் |

த்வதீய: காமாக்ஷி த்ருவமலகு வஹ்னி பவவனே
முனீனாம் ஜ்ஞானாக்னே அரணி ரயமங்க்ரிர் விஜயதே ||

தேவியின் திருவடிகளின் நகங்கள் முத்து மணிக்கு வியலுக்குப் பிறப்பிடமான முத்துச்சிப்பி, முத்துச்சிப்பியோ கடலில் விளைவது. இந்த முத்துச் சிப்பிகள். ஸம்ஸாரக் கட லைக் கடத்துவிக்கும் மரக்கலம். தெப்பம், தோணி ஆகும். மேலும் ஸம்ஸாரக்காட்டை அழிக்கும் பெருந்தீயாகவும் விளங்கும். அந்த தீயும் முனிவர்கள் ஞானம் என்னும் அருந்தவமியற்றும் அதனைக் கடைந்து கொடுக்கும அரணிக் கட்டை, அப்படியும் தேவியின் திருவடிகள் விளங்குகிறது. சிப்பிக்கு ஒருமுத்து தான் இருக்கும். ஆயினும் தேவியின் நக கிரணங்களோ; மிக நெருக்கமாக அமைந்ததால் மிகவும் ஒளி வீசுகிறது. தேவியின் பாதங்களைக் பாவக்கடலைக் கடத்துவிக்கும் தெப்பம், சம்ஸாரத்தைத் தொலைக்கும் தீ, அந்தத் தீயையும் கடைந்தெடுக்கும் அரணிக்கட்டையாகவும்; எப்படி எல்லாம்தான் செயல்படுகிறது. இது மிகவும் அதிசயமே, ஆயினும் உண்மையே. (80)

समस्तैः संसेव्यः सततमपि कामाक्षि विबुधैः
स्तुतो गंधर्वस्त्रीसुललितविपञ्चीकलरवैः ।
भवत्या भिन्दानो भवगिरिकुलं जृम्भिततमो-
बलद्रोही मातश्चरणपुरुहूतो विजयते ॥

ஸமஸ்தை ஸம்ஸேவ்ய: ஸததமபி காமாக்ஷி விபுதை:
ஸ்துதோ கந்தர்வஸ்த்ரீ ஸுலலித விபஞ்சி கல்ரவை: |
பவத்யா பிந்தானோ பவகிரிகுலம் ஜ்ரும்பி ததமோ:
பலத்ரோஹீ மாதஸ்சரண புருஹூதோ விஜயதே ||

தேவேந்திரன் தேவலோக அரசன், திக்பாலர்களுக்கு அதிபதி தேவர்கள், (ஞானிகள்) மற்றும் பலரையும் ஆட்சிசெய்து நல்லன செய்பவன், தேவ சபையில் கந்தர்வ ஸ்திரீகள் (ஸங்கீதத்தை கந்தர்வகானம் என்று சிறப்பித்துச் சொல்வது வழக்கம்.) வீணை இசைத்து ஸ்துதிபாடுகிறார்கள். தேவியின் திருவடிகளை தேவேந்திரனுக்கு ஒப்பாகக் கூறுகிறார். தேவேந்திரன் தமோகுணம் கொண்ட பலாஸுரனை அழித் ததுபோல் தேவியின் திருவடிகள் ஸம்ஸாரம் என்ற மலைத் தொடரைப் பிளந்து எறிகிறது. தேவவேந்திரன் வஜ்ராயுகத் தால் எதிரிகளைப் பிளப்பது போல் வஜ்ராயுதத்தால் மலைகளின் சிறகுகளை வெட்டிய தாகவும் வரலாறு உள்ளது. (81)

वसन्तं भक्तानामपि मनसि नित्यं परिलसद्-
घनच्छायापूर्णं शुचिमपि नृणां तापशमनम् ।

नखेन्दुज्योत्स्नाभिः शिशिरमपि पद्मोदयकरं
नमामः कामाक्ष्याश्चरणमधिकाश्चर्यकरणम् ॥

வஸந்தம் பக்தானாமபி மனஸி நித்யம் பரிலஸத்
கனச்சாயா பூர்ணம் சுசிமபி ந்ருணாம் தாபஸமனம் |
நகேந்து ஜ்யோத்ஸ்னாபி: சிசிரமபி பத்மோதயகரம்
நமாம: காமாக்ஷ்யாஸ் சரண மதிகாஸ் சர்யகரணம் ||

பக்தர்களின் மனதில் தேவியின் பாதங்கள் எப்பொழுதும் வஸந்தகாலம் என்ற சுகமாக நினைவையே, அடர்ந்த எழிலையே உண்டாக்குகிறது. மிகவும் பரிசுத்தமான பாதங்கள் 'சுசி'யானது ஆயினும் தாபங்களை சமனப்படுத்தி, தாபத்திர யங்களை நீக்குவதாகவே இருக்கிறது. தேவியின் கால் நகங்க ளாகிய சந்திரர்களின் நிலாவொளி 'சிசிதமாய்' குளிர்ந்தது இருந்தும் தாமரைகளை மலரச் செய்கிறது நிலாவும் சிசிரருது என்ற பனிக்காலமும் தாமரை மலரை வாடச் செய்யும். இங்கு தேவியின் பாத தாமரைகளோ, தாமரைகளுக்கு தேவியின் பாதத்தை ஒத்தவை என்ற பெருமையை அளிக்கிறது. பத்மா-லக்ஷ்மியின்; உதயம்-உத்பத்தி; பத்ம-தாமரைப்பூக்களுக்கு; உத்-அதிகமான; அயம்-க்ஷேமம்; பத்ம-தாமரைப் பூக்களின்; உதயம்-உத்பவம் பத்மோத யகரம். (82)

कवीन्द्राणां नानाभणितिगुणचित्रीकृतवचः
प्रपञ्चव्यापारप्रकटनकलाकौशलविधिः ।
अधः कुर्वन्नब्जं सनकभृगुमुख्यैर्मुनिजनैः
नमस्यः कामाक्ष्याश्चरणपरमेष्ठी विजयते ॥

கவீந்த்ராணாம் நாநாபணி திகுண சித்ரீக்ருதவச:
ப்ரபஞ்ச வ்யாபார ப்ரகடன கலா கௌஸலவிதி: |
அத: குர்வந்நப்ஜம் ஸனக ப்ருகு முக்யைர் முனிஜனை:
நமஸ்ய: காமாக்ஷ்யாஸ்சரண பரமேஷ்டீ விஜயதே||

காமாக்ஷியின் சரணங்களான ப்ரம்மா கவியரசர்களின் நானாவித அழகும், இனிமையும் நிறைந்த சொற்களால் அமைந்த கவிதைகளை அமைக்கும் தொழிலால் கலைத் திறன் நிரம்பியவராகிறார். கவிகளின் உலகம் என்றே ஒன்று இருக்கிறது. கவிவாணர்கள் அமைத்த கவிகளின் சுவையை அவர்களும் பருகுகிறார்கள் பருகவும் வைக்கிறார்கள். அடையும். வாக்சித்தி, கவித்வம் மற்றி மிக அழகாகக் கூறப்பட்டுள்ளது நான் முகப்பரும்மா

தாமரையில் அமர்ந்தவர் உலகத்தின் உயிர்களை சிருஷ்டிக்கிறார் பிரம்மா ஜகத் சிருஷ்டிதான் செய்கிறார். ஆனால் தேவி பாத கமல ப்ரும்மாவோ, ஸ்மரணமாத்திரமே மஹா கவிகளை ஸ்ருஷ் டிக்கும் அதாவது வாங்மய ப்ரபஞ்சத்தை சிருஷ்டிப்பதாக, ஸனகர், பிருகுபோன்ற முனிவர்களால் வணங்கத்தக்க வராக விளங்குகிறார். அவரை முன்பு தேவியின் பாதங்களை இந்திரனாக்கிய மூககவி இப்பாடலில் ப்ரம்மா வாக்குகிறார். (83)

भवत्याः कामाक्षि स्फुरितपदपङ्केरुहभुवां
परागाणां पूरैः परिहृतकलङ्कव्यतिकरैः ।
नतानामामृष्टे हृदयमुकुरे निर्मलरुचि
प्रसन्ने निःशेषं प्रतिफलति विश्वं गिरिसुते ॥

பவத்யா: காமாக்ஷி ஸ்புரித பதபங்கேருஹா புவாம்
பராகாணாம் பூரை: பரி ஹ்ருத கலங்கவ்யதிகரை: |
நதானாம் ஆம்ருஷ்டே ஹ்ருதயமுகுரே நிர்மலருசி
ப்ரஸனனே நிஸ்சேஷம் ப்ரதிபலதி விஸ்வம் கிரிஸுதே||

தேவி காமாக்ஷி மலைமகள், தேவியின் திருவடித்தாமரைகள் மலர்ந்து ஒளி வீசுகின்றதுடன், மகரந்தப் பொடியுடன் விளங்குகிறது. தேவியின் பாதங்களில் நிர்மல ஹ்ருதயம் படைத்த அடியார்கள் வணங்குகிறார்கள். அவர்களின் ஹ்ருதயம் என்னும் கண்ணாடியை தேவியின் பாதத்தின் மகரந்தப்பொடி துடைத்து அதன் சுவடுகளைப் போக்கி வணங்குபவர்களின் மனதெனும் மாசற்ற கண்ணாடியில் தேவியின் பாதங்களைப் பிரதிபலிக்கிறது. அன்னை அகி லாண்ட நாயகி அல்லவா! எனவே வணங்குபவர்களின் மனக்கண்ணாடியில் உலகமே பிரதிபலிக்கிறது. (84)

तव त्रस्तं पादात्किसलयमरण्यान्तरमगात्
परं रेखारूपं कमलममुमेवाश्रितमभूत् ।
जितानां कामाक्षि द्वितयमपि युक्तं परिभवे
विदेशे वासो वा शरणगमनं वा निजरिपोः ॥

தவ த்ரஸ்தம் பாதாத் கிஸலயமரண்யாந்தர மகாத்
பரம் ரேகா ரூபம் கமலமமுமே வாஸ்ரித மபூத் |
ஜிதானாம் காமாக்ஷி த்விதயமபி யுக்தம் பரிபவே
விதேசே வாஸோ வா சரண கமனம் வா நிஜரிபோ: ||

தேவியின் திருவடித்தாமரை தளிர்களையும் விட மென்மையானது அதனால் தளிர்கள் காட்டில் மரங்களில் காணப்படுவதை இங்கு சிலேடையாக தளிர்கள் பயந்து காட்டில் வசிக்கிறது என்று கூறுகிறார். தேவியின் பாதங்களில் தாமரையின் ரேகைகள் காணப்படுகிறது. எனவே தாமரை மலரானது தேவியின் பாதங்களால் தோல்வி அடைந்துவிட்டதைப் போல் தோன்றுகிறது. தோற்றவர்கள் ஜயித்தவர்களின் கண் முன்னே நில்லாமல் வெளிநாட்டில் மறைந்து வாழலாம். இது சாத்யமில்லாத இடத்தில் ஜெயித்த வர்களையே அண்டியும் வாழலாம். தோற்றவர் மறைந்து வாழ்வதை தளிர் களும். ஜயித்தவர்களிடையே உடன் வாழ்வதை தாமரைமலர்களும் அனுஷ் டிக்கிறது. அதிசயமான கற்பனை தாமரை பத்மரேகையாக பாதத்தை ஆச்ர யித்துள்ளது. (85)

गृहीत्वा याथार्थ्यं निगमवचसां देशिककृपा-
कटाक्षार्कज्योतिश्शमितममताबन्धतमसः ।
यतन्ते कामाक्षि प्रतिदिवसमन्तर्द्रढयितुं
त्वदीयं पादाब्जं सुकृतपरिपाकेन सुजनाः ॥

க்ருஹீத்வா யாதார்த்யம் நிகம வசஸாம் தேசிக க்ருபா
கடாக்ஷார்க்கஜ்யோதிஸ் சமித மமதா பந்த தமஸ: |
யதந்தே காமாக்ஷி ப்ரதி திவஸமந்த்ர த்ரடயிதும்
த்வதீயம் பாதா ப்ஜம் ஸுக்ருத பரிபாகேன ஸுஜனா: ||

அக்ஞான திமிராந்தஸ்ய ஞானாஞ்ஜன சலாகயா
சக்ஷுருன் மீலிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம:

ஸத்குருவின் கிருபை நிறைந்த கடாக்ஷம் என்ற ஞான சூரியன் மகாரத் தால் ஏற்பட்ட அஞ்ஞானம் என்னும் இருளை நீக்குகிறது. ஞானம் என்ற அஞ் ஜனத்தை (மை) கண்களைத்திறக்கச் செய்து, இட்டுவிடுகிறது. புண்யசாலிக ளான ஸாதுக்கள் பூர்வ புண்ய வசத்தால் வேத நெறியில் நின்று சத்தியமாக விளங்கும், தேவியின் திருவடித் தாமரை களில் தங்கள் மனதை அர்ப்பணிக்கி றார்கள். வேதம் நமக்கு செய்ய வேண்டியதை விதி என்றும் தள்ள வேண்டியதை நிஷேதம் என்றும் கற்பிக்கிறது. வேதத்தின் பெருமையை திருமூலர் இவ்வாறு விளக்குகிறார். வேதத்தை விட்ட அறம் இல்லை. வேதத்தில் ஓதத்தகு எல்லாம் உள. (86)

जडानामप्यम्ब स्मरणसमये त्वच्चरणयोः
भ्रमन्मन्थक्ष्माभृद्घुमुघुमितसिन्धुप्रतिभटाः ।

प्रसन्नाः कामाक्षि प्रसभमधरस्पन्दनकलाः (राः)
भवन्ति स्वच्छन्दं प्रकृतिपरिपक्वाः भणितयः ॥

ஜடானாமப்யம்ப ஸ்மரணசமயே த்வச்சரணயோ:
ப்ரமன் மந்தக்ஷ்மா ப்ருத்ரு முகுமித ஸிந்து ப்ரதி படா: |
ப்ரஸன்னா: காமாக்ஷி ப்ரஸபமதரஸ்பந்தனகரா
பவந்தி ஸ்வச்சந்தம் ப்ரக்ருதிபரிபக்வா பணிதய: ||

ஸ்ரீகாமாக்ஷியின் பாதஸ்மரணம் மந்த புத்தி உள்ளவர் களையும், தெள்ளிய கருத்துடைய கவிகள் புனைய வைக் கிறது என்பது இப்பாடலின் கருத்து. மந்தரமலையால் கடலைக் கடைய, கும், கும், என்ற ஒலி எழும்பிற்று. அதுபோல் தேவி த்யான தத்பரர்களுக்கு உதடுகள் துடிக்க இயல்பாகவே வாக்குகள் வெளிவருகின்றன. ஸௌந்தர்யலஹரி 15,16,17 ஸ்லோகங்கள் 'சாரஸ்வத ப்ரயோகம்' என்பதாக தேவி தாஸர்களுக்கு தேனும், பாலும், கற்கண்டும் கலந்தாற்போல இனிமையாக கவித்வம், மதுரமான சொல்லழகு, ஆழ்ந்த, தெளிந்த கவித்திறன் ஏற்படும் என்று கூறுகிறது. இந்த வரிசையில் மூகர், கம்பர், காளிதாஸர் இன்னும் எவ்வளவோ பேர் உள்ளனர். (87)

वहन्नप्यश्रान्तं मधुरनिनदं हंसकमसौ
तमेवाधः कर्तुं किमिव यतते केलिगमने ।
भवस्यैवानन्दं विदधदपि कामाक्षि चरणो
भवत्यास्तद्द्रोहं भगवति किमेवं वितनुते ॥

வஹன்னப்யஸ்ராந்தம் மதுரநிநதம் ஹம்ஸகமஸௌ
தமே வாத: கர்த்தும் கிமிவ யததே கேலிகமனே |
பவஸ்யை வானந்தம் விததபி காமாக்ஷி சரணோ
பவத்யாஸ்தத்ரோஹம் பகவதி கிமேவம் விதனுதே ||

தேவி காமாக்ஷியின் திருப்பாதங்களில் 'ஹம்ஸகம்' என்ற சிலம்பு எப்பொழுதும் இன்னொலி செய்து கொண்டிருக்கிறது. பாதங்கள் சிலம்பை தலைமீது ஏந்திக் கொண்டிருக்கிறது. பவ தேவரென்னும் பரமேஸ்வரனுக்கு ஆனந்தம் அளிக்கும் ஸ்ரீகாமாக்ஷி தேவி நம்மை யெல்லாம் பவம் என்னும் ஸம்ஸாரத்தை அழித்துக் காப்பாற்றுவது, மோக்ஷம் அளிப்பது அதிசயோத்தி யாகவே இருக்கிறது. காமன் கையிலும் கரும்பு வில், பஞ்சபாணம்; காமாக்ஷி கையிலும் கரும்புவில், பஞ்ச பாணம். முன்னது காமத்தை விளைவிக்கிறது. பின்னது காமத்தினின்றும் நம்மைக் [illegible]கிறது. (88)

यदत्यन्तं ताम्यत्यलसगतिवार्तास्वपि शिवे
तदेतत्कामाक्षि प्रकृतिमृदुलं ते पदयुगम् ।
किरीटैः संघट्टं कथमिव सुरौघस्य सहते
मुनीन्द्राणामास्ते मनसि च कथं सूचिनिशिते ॥

யதத்யந்தம் தாம்யத்யலஸகதி வார்த்தாஸ்வபி சிவே
ததேதத் காமாக்ஷி ப்ரக்ருதி ம்ருதுலம் தே பதயுகம் |
கிரீடை: ஸங்கட்டம் கதமிவ ஸுரௌகஸ்ய ஸஹதே
முனீந்த்ராணாமாஸ்தே மனஸிச கதம் ஸூசிநிசிதே ||

லலிதாத்ரிசதியில் 'ஹம்ஸகதி' என்று உள்ளது. ஹம்ஸம்-பாத ஸரம்; கதி-பாதம் மற்றும் இங்கு அன்ன நடையாள் என்று கொள்ளலாம். ஏகாக்ர சித்தர்களின் ஊசி போன்ற சித்தம் உடையவர்களின் ஹிருதயத்தில் எப்படித் தான் தேவி வீற்றிருக்கிறாளோ! என்று கவிதன் உள்ளார்ந்த அன்பைக் கனிவை வெளிப்படுத்துகிறார்.

"தழுவுமையால் முன்னும் தமிழிறைற் பின்னும்
தொழுமிறையால் மேலும் சுவடு-கெழுமுவ;
இன்றால் எனுங்குறைபோம், என் மனஞ்சேர வாட்போக்கி
அன்றால் அமர்ந்தாய் அடி"

வாட்போக்கிக்கலம்பகம்-திரு. மீனாக்ஷி சுந்தரம்பிள்ளை 'இறைவனே! உம்மை உமையம்மை தழுவியதால் முன் புறத்தில் தழும்பு, தமிழரசன் பாண்டியன் பிரம்பு கொண்ட டிக்க முதுகில் தழும்பு, அர்ஜுனன் வில்கொண்டு அடிக்கத் தலையில் தழும்பும் ஏற்பட்டது. கீழ்ப்பக்கம் ஓர் தழும்பு இல்லை என்றால், ஈசனே என் மனம் (நெஞ்சு) என்னும் கல்வின் மேல் வந்து வீற்றிருப்பாயாக! (89)

मनोरङ्गे मत्के विबुधजनसंमोदजननी
सरागव्यासङ्गं सरसमृदुसञ्चारसुभगा ।
मनोज्ञा कामाक्षि प्रकटयतु लास्यप्रकरणं
रणन्मञ्जीरा ते चरणयुगलीनर्तकवधूः ॥

மனோரங்கே மத்கே விபுதஜன ஸம்மோத ஜனனீ
ஸராகவ்யா ஸங்கா ஸரஸம்ருது ஸஞ்சார ஸுபகா |

மனோஜ்ஞா காமாக்ஷி ப்ரகடயது லாஸ்ய ப்ரகரணம்
ரணன் மஞ்ஜீராதே சரணயுகலீ நர்த்தகவதூ: ||

காமாக்ஷி தேவியின் சரணயுகளங்களை இந்தப் பாட்டில் ஒரு நாட்டியப் பெண்ணாக உவமிக்கிறார். மனமென்னும் நாட்டிய மேடையில் காற்சிலம்புகள் கல, கல, என்று ஒலி செய்ய ராகத்தோடும். சங்கீத முறை தவறாத ஜதிகளுடன் செந்நிறப் பாதங்கள் மேலும் சிவக்கும்படி தேவர்களுக்கும், ஞானிகளுக்கும் பேரானந்தம் உண்டாகும்படி தேவி லாஸ்யம் என்ற நர்த்தனத்தை செய்கிறாள். நம் மனமெனும் தாமரையில் தேவிதன் தாமரைப் பாதத்தை மெதுவாக வைத்து அழகு நிறைந்த, மனத்திற்கு மிக ரம்யமான நடனமிடுகிறாள். ஸௌந்தர்யலஹரி 41வது பாடல். 'தவாதாரே மூலே ஸஹஸமயயா லாஸ்யபரயா' ஸ்திரீகள் நடனம் லாஸ்யம், ஆண்கள் ஆடுவது தாண்டவம் சித்சபேசம், சிவகாமியைக் குறிப்பது இந்தப்பாடல் என்பது சிலர் கருத்து. (90)

परिष्कुर्वन्मातः पशुपतिकपर्दं चरणराट्
पराचां हृत्पद्मं परमभणितीनां च मुकुटम् ।
भवाख्ये पाथोधौ परिहरतु कामाक्षि ममता-
पराधीनत्वं मे परिमुषितपाथोजमहिमा ॥

பரிஷ்குர்வன் மாத: பசுபதி கபர்தம் சரணராட்
பராசாம் ஹ்ருத்பத்மம் பரமபணி தினாம் சமகுடம் |
பவாக்யே பாதோதௌ பரிஹரது காமாக்ஷி மமதா
பராதீனத்வம் மே பரிமுஷித பாதோஜ மஹிமா ||

தேவியின் தாமரைப் பாதங்களை நினைந்து நினைந்து விராகிகள் மனமும் தாமரைபோல் மென்மை, சிவப்பு ஆகிறது. அப்படி நல்ல மனமுடையவர் களுக்கு அரசராக விளங்கும் தேவியின் திருவடித்தாமரைகள், ஸம்ஸாரம் என்னும் மமகாரக் கொடுங்கோலுக்கு ஆட்பட்டிருக்கும் நம்மைப் போன்றவர்களின் வேண்டாகுணங்களை நீக்கி, திருவடி என்னும் அரசர் காத்தருளவேண்டும். அரசனின் கடமை தப்பு செய்தவர்களைத் திருத்துவதும் அவர்களை நல்வழிப்படுத் துவது மாகும் இங்கு தேவியின் பாதங்கள் அரசனாக இருந்து நம்மை எல்லாம் ஆட்கொள்ளவேண்டும். (91)

प्रसूनैः संपर्कादमरतरुणीकुन्तलभवैः
अभीष्टानां दानादनिशमपि कामाक्षि नमताम् ।
स्वसङ्गात्कङ्केलिप्रसवजनकत्वेन च शिवे
त्रिधा धत्ते वार्तां सुरभिरिति पादो गिरिसुते ॥

ப்ரஸூனை: ஸம்பர்காத் அமரதருணீகுந்தலபவை:
அபீஷ்டானாம் தானாத் அனிசமபி காமாக்ஷி நமதாம் |
ஸ்வஸங்காத் தங்கேலி ப்ரஸவ ஜனகத்வேன ச சிவே
த்ரிதா தத்தே வார்த்தாம் ஸுரபிரிதி பாதோ கிரிஸுதே ||

ஸுரபி என்ற சொல் நறுமணம் உடையது. காமதேனு (நினைத்ததை அளிக்கும்) வஸந்த காலம் என்றும் பொருள் படும். மேலும் சம்பக மரம், கடம்பமரம், ஜாதிக்காய் என்றும் பொருள்கள் உள்ளது. தேவி காமாக்ஷி மலைய ரசனின் மகள், மங்களமே வடிவானவள் தெய்வமகளின் கூந்தல்களின் மலர்களோடு சேர்ந்துள்ள தன்மையால், (கற்பகவிருக்ஷம் வேண்டியதை அளிக்கும், அதன் புஷ்பமும் அதன் குணம் உள்ளது) தேவியின் திருவடிகளில் நமஸ்கரிப்பவர்களுக்கு வேண்டியவற்றை எல்லாம் அளிக்கின்றது. அசோக மரம் தளிரும், பூவும் நிறைந்து காணப்படுவதுபோல், தேவியின் திருவடிகளில் சரணம் அடைந்தவர்கள் வாழ்க்கையில் எல்லா வளங்களும் செழித்து வாழ்வார்கள். (92)

महामोहस्तेनव्यतिकरभयात्पालयति यो
विनिक्षिप्तं स्वस्मिन्निजजनमनोरत्नमनिशम् ।
सरागस्योद्रेकात्सततमपि कामाक्षि रुचिरं
किमेवं पादोऽसौ किसलयरुचिं चोरयति ते ॥

மஹா மோஹஸ்தேன வ்யதிகரபயாத் பாலயதியோ
வினிக்ஷிப்தம் ஸ்வஸ்மின் முனிஜன மனோரத்னமநிசம் |
ஸ ராகஸ்யோத்ரேகாத் ஸததமபி காமாக்ஷி தரஸா
கிமேவம் பாதோஸௌ கிஸலயருசிம் சோரயதிதே ||

அடியார்களை மோஹமெனும் வலைக்குட்படாமல் காப்பாற்றுவதே தேவியின் பாதங்களின் கர்த்தவ்யமாகிறது. அடியார்களின் மனமெனும் ரத்னத்தை மோஹமென்னும் திருடன் அபஹரிக்க லாகாது, என்று தேவியின் செந்நிறப் பாதங்கள் இரவும், பகலும் அதையே சிந்தையில் கொண்டுள் ளதால், (ராகம்=ஆசை; அதன் நிறம் சிவப்பு; கருணையின் நிறமும் சிவப்பு) அன்பு என்ற கனிவினால் தேவியின் மனம் தளிர்போல் துவளுவதாகவும், அந்தத் தளிரின் காந்தி ஆசை மிகுவதால் செந்நிறமடைகிறதே; அந்தப் பாதங்கள் என்ற திருடன் திருடிக்கொண்டிருப்பதுபோல் தோற்றமளிக்கிறது. (93)

सदा स्वादुंकारं विषयलहरीशालिकणिकां
समास्वाद्य श्रान्तं हृदयशुकपोतं जननि मे ।

कृपाजाले फालेक्षणमहिषि कामाक्षि रभसात्
गृहीत्वा रुन्धीथाश्चरणयुगली पञ्जरपुटे ॥

ஸதா ஸ்வாதுங்காரம் விஷய லஹரீ சாலிகணிகாம்
ஸமாஸ்வாத்ய ஸ்ராந்தம் ஹ்ருதய சுகபோதம் ஜனனிதே|
க்ருபாஜாலே பாலேக்ஷணமஹிஷி காமாக்ஷி ரபஸாத்
க்ருஹீத்வாருந்தீதாஸ்தவ பதயுகீ பஞ்ஜரபுடே ||

நெற்றிக்கண்ணால் காமனை அழித்தார். அதன் பின் தேவியின் கடைக்கண் பார்வையால் உயிர் பெற்ற காமனால் வசப்படுத்தப்பட்டார். எனவே தேவிக்கு எந்தக் காரியமும் செய்வது அரிதன்று. அந்தப் பரமேஸ்வரனையே தனக்குட் படுத்திக் கொண்டவள். தேவியின் பாதங்களை கிளிக்கூட்டாக உருவகிக்கிறார். பஞ்ச இந்திரியங்களாலும் இந்திரிய சுகங்களை அனுபவிக்கிறோம். இந்த விஷய சுகமானது அலை போலப் பரப்பிய நொய்யரிசியைப் புசித்துப்புசித்து அலுத்துவிட்ட இந்த மனித மனமெனும் கிளிக்குஞ்சை, அம்மா தேவி காமாக்ஷி! உன் பாதமெனும் கிளிக்கூட்டினுள் என்று அடைத்து வைப்பா யம்மா! அதை இப்பொழுதே செய்வாயம்மா! என்று மூககவி மனமுருகி நம்மை அழைக்கிறார். (94)

धुनानं कामाक्षि स्मरणलवमात्रेण जडिम-
ज्वरप्रौढिं गूढस्थिति निगमनैकुञ्जकुहरे ।
अलभ्यं सर्वेषां कतिचन लभन्ते सुकृतिनः
चिरादन्विष्यन्तस्तव चरणसिद्धौषधमिदम् ॥

துனானம் காமாக்ஷி ஸ்மரண லவமாத்ரேண ஜடிம
ஜ்வரப்ரௌடிம் கூடஸ்திதி நிகம நைகுஞ்ஜ குஹரே |
அலப்யம் ஸர்வேஷாம் கதிசன லபந்தே ஸுக்ருதின
சிராதன் விஷ்யந்தஸ்தவ சரண ஸித்தௌஷதமிதம் ||

தேவி காமாக்ஷியை நினைத்தாலே முக்தி கிட்டுகிறது. 'ஸ்மரணமுக்தி: தரிசன முக்தி; ஜனனமுக்தி; இந்தத் தலங்கள் எல்லாம் நாம் அறிந்ததே. தேவியின் நினைவில் அக்ஞானம் என்னும் ஜடத்தன்மை! அது ஒரு ஜ்வரம். அது விலகுகிறது. அக்ஞானம் அகல்கிறது. காடு மலை எல்லாம் தேடி அலைந் தாலும் கொடிய நோய்களை போக்கும் மூலிகைகள் புண்ய சாலிகளுக்கே கிட்டுவது போல் வேதத்தின் உள்ளே மறைக்கப்பட்ட அரு மருந்தான தேவி

யின் பாதம் வெகுகாலம் தேடி அலைந் தாலும் புண்ணியசாலிகளுக்கே கிட்டுகிறது. (95)

रणन्मञ्जीराभ्यां ललितगमनाभ्यां सुकृतिनां
मनोवास्तव्याभ्यां मथिततिमिराभ्यां नखरुचा ।
निधेयाभ्यां पत्या निजशिरसि कामाक्षि सततं
नमस्ते पादाभ्यां नलिनमृदुलाभ्यां गिरिसुते ॥

ரணன் மஞ்ஜீராப்யாம் லலித கமநாப்யாம் ஸுக்ருதினாம்
மனோ வாஸ்தவ் யாப்யாம் மதி ததி மிராப்யாம் நகருசா |
நிதேயாப்யாம் பத்யா நிஜசிரஸி காமாக்ஷி ஸததம்
நமஸ்தே பாதாப்யாம் நலின ம்ருதுலாப்யாம் கிரிஸுதே ||

தேவியின் பாதங்களில் சிலம்புகள் இனிமையாக ஒலிக் கிறது. தேவியின் மென்னடை புண்ணிய சாலிகளின் மனதில் நிறைந்துள்ளது. அசோகமரம் தேவி பாதஸ்பரஸத்தை விரும் புவதைப் பார்த்த பரமசிவனும் அந்தப் பாத ஸ்பர்ஸத்தை விரும்புகிறார். இப்படியாக கணவனாலே சிரஸிலே வைத்துக் கொள்ளும் பாதங்கள் தேவியின் பாதங்கள். தாமரை மலர் போன்ற அந்தப் பாதங்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள். (96)

सुरागे राकेन्दुप्रतिनिधिमुखे पर्वतसुते
चिराल्लभ्ये भक्त्या शमधनजनानां परिषदा ।
मनोभृङ्गो मत्कः पदकमलयुग्मे जननि ते
प्रकामं कामाक्षि त्रिपुरहरवामाक्षि रमताम् ॥

ஸுராகே ராகேந்து ப்ரதிநிதி முகே பர்வதஸுதே
சிரால்லப்யே பக்த்யா சமதன ஜனானாம் பரிஷதா |
மனோப்ருங்கோ மத்க: பதகமலயுக்மே ஜனனிதே
ப்ரகாமம் காமாக்ஷி த்ரிபுரஹரவாமாக்ஷி ரமதாம் ||

நாம் எப்படி நல்லகதி அடைவது என்று தளர்ச்சியுற வேண்டாம். நம்தேவி காமாக்ஷி ஈச்வரனின் வாம பாகத்தில் வீற்றிருக்கிறாள். அவள் நம் மோகத்தையெல்லாம் களைந்து ஆட்கொள்வாள். மனமென்னும் வண்டு தேவியின் பாத தாமரை, அதுவும் மிகச்சிவந்த தாமரை; மிகுந்த பக்தியும், மனச்சாந்தியும் உடைய மனைசீலர்களுக்கு, முனிவர்களுக் கும் வெகு

காலத்திற்குப் பின்னே கிடைக்கும் நிலை, ஆனாலும் அறுகால் வண்டாயிருக்கும் தன்மையால் நாம் வெகு விரைவில் தேவியின் பாததாமரையைப் பெற்று விடுகிறோம். முனிவர்கள் தவங்களால் வருந்திப் பெறும் தாமரையை நாம் வண்டாக மாறினால் சுலபமாக அடையலாம் என்பதே கருத்து. (97)

शिवे संविद्रूपे शशिशकलचूडप्रियतमे
शनैर्गत्यागत्या जितसुरवरेभे गिरिसुते ।
यतन्ते सन्तस्ते चरणनलिना लानयुगले
सदा बद्धुं चित्तप्रमदकरियूथं दृढतरम् ॥

சிவே ஸம்வித்ரூபே சசிசகல சூடப்ரியதமே
சனைர் கத்யாகத்யா ஜிதஸுரவரேபே கிரிஸுதே|
யதந்தே ஸந்தஸ்தே சரணநலினா லானயுகலே
ஸதாபத்தம் சித்தப்ரமதகரி யூதம் த்ருடதரம்||

மங்களகரமான சிவையான ஸ்ரீகாமாக்ஷி தேவி நன்றாய் மலர்ந்த ஞானத் தாமரை போன்றவள் சந்த்ர கலையை சிரோ பூஷணமாகச் சூட்டிக் கொண்டிருக்கும் பரமசிவ பத்தினியான தேவி. மலைமகள் மெல்ல மெல்ல உலாவி வருகிறாள். நடை அழகில் தேவேந்திரனின் யானை ஐராவதத்தை ஜயித்தவள். யானை என்று நடையை உருவகப்படுத்தியதால், பாத தாமரைகளைக் கட்டுத்தறிகள் என்று கூறலாம். மனமென் னும் மதங் கொண்ட யானைமந்தையை கட்டி வைப்பதற்கு தேவியின் பாதாரவிந்தங் களையே ஸாதுக்கள் எப்பொழுதும் முயன்று வருகிறார்கள். தேவியின் நடை 'கஜ காமினி' என்று யானையின் நடையை உருவகப் படுத்தியது இங்கு மிக விசேஷமாக, மிக அழகாக அமைந்துள்ளது. (98)

यशः सूते मातर्मधुरकवितां पक्ष्मलयते
श्रियं दत्ते चित्ते कमपि परिपाकं प्रथयते ।
सतां पाशग्रन्थिं शिथिलयति ते किं न कुरुते
प्रपन्ने कामाक्ष्याः प्रणतिपरिपाटी चरणयोः ॥

யச: ஸூதே மாத: மதுரகவிதாம் பக்ஷ்மலயதே
ஸ்ரியம் தத்தே சித்தே கமபி பரிபாகம் ப்ரதயதே |
ஸதாம் பாசக்ரந்தீம் சிதிலயதிதே கிம்ந குருதே
ப்ரபன்னே காமாக்ஷி ப்ரணதி பரிபாடீ சரணயோ: ||

தேவி காமாக்ஷியை சரண்புகுந்தவன் விஷயத்தில் அந்தப் பாதங்கள் என்னென்ன செய்கின்றது! என்னதான் செய்ய வில்லை? புகழை வாரி வழங்குகிறது. இனிய கவிதையைச் செழிப்பிக்கிறது. அழகு, செல்வம், மனப்பக்குவம் அளிக்கி றது. ஆசாபாசங்களின் சிக்கலை அவிழ்க்கிறது. இதை அபிராமிபட்டரின் வாக்கில் பார்ப்போமா?

சகல செல்வங்களும் தரும் இமய கிரிராஜ
  தனயை மாதேவி! நின்னைச்
சத்யமாய் நித்ய முள்ளத்தில் துதிக்கும் உத்
  தமருக்கு இரங்கி மிகவும்
அகில மதில் நோயின்மை கல்வி, தன தான்யம்
  அழகு, புகழ், பெருமை இளமை
அறிவு, சந்தானம், வலிதுணிவு வாழ்நாள் வெற்றி
  ஆகு நல்லூழ் நுகர்ச்சி
தொகை தரும் பதினாறு பேறும் தந்தருளீ நீ
  சுகானந்த வாழ்வளிப்பாய்
சுகிர்த குணசாலி, பரிபாலி, அநுகூலி திரி
  சூலி! மங்கள விசாலி!
மகவு நான் நீதாய் அளிக்கொணாதோ? மகிமை
  வளர் திருக்கடவூரில் வாழ்க
வாமி சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்
  வாமி! அபிராமி! உமையை (99)

मनीषां माहेन्द्रीं ककुभमिव ते कामपि दशां
  प्रधत्ते कामाक्ष्याश्चरणतरुणादित्यकिरणः ।
यदीये संपर्के धृतरसमरन्दा कवयतां
  परीपाकं धत्ते परिमलवती सूक्तिनलिनी ॥

மநீஷா மாஹேந்த்ரீ ககுபபிவதே காமபி தசாம்
ப்ரததே காமாக்ஷ்யா: சரண தருணாதித்ய கிரணை: |
யதீயே ஸம்பர்க்கே த்ருதர ஸமரந்தா கவயதாம்
பரீபாகம் தத்தே பரிமலவதீ ஸூக்தி நலினீ ||

தேவியின் பாதங்கள் இவ்வளவு நேரம் தாமரையாக உருவகப்படுத்தப் பட்டது. இந்தப்பாடலில் கவிவாணர்களின் கவிதைகளே தாமரை, அதை மலர்ந்தும் சூரிய கிரணங்கள் தேவியின் பாதங்களின்றே புறப்படுகிறது. அந்த கிரணங்கள் படுவதால் கவிதை என்னும் தாமரை மலர்ந்து மணத்தைப் பரப்பி, மகரந்தங்களை காற்றில் வாரி இறைத்து, அந்த இனிமையில் திராக்ஷை, க்ஷீரம்

இவற்றைப்போல் இனிமை யுடன் பரிபக்குவம் என்னும் மலர்ச்சியை அடைகிறது. தேவியின் திருவடிக் கிரணங்களானது கிழக்கு திசையில், இந்திரனுடைய திசையில் உதய ஸூர்யன்ன போல் உதித்து, கீழ்வானத்தில் கிரணங்களைப் பரப்புவதால், நம் புத்திக்கு ஒப்பற்ற தெளிவை ஏற்படுத்துகிறது. (100)

पुरा माराराति: पुरमजयदम्ब स्तवशतै:
प्रसन्नायां यस्य त्वयि तुहिनशैलेन्द्रतनये ।
परं तत् कामाक्षि स्फुरतु तरसा कालसमये
समायाते मातर्मम मनसि पादाब्जयुगळम् ॥

புராமாரா ராதி: புரமஜயதம்ப ஸ்தவசதை:
ப்ரஸன்னாயாம்யஸ்ய த்வயிதுஹின சைலேந்த்ரதனயே |
பதம்தத் காமாக்ஷி ஸ்புரது தரஸா காலஸமயே
ஸமாயாதே மாதர்மம மனஸி! பதாப்ஜயுகலம் ||

ஹிமவானின் பெண்ணான ஸ்ரீகாமாக்ஷி தேவியை வணங்குகிறேன். தேவியின் துணை கொண்டே மன்மதவிஜயம், த்ரி புரதகனம் இரண்டும் நடைபெற்றது. ஆகையால் காலன் வரும்போது தேவியின் திருவடித் தாமரை கள் முழுபலத்துடன் மனதில் விளங்கவேண்டும். இது ப்ரார்த்தனையாகும். சிவ குமாரா! கந்தா! எனவாழ்த்தும், என் உயிர் போகும்போது அடி யேன் உன் அடைக்கலமே (கந்தரலங் காரம்-அருணகிரி). என் உயிர் போகத்துடிக்கும் போது உன் வளைக்கையால் என்னை அணைத்து ஆற்றுவாயம்மா! 'யமபடர் எனதுயிர் கொளவரின் யானேங்குதல் கண்டு தானேன்று கொளும் குயில்' (தேவேந்த்ரசங்கவகுப்பு). (101)

पदद्वन्द्वं मन्दं गतिषु निवसन्तं हृदि सतां
गिरामन्ते भ्रान्तं कृतकरहितानां परिबृढे ।
जनानामानन्दं जननि जनयन्तं प्रणमतां
त्वदीयं कामाक्षि प्रतिदिनमहं नौमि विमलम् ॥

பதத்வந்தம் மந்தம் கதிஷூநிவஸந்தம் ஹ்ருதி ஸதாம்
கிராமந்தே ப்ராந்தம் க்ருதகர ஹிதானாம் ப்ரிப்ருடே |
ஜனானாமானந்தம் ஜனனி ஜனயந்தம் ப்ரணமதாம்
த்வதீயம் காமாக்ஷி ப்ரதிதினமஹம் நௌமிவிமலம் ||

தேவி காமாக்ஷிப் பிராட்டியின் தாமரைப் பாதங்கள் அன்ன நடையைப் பழிக்கும் மெதுவான, மிருதுவான, நடை, பூப் போன்ற பாதங்கள் எனவே மிக மிருதுவாகவே அடிகள் அடியெடுத்து வைக்கும்; பூப்போன்ற ஹ்ருதய முள்ளவர்கள் ஹ்ருதயத்தில் அந்த நல்லவர்களின் ஹ்ருதய தாமரையில் குடி கொள்ளும். 'எழுதாக்கிளவி'யான அனாதியான மறை களின் வாக்குக்களின் சிகரமான, வேதங்களின் கருத்தான உபநிஷதங்களில் உறைபவள். (102)

इदं यः कामाक्ष्याश्चरणनलिनस्तोत्रशतकं
जपेन्नित्यं भक्त्या निखिलजगदाह्लादजनकम् ।
स विश्वेषां वन्द्यः सकलकविलोकैकतिलकः
चिरं भुक्त्वा भोगान्परिणमति चिद्रूपकलया ॥

இதம்ய: காமாக்ஷ்யா: சரணநலின ஸ்தோத்ர சதகம்
ஜபேந்நித்யம் பக்த்யா நிகில ஜகதாஹ்லாத ஜனகம் |
ஸவிச்வேஷாம் வந்த்யஸ்ஸகல கவிலோ கைககதிலக:
சிரம் புக்த்வா போகான் பரிணமதி சித்ரூபகலயா ||

எல்லா உலகங்களுக்கும் பேரானந்தத்தை ஏற்படுத்தும் ஸ்ரீகாமாக்ஷியின் திருவடித் தாமரைகளை துதி செய்யும் நூறு பாடல்களைக் கொண்ட இந்த சதகத்தை யார் இடை விடாமல் எப்பொகுதும் ச்ரத்தையுடன் ஜபம், பாராயணம் செய்கின் றாரோ, அவர் எல்லோராலும் வணங்கத்தக்கவராயும், கவிஸ மூஹத்தில் திலகம் போல் நடுநாயகமாகப் பிரகாசிப்ப வராகவும், நீண்டகாலம் போகங்கள் அனுபவித்து சித்கலா ரூபியான அந்தப் பரதேவதையின் ஸ்வரூபமாகவே ஆகிறார். (103)

# 3. ஸ்துதி சதகம்

पाण्डित्यं परमेश्वरि स्तुतिविधौ नैवाश्रयन्ते गिरां
वैरिञ्चान्यपि गुम्फनानि विगलद्गर्वाणि शर्वाणि ते ।
स्तोतुं त्वां परिफुल्लनीलनलिनश्यामाक्षि कामाक्षि मां
वाचालीकुरुते तथापि नितरां त्वत्पादसेवादरः ॥

பாண்டித்யம் பரமேஸ்வரிஸ்துவிதௌநைவாஸ்ரயந்தே கிராம்
வைரிஞ்சான்யபி கும்பனானி விகலத்கர்வாணி சர்வாணிதே |
ஸ்தோதும் த்வாம் பரிபுல்லநீல நஸ்யாமாக்ஷி காமாக்ஷிமாம்
வாசாலீகுருதே ததாபி நிதராம் த்வத்பாத ஸேவாதர: ||

தேவி காமாக்ஷியை ஸ்துதிக்கும் முறையில், வாக்வல்லப வரான பிரமனின் சொற்கள் திறமையற்றுப்போகின்றது. பிரம்மா தன் நாலு வாயாலும் நாலு வேதங்களையும் சொல்லிக் கொண்டிருக்கிறார். வேத வசனத்துக்கு நிகர் எதுவுமில்லை ஏதோ ஒரு சமயம் ப்ரம்மதேவர் கொஞ்சம் கர்வம் கொண்டதாக வழக்குகள் உள்ளது. ஆயினும் ஸ்ரீகாமாக்ஷியை துதி பாடும் விஷயத்தில் ப்ரம்ம தேவரின் வாக்கு கர்வமடைய முடியாததால் திறமையற்றுப்போகிறது. தேவி தாமரை போன்ற முகத்தவள்; தாமரையன்ன முகத்தில் நன்கு மலர்ந்த கருநீல (நீலோத்பலம்) பலம் போன்ற கரிய கண்களை உடையவள். அப்படிப்பட்ட எழிலரசியான தேவியை, அவள் தாமரைப் பாதங்களில் பணிவிடை செய்யும் பேறு பெற்ற பாக்ய சாலிகளை, அவளைத் தோத்திரம் செய்யும் விஷயத் தில் மிகவும் வாக்விலாஸம் உள்ளவர்களாக்குகிறது. சர்வன் என்ற பரமசிவ பத்தினியான சர்வாணீ ஆவாள்தேவி. (1)

तापिञ्छस्तबकत्विषे तनुभृतां दारिद्यमुद्राद्विषे
संसाराख्यातमोमुषे पुररिपोर्वामाङ्कसीमाजुषे ।
कम्पातीरमुपेयुषे कवयतां जिह्वाकुटीं जग्मुषे
विश्वत्राणपुषे नमोऽस्तु सततं तस्मै परज्योतिषे ॥

தாபிஞ்ச் சஸ்தபகத்விஷே தனுப்ருதாம்
தாரித்ர்ய முத்ராத்விஷே
ஸம்ஸாராக்ய தமோமுஷே புரரிபோ:
வாமாங்கஸீமா ஜுஷே|

கம்பாதீர முபேயுஷே கவயதாம்
ஜிஹ்வாகுடீம் ஜக்முஷே
விஸ்வத்ராணபுஷே நமோஸ்து
ஸததம் தஸ்மை பரஞ்ஜ்யோதிஷே ||

தேவியைப் பச்சை நிறத்தவள் என்றும் சொல்வதுண்டு தமால மரத்தின் பூங்கொத்துப் போன்ற தேக காந்தி உடையவள். அபிராமி அந்தாதியில் பச்சைநிறம் வெகுவாகப் பேசப்படுகிறது. 'பண்களிக்கும் பச்சை வண்ணமும் ஆகி மதங்கர்யகுலப்பெண்களில் தோன்றிய எம்பெருமாட்டி தன் பேரழகே' (70) 'சுடரும் கலைமதி துன்றும் சடைமுடிக்குன்றி லொன்றிப் படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில்' (48) 'சொல்லும் பொருளுமென நடமாடும் துணை வருடன் புல்லும் பரிமளப் பூங்கொடியே' (28) தன்னை அடி வணங்கும் ஜீவர்களின் ஏழ்மையை நீக்குவதும், ஸம்ஸாரம் என்னும் இருளை அகற்றுவதும், திரிபுரங்களை யழித்து பரம சிவனின் இடது தொடையில் அமர்ந்திருப்பவளும். கம்பாநதி தீரத்தை, காஞ்சியையே தன் இருப்பிடமாகக் கொண்டவளும், ஜகத்தை, உலகம் முழுவதையுமே காப் பாற்றும் வண்மை உடையதுமான, அந்தப் பரஞ்ஜோதிப் பொருளான ஸ்ரீகாமாக்ஷி பராபட்டாரிகைக்கு எங்கள் வணக் கங்கள் உரித்தாகட்டும். (2)

ये संध्यारुणयन्ति शङ्करजटाकान्तारचन्द्रार्भकं
सिन्दूरन्ति च ये पुरन्दरवधूसीमन्तसीमान्तरे ।
पुण्यं ये परिपक्वयन्ति भजतां काञ्चीपुरे मामभी
पायासुः परमेश्वरप्रणयिनीपादोद्भवाः पांसवः ॥

யே ஸந்த்யாருணயந்தி சங்கர
ஜடாகாந்தார சந்த்ரார்பகம்
ஸிந்துூரந்தி சயே புரந்தரவதூ
ஸீமந்த ஸீமாந்தரே |
புண்யம் யே பரிபக்வயந்தி பஜதாம்
காஞ்சீபுரம் மாமமீ
பாயாஸு: பரமேஸ்வரப்ரணயினீ
பாதோத்பவா: பாம்ஸவ: ||

தேவேந்திரனின் மனைவி சசிதேவி தேவியின் பாதங்க ளில் நேர்வகுடு படும்படி வணங்க, அந்த வகுடு என்னும் கூந்தல் மத்யபாகத்தில் தேவியின் பாத தூளிகளான ஸிந்தூரம் பதிகிறது. ஸ்திரீகள் எப்பொழுதும் நேர்வகிடு கொண்டு கூந்தல் முடிக்க வேண்டும். நேர்வகிடின் உச்சியில் தான் உச்சித் திலகம் என்னும் லக்ஷ்மியின் வாஸஸ்தானத்தில் குங்குமத்தால் அலங்கரிக்க முடியும். காஞ்சிபுரத்தில் தேவி காமாக்ஷியை பூஜிப்பவர்களுக்குப் புண்ணியத்தைப் பக்குவப் படுத்தி தேவியின் நினைவிலேயே தோயும் பரமானந்த மளிக்க வேண்டுகிறேன். ப்ரணயகலஹ காலத்தில் காமேஸ் வரர் ஜடா மண்டலத்தில் உள்ள நிலவின் ஒளி தேவியின் பாதங்களில் விழ வணங்குகிறார். அந்தப்பாதங்கள் நம்மை ரக்ஷிக்கட்டும். (3)

कामाडम्बरपूरया शशिरुचा कम्रस्मितानां त्विषा
कामारेरनुरागसिन्धुमधिकं कल्लोलितं तन्वती ।
कामाक्षीति समस्तसज्जननुता कल्याणदात्री नृणां
कारुण्याकुलमानसा भगवती कम्पातटे जृम्भते ॥

காமாடம்பபர பூரயா சசிருசா
கம்ரஸ் மிதானாம் த்விஷா
காமாரே: அநுராக ஸிந்து
மதிகம் கல்லோலிதம் தன்வதீ |
காமாக்ஷீதி ஸமஸ்த ஸஜ்ஜனநுதா
கல்யாண தாத்ரீ ந்ருணாம்
காருண்யாகுல மானஸா பகவதீ
கம்பாதடே ஜ்ரும் பதே ||

தேவி பரமசிவனின் காமத்தை அதிகரிக்கச் செய்யும் 'சிவானந்த காம வர்த்தனி' ஆவாள். 'காமாக்ஷி' என்ற பெயர் பற்றிப் பார்க்கலாம். 'க' என்ற ப்ரும்மா 'அ' என்ற சிவன் 'ம' என்ற விஷ்ணு மூவரும் யாருடைய அக்ஷியிலிருந்து உதித் தார்களோ அந்த தேவியே காமாக்ஷி 'கா' ஸரஸ்வதி; 'மா' லக்ஷ்மி; அலைமகள், கலை மகளான 'கா' 'மா'வை அக்ஷி யாகக் கொண்டதாலும் காமாக்ஷி என்ற பெயர் வந்தது. பரமேஸ்வரன் நெற்றிக் கண்ணால் மன்மதனை எரித்து விட்டார். சிதக்னிகுண்டத்தில் லலிதா தேவி ஆவிர்பானமானவுடன் தேவர்கள் தேவியைப் புகழ்ந்து பூஜித்து ரதி தேவியின் நிலைமையைக் கூறினார்கள். தேவி யும் மனமிரங்கி ரதியின் கணவனை உயிர்ப்பித்தாள். 'ஹர நேத்ராக்னி ஸந்தக்த காமஸஞ்ஜீவநௌஷதி; என்றபடி தேவியின் பார்வை என்னும் அம்ருதத்தால் காமன் உயிர் பெற்றதாலும் காமாக்ஷி

என்ற பெயர் ஏற்பட்டது. விரிவஞ்சி இத்துடன் விடுக்கிறேன். காமனை உயிர்ப்பித்த வைபவத்தில் தேவர்கள் அனைவரும் 'காமாக்ஷி' என்று கூறித் துதித்தார்கள். கருணை கசிந்தொழுகும் காமாக்ஷி என்று எல்லோருக்கும் மங்களங்களை வாரி வழங்குபவளாக கம்பாநதிக்கரையில் காமகோடி பீடத்தில் காமாக்ஷி பராபட்டாரிகை விளங்குகிறாள். (4)

कामाक्षीणपराक्रमप्रकटनं संभावयन्ती दृशा
श्यामा क्षीरसहोदरस्मितरुचिप्रक्षालिताशान्तरा ।
वामाक्षीजनमौलिभूषणमणिर्वाचां परा देवता
कामाक्षीति विभाति कापि करुणा कम्पातटिन्यास्तटे ॥

காமாக்ஷீண பராக்ரம ப்ரகடனம் ஸம்பாவயந்தீ த்ருசா
ஸ்யாமாக்ஷீரஸஹோதரஸ்மிதருசிப்ரக்ஷாலிதாஸாந்தரா|
வாமாக்ஷீஜனமௌலி பூஷணமணி: வாசாம் பராதேவதா
காமாக்ஷீதி விபாதிகாபி கருணாகம்பாதடின்யாஸ்தடே||

காமதேவனைத் தன் கண்ணால் உயிர்ப்பித்ததுடன், தேவி காமாக்ஷி அவனுக்குத் தங்கு தடையில்லாத ஆற்றலையும் கொடுத்தருளினாள். ஸௌந்தர்யலஹரி 5-வது பாடல் 'ஹரிஸ்த்வா மாராத்தய' 6-வது பாடல் 'தனு: பௌஷ்பம்' இவைகளில் தேவி காமனுக்கு அளித்த ஏற்றம் கூறப்படு கிறது. மகான்கள்; முனிவர்கள் ஏன் பரமேஸ்வரனே கூட காமவசப்படும்படி காமன் செய்ய, தேவி வரமளித்தாள். சகல கருணையையும் தன் கண்ணாலேயே செய்துவிட்டாள். தேவி என்றும் நித்ய யௌவனத்துடன் உள்ளவள். தேவி எப்படி இளமையோடு இருக்கிறார்களோ அதேபோல் ஸ்கந்தனும், கணபதியும் தேவியிடம் ஞானப்பால் குடிக்கும் குழந்தைகளாகவே இன்னும் இருக்கிறார்கள் ஸௌந்தர்ய லஹரி பாடல்73 'அமூதே வக்ஷோஜா' அவிதித வதூஸங்க ரஸிகௌ; குமாராவத்யாபி த்விரத வதன க்ரௌஞ்சதல னௌ' ஸ்த்ரீ ஸங்கரஸத்தை அறியாத குழந்தைகளாவே இருக்கிறார்கள். 'என்றும் இளையாய், அழகியாய்' என்று முருகனை நக்கீரர் புகழ்கிறார். ஸ்யாமா என்பதும் தேவியின் திருநாமம்தான் யௌவனப் பருவத்தின் செழிப்புடன் கூடியவள். தேவி காமாக்ஷி வாக்கு களுக்கு எட்டாதவள். வாக்குகளால் வர்ணிக்க முடியாதவள், ஆனாலும் வாக்குக ளுக்கு இருப்பிடமானவளுமான ஒப்பற்ற கருணையே வடிவான தேவி காமாக்ஷி கம்பாநதிதீரத்தில் விளங்குகிறாள். (5)

श्यामा काचन चन्द्रिका त्रिभुवने पुण्यात्मनामानने
सीमाशून्यकवित्ववर्षजननी या कापि कादम्बिनी ।

मारारातिमनोविमोहनविधौ काचित्तमःकन्दली
कामाक्ष्याः करुणाकटाक्षलहरी कामाय मे कल्पताम् ॥

ச்யாமாகாசனசந்த்ரிகா த்ரிபுவனேபுண்யாத்மனாமானனே
ஸீமா சூன்ய கவித்வ வர்ஷ ஜனனி யா காபி காதம்பினீ |
மராராதி மனோவிமோஹன விதௌ காசித்தம: கந்தலீ
காமாக்ஷ்யா: கருணாகடா க்ஷலஹரீ காமாயமே கல்பதாம் ||

நிலவு, பால்போன்ற ஒளியை சிந்தும் என்பது தான் வழக்கம். ஆனால் தேவியின் கடைக்கண் என்ற சந்திரிகை நமக்கு வாரிவழங்கும் பேறுகளை கரிய ஒளி வீசும் நிலவு என்கிறார். புண்ணிய சாலிகளின் முகத்திலிருந்து எல்லை யில்லா இனிய ரஸம் பொருந்திய கவிதையை மழைபோல் பொழியும் மேகம் போல் தேவியின் கடைக்கண் கடாக்ஷம் கவிவாணர்களுக்கு கருணை பொழிகிறது. காமனை வென்ற காமாரியான பரமசிவனின் மனதை தேவியின் கடைக் கண் கள், தமோ குணத்தின் நிறத்துடன் கவர்வதாக அமைகிறது.(6)

प्रौढद्वान्तकदम्बके कुमुदिनीपुण्यांकुरं दर्शयन्
ज्योत्स्नासंगमनेऽपि कोकमिथुनं मिश्रं समुद्भावयन् ।
कालिन्दीलहरीदशां प्रकटयन् कम्रां नभस्यद्भुतां
कश्चिन्नेत्रमहोत्सवो विजयते काञ्चीपुरे शूलिनः ॥

ப்ரௌடத்வாந்த கதம்பகே குமுதினீ
புண்யாங்குரம் தர்சயன்
ஜ்யோத்ஸ்னா ஸங்கமனேபி கோகமிதுனம்
மிஸ்ரம்ஸமுத்பாவயன் |
காலிந்தீலஹரீ தஸாம் ப்ரகடயன்
கம்ராம் நபஸ்யத்புதாம்
கஸ்மின் நேத்ரஹோத்ஸவோ
விஜயதே காஞ்சீபுரே சூலின: ||

தேவியின், கருங்கூந்தல் காரிருள் போன்றது. அல்லி மலா மலரக் காரணமான பிறைச் சந்திரன் கூந்தலில் மிளிர்கிறது. கூந்தலில் மிளிரும் சந்திரன் இரவு, பகல் வித்யாசமின்றி எப்பொழுதுமே பிரகாசிக்கிறது. சக்கர வாகப் பறவைகள் நிலாவில் மட்டும் ரமிக்கும் தன்மையுடையது சக்கரவாக

மிதுனம் போன்ற தேவியின் நகில்கள் இடைவெளியின்றி இருப்பது தெரிகின்றது ஆகாயம் போன்ற நுண்ணிய இடை யானது தாழ்ந்த கூந்தல்களின் ஒளியால் மறைந்துள்ளது பரமசிவனின் கண்களுக்கு விருந்தான ஸ்ரீதேவியின் திரு மேனி அழகு, காஞ்சிபுரத்தில் சிவனாரின் ஆனந்தத்திற்குக் காரணமாக பெரிய திருவிழாப்போல் சிறந்து விளங்கு கிறது. கவித்வம் உபமானம் கூற முடியாத அளவில் மிக உயர்ந்து நிற்கிறது. 'மிதுனம்' என்ற வார்த்தையே நம்மை எங்கோ இட்டுச் செல்கிறது. (7)

तन्द्राहीनतमालनीलसुषमैस्तारुण्यलीलागृहैः
तारानाथकिशोरलाञ्छितकचैस्ताम्रारविन्देक्षणैः ।
मातः संश्रयतां मनो मनसिजप्रागल्भ्यनाडिन्धमैः
कम्पातीरचरैर्घनस्तनभरैः पुण्याङ्कुरैः शांकरैः ॥

தந்த்ராஹீன தமால நீல ஸுஷமை:
தாருண்ய லீலாக்ருஹை:
தாராநாத கிசோரலாஞ்சித கசை:
தாம்ராரவிந்தேக்ஷணை: |
மாத: ஸம்ச்ரயதாம் மனோ மனஸி
ஜப்ராகல்ப்ய நாடிந்தமை
கம்பாதீரசரை: கனஸ்தனபரை:
புண்யாங்குரை: சாங்கரை: ||

வாட்டமில்லாத தமால மலரைப் போல் நீல ஒளி உடையவள் தேவி. திருமூலர் திருமந்திரம் 77-ல் குறிப்பிடுகிறார். 'நீலாங்க மேனியள் நேரிழையாளொடு' ப்ரபஞ்ச சிருஷ்டிக் குக் காரணமான ஆற்றல் நீலஒளியில் உள்ளது அந்த நீல ஒளியிலிருந்து ப்ரபஞ்சம்படைக்கப்படுவதால் தேவி நீலாங்க மேனியள் ஆகிறாள். நீலக்கடல், நீலநிறவானம் இப்படி நீல ஒளி வடிவாக இருக்கிறாள். நக்ஷத்திரங்களின் நாயகனான இளஞ்சந்திரனை அணிந்த கூந்தல், செந்தாமரை போன்ற விழிகள், தேவியின் முகத்தை பூர்ண சந்த்ரனுக்கு ஒப்பிட்டு, செந்தாமரைகளை கண்களாக உருவகப்டுத்து வது ஒரு மரபு. கம்பாநதி தீரத்தில் நடமாடும் புண்யம் என்ற கிழங்கின், கூந்தல், கண், கடினமான நகில்கள் என்ற முளைகளாக ஏற்பட்டு நம் மனதையெல்லாம் அவள் நினைவிலேயே செழிக்கச் செய்து விளங்குகிறது. (8)

नित्यं निश्चलतामुपेत्य मरुतां रक्षाविधिं पुष्णती
तेजःसंचयपाटवेन किरणान् उष्णद्युतेर्मुष्णती ।
काञ्चीदेशगतापि दीप्तिजननी विश्वान्तरे जृम्भते
काचिच्चित्रमहो स्मृतापि तमसां निर्वापिका दीपिका ॥

நித்யம் நிச்சலதாமுபேத்ய மருதாம்
ரக்ஷாவிதிம் புஷ்ணதீ
தேஜஸ்ஸஞ்சய பாடவேன கிரணான்
உஷ்ணத்யுதேர்முஷ்ணதீ |
காஞ்சீமத்ய கதாபி தீப்தி ஜனனீ
விஸ்வாந்தரே ஜ்ரும்பதே
காசிச்சித்ரமஹோ ஸம்ருதாபி தமஸாம்
நிர்வாபிகா தீபிகா ||

காமாக்ஷி என்னும் ரத்ன தீபம் காற்றால் தீபஜ்வாலை (அசைவுறும்) அசைவற்று, இருந்த இடத்திலேயே இருந்து கொண்டு தேவர்களையும், மருத்துக்களையும் ரக்ஷித்து போஷித்துக்கொண்டு (தேவகணங்கள் 9 பிரிவினர்) (அவை 12 ஆதித்யர்கள், 13 விச்வதேவர்கள், 8 வஸுக்கள், 36 மஹா ராஜர்கள் 12 ஸாத்யதர்கள், 11 ருத்ரர்கள்) காஞ்சி என்னும் பூமண்டலத்தின் நடுவில் விளங்குகிறது. மேல் உலகங்கள் ஏழு, கீழ்உலகங்கள் ஏழு இவற்றின் நடுவே பூமி, பூமண்டலத்தின் நடுபாகமாக சிறந்து விளங்குவது காஞ்சிபுரம். இந்த காமாக்ஷி என்றும் தீபம் மிகுந்த தேஜஸ் ஒளி நிறைந்தி ருப்பதால், குளிர்ந்த ஒளி வீசும் சந்திரனின் கிரணங்களை மங்கச் செய்து, தேவியின் நினைவு ஏற்பட்ட மாத்திரமே அஞ் ஞானமெனும் இருளை அகற்றிக் காஞ்சியில் மாத்திரமல் லாமல் உலகம் முழுதிற்குமே பேரொளியை உண்டு பண்ணிக்கொண்டு விளங்குகிறது. காஞ்சீபுரம் என்ற பூமித் தாயின் இடையில் விளங்கும் மேகலை 'க்வணத் காஞ்சி தாமா' என்று கூறலாம். இந்தக் காஞ்சியில் விளங்கும் ரத்னதீபம். 'தேஹளீ தீப நியாயம்' இடைகழியில் வைத்த விளக்கு வீட்டு வாசல்கூடம் எல்லா இடத்திலும் ஒளிவீசும். காஞ்சி மத்யபாகம் மணி பூரக ஸ்தானம். (9)

कान्तैः केशरुचां चयैर्भ्रमरितं मन्दस्मितैः पुष्पितं
कान्त्या पल्लवितं पदाम्बुरुहयोर्नेत्रत्विषा पत्रितम् ।

कम्पातीरवनान्तरं विदधती कल्याणजन्मस्थली
काञ्चीमध्यमहामणिर्विजयते काचित्कृपाकन्दली ॥

காந்தை: கேசருசாம் சயை: ப்ரமரிதம்
மந்தஸ்மிதை: புஷ்பிதம்
காந்த்யா பல்லவிதம் ததைவ பதயோ:
நேத்ரத்விஷா பத்ரிதம் |
கம்பாதீரவனாந்தரம் விதததீ
கல்யாண ஜன்மஸ்தலீ
காஞ்சீ மத்ய மஹாமணிர் விஜயதே
காசித் க்ருபா கந்தலீ ||

வாழைமரம் நமக்கு எல்லாக்காரியங்களுக்கும் இன்றி அமையாத பொருளாகும். வாழைப்பூ, வாழைக்காய், வாழைப்பழம், வாழைஇலை, தண்டு இப்படி அதன் எல்லா பாகங்களுமே உபயோகம். பிதுர்க்காரியங்கள் வாழை இல்லாமல் நடைபெறாது. மங்களகரத்திற்குக் குலையுடன் கூடிய வாழை மரம் அடையாளமாகும். வாழையடி வாழையாக வம்சம் பெருகவே மணப்பந்தலில் வாழை மரம் கட்டுகிறோம். முக்கனிகளில் முதன்மையானது வாழை. இந்தப்பாடலில் தேவியை குலைகுலையாகப் பழங்களும் கூடிய வாழை என்னும் கருணா ரஸத்துடன் கூடியவள் என்றும் வர்ணிக்கிறார். வாழைத்தோட்டத்தை ஸவர்க்கம் என்று கூறுகிறார்கள். தேவியை வாழைக்கு ஒப்பிட்டார். ஒரு வாழைமரமே காஞ்சிபுரத்தில் ஓர் பூங்காவாகவே ஆகி, வண்டுகள் பூக்களில் மொய்க்கவே ஓர் காக்ஷியும், மற்றும் தேவியின் மந்த்ஹாஸப்புன்சிரிப்பு வெண்மையான முல்லை மலரை நிகர்ப்பதால் 'முல்லை மலர்மேலே மொய்க்கும் வண்டுகள்' என்ற காக்ஷியும் கண்முன் தோன்றுகிறது. தேவி யின் திருவடிகளோ தாமரைகளாகும். அதுவும் காந்தியினால் தளிர்களோடு கூடியதாகத் தெரிகிறது. தேவியின் நீலோத்பலம் போன்ற கண்கள் சுற்றிலும் தெரியும் ஒளியினால் புஷ்பதளங்களை உவமிக்கிறது. காஞ்சியின் நடு மத்தியில் ஸ்ரீகாமாக்ஷியம்மன் கோவில், அதிலும் நடுமத்தியில் ஸ்ரீகாமாக்ஷி சன்னிதி, இப்படியாக இதைக் காணும்போது பூமிதேவியின் மத்யபாக காஞ்சியின் காஞ்சீ என்ற ஆபரணத் தின் நடுவில் அமைந்த ரத்னக்கல்லோ என்று தோன்றுகிறது. காஞ்சி நகரமே பூமித்தாய்க்கு மணிகள் இசைத்த மேகலை என்னும் இடுப்பில் பூட்டிக்கொள்ளும் திவ்ய ஆபரணமாகும். அந்த ஆபரணமணிகளில் சிறந்த மஹாமணி 'காஞ்சி மத்ய மஹாமணி' யாக ஸ்ரீகாமாக்ஷி தேவி, ஸ்ரீலலிதா மஹாத்திரிபுர சுந்தரி பராபட்டாரிகா விளக்குகிறாள். (10)

राकाचन्द्रसमानकान्तिवदना नाकाधिराजस्तुता
मूकानामपि कुर्वती सुरधुनीनीकाशवाग्वैभवम् ।
श्रीकाञ्चीनगरीविहाररसिका शोकापहन्त्री सतां
एकां पुण्यपरम्परा पशुपतेराकारिणी राजते ॥

ராகா சந்த்ர ஸமான காந்திவதனா நாகாதி ராஜஸ்துதா
மூகானாமபி குர்வதீ ஸுரதுனீ நீகாசவாக்வைபவம் |
ஸ்ரீகாஞ்சி நகரீ விஹார ரஸிகாசோகாபஹந்த்ரீ ஸதாம்
ஏகாபுண்ய பரம்பராபசுபதே: ஆகாரிணீ ராஜதே ||

ஸௌந்தர்யலஹரி 34 வதுபாடல்

'சரீரம்த்வம் சம்போ'.... ஸ்தித ஸம்பந்தோ
வாம்ஸமரஸ பரானந்த பரயோ

பரன் என்னும் ஆனந்தபைரவர், பரை என்னும் ஆனந்த பைரவீ இவர்களின் சம்பந்தம் ஸமமாக உள்ளது. பசுக்களான ஜீவகோடிகளின் பதியான பசுபதியின் நல்வினையே பரன்-பரை=பரம்பரையாகத் தொடர்கிறது. லலிதா ஸஹஸ்ரநாமா 314 'ராகேந்து வதனா' பூர்ணநிலவைப் போன்ற குளிர்ச்சியை மனதிற்கும், உடம்பிற்கும் கொடுக்கும் முகத்தை உடையவள் 592, 'சந்திர நிபா' நிலவைப் போன்ற காந்தி உடையவள்; என்றெல்லாம் தேவியின் பௌர்ணமி நிலவைப் போன்ற முகத்தைப் புகழ்கிறது. தேவராஜனான இந்திரனால் துதிக்கப் பட்டவள். நல்லவர்களின் துயரங்களை தேவி காமாக்ஷி வெகு விரைவில் துடைத்துவிடுகிறாள். ஊமைகளுக்கும் கங்கா பிரவாஹம் போன்ற சொல்வளத்தை, கவித்வத்தை அளிப்ப தில் நிபுணியாவாள். ஸ்ரீமூகாசாரியார் ஆதியில் ஊமையாக இருந்து, காமாக்ஷி சன்னதியில் பலகாலம் கழித்ததாகச் சொல்வர். ஒரு நாள் தேவி மனமிரங்கி அவர் வாயில் தாம்பூல உச்சிஷ்டத்தை அளித்தாகவும், அந்த க்ஷணமே அவர் வாய்ப்பூட்டுத் திறந்து இந்த 'மூகபஞ்சசதீயைப் பாடியதாகக் கூறுவார்கள். (11)

जाता शीतलशैलतः सुकृतिनां दृश्या परं देहिनां
लोकानां क्षणमात्रसंस्मरणतः संतापविच्छेदिनी ।
आश्चर्यं बहुखेलनं वितनुते नैश्चल्यमाबिभ्रती
कम्पायास्तटसीम्नि कापि तटिनी कारुण्यपाथोमयी॥

ஜாதா சீதல சைலத: ஸுக்ருதினாம்
த்ருஸ்யா பரம்தேஹினாம்
லோகானாம் க்ஷண மாத்ர ஸம்ஸ்மரணத:
ஸந்தாப விச்சேதினீ |
ஆச்சர்யம் பஹுகேலனம் விதனுதே
நைச்சல்யம் ஆபிப்ரதீ
கம்பாயா: தடஸீம்னி காபி தடினீ
காருண்ய பாதோமயீ ||

தேவி பனிமலையரசனின் பெண் பார்வதி ஆவாள். பனிமலையில் அவதரித்த கருணை வெள்ளத்தையே தன் திருமேனியாகக் கொண்ட கருணை கசிவு என்ற ஒன்றையே கொண்ட காமாக்ஷி என்னும் அமுதப்பெருக்கு நல்லவர்கள் மாத்திரமே காணக்கிடைக்கும், காமாக்ஷி ஆவாள். உலக மக்களின் தாபங்களை ஒரு கணம், நினைத்த மாத்திரம் போக்கவல்லவள். ஸம்ஸாரதாபங்களை தேவி நிலவு போல் குளிர்ச்சி அடையச் செய்து கொண்டிருக்கிறாள். இமயமலை யினின்றும் பெருகும் கங்கை என்னும் நதியும் நீராடுவோரின் தாபத்ரயங்களைத் நீக்கி வைக்க அதில் சென்று நீராட வேண்டும். ஆனால் காமாக்ஷி என்னும் நதி கருணாமயமாக, நினைத்த மாத்திரத்தில் தாபங்களைப் போக்குகிறது. லலிதா ஸஹஸ்ரநாமா தேவியை 'கம்பீரா' 856 ஆழம் காண முடியாத அந்தமில்லாத ஆனந்தம்; ஆழம் காணமுடியாத நேர்த்தேக்கம் (மஹாஹ்ரதம்) என்று புகழ்கிறது. அப்படியாக கருணை என்னும் மடுவாகக் காஞ்சி நகரத்தில் கம்பாநதிக் கரையில் அமைதியாக, வணங்குபவர்களுக்கு மன அமைதி, சாந்தி இவற்றை அருளிக்கொண்டு அற்புதமாக விளங்குகிறாள். இது என்ன அதிசயம்! (12)

ऐक्यं येन विरच्यते हरतनौ दम्भावपुंभाविके
रेखा यत्कचसीम्नि शेखरदशां नैशाकरी गाहते ।
औन्नत्यं परमेति येन स महान्मेनासखः सानुमान्
कम्पातीरविहारिणा सशरणास्तेनैव धाम्ना वयम् ॥

ஐக்யம்யேன விரச்யதே ஹரதநௌதம்பாவ பும்பாவிகே
ரேகா யத்கசஸீம்னி சேகரதசாம் நைசாகரீ காஹதே |
ஔன்னத்யம்பரமேதியேன ஸமஹான்மேனாஸக:
ஸானுமான்கம்பாதீர விஹாரிணா ஸசரணா: தேனைவ
தாம்னா வயம் ||

தேஜஸ்வரூபிணியான காமாக்ஷியானவள் இங்கு ஒரு வீடாக வர்ணிக்கப்படுகிறாள். இந்தப்பாடலில் தேவி காமாக்ஷி தனக்குள் சிவத்தைக் கொண்டிருக்கிறாள். பரமசிவனின் திருமேனி ஆண்மையும், பெண்மையும் உடையதாக விளங்குகிறது. இந்தப்பாடலில் இரு பொருள்படும்படி வார்த்தைகள் அமைந்துள்ளது. தேவியின் கூந்தலின் மீது சந்திரனின் துண்டப் பிறையானது சிரோபூஷணமாக அமைந்துள்ளது. கசம்-தலைமயிர், மேற்கூறை இரு பொருள்படும். இமவான் மேனையின் துணைவன், தேவியின் தந்தை பல கொடு முடி களை உடையவனாய் மிக உயர்வு உடையவன் என்பதாக உயர்ந்து விளங்குகிறான். கம்பாநதி தீரத்தில் திருவிளையா டல் புரியும் அந்த சம்பத்து நமக்குப் புகலிடம். நாமும் வீடு பேரின்பம் என்ற மோக்ஷத்தை அடைகிறோம். (13)

अक्ष्णोश्च स्तनयोः श्रिया श्रवणयोर्बाह्वोश्च मूलं स्पृशन्
उत्तंसेन मुखेन न प्रतिदिनं द्रुह्यन् पयोजन्मने ।
माधुर्येण गिरां गतेन मृदुना हंसाङ्गनां ह्रेपयन्
काञ्चीसीम्नि चकास्ति कोऽपिकवितासंतानबीजाङ्कुरः ॥

அக்ஷ்ணோச்ச ஸ்தனயோ: ஸ்ரியா
ச்ரவணயோ பாஹ்வோச்சமூலம் ஸ்ப்ருசன்
உத்தம்ஸேன முகேனச பிரதிதினம்
த்ருஹ்யன் பயோ ஜன்மனே |
மாதுர்யேண கிராம் கதேன ம்ருதுனா
ஹம்ஸாங்கனாம் ஹ்வேபயன்
காஞ்சீஸீம்நி சகாஸ்தி கோபி கவிதா
ஸந்தான பீஜாங்குர: ||

தடையற்ற பெருக்குடைய கவிதை என்னும் ஸந்தான மரத்தின் விதையினின்றும் முளைத்த விதை, நீண்ட கண்களால் காதையும் எட்டிப் பிடித்து விடுகிறது. இரண்டு கொங்கைகளும் சாமுத்ரிகா லக்ஷணப்படி தோளின் அடிப்புறம் வரை கனவிஸ்தீரமானதாகவும், தேவி காமாக்ஷி காஞ்சீபுரத்தில் விளங்குகிறாள். பாற்கடலில் பிறந்த சந்திரன் தேவியின் தலையில் மாலையாகி பிறைச்சந்திரன் வடிவில் விளங்குகிறான். நீரில் பிறந்த தாமரை போன்ற முக மண்டலம் பெற்ற ஸ்ரீ காமாக்ஷி தேவி அன்னப்பேடுகளை நடையாலும், சொற்களின் இனிமை யாலும் கற்றுப் பழகச் செய்து காஞ்சியில் விளங்குகிறாள். சந்திரனுக்கு தேய்வு, வளர்தல் உண்டு ஆனால் தேவியின் தலை ஹாரமான பிறைச்சந்திரனுக்கு என்றும் தேய்வு கிடையாது. தாமரையோ மாறாத

இளமையிம் விகாஸமும் பெற்றது. தேவியின் தாமரைப்பாத நடையிலிருந்தே அன்னங்கள் நடை பழக்கிக்கொண்டன. நடை வித்தையை தேவி; சிக்ஷையாக அன்னங்களுக்கு ஆசானாக இருந்து கற்றுக்கொடுப்பதே, வேதமே நூபுரங்களின் சப்தமாகும். (14)

खण्डं चान्द्रमसं वतंसमनिशं काञ्चीपुरे खेलनं
कालायश्छवितस्करीं तनुरुचिं कर्णेजपे लोचने ।
तारुण्योष्मनखंपचस्तनभरं जङ्घास्पृशं कुन्तलं
भाग्यं देशिकसंचितं मम कदा संपादयेदम्बिके ॥

கண்டம் சாந்த்ரமஸம் வதம்ஸமனிஸம்
காஞ்சிபுரே கேலனம்
காலாயஸ்ச்ச விதஸ்கரீம் தனுருசிம்
கர்ணேஜபே லோசனே |
தாருண்யோஷ்ம நகம்பசம் ஸ்தனபரம்
ஜங்காஸ் ப்ருசம் குந்தலம்
பாக்யம் தேசிக ஸஞ்சிதம் மமகதா
ஸம்பாதயே தம்பிகே ||

அம்மா! ஜகதம்பிகையே! தாயே என்று மூககவி உள முருகி தேவியின் ஸாரூப்யத்தை யாசிக்கிறார். சந்த்ர கலை தேவியின் தலையில் மாலை போல் அலங்கரிக்கிறது. காஞ்சி யில் தேவி நிகழ்த்திய திருவிளையாடல்கள் ஏராளம். பொன் மாரி பொழிந்தவைபவம், காமனைக் கண்ணால் தோற்று வித்தது, நிலவை மாலையாகத்தன் முடியில் சூடிக் கொண்டது, ரமா, வாணியை இருகண்களில் கொண்டது. காம கோடிகள். ருத்ர கோடிகள், புண்யகோடிகள், இன்னும் எழுதினால் மிகவும் விரிவாகிவிடும். கருமை நிறத்தவள். என்பது துர்கா பரமேஸ்வரியைக் குறிக்கும். காஞ்சிபுரம் காமாக்ஷி, த்ரிபுரசுந்தரியும், துர்கையுமாவாள். இரும்பின் காந்தியைத் தோற்கடிக்கும். எஃகு நிறத்தவள். காதளவோடிய கண்கள். தேவியின் இரண்டு கண்களும் காதிடம் போய், தன்னைப் பற்றி கோள் சொல்வதாக, நெற்றிக்கண் அசூயை யால் சிவந்து காணப்படுகிறது என்று ஸௌந்தர்யலஹரியில் கூறப்படுகிறது. யௌவனத் தின் கொதிப்பால் பரமேஸ்வரரின் நகங்களைப் பக்குவப்படுத்துகின்ற ஸ்தன பாரங்களையும், முழங்காலுக்குக் கீழ்வரை படிந்த கூந்தலையும் உடைய ஸ்ரீகாமாக்ஷி தேவி, ஸ்ரீவித்யா ஸ்வரூபிணி, குருவின் அருளால் மாத்திரம் அடையக்கூடியவள்; தேவியே குருமூர்த்திதான். (15)

तन्वानं निजकेलिसौधसरणिं नैसर्गिकीणां गिरां
केदारं कविमल्लसूक्तिलहरीसस्यश्रियां शाश्वतम् ।
अंहोवञ्चनचुञ्चु किञ्चन भजे काञ्चीपुरीमण्डनं
पर्यायच्छवि पाकशासनमणेः पौष्पेषवं पौरुषम् ॥

தன்வானம் நிஜகேலிஸௌதஸரணீம்
நைஸர்கீணாம் கிராம்
கேதாரம் கவிமல்லஸூக்திலஹரீ
ஸஸ்யச்ரியாம் சாச்வதம் |
அம்ஹோ வஞ்சனசுஞ்சுகிஞ்சுனபஜே
காஞ்சிபுரீ மண்டனம்
பர்யாயச்சவி பாகசாஸனமணே:
பௌஷ்பேஷவம்பௌருஷம் ||

'நைஸர்கிகீணாம்' என்பது சித் என்னும் 16வது ஸாதாக்ய கலையாகும். இது யாராலும் இயற்றப்படாத வேத பாகங்கள், அதுவே தேவியின் திருவிளையாடல்களுக்கு ஏற்ற மேன் மாடம்; தானிய லக்ஷ்மி விளையும் நிலம் என்னும் பூமித்தாயும் தேவியே ஆகிறாள். தாமரை, அசோகம், மா, நவமல்லி, நீலோத்பல'' என்னும் ஐந்து புஷ்பங்களை பஞ்சபாணங்களாகக் கொண்டதால் பஞ்சமீ என்ற பெயர் கொண்டவள். பிரபஞ்ச வாழ்வு என்ற உலகத் தொடர்ச்சியை ஒதுக்காமல் மன்மதனுக்கு வாழ்வு கொடுத்து, தாயாக அவனுக்கு அனுக்ரஹம் செய்து, தேவி காமாக்ஷி தனக்கு சமமாகவே மன்மதனைத் தன் கருணையைப் பொழிந்து குழந்தையாக்கி உலகை வாழ வைக்கிறாள். தேவியின் துணையால் பரமசிவனைக் காமன் ஜயித்து விட்டான். தபஸ் காமாக்ஷியாக இருந்த நம் அன்னை மன்மதனின் மலரம்புகளால் காமேஸ்வர, காமேஸ்வரியாக இருவர் கையிலும் அதே பாச, அங்குச, புஷ்பபாண, கரும்பு வில்லுடன் மன்மதனுக்கு மிகுந்த சலுகை கொடுத்து காஞ்சி புரத்தில் ஸ்ரீவித்யாஸ்வ ரூபிணியாக, ஸத்தைவிட்டுப் பிரியாத சித்தாக காமாக்ஷி பராபட்டாரிகாவாக விளங்கும் என் அம்மையைத் தொழுகிறேன். (16)

आलोके मुखपङ्कजे च दधती सौधाकरीं चातुरीं
चूडालंक्रियमाणपङ्कजवनीवैरागमप्रक्रिया ।
मुग्धस्मेरमुखी घनस्तनतटी मूर्च्छालमध्याञ्चिता
काञ्चीसीमनि कामिनी विजयते काचिज्जगन्मोहिनी ॥

ஆலோகே முகபங்கஜே சதததீ ஸௌதாகரீம் சாதுரீம்
சூடாலங்க்ரியமான பங்கஜவனீ வைராகமப்ரக்ரியா|
முக்தஸ்மேரமுகீ கனஸ்தனதடீமூர்தச்சால மத்யாஞ்சிதா
காஞ்சீ ஸீமனிகாமினீ விஜயதேகாசிஜ்ஜகன் மோஹினீ||

ஸுதா+ஆக்ர=அம்ருதம் உண்டாகும் ஸமுத்திரம். ஸுதா +கர=அம்ருத மயமான கிரணங்களுள்ள சந்திரன் அமுதத் தைப் பொழியும் நிலவு, அமுதத்தின் பிறப்பிடமான பாற்கடல் தேவியின் அமுதம் பொழியும் கண்களில் காமன் உயிர் பெற்றான். கண்ணோக்கத்திலும், கமலம் போன்ற வதனத் தாலும் கருணையைப் பொழிந்துகொண்ட, அதே சமயம் திருமுடி அலங்கா ரமான சந்திரனை சூட்டிக்கொண்டு, அடியார்களின் அன்பில் ஒருதாய் போல் 'முக்தா' வாகி இளமுறுவலுடன் கூடிய முககமலத்தை உடையவள். தேவி யின் தலைமுடியில் அலங்காரமான சந்திரனின் கிரணங் களால் தேவியின் முகத்தாமரை பிரகாசிக்கிறது. சந்திர ஒளியில் தாமரை வாடும் இங்கு நேர் மாறாக உள்ளது. கடினமான ஸ்தனங்களையுடையவள் தேவி. தேவி ஜகன் மோஹனி 'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி' பாற்கடலில் தோன்றிய அமுதத்தைப் பங்கிட்ட மோஹினியும் தேவியின் ஓர் அவதாரமே அதனால் தான் பரமேஸ்வரன் மோஹினியிடம் மயங்கி ஹரிஹர புத்திரனும் அவதாரம் ஆனார். அப்படி மன மோஹன ரூபம் கொண்டவள் அம்பிகை. 'அனவத்யாங்கீ' 'மஹாரதி!' (17)

यस्मिन्नम्ब भवत्कटाक्षरजनी मन्देऽपि मन्दस्मित-
ज्योत्स्नासंस्नपिता भवत्यभिमुखी तं प्रत्यहो देहिनम् ।
द्राक्षामाक्षिकमाधुरीमदभरव्रीडाकरी वैखरी
कामाक्षि स्वयमातनोत्यभिसृतिं वामेक्षणेव क्षणात् ॥

யஸ்மின்னம்ப பவத்கடாக்ஷ ரஜனீ மந்தேபி மந்தஸ்மித
ஜ்யோத்ஸ்னா ஸம்ஸ்னபிதா பவத்யபிமுகீ தம்
ப்ரத்யஹோ தேஹினம் |
த்ராக்ஷாமாக்ஷிக மாதுரீ மதபரவ்ரீடாகரீ வைகரீ
காமாக்ஷி ஸ்வயமாத னோத்யபிஸ்ருதிம்
வாமேக்ஷணேவக்ஷணம் ||

காமாக்ஷி கடாக்ஷம் எவர் மேல் வீசுகிறதோ, அவன் மந்த புத்தியுள்ளவனாக இருந்தாலும் அந்த க்ஷணத்திலேயே 'வாக்கு' என்னும் பெண்மணி, அவள்

திராக்ஷை, தேன் என்ற இனிமையாலே கர்வங்கொண்ட வஸ்துக்களை நாணச் செய்யும் திறமை வாய்ந்தவள், மிகுந்த கண்ணழகு வாய்ந்தவள். அவள் காதலனை நாடிச் செல்லும் காதலியாவாள், தருணியானவள் தன் ஆசை நாயகனை அடையச் செல்வதைப் போல் செல்கிறாள். மூகர், காளிதாஸர், கம்பர் போன்ற கவிகள் தேவியின் பிரஸாதத்தினாலே எப்படிப்பட்ட மாணிக்கம் போன்ற கவிச் செல்வங்களை யாத்து உலகுக்குக் கொடுத்தார்கள் என்பது நாமறிந்ததே. (18)

कालिन्दीजलकान्तयः स्मितरुचिस्वर्वाहिनीपाथसि
प्रौढध्वान्तरुचः स्फुटाधरमहोलौहित्यसंध्योदये ।
माणिक्योपलकुण्डलांशुशिखिनि व्यामिश्रधूमश्रियः
कल्याणैकभुवः कटाक्षसुषमाः कामाक्षि राजन्ति ते ॥

காலிந்தீ ஜல காந்தய: ஸ்மிதருசி
ஸ்வர்வாஹினீ பாதஸி
ப்ரௌடத் வாந்தருச: ஸ்புடாதர மஹோ
லௌஹித்ய ஸந்த்யோதயே ।
மாணிக்யோபல குண்டலாம் சு
சிகினி வ்யாமிச்ர தூமச்ரிய:
கல்யாணைகபுவ: கடாக்ஷஸுஷமா:
காமாக்ஷி ராஜந்திதே ॥

தேவி காமாக்ஷி எல்லா மங்களங்களுக்கும் பிறப்பிடமான வள் 'ஸர்வ மங்கள மாங்கல்யே சிவே ஸர்வாத்த ஸாதகே' என்று தேவி மஹாத்ம்யம் தேவியைப் புகழ்கிறது. 'பக்த ஸௌபாக்யதாயினி' பக்தர்களுக்கு சகல சௌபாக்யங்களையும் அளிப்பவள். 'ஸர்வமங்களா' 'ப்ரும் ஹதந் மங்கள விது' என்றபடி ப்ரும்ம ஸ்வரூபிணியான தேவி மங்களமே வடிவானவள். தேவியின் கடைக்கண் பார்வையில் கங்கையில் யமுனை போல் கருநிறம் நீரின் காந்தி போலவும், மிகச் சிவந்த ஒளி வீசும் உதடுகள் என்னும் ஸந்தியா காலம் தொடங்கும் போது, அபிவிருத்தி யடைகின்ற இருள்களாகிய செந்தீயிலே சூழ்ந்தெழுகின்ற கரியபுகைகள் காந்திகள் அழகிய தோற்றங்களாகத் திகழ்கிறது. (19)

कलकलरणत्काञ्ची काञ्चीविभूषणमालिका
कचभरलसच्चन्द्रा चन्द्रावतंससधर्मिणी ।

कविकुलगिरः श्रावं श्रावं मिलत्पुलकाङ्कुरा
विरचितशिरःकम्पा कम्पातटे जगदम्बिका ॥

கலகலரணத் காஞ்சீ காஞ்சீ விபூஷண மாலிகா
கசபரலஸச்சந்த்ரா சந்த்ராவதம்ஸஸதர்மிணீ |
கவிகுலகிர: ஸ்ராவம் ஸ்ராவம் மிலத்புலகாங்குரா
விரசிதசிர: கம்பா கம்பாதடே ஜகதம்பிகா||

காஞ்சிபுரம் என்றாலே காமாக்ஷி; காமாக்ஷி என்றலே காஞ்சி; காஞ்சி காமாக்ஷி, மதுரை மீனாக்ஷி, காசி விசாலாக்ஷி என்று சொல்வது வழக்கம். மண மக்களுக்காகட்டும், தெய் வங்களுக்காகட்டும் எல்லா அலங்காரங்களும் செய்த பின் மலர்மலை சூடுவித்தால்தான் அதுநிறைவு பெறுகிறது. காஞ்சி புரம் என்ற காஞ்சிக்கே மிகச்சிறந்த பூமாலையாக தேவி காமாக்ஷி விளங்கு கிறாள். 'க்வணத் காஞ்சீ தாமா' (ஸௌந்தர்யலஹரி). என்றபடி 'கல கல' என்று ஒலிசெய்யும் காஞ்சி என்னும் ஒட்டியாணத்தை அணிந்தவள். காமாக்ஷி தேவி நானாவித ஆபரணங்கள் அணிந்தவள்; காஞ்சியில் காமாக்ஷியைச் சுற்றியே எல்லா தெய்வங்களும் உற்சவங் களில் பவனி வருவது வழக்கம். 'தேவி அடர்ந்த கூந்தலின் மீது ஒளி வீசும் சந்திரனை சூட்டிக் கொண்டி ருக்கிறாள். 'சந்த்ரசூடன்' 'சந்த்ரமௌளி' என்றெல்லாம் சந்திரனைச் சிரஸில் சூட்டிக்கொண்டதால் சிறப்புப் பெயர்கள் பெற்ற பரமேஸ்வரனின் தரும பத்தினியான தேவி காமாக்ஷி, மூகாசாரியார் போன்ற சிறந்த கவிகளின் வாக்குக்களைக் கேட்கும் காலை, மெய்சிலிர்த்து, மெச்சி, தலைய சைத்து ஆனந்தம் எய்துவளாக கம்பா நதிக்கரையிலே சிறந்து விளங்கு கிறாள். (20)

सरसवचसां वीची नीचीभवन्मधुमाधुरी
भरितभुवना कीर्तिर्मूर्तिर्मनोभवजित्वरी ।
जननि मनसो योग्यं भोग्यं नृणां तव जायते
कथमिव विना काञ्चीभूषे कटाक्षतरङ्गितम् ॥

ஸரஸவசஸாம் வீசீ நீசீபவன் மதுமாதுரீ
பரித புவனா கீர்த்திர் மூர்த்திர் மனோபவ ஜித்வரீ|
ஜனனிமனஸோயோக்யம்போக்யம்ந்ருணாம்தவஜாயதே
கதமிவ வினா காஞ்சீபூஷே கடாக்ஷ தரங்கிதம்||

தேவியின் நிஜரூபம் மஹாத்ரிபுர சுந்தரி, தான். நம் நாட்டிலேயே ஸ்ரீ வித்யாதேவதையாக அமர்ந்த கோலம் காஞ்சி புரத்தில் உள்ள காமாக்ஷிதான். எனவே பேரைச் சொல்லா விட்டாலும் ஊரையாவது சொல்வோம் என்று 'க்வணத் காஞ்சிதாமா' என்று 7வது ஸௌந்தர்யலஹரி ஸ்லோகத்தில் ஊருக்கும், பேருக்கும் பொதுவாக அமைந்துள்ளதாக நம் காஞ்சி மஹாப் பெரியவாள் சொல்வார்கள். காஞ்சி ஒட்யாண பீடமாகும். தேவியின் கருணையாலேயே, கடாக்ஷிவீக்ஷண் யத்தாலேயே 'மது, க்ஷீரத்ராக்ஷா-மதுரி மதுரிணா' என்ற பாலும் தேனும் கலந்தாற்போன்ற மதுரமான சொற்கள் பொருந்திய கவித்வம் ஏற்படும் மூககவி இன்னும் ஒருபடி மேலே 'தேனின் இனிமையையும் தோற்கடிக்கக் கூடிய ரஸம் பொருந்திய வாக்குக்கள், உலகமெல்லாம் பரவிய புகழும், மன்மதனை வென்ற அழகுத்திருமேனி மற்றும் போக்கியப் பொருள்கள் எல்லாமே தேவியின் கடைக்கண் நோக்கில் கிட்டும் என்கிறார். (21)

भ्रमरितसरित्कूले नीलोत्पलप्रभयाऽऽभया
नतजनतमःखण्डी तुण्डीरसीम्नि विजृम्भते ।
अचलतपसामेकः पाकः प्रसूनशरासन-
प्रतिभटमनोहारी नारीकुलैकशिखामणिः ॥

ப்ரமரித ஸரித்கூலோ நீலோத்பல ப்ரபயா ஆபயா
நதஜன தம: கண்டீ துண்டீர ஸீம்னி விஜ்ரும்பதே |
அசல தபஸாம் ஏக: பாக: ப்ரஸூன சராஸன
ப்ரதிபட மனோஹாரீ நாரீகுலைக சிகாமணி ||

பர்வதராஜன், அவன் மனைவி மேனை; அவர்களின் தவப்பயனாய் பார்வதி என்ற பெயருடன் தேவி அவர்களுக்குப் பெண் ஆனாள். தாக்ஷாயணியைப் பிரிந்தபின் பரமேஸ்வரன் தபஸ் மேற்கொண்டார். தேவர்கள் ஸ்கந்தோத்பத்திக்காக மன் மதனை அனுப்பி, அங்கு பரமேஸ்வரனுக்கு பணிவிடை செய்து வந்த பார்வதியை பரமேஸ்வரனுடன் சேர்த்து வைக்கச் சொன்னார்கள். ஆயினும் சிவன் கோபத்துடன் மன்மதனை எரித்துவிட்டார். பிறகு சிதக்னிகுண்டத்தில் லலிதா தேவி தோன்றி பண்டாசுரவதம் முடிந்தபின் கருணைக் கண் படைத்த காமாக்ஷியாகி மன்மதனை உயிர்ப்பித்தாள். தேவி கொடுத்த தைரியத்தில் மன்மதன், ஒரு காலத்தில் தன்னை வெற்றி கொண்ட வீரரான பரமேஸ்வரனையும், புஷ்ப பாணத் தால் தோற்கடித்து, தேவியை மணக்கும்படி செய்தாள். தேவி கம்பாநதிக் கரையைத் தன் திருமேனியின் கருநீல ஒளி யினால் நிழல் பொருந்திய பூஞ்சோலை ஆக்குகிறாள். தேவி யின் மேனி கருநீல ஒளி என்று இருந்தாலும்

அவள் அடிக்கீழ் உள்ளவர்களின் மன இருளைப் போக்குவது என்ற அதிசயமும் நடைபெறுகிறது. (22)

मधुरवचसीःमन्दस्मेरा मतङ्गजगामिनः
तरुणिमजुषस्तापिञ्छाभाः तमःपरिपन्थिनः ।
कुचभरनताः कुर्युर्भद्रं कुरङ्गविलोचनाः
कलितकरुणाः काञ्चीभाजः कपालिमहोत्सवाः ॥

மதுரவசஸோ மந்தஸ்மேரா மதங்கஜ காமின:
தருணி மஜுஷ: தாபிஞ்சாபா: தம: பரிபந்தின: |
குசபரனதா: குர்யுர்பத்ரம் குரங்க விலோசனா:
கலிதகருணா: காஞ்சீபாஜ கபாலி மஹோத்ஸவா: ||

தேவி இனிமையான வாக்குக்களை உடையவள். 'ஸ்வ பாவமதுரா' மதுரமான ஸ்வபாவம் உடையவள். பரிபுரச் சீறடிப் பாசாங்குசை பஞ்சபாணி இன்சொல் திரிபுரசுந்தரி' என்பர் அபிராமிபட்டர் யானையை ஒத்த நடை, மாறாத புன்னகை, தேவி 'வயோவஸ்தா விவர்ஜிதா' என்றுமே வயதால் பாதிக்கப்படாமல் 'தருணி' என்றும் 'நித்ய யௌவனா' வாக விளங்குபவள். பசுமைபொருந்திய மேனி, ஸ்தனங்களின் பாரத்தால் சிறிது வளைந்து காணப்படுகிறது. மான்போன்ற மருண்ட பார்வை, பார்வையில் மருட்சி இருந்தாலும் கருணையும் நிரம்பியுள்ளது. கப்பரையைக் கையிலேந்திய காபாலியான பரமசிவத்தின் பேரானந்த வடிவினள் என் அன்னை காமாக்ஷி. திராக்ஷா பலத்தைவிட இனிமையான சொற்கள், கபாலியான பரமேஸ்வரனின் மனதை சந்தோஷப் படுத்தும் தேஜஸ்' இப்படியெல்லாம் வர்ணிக்கிறார் துர்வாஸா ஆர்யா த்விசதி 179, 180, ஸ்லோகங்களில் 'காதல் மடப்பிடி யோடும் களிறு வருவன கண்டேன்; அப்பர் தேவாரம், 'பனி மாலியப்பிடியே; அபிராமி அந்தாதி 22. 'பிடியதனுடன் உரு கொளமிகு கரியது' சம்பந்தர் தேவாரம்.(23)

कमलसुषमाकक्ष्यारोहे विचक्षणवीक्षणाः
कुमुदसुकृतक्रीडाचूडालकुन्तलबन्धुराः।
रुचिररुचिभिस्तापिञ्छश्रीप्रपञ्चनचुञ्चवः
पुरविजयिनः कम्पातीरे स्फुरन्ति मनोरथाः॥

கமல ஸுஷமா கக்ஷ்யாரோஹே விசக்ஷண வீக்ஷணா:
குமுதஸுக்ருத க்ரீடா சூடால குந்தல பந்துரா: |

ருசிரருசிபி: தாபிஞ்சஸ்ரீ ப்ரபஞ்சன சுஞ்சுவ:
புரவிஜயின: கம்பாதீரே ஸ்புரந்தி மனோ ரதா: ||

திரிபுர ஸம்ஹாரம் செய்த பரமேஸ்வரனின் மனோரதமே தேவி காமாக்ஷி தான். தாமரை முகத்தில் தாமரை போன்ற கண்கள். காளிதாஸ கற்பனை 'முக மெனும் தாமரையில் பூத்த இருநீலோத்பலமென்ன விழிகள்' இதுவும் வெகு அழகாக உள்ளது. அடுத்த கற்பனைக்கு இதுவும் ஆதாரமாகிறது. சந்திரனைக் கண்ட அல்லி மலரும். தேவி கூந்தலில் அழகு செய்யும் சந்திரன், அவனைக் கண்ட அல்லி மலர்கள் பூத்தது போன்ற கண்கள். தேவியின் பசிய திருமேனி இதை தமால மலருக்கு ஒப்பிடலாமா? அதன் காந்தி நாலு பக்க மும் வீசுகிறது. தேவியின் திருமுகத்தைத் தாமரைக்கும் கண் களை, அல்லிமலருக்கும், திருமேனியைப் பச்சை வண்ண தமாலப்புஷ்பத்திற்கும் ஒப்பு வைக்கலாமா? புஷ்பக்குவி யலைக் கொட்டி வைத்த காக்ஷியை, அதன் ஒளி வெகுதூரம் பரவியுள்ளது, கம்பாநதிக்கரையில் நாம் தரிசிப்போமாக. (24)

कलितरतयः काञ्चीलीलाविधौ कविमण्डली-
वचनलहरीवासन्तीनां वसन्तविभूतयः ।
कुशलविधये भूयासुर्मे कुरङ्गविलोचनाः
कुसुमविशिखारातेरक्ष्णां कुतूहलविभ्रमाः ॥

கலிதரதய: காஞ்சீலீலாவிதௌ கவிமண்டலீ
வசனலஹரீ வாஸந்தீனாம் வஸந்த விபூதய: |
குசலவிதயே பூயாஸுர்மே குரங்க விலோசனா:
குஸுமவிசிகாராதே: அக்ஷ்ணாம் குதூஹல விப்ரமா: ||

காத்யாயனர் என்னும் மஹரிஷியின் தவப்பயனாய் தேவி பத்ரி என்னும் க்ஷேத்திரத்தில் அவருக்குப் பெண்ணாக அவதரித்து காத்யாயனி என்ற பெயரைப் பெற்றாள். மஹரி ஷியின் சொற்படி தேவி காசியம்பதியில் பஞ்சத்தை நீக்கி, அந்த அரசனுக்கும் ஞானபிக்ஷையும் அளித்து அதன்பின் தொண்டை மண்டலம் வந்து சேர்ந்தாள். கம்பாநதிக்கரையில் மணல்லிங்கம் பிடித்து வைத்து ஈசனை பூஜித்து காமாக்ஷி என்ற திருப்பெயர் தாங்கி, மன்மதனை உஜ்ஜீவனம் செய்து, பந்தக வதம் புரிந்து, சொர்ண காமாக்ஷியாகி, ஜயஸ்தம்பம் நாட்டி எவ்வளவோ திருவிளையாடல்கள் புரிந்து நம் போன்ற மக்களுக்கு மங்களங்களைச் செய்துவிடும், ஸ்ரீகாமாக்ஷியின் பாதங்கள் மனதில் நிலை பெற்றிருக்கட்டும். தேவியின் கருணையால் கவிகள் ஒன்று சேர்ந்து பாடும் வஸந்தம் என்னும் ராகம் வஸந்த காலத்தில் வாஸந்திகை மலர்களின் மணத்துடன் காற்றில் நம் மனதைக் கவரும், மான் விழியாளான தேவியின் மயக்கில் மயங்கும் பரமசிவன், இவர் ஏற்கெனவே மன்மதனை

எரித்தவர், ஆயினும் இப்பொழுது புஷ்பபாணனாக மன்மதன், அவன் தோழன் வஸந்தன், அவன் நேரம் வஸந்தகாலம் இப்படியாக பரமேஸ்வாரின் கண்களுக்கும், மனதிற்கும் பெருமகிழ்ச்சி யையும் மயக்கத்தையும் அளிக்கும் பொருளாக காமாக்ஷிதேவி காஞ்சியில் வைபவம் புரிகின்றாள். (25)

कबलिततमस्काण्डास्तुण्डीरमण्डलमण्डनाः
सरसिजवनीसन्तानानामरुन्तुदशेखराः ।
नयनसरणेर्नेदीयांसः कदा नु भवन्ति मे
तरुणजलदश्यामाः शंभोस्तपःफलविभ्रमाः ॥

கபலித தமஸ்காண்டா: துண்டீர மண்டல மண்டனா:
ஸரஸிஜவனீ ஸந்தானானாம் அருந்துத சேகரா: |
நயனஸரணே: நேதீயாம்ஸ: கதா நுபவந்தி மே
தருண ஜலத ச்யாமா: சம்போ: தப: பலவிப்ரமா: ||

அஞ்ஞானம் என்னும் இருளின் திரட்சியை கபளீகரம் (விழுங்கும்) செய்வதும், தொண்டை மண்டலத்தை அலங்கரிப்பதும், தாமரையின் வைரியான சந்திரனை சிரஸில் தரித்த வளும், கார் காலத்து மேகம் போன்ற கரிய மேனியுடன் மங்களத்தையே செய்யும் சங்கரரான சம்புவின் தவப்பயனும் ஆன காமாக்ஷி தேவியின் தரிசனம் என்றுதான் கிட்டுமோ! விநாயகப் பெருமாள் துண்டீரராக அவதரித்து ஆண்டதால் துண்டீரநாடு. இந்த விஷயம் விநாயக புராணத்திலும் உள்ளது. தொண்டைக்கொடி சுற்றிக் கடலிலே மிதந்து வந்த தொண்டைமான் ஆண்டதால் இது தொண்டை நாடு; தொண்டை மண்டலம்; தேவி கருணை புரியட்டும்! (26)

अचरममिषुं दीनं मीनध्वजस्य मुखश्रिया
सरसिजभुवो यानं म्लानं गतेन च मञ्जुना ।
त्रिदशसदसामन्नं खिन्नं गिरा च वितन्वती
तिलकयति सा कम्पातीरं त्रिलोचनसुन्दरी ॥

அசரமமிஷும் தீனம் மீனத்வஜஸ்ய முகஸ்ரியா
ஸரஸிஜபுவோ யானம் ம்லானம் கதேன சமஞ்ஜுனா |
த்ரிதசஸதஸா மன்னம் கின்னம் கிராச விதன் வதீ
திலகயதி ஸா கம்பாதீரம் த்ரிலோசனஸுந்தரீ ||

முக்கண்ணராகிய பரமசிவனின் கண்களுக்கு விருந்தாகும் தேவி மிகச் சிறந்த ஸௌந்தர்யவதி ஆவாள். தேவியின் முகமெனும் தாமரை பஞ்ச பாணனின் முதல் பாணமான தாமரையை இகழ்வது போலும், அதைத்தன் அழகால் துன்புறுத்துவதாகவும் செய்கிறது. மேலும் இந்த முகத்தாமரை, தாமரையில் பிறந்த பிர்ம்மாவின் வாஹனமான ஹம்ஸத் தையும் நடையால் ஜெயிக்கிறது. தேவர்கள் அமுதமுண்ட தால் என்றுமே நரை, திரை, மூப்பு மரணம் அவர்களுக்குக் கிடையாது. அவர்கள் என்றுமே யௌவன மாகவே இருப்பவர்கள். ஏதாவது மிக நல்ல உணவு கிடைத்தால் அம்ருதம் போல் இருந்தது என்று அம்ருதத் திற்கு ஈடாகக் கூறுவோம். தேவர்கள் உண்ணும் அன்னம் என்னும் அமுதத்தையும் தன் இனிமையான சொற்களால் ஏக்க முறச்செய்யும் சொல்வளம் படைத்த தேவி கம்பாநதி தீரத்தில் ஒப்பற்ற திலகம் போல் விளங்குகிறாள். (27)

जननि भुवने चंक्रम्येऽहं कियन्तमनेहसं
कुपुरुषकरभ्रष्टैर्दुष्टैर्धनैरुदरंभरिः ।
तरुणकरुणे तन्द्राशून्ये तरङ्गय लोचने
नमति मयि ते किञ्चित्काञ्चीपुरीमणिदीपिके ॥

ஜனனி புவனே சங்க் ரம்யேஹம் கியந்த மனே ஹஸம்
குபுருஷகரப்ரஷ்டை: துஷ்டைர்தனை: உதரம்பரி: |
தருண கருணே தந்த்ராசூன்யே தரங்கய லோசனே
நமதி மயிதே கிஞ்சித் காஞ்சீ புரீமணி தீபிகே||

தேவி காமாக்ஷி காஞ்சிபுரத்திற்கு ஓர் ஒளி மிகுந்த ரத்னதீபம் போல் பிரகாசிக்கிறாள். மூககவி மிகுந்த வருத்தத்துடன் கூறுகிறார். இன்னும் எவ்வளவு காலம் இந்த அற்ப ஜனங்களின் கைப்பொருள்கள், அதுவும் தீய செல்வங்களால் வயிறு வளர்த்து உலகெங்கும் அலைந்தலைந்து 'உழல் வேன்? கருணை என்னும் அலை புதிது, புதிதாகத் தோன்றும் கண்கள், சோம்ப லில்லாமல் துறு துறு வென்று அடியவர் களுக்கு எப்படிக் கருணை செய்வது? என்று ஊக்கத்துடன் பாயும் இரண்டு கண்களும் உம்மை வணங்கி நிற்கும் என்மீது சிறிது நோக்கவும்' இப்படி யெல்லாம் மூககவி நமக்காகப் பிரார்த்திக்கிறார். ஸ்ரீமான் பாபநாசம் சிவன்' 'நீயல்லவோ என் தந்தை தாய்' என்ற பந்து வராளி ராகக்கீர்த்தனையில் 'நாயல்லலுறுவதுபோல் ஞான மிலாரிடம் தினம் போய் அல்லறு றவே என்னைப் புவிதனில் படைத்தாயோ' என்று வருத்தப்படுகிறார். ஜோதி ராமலிங்க வள்ளல்' அவலவயிற்றை வளர்ப்பதற்கே அல்லும் பகலும் அதில் நினைவாய் கவலைப்படுவதின்றி, சிவக்கனியைச் சேரக் கருதுகிலேன், திவலை ஒழிக்கும் திருத்தணிகைத்

திருமால் மருகன் திருத்தாட்குக் குவளைக்குடலையெடுக்காமல் கொழுத்தவுடலை எடுத்தேன்' என்று புலம்புவார். (28)

मुनिजनमनः पेटीरत्नं स्फुरत्करुणानटी-
विहरणकलागेहं काञ्चीपुरी मणिभूषणम् ।
जगति महतो मोहव्याधेर्नृणां परमौषधं
पुरहरदृशां साफल्यं मे पुरः परिजृम्भताम् ॥

முனி ஜனமன: பேடீரத்னம் ஸ்புரத் கருணாநடீ
விஹரண கலாகேஹம் காஞ்சீபுரீ மணிபூஷணம் |
ஜகதிமஹதோ மோஹவ்யாதே: ந்ருணாம்பரமௌஷதம்
புரஹரத்ருசாம் ஸாபல்யம் மேபுர: பரிஜ்ரும்பதாம் ||

முனிவர்களின் மனமாகிய பேழையில் வெகு ஜாக்ர தையாக வைக்கப்பட்ட சிறந்த ரத்னம் போல் தேவி விளங்கு கிறாள். மனமெனும் பெட்டிக்குள் வைத்து விட்டோமே, நம்மைப்போன்றவர்கள் தேவியை எப்படிக் காண முடியும் என்ற கவலை வேண்டாம். கருணை என்ற வடிவில் நாட்டிய பெண்ணாக அரங்கத்தில் நடமாடிக்களிப்பதற்குரிய நடன சாலையாக விளங்குகிறாள். மனிதர்களின் அஞ்ஞான மெனும் நோய்க்கு மிகச் சிறந்த மருந்து, த்ரிபுர ஸம்ஹாரியான பரமசிவனின் புண்ணியம், காஞ்சியில் ஒளி வீசும் ரத்ன மயமான பூஷணங்களாகவும் விளங்கும் தேவயின் தரிசனம் நமக்கு கிட்டட்டும். (29)

मुनिजनमनोधाम्ने धाम्ने वचोमयजाह्नवी-
हिमगिरितट प्राग्भारायाक्षराय परात्मने ।
विहरणजुषे काञ्चीदेशे महेश्वरलोचन-
त्रितयसरसक्रीडासौधाङ्गणाय नमो नमः ॥

முனிஜனமனோ தாம்னே தாம்னேவசோமய ஜாஹ்னவீ
ஹிமகிரிதடப்ராக்பாராயா க்ஷராய பராத்மனே |
விஹரண ஜுஷே காஞ்சீதேசே மஹேஸ்வர லோசன
த்ரிதய ஸரஸ க்ரீடா ஸௌதாங்கணாய நமோநம: ||

முனிவர்களின் மனதைத் தன் தங்குமிடமாகக் கொண்டவள் தேவி அவர்கள் மனதில் ஆத்மப்ரகாசமாக நிறைந்திருக் கிறாள். 'முனிமானஸ ஹம்ஸிகா' என்று லலிதா ஸஹஸ்ர நாமா கூறுகிறது. 'கங்கோத்ரி' என்ற இடம் இமயத்தின் உயரமான சிகரமாக உள்ளது. கங்கையின் ப்ரவாஹம் இங்கு உள்ளது போல் தங்கு தடையற்ற வாக்குப்பிரவாஹம் தேவி பக்தர்களுக்குக் கிடைக்கிறது.

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோ அத்யாத்மமுச்யதே
பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஞித: !!! (கீதை 8-3)

அக்ஷரம்-அழிவில்லாததது. அழிவில்லாததும் மேலானதா கவும் இருப்பது ப்ரம்மம். அதன் ஸ்வபாவம் ஆத்மாவேயாகும்; பரமாத்மாவும் ஆகும். தேவிப்ரம்ம வித்யா ஸ்வரூபிணி ப்ரும்மத்தை அனுஸந்தான காரணார்த்தம் ஸ்ரீவித்யா ஸ்வரூப மாக்குகிறோம். முக்கண்ணனான பரமேஸ்வரன் கிரீடிக்கவே தேவி லலிதாவாக, காமாக்ஷியாக காம விலாஸத்தின் மேன் மாடமாக, காஞ்சி என்ற நகரத்தில் காமேஸ்வரனுடன் இன்புற் றிருக்கும் அந்த மிதுனத்தை மீண்டும் மீண்டும் நமஸ்கரிக் கிறேன். ப்ரும்மமும் ஆத்மாவும் இணைந்த வடிவமே தேவி. (30)

मरकतरुचां प्रत्यादेशं महेश्वरचक्षुषां
अमृतलहरीपुरं पारं भवाख्यपयोनिधेः ।
सुचरितफलं काञ्चीभाजो जनस्य पचेलिमं
हिमशिखरिणो वंशस्यैकं वतंसमुपास्महे ॥

மரகதருசாம் ப்ரத்யாதேசம் மஹேஸ்வர சக்ஷுஷாம்
அம்ருதலஹரீபூரம் பாரம் பவாக்ய பயோநிதே: |
ஸுசரிதபலம் காஞ்சி பாஜோ ஜனஸ்ய பசேலிமம்
ஹிமசிகரிணோ வம்சஸ்யைகம் வதம்ஸமுபாஸ்மஹே ||

தேவியை தெய்வத்தன்மை பொருந்திய மரகத மணிக்கு ஒப்பிட்டுப் பார்க்கிறோம். அதுவும் மற்ற மரகதங்களைப் பழிக்கும் ஒளியுடன் கூடியதாக இருக்கிறது. தேவி பார்வ தியை பச்சை நிறத்தவள் என்று சொல்கிறோம். சில கோவில்களில் மரகத்தினாலான மூர்த்திகளைக் காண்கி றோம். உத்ரகோச மங்கை நடராஜ மூர்த்தி, மருதமலை முருகன் போன்றவை. பசுமை நிறம் எப்பொழுதுமே கண் ணுக்குக் குளிர்ச்சி. பரமேஸ்வரன் கண்களுக்கு இந்தப் பசிய விருந்து இனிமையாக இருக்கிறது. அதில் அமிர்தம் போன்ற நீரோட்டமும் (ஸ்புரணம்) காணப்படுகிறது. பரமேஸ்வர னுக்கு அமுத அலைகள். நமக்கெல்லாம் ஸம்ஸார ஸாகரத் தைக் கடத்து விப்பாள். கடந்துசென்றால் தான் அந்த மரகத மணி நமக்குக்கிடைக்கும். 'நகரேஷு காஞ்சி' காஞ்சி புரத்தில் வசிக்கும் நல்லோர்களே பாக்யவான்கள். அவர்களின் நல் வினையால் கனிந்த பழம் போல் தேவி விளங்குகிறாள். பனி மலை அரசன் ஹிமவானின் வம்சத்திற்கு ஓர் ஒப்பற்ற சூடாமணி இம்மணி இமயத்தின் உச்சி மணி,

நினைத்ததை அளிக்க வல்ல சிந்தாமணி. ஹிமவானுடைய குலமாகிய கொம்பில் பறக்கும்கொடி போன்றவள் தேவி. (31)

प्रणमनदिनारम्भे कम्पानदीसखि तावके
सरसकवितोन्मेषः पूषा सतां समुदञ्चितः ।
प्रतिभटमहाप्रौढप्रोद्यत्कवित्वकुमुद्वतीं
नयति तरसा निद्रामुद्रां नगेश्वरकन्यके ॥

ப்ரணமனதினாரம்பே கம்பாநதீஸகி தாவகே
ஸரஸ கவி தோன்மேஷ: பூஷாஸதாம் ஸமுதஞ்கித:|
ப்ரதிபட மஹாப்ரௌட ப்ரோத்யத்கவித்வ குமுத்வதீம்
நயதி தரஸா நித்ரா முத்ராம் நகேஸ்வரகன்யகே ||

கம்பாநதி தேவியின் இணைபிரியாத தோழியாவாள். ப்ரியமான சகி ஆவாள். கம்பாநதிக்கரையில் தான் மணல் லிங்கம் வைத்து பூஜித்தாள். கம்பையில் வெள்ளம் வந்தது. தேவி லிங்கத்தை மார்புடன் புதைத்துக் கொண்டாள். சிவ சக்தி ஐக்யமே கம்பா நதியின் அருள் ப்ரவாஹம் ஆகும். 'ஆறதனில் மணல் குவித்து அரிய பூஜை செய்த என் னம்மை ஏகாம்பரியே; அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந் திடும் என் அம்மை காமாக்ஷி உமையே' என்று காமாக்ஷி விருத் தம் கூறுகிறது. பொழுது விடிந்த சமயத்திலேயே தேவியை நமஸ்கரிப்பது என்றே நல்லோர்கள் நாளைத்துவக்குகிறார்கள். ஸூரியன் உதயம் போன்ற அந்த ஸஜ்ஜனங்களுக்கு மிக ரஸமான, சுவையான கற்பனைகள் நிறைந்த கவிதைகள் ப்ரவாஹம் போல் ஏற்படுகிறது. அப்படிப் பட்ட கவிவாணர்கள், அவர்களிடம் விரோதம் உண்டானால், அவர்கள் சூரியனின் எதிரில் அல்லி பட்ட நிலையை அடைகிறார்கள். (32)

शमितजडिमारम्भा कम्पातटीनिकटेचरी
निहतदुरितस्तोमा सोमार्धमुद्रितकुन्तला ।
कलितसुमनोवाञ्छा पाञ्चायुधी परदेवता
सफलयतु मे नेत्रे गोत्रेश्वरप्रियनन्दिनी ॥

சமித ஜடிமாரம்பா கம்பாதடீ நிகடீசரீ
நிஹத துரிதஸ்தோமா ஸோமார்த முத்ரித குந்தலா |
கலிதஸுமனோவஞ்ச்சா பாஞ்சாயுதீ பரதேவதா
ஸபலயதுமே நேத்ரே கோத்ரேஸ்வர ப்ரியநந்தினீ ||

அஞ்ஞானத்தை, ஜடத்தன்மையை அது ஏற்படாமலேயே தடுப்பவளாக தேவி விளங்குகிறாள். ஐந்து ஆயுதங்களைக் கையிலேந்தும் பரதேவதை யான காமாக்ஷி, ம்லையரசனின் அன்பார்ந்த மகள், கம்பாநதி தீரத்தில் உலாவுகின்றவள், என் தரிசனத்தில் அகப்பட்டால் நான் இருகண்களையும் பெற்ற பேறு பெறு வேன். தேவியின் கையில் மலரம்புகள் நாம் எதை விரும்புகிறோமா அதை அளிக்கவல்லது. காஞ்சியில் வரத ஸோதரி என்று சிறப்புப்பெயருடன் (சிவகாஞ்சி, விஷ்ணு காஞ்சி) உள்ளதால் பஞ்சாயுதங்கள் (சங்கு, சக்கரம், கதை, வாள், வில்) என்றும் கொள்ளலாம். தேவிக்குத் தண்டாயுதம், வாள், வில், சங்கம் சக்கரம் என்னும் பஞ்சாயுதம் உண்டு. (33)

मम तु धिषणा पीड्या जाड्यातिरेक कथं त्वया
कुमुदसुषमामैत्रीपात्रीवतंसितकुन्तलाम् ।
जगति शमितस्तम्भां कम्पानदीनिलयामसौ
श्रयति हि गलत्तन्द्रा चन्द्रावतंस सधर्मिणीम् ॥

மமது திஷணா பீட்யா ஜாட்யாதிரேக கதம்த்வயா
குமுதஸுஷமா மைத்ரீபாத்ரீவதம்ஸித குந்தலாம் |
ஜகதி சமிதஸ்தம்பாம் கம்பாநதி நிலயாமஸௌ
ச்ரயதிஹி கலத்தந்த்ரா சந்த்ராவதம்ஸ ஹதர்மிணீம் ||

தேவியின் கூந்தலில் சூடிய நிலவு அல்லி மலருக்கு அனுகூலமாகிறது. அதே நிலவு பரமசிவனின் சிரோபூஷண மாகவும் விளங்குகிறது. அந்த பரமசிவனின் தர்ம பத்னியாய், கம்பா நதிக்கரையில் வசிப்பவளாய், உலகெங்குமுள்ள ஜடத் தன்மையை அழிப்பவளாய் விளங்கும் ஸ்ரீகாமாக்ஷியை சரண் அடைந்து வணங்குகிறேன். (34)

परिमलपरीपाकोद्रेकं पयोमुचि काञ्चने
शिखरिणि पुनर्द्वैधीभावं शशिन्यरुणातपम् ।
अपि च जनयन्कम्बोर्लक्ष्मीं अनम्बुनि कोऽप्यसौ
कुसुमधनुषः काञ्चीदेशे चकास्ति पराक्रमः ॥

பரிமல பரீபாகோத்ரேகம் பயோமுசி காஞ்சனே
சிகரிணி புனர்த்வைதீபாவம் சசின்யருணாதபம் |
அபிச ஜனயன் கம்போ: லக்ஷ்மீமனம் புனி கோப்யஸௌ
குஸுமதனுஷ: காஞ்சீ தேசே சகாஸ்தி பராக்ரம: ||

தேவி கார்மேகம் போன்ற கறுத்த கூந்தல் அதுவும் மிகுந்த மணத்துடன் கூடிய கூந்தல் உடையவள். தேவியின் கொங் கைகளை பொன்மலையான மேருவிற்கு ஒப்பிடும் காலை யில் இரட்டை என்று உள்ளதால் மிதுனம் என்று போற்றப் படுகிறது. பரமேஸ்வரன் சில சமயம் தேவியை ஊடல் காலத்தில் வணங்குவதுண்டு. அப்பொழுது அவர் தலையில் அணிந்துள்ள சந்திரனை தேவியின் திருவடித் தாமைரை களின் அருணனின் செவ்வொளியால் செம்மை நிறமாக மாறி விடுகிறது. 'கமலாலயனும், மதியுறு வேணி மகிழ் நனும், மாலும் வணங்கியென்றும் துதியுறு சேவடியாய்' (அபிராமி அந்தாதி 7) மதியைத் தலையில் அணிந்த சிவனும் வணங்கும் பெருமை வாய்ந்தவள். சங்கு போன்ற கழுத்து என்று கூறுவது சாமுத்ரிகா லக்ஷணமாகும். தேவியோ சிறந்த சாமுத்திரிகா லக்ஷணம் வாய்ந்தவள். எனவே தேவியின் கழுத்து சங்குபோல் இருக்கிறது. ஆனால் சங்கோ நீரில் விளைவது. இந்தச் சங்கோ நீரில்லாமலேயே விளைந்திருக் கிறது. 'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி' இந்த காமாக்ஷி யம்மையானவள் காஞ்சி நாட்டிலே புஷ்பபாணனான மன் மதனின் வெற்றியே வடிவெடித்தது போல் விளங்குகிறாள். (35)

पुरदमयितुर्वामोत्सङ्गस्थलेन रसज्ञया
सरसकविताभाजां काञ्चीपुरोदरसीमया ।
तटपरिसरैर्नीहाराद्रेर्वचोभिरकृत्रिमैः
किमिव न तुलामस्मच्चेतो महेश्वरि गाहते ॥

புரதமயிது: வாமோத்ஸங்கஸ்த்தலேன ரஸஜ்ஞயா
ஸரஸகவிதாபாஜாம் காஞ்சீபுரோ தரஸீமயா |
தடபரிஸரை: நீஹா ராத்ரே: வசோபிரக்ருத்ரிமை:
கிமிவ நதுலாம் அஸ்மச்சேதோ மஹேஸ்வரிகாஹதே ||

இந்தப்பாடல் ஸௌந்தர்யலஹரியின் 8வது பாடல் விளக்கம் உள்ளது. ஆர்யா சதகம் 70, இதிலும் இந்த விளக்கம் உள்ளது. த்ரிபுரஸம் ஹாரியான பரமசிவனின் இடது மடியில் தேவி வீற்றிருக்கிறார். தேவியின் இருப்பி டங்களை மூககவி வரிசைப்படுத்துகிறார். காமேஸ்வாரின் இடதுமடி, ரஸமான கவிமழை பெய்யும் கவிவாணர்களின் நாக்கு, காஞ்சிபுரத்தின் மத்யபாகத்தில் தான் காமாக்ஷி கோவில் கொண்டு வீற்றிருப்பதால், காஞ்சி மத்ய பாகம், இமய மலையின் விசாலமான பிராந்தியங்கள், தேவியின் பிறந்த வீடு இமய மலை, தேவிக்குப்புக்ககமும் அதுவே 'மலையிலேதான் பிறந்தாள், சங்கரனை மாலை யிட்டாள்' என்பார் பாரதியார் 'எழுதாக்கிளவி' எனப்படும் வேதவசனங்கள். எங்கள் மனங்களிலும் தாங்கள் வசிக்க வேண்டுமென்பது வேண்டு தல் ஆகும். இதேபோல் அபிராமி அந்தாதி 34வது பாடல் உள்ளது. பிரமதேவனின் நான்கு நாக்கு, தேன் ஒழுகும் துளஸிமாலை, திருமாலின் கௌஸ்துபமணி, மார்பு, சிவனின் இடப்பாகம், செந்தாமரைமலர், சூரியமண்டலம், சந்திர

மண்டலம் ஆகிய இடங்களில் போய் வீற்றிருக்கிறாள். எங்கள் மனமும் மேலே சொன்ன இடங்களுக்கு ஒப்புடைய தேயாகும். (36)

नयनयुगलीं आस्माकीनां कदा नु फलेग्रहीं
विदधति गतौ व्याकुर्वाणा गजेन्द्रचमत्क्रियाम् ।
मरकतरुचो माहेशानाः घनस्तननम्रिताः
सुकृतविभवाः प्राञ्चः काञ्चीवतंसधुरंधराः ॥

நயன யுகலீமாஸ்மாகீனாம் கதாநுபலே க்ரஹீம்
விதததிகதௌ வ்யாகுர்வாணா கஜேந்த்ரசமத்க்ரியாம்|
மரகதருசோ மாஹேசானா கனஸ்தன நம்ரிதா:
ஸுக்ருதவிபவா: ப்ராஞ்ச: காஞ்சீவதம்ஸ துரந்தரா:||

தேவியின் நடை மிக கம்பீரமாக யானை நடையழகை ஒத்திருக்கிறது. மரகத மணியின் ஒளியுடன், 'ஸ்தன பாரத லன் மத்ய பட்டபந்த வலித்ரயா' என்றபடி கனமான ஸ்தனங்க ளின் பாரம் தாங்காமல் சிறிது வளைந்த திருமேனியுடன், காஞ்சி என்னும் நகரில் தலை அலங்காரம்போல் தேவி காமாக்ஷி விளங்குகிறாள். மஹேஸ்வரரான பரமசிவத்தின் பூர்வ புண்ணியப் பயனே உருவெடுத்து வந்ததுபோல் மூர்த்தி கரித்து வந்த தேவி தான், எங்களுக்கு தரிசனம் அளிப்பாளோ? என்று மூககவி நம் எல்லோருக்ககாவும் பிரார்த்திக்கிறார். (37)

मनसिजयशः पारम्पर्यं मरन्दझरीसुवां
कविकुलगिरां कन्दं कम्पानदीतटमण्डनम् ।
मधुरललितं मत्कं चक्षुर्मनीषिमनोहरं
पुरविजयिनः सर्वस्वं तत्पुरुस्कुरुते कदा ॥

மனஸி ஜயஸ: பாரம்பர்யம் மரந்த ஜரீஸுவாம்
கவிகுலகிராம் கந்தம் கம்பாநதீதடமண்டனம் |
மதுர லலிதம் மத்கம் சக்ஷுர் மனீஷி மனோஹரம்
புரவிஜயின: ஸர்வஸ்வம் தத்புரஸ்குருதே கதா ||

தென்றல் காற்றில் புஷ்பங்களில் மகரந்தம் அருகிலுள்ள அருவிகளில் போய்ச் சேர்ந்தால், புஷ்பங்களில் மணம் ஒருபுறம், நீரின் குளிர்ச்சி, தென்றலின் சிலுசிலுப்பு இத் தனை இன்பமும் சேர்ந்தது போல் காமாக்ஷி

தாஸர்களின் கவித்வவாக்குக்கள் அமைகிறது. கவிகளின் வாக்குக்குத் தோற்றுவாயும், அடிக்கிழங்கு போலவும் (கங்கா நதிக்கு) கம்பாநதிக்கரைக்கு ஓர் அலங்காரம், மனதைக் கவரும் அழகு வாய்ந்ததாகவும் ஸ்ரீகாமாக்ஷி தேவி விளங்குகிறாள். லலிதா த்ரிசதி 'ஹ்ரீங்கார கந்தாங்குரிகா' என்று தேவியை வர்ணிக்கிறது. ஹ்ரீம்காரம் தேவ, தேவியரின் உபயாக்ஷரம். ஹ்ரீம்கார மென்னும் கிழங்கிற்கு முளையாயிருப்பவள். முளை விதையின் சக்தியை அதிகப்படுத்தி விருக்ஷத்தின் அடிமரம், கிளை இலை, புஷ்பம், காய், பழம் இவற்றின் வளர்ச்சிக்குக் காரணமாகிறது. ஹ்ரீங்காரக்கிழங்கு சிவ, சக்திகளின் ஸாம ரஸ்ய காமகலா ரூபமாகும். முளையின் ஒருபாகம் மேல் நோக்கி வளர்ந்து விருக்ஷமாகிறது. மற்றொருபாகம் வேராகி பூமியில் ஊன்றிக் கொண்டு மரத்தைத் தாங்குகிறது. திரி புரஸம்ஹாரியான பரம சிவனின் ஐஸ்வர்யம், சம்பத்து எல்லாமே தேவிதான். (38)

शिथिलिततमोलीलां नीलारविन्दविलोचनां
दहनविलसत्फालां श्रीकामकोटिमुपास्महे ।
करधृतलसच्छूलां कालारिचित्तहरां परां
मनसिजकृपालीलां लोलालकामलिकेक्षणाम् ॥

சிதிலிதத மோலீலாம் நீலாரவிந்தலோசனாம்
தஹன விலஸத் பாலாம் ஸ்ரீகாமகோடி முபாஸ்மஹே |
கரத்ருத லஸச்சூலாம் காலாரிசித்தி ஹராம்பராம்
மனஸிஜக்ருபாலீலாம் லோலாலகாமலிகேக்ஷணாம் ||

தேவி ஞானமே வடிவானவள். அஞ்ஞானத்தை அழித்து மெய்ஞ்ஞானம் அருள்பவள் தேவியேயாகும். நீலோத்பலம் போன்றகண்கள், அக்னிபோல் ஜ்வலிக்கும் நெற்றி, அதாவது நெற்றிக்கண்லலாடத்தில் பிரகாசிப்பவள். 'சூலினி' சூலம் கையிலேந்தியவள். தேவியின் பல ரூபங்களில் துர்கை என்ற ரூபத்தில் தேவி சூல்கைக்கொண்டு விளங்குகிறாள். பர மேஸ்வரன் காமனைக் கண்ணால் காய்ந்தார். காலனைக் காலால் உதைத்துத் தள்ளினார். தேவி மன்மதனைத் தன் சந்த்ர நேத்ரத்தால் அம்ருதத்தைப் பொழிந்து உண்டாக்கி, அவனை யாரும் ஜயிக்காதபடி வரங்களும் கொடுத்தனுப் பினாள். அளி, நெளி, அழகியான தேவி நெற்றியில் கண் உடையவள். திரிசூலி, காமனைக் காய்ந்ததும், காலனை உதைத்ததும் தேவியின் உதவியாலேயே பரமேஸ்வரன் நிகழ்த் திய லீலைகள். (39)

कलालीलाशाला कविकुलवचः कैरववनीः-
शरज्ज्योत्स्नाधारा शशधरशिशुश्लाघ्यमुकुटी ।

पुनीते नः कम्पापुलिनतटसौहार्दतरला
कदा चक्षुर्मार्गं कनकगिरिधानुष्कमहिषी ॥

கலாலீலா சாலா கவிகுலவச: கைரவவனீ
சரத்ஜ்யோத்ஸ்னாதாரா சசதரசிசுச்லாக்யமுகுடீ |
புனீதே ந: கம்பா புலினதட ஸௌஹார்த்தரலா
கதா சக்ஷுர் மார்க்கம் கனக கிரி தானுஷ்க மஹிஷீ ||

தேவி 64 கலைகளின் வடிவானவள் 'ஆயகலைகள் அறு பத்தி நான்கையும் ஏய உணர்விக்கும் என் அம்மை (கம்பர்) கலைகளை உடையவள். கலா+ஆலாபா=கலாலாபா, கலைக ளையே சம்பாஷணையாக உடையவள். அடியார்களின் பேச்சு தேவிக்கு நன்றாகவே புரியும் கலைளை தன் விளை யாடுமிடங்களாகக் கொண்டு ஆம்பலும், வெண்தாமரை களும் செறிந்த காட்டிலே சரத்ருது நிலாவைப்போல், கவிவாணர்களின் சிறந்த வாக்குகளால் பிரகாசிப்பவள். முடிமேல் நிலவை அணிந்ததால் பாலசந்த்ரனை மகுடமாக சூட்டிக்கொண்டிருப்பவள். சிவன்த்ரிபுர ஸமஹாரத்திற்குப் புறப்பட்டார். அப்பொழுது எல்லா தேவர்களும் தங்களை அந்தப் பணிக்கு அர்ப்பணித்துக் கொண்டார்கள். பொன்மலை யான மேருவையே சிவன் வில்லாகக் கொண் டார். மேரு மலை நம் அன்னையின் வாசஸ்தான் மல்லவா! தேவியின் உதவியா லேயே சிவன் த்ரிபுரஸம்ஹாரம் செய்தார். தேவி த்ரிபுர சுந்தரி; இதன் விளக்கத்தைப் பின்னால் எழுதுகிறேன். (40)

नमः स्तान्नम्रेभ्यः स्तन कलश भारेण गुरुणा
दधानेभ्यश्चूडाभरणममृतस्यन्दि शिशिरम् ।
सदा वास्तव्येभ्यः सविधभुवि कम्पाख्यसरितो
यशोव्यापारेभ्यः सुकृतविभवेभ्यः रतिपतेः ॥

நம: ஸ்தான் நம்ரேப்ய: ஸ்தன கலசபாரேணா குருணா
ததானேப்ய: சூடாபரணம் அம்ருஸ்யந்திசிசிரம் |
ஸதா வாஸ்தவ்யேப்ய: ஸவிதபுவி கம்பாக்யஸரிதே
யசோ வ்யாபாரேப்ய: ஸுக்ருத விபவேப்யோ ரதிபதே: ||

ஸ்தனங்களின் பெருமையால் அதிகர்வம் என்று வர்ணிக்கப்படுகிறாள். இது உயர்ந்த சாமுத்திரிகா லக்ஷணம். குளிர்ந்த நிலவை, அம்ருதத்தைப் பொழியும் நிலவைத் தேவி தன் திருமுடிக்கு ஆபரண மாக உடையவள். கம்பா நதிக்கரையையே தன் இருப்பிடமாகக் கொண்டவள். தேவியால் தான்,

மன்மதன் உயிர் பெற்றான். மற்றும் எல்லாச்சிறப்புக்களையும் தேவி மன்மதனுக்கு அளித்தாள். நல்வினைப் பயன்களே யான தேவிக்கு எப்பொழுதும் எங்களுடைய நமஸ்காரம் உரியதாகட்டும். தேவியின் குழதைகளான நம் அனைவருக்கும் பாலூட்டும் தாயாக இருப்பதால் கனத்த ஸ்தனங்கள், பால் நிரம்பிய பொற்கலசங்கள் தேவி நம் தாய். எனவே ஸ்தனங்களில் பாலோடு கூடியவளாகக் த்யானிப்போம் குழந்தை வயிற்றில் ஜனித்த சில நாட்களிலேயே ஸ்தனங்களில், பாலின் கனத்தைத் தாய்மார் கள் உணர்வார்கள். (41)

असूयन्ती काचिन्मरकतरुचो नाकिमुकुटी-
कदम्बं चुम्बन्ती चरणनखचन्द्रांशुपटलैः ।
तमोमुद्रां विद्रावयतु मम काञ्चीनिलयना
हरोत्सङ्गश्रीमन्मणिगृह महा दीप कलिका ॥

அஸூயந்தீகாசின் மரகதருசோ நாகிமுகுட
கதம்பம் சும்பந்தீ சரணநக சந்த்ராம் சுபடலை: |
தமோமுத்ராம் வித்ராவயது மம காஞ்சீநிலயனா
ஹரோத்ஸங்க ஶ்ரீமன் மணிக்ருஹ மஹாதீப கலிகா||

காதுகள் வரை நீண்ட கடைக்கண்கள், கிருபைப் பெருக்கு கழுத்து வரை வியாபித்துள்ளது. அப்படிப்பட்ட கருணை உடைய காமாக்ஷி காமேஸ்வராது மடியில் அமர்ந்திருப்பவள்; புராதனி; ஓரானெரு வித்தையை நமஸ்கரிக்கி றேன். 'சிவ காமேஸ்வரங்கஸ்வாக தேவி ஹரதேவரின் மடித்தலத்தில் சிந்தா மணி ரத்னங்களால் ஆனவீட்டில், பெரியவிளக்கு ஜவாலை போன்ற, பூமொட்டு, மரகதக் காந்தியைத் தோற்கடிப்பதாய் விளங்குகிறது. தேவியின் பாதங்களில் தேவர்கள் வணங்கிக் கொண்டிருக்கிறார்கள். தேவியின் திருவடி நகங்கள் சந்திரனைப் போல் ஒளிவீசுகிறது. அந்த நிலவொளி தேவர்களின் தலையை ஆதரேவோடு தடவிக் கொடுக்கிறது. (42)

अनाद्यन्ता काचित्सुजननयनानन्दजननी
निरुन्धाना कान्तिं निजरुचिविलासैर्जलमुचाम् ।
स्मरारेस्तारल्यं मनसि जनयन्ती स्वयमहो
गलत्कम्पा शम्पा परिलसति कम्पापरिसरे ॥

அனாத்யந்தா காசித் ஸுஜன நயனாநந்த ஜனனீ
நிருந்தானா காந்திம் நிஜருசி விலாஸைர் ஜலமுசாம் |

ஸ்மராரேஸ்தாரல்யம் மனஸி ஜனயந்தோ ஸ்வயமஹோ
கலத் கம்பா சம்பா பரிலஸதி கம்பா பரிஸரே ||

அடி, முடி காண முடியாத ஈடு இணையற்ற ஓர் மின்னல் கொடிபோல் தேவி நல்லவர்களின் கண்களுக்கு ஆனந்தம் அளிக்கிறாள். வாஷாளுவான மேகங்கள் சூல்கொண்டு கருநிறத்துடன் மழையைக் கொட்டுகிறது. கார் மேகத்திற்கும் கனக விளிம்பு உண்டல்லவா? ஆயினும் அந்தக் கார் மேகங்களின் கனகவிளிம்பின் காந்தியை மேலெழ ஒட்டாமல் ஒடுக்கி தேவியின் திருமேனிக் காந்தி அருள் என்னும் மழையையும் பெய்வித்து, மன்மதனை ஜயித்த சிவனாரின் மனதில் க்ஷணப்பொழுதில் தோன்றி மறைந்து எல்லோருடைய கண்களையும் கூசச் செய்கிறது. கார் மேகங்களுக்கு அழகையும், பெருமையும் அளித்து ஆகாயத்தில் காணப்படும். தேவி என்ற மின்னற் கொடியோ தோன்றுதலுமில்லை. மறைதலுமில்லை; எப்பொழுதும் ஒளி வீசிக் கொண்டே இருக்கிறது. பாக்யசாலிகள் காணும் படி காஞ்சியில் ஸ்திரவாஸம் செய்வது. மின்னலோ ஆகாயத்தில்; இந்த மின்னலோ பூமியில் நதிக்கரையில்; இவை ஒன்றுக்கொன்று முரணான ஆச்சர்யமே! (43)

सुधाडिण्डीरश्रीः स्मितरुचिषु तुण्डीरविषयं
परिष्कुर्वाणासौ परिहसितनीलोत्पलरुचिः ।
स्तनाभ्यां आनम्रा स्तबकयतु मे काङ्क्षिततरुं
दृशामैशानीनां सुकृतफलपाण्डित्यगरिमा ॥

ஸுதாடிண்டிரஸ்ரீ: ஸ்மிதருசிஷு துண்டீர விஷயம்
பரிஷ்குர்வாணாஸௌ பரிஹஸித நீலோத்பலருசி:|
ஸ்தனாப்யாமாநம்ரா ஸ்தபகயது மே காங்க்ஷிததரும்
த்ருசாமைசானீனாம் ஸுக்ருதபல பாண்டித்ய கரிமா||

ஈச்வரனின் மூன்று கண்களும் செய்த நல்வினைப் பயனே ஸ்ரீதேவி காமாக்ஷித்ரிபுரசுந்தரீ. தேவியை ஓர் பெரிய ஏரி, அந்த ஏரி என்ற நீர்நிலையில், தோன்றும் மந்த ஹாஸச் சிரிப்பு என்றெல்லாம் வர்ணித்து, அந்தப் புன்முறுவலில் அமிருதமய மான ஒளியால் நீர்வளத்தால் தொண்டை நாட்டை வளப் படுத்துவதாக தேவியின் மந்த ஹாஸத்தை வர்ணிக்கிறார். கரைகளுக்கு உள்ளடங்கிய ஏரிபோல் ஸ்தனங்களால் சற்று வளைந்து, நமக்கு வேண்டியவற்றை வாரி வழங்கும். நீர்ப்பரப்பை உடைய ஏரிபோல் நம்முடைய விருப்பங்களை தன் கடாக்ஷங்களால் பூங்கொத்துக்கள் புஷ்பிப்பது போல் பரம கருணையுடன் செய்கிறாள். மேலே சொல்லப்பட்ட ஈசான் மூர்த்தியே உலகம் தோன்றும் முன்னும், உலகம் அழிந்த பின்னும் சாச்வதமாக உள்ளவர். ஜீவர்களுக்கு இவரே தலைவர். ஸ்ருஷ்டி, ஸ்திதியிலும் இவரே தலைவர் ஈசானர் ஒளிவடிவில் உயிரில் விளங்குபவர் (அதர்வசிர உபநிடதம்). (44)

कृपाधाराद्रोणी कृपणधिषणानां प्रणमतां
निहन्त्री संतापं निगममुकुटोत्तंसकलिका ।
परा काञ्चीलीलापरिचयवती पर्वतसुता
गिरां नीवी देवी गिरिशपरतन्त्रा विजयते ॥

க்ருபா தாராத்ரோணீ க்ருபணதிஷணானாம்ப்ரணமதாம்
நிஹந்த்ரீ ஸந்தாபம் நிகம முகுடோத்தமஸ்கலிகா |
பரா காஞ்சீலீலா பரிசயவதீ பர்வத ஸுதா
கிராம் நீவி தேவீ கிரி சபரதந்த்ரா விஜயதே ||

மலையிலேதான் பிறந்தாள், சங்கரனை மாலையிட்டாள்
உலையிலே யூதி உலகக் கனல் வளர்ப்பாள்
நிலையில் உயர்ந்திடுவாள், நேரே அவள்பாதம்
தலையிலே தாங்கித் தரணி மிசை வாழ்வோம் - சுப்ரமண்ய பாரதியார்

மலையின் மகளாகப் பறந்து, மலையின் ஈச்வரனாக வாழும் பரமசிவன் ஆசை மணாட்டியாகி, தேவி பிறந்தகத்தும் செல்லி, புகுந்து இடத்தும் அப்படியே! சிவ பெருமான் ஒரு சமயம் அர்ஜுனன் தபஸிற்கு இரங்கி வேட னாக வந்த வரலாறு ஒன்று உள்ளது. பாரதயுத்தத்தில் துரியோதனா தியரை ஜெயிக்க, அர்ஜுனன் பாசுபாதாஸ்திரம் பரமேஸ்வரனிடமிருந்து பெற வேண்டித் தவமிருந்தான். பிநாகமும் அம்புகளும் கையில் கொண்டு பரமசிவன் உமாதேவியுடன் வேட வடிவம், தேவி வேடிச்சியாக அர்ஜுனன் இருந்த காட்டை அடைந்தார்கள். ஒரு காட்டுப்பன்றி விஜயனைத்தாக்க வந்தது. அந்தப் பன்றியைப் பிநாகம் வளைத்த சங்கரனும், காண்டீபம் வளைத்த அர்ஜுனனும் ஒரே சமயத்தில் அம்பு எய்து கொன்றார்கள். பன்றியை வதைத்த ஒரு சாக்கில் இருவருக்கும் கடுமையான யுத்தம் நடைபெற்றது. நூற்றுக் கணக்கான பாணங்களை அர்ஜுனன் சொரிந்ததை மழையை மலை ஏற்றுக்கொள்வது போல் மலை வாசியான மகாதேவன் ஏற்று காண்டீபத்தை உடைத்தார். கல்யுத்தம், மல்யுத்தம் நடந்து இருவரும் கட்டிப்புரண்டனர். அப்பொழுதுதான் தனஞ்ஜயனுக்கு வந்துள்ளது வேடன், வேடத்தி ரூபத்தில் சிவபார்வதி என்று தெரிந்தது. பகவான் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டு, பகவன் பாசுபதமும் அவனுக்களித்தார். சிவன் தலையில் 'காண்டீபமென்னும் வில்லால் ஒருவன் அடிக்க' என்று சொல்வது உண்டு. தேவிக்கு வேத வசனங் களே ஆடையாகிறது. உபநிஷத்துகள் தலையிலணியும் பூக்கள், காஞ்சி என்னும் ஒட்டியாணம் இடைக்காபரணம் கொண்ட வேடுவச்சியாக விளங்குகிறாள். தோட்டம், துரவு களில் கிணற்று நீரை ஏற்றம் கொண்டு இரைத்து ஏற்றச்சால் மூலம் தண்ணீர் பாய்ச்சுவோம். ஏராளமான தண்ணீர்

வெள்ளம், கருணை வெள்ளம். தேவி தலைவணங்கி நிற்ப வர்களுக்காகப் பொழிகிறாள். தண்ணீர் தாகத்தைத் தாபத்தை நீக்குகிறது. தேவியின் கருணை தாபத்ரயத்தையும் விலக்கு கிறது புத்தியில்லாதவர்களாயினும் தேவியின்தாள் பணிந் தால் எல்லாக் கஷ்டத்தையும் நீக்குபவளாக விளங்குகிறாள். (45)

कवित्वश्रीकन्दः सुकृतपरिपाटी हिमगिरेः
विधात्री विश्वेषां विषमशरवीरध्वजपटी ।
सखी कम्पानद्याः पदहसितपाथोजयुगली
पुराणी पायान्नः पुरमथन साम्राज्यपदवी ॥

கவித்வ ஸ்ரீகந்த: ஸுக்ருத பரிபாடீ ஹிமகிரே:
விதாத்ரீ விச்வேஷாம் விஷமசரவீரத்வஜபடீ |
ஸகீ கம்பாநத்யா: பதஹஸித பாதோஜ யுகலீ
புராணீ பாயான்ன: புரமதன சாம் ராஜ்யபதவீ ||

ப்ரவத ராஜனின் மாபெரும் தவமே, தேவி அவனுக்குப் பெண் ஆனது. தேவி பார்வதியை பரமேஸ்வர னுடன் சேர்த்து வைக்கும் பணியில் தன்னை இழந்த மன்மதனை தேவி உயிர்ப்பித்து. பஞ்சபாணன் என்ற சிறப்புப் பெயர் அடையும் படி தேவி அவனுக்கு அருள் புரிந்து, பட்டுத்துணி கொடியாக உயர்த்திய காமனின் ஈஸ்வரி காமேஸ்வரியாகி, சிவனையும் காமேஸ்வரராக்கி, மன்மத ஸாம்ராஜ்யத்திற்கு தானே தலைவியாக விளங்குகிறாள். (ஆர்யாசதகம் 32,33,35,36,28, பலபாடல்களில் காணலாம்) கம்பாநதி தேவியின் தோழியா வாள் தேவி தன் உயிர்த்ததோழியான கம்பாநதியை விட்டுப் பிரியமாட்டாள். நதிகளை ஸ்திரீகளாகவும், மலைகளை ஆடவ னாகவும் உருவகம் செய்வது வழக்கம். பரமசிவன் த்ரிபுர ஸம்ஹாரம் செய்தா லும் சிவனின் மனமெனும் சாம்ராஜ்யத்தை தன் வசப்படுத்தியவள், 'சிவப்ரியா' 'சிவாராத்யா' என்றெல்லாம் புகழப்படுபவள் தேவி காமாக்ஷி. காஞ்சி க்ஷேத்ரமே 'சிவஜித்' க்ஷேத்ரமாகும் தேவியின் அளவற்ற கருணையால் மன்மதன் சிவனை ஜயித்த இடம் தேவி உலகினுக்கெல்லாம் தாய், சாம்ராஜ்யத் தலைவி, ஸ்ரீவித்யா பீடேஸ்வரியாக சிம்மாதனத்தில் அமர்ந்த வள். ஸாம்ராஜ்ய லக்ஷ்மியாக விளங்கும் தேவி நம்மைக் காப்பாளாக! (46)

दरिद्राणा मध्ये दरदलिततापिञ्छसुषमाः
स्तनाभोगक्लान्तास्तरुणहरिणाङ्काङ्कितकचाः ।
हराधीना नानाविबुधमुकुटीचुम्बितपदाः
कदा कम्पातीरे कथय विहरामो गिरिसुते ॥

தரித்ராணா மத்யே தரதலித தாபிஞ்ச ஸுஷமா:
ஸ்தனாபோகக்லாந்தா: தருணஹரிணாங்காங்கிதகசா: |
ஹராதீனா நாநாவிபுத முகுட சும்பத பதா:
கதா கம்பாதீரே கதய விஹராமோ கிரிஸுதே ||

தேவியை 'அறுபதா சர்வதா' (ஒரு நாள் 60 நாழிகை கொண்டது. எனவே அறுபது நாழிகை பொழுதும், சர்வ காலமும் நினைப்பது என்று பொருள்படும்) நினைந்து, நினைந்து தேவியாகவே மனோபாவத்தில் ஒன்றாகி 'ஸாரூப்ய' என்ற நிலை நமக்கெல்லாம் கிட்ட வேண்டும் என்று கவி வேண்டுகிறார். பகவானுக்கு பக்தி பண்ணும் பாவ னையில் பலவித நிலைகள் உண்டு. திரு ஞானசம்பந்தர் உமா மஹேஸ்வரரைத் தாய் தகப்பனாகக் கண்டார். நாவின் அரசர் தன்னை தொண்டனாகக் கண்டார். சுந்தரர் 'சக்யபாவம்' என்னும் தோழனாகவும், மணிவாசகப் பெருமாள் குருவாகவும் பகவானைக் கருதி வழிபட்டார்கள். இதில் தோழ பாவம் மிகவும் விசேஷமானது. தேவிக்கு நம்மைக் குழந்தையாக்கிக் கொண்டு கன்னிப்பருவத்து விளையாட்டுக் களில் ஈடுபட வேண்டும். பரமசிவனுக்கு மட்டுமே கட்டுப்பட்ட தேவியின் பாதங்களில் எல்லா தேவர்களின் திருமுடிகளும் பாதங்களைத் தொட்டு அலங்கரிக்கிறது. தேவிக்கு நாம் அனைவரும் தோழிகளாகி கம்பா நதி தீரத்தில் மேலே குறிப்பிட்ட பின்ளைப்பருவத்து விளையாடல்களை விளையாடுவோம். (47)

वरीवर्तु स्थेमा त्वयि मम गिरां देवि मनसो
नरीनर्तु प्रौढा वदनकमले वाक्यलहरी ।
चरीचर्तु प्रज्ञाजननि जडिमा नः परजने
सरीसर्तु स्वैरं जननि मयि कामाक्षि करुणा ॥

வரீவர்த்து ஸ்த்தேமா த்வயி மமகிராம் தேவி மனஸோ
நரீநர்த்து ப்ரௌடா வதனகமலே வாக்யலஹரீ|
சரீசர்த்து ப்ரஜ்ஞாஜனனி ஜடிமாஸ்மத் பரிஜனே
ஸரீஸர்த்து ஸ்வைரம் ஜனனி மயிகாமாக்ஷி கருணா||

'சொல்லும் பொருளுமென நடமாடும் துணைவருடன் புல்லும் பரிமளப் பூங்கொடியே ' (அபிராமி அந்தாதி 28) சொல்வடிவம்-உமாதேவி; பொருள் வடிவம்-சிவபெருமான். 'வாகர்த்தா விவ ஸம்ப்ருக்தௌ; வாகார்த்த ப்ரதி பத்தயே ஜகத: பிதரோ வந்தே பார்வதி பரமேஸ்வரௌ:'பரா, ப்ரயத்யக் சிதீரூபா, பச்யந்தீ, பரதேவதா, மத்யமா, வைகரீ ரூபா' லலிதாஸஹஸ்நாமா 366 முதல் 371 வரை. ப்ரும்மம் உல[illegible]க்கும் ஸங்கல்பத்தின் காரண

மாக ஸ்புரணம் (துடிப்பு) ஏற்பட்டது. ப்ரும்மத்தின் சக்தியே பராசக்தி யாக வெளிப்பட்டது. ஆகாயம் அதில் ஒலி ஏற்பட்டு ஒலியின் மூலசக்தி 'பரா' ஆகிற்று. பின்பச்யந்தி, மத்யமா, வைகரீ என்ற நிலைகளை அடைந்து வாக்கா கிறது. வாக்குகளின் தலைவி தேவி காமாக்ஷியே ஆவாள். கவிஞர்களின் முகமாகிய தாமரையில் கவித்வ வெள்ளம் எனும் திறமை வாய்ந்த பெண்மணி அபிநயங்களுடன் நாவில் நடனமாடட்டும். தேவி காமாக்ஷியின் கருணை வெள்ளம் நம்மிடம் பாயட்டும்! அஞ்ஞானம் என்னும் ஜடத்தன்மை நமக்குப் புறம்பானவர்களிடம் போகட்டும். வாக்குகளின் தலைவி காமாக்ஷி தேவி என்று கூறுவது மிகையாகாது. (48)

क्षणात्ते कामाक्षि भ्रमरसुषमाशिक्षणगुरुः
कटाक्षव्याक्षेपो मम भवतु मोक्षाय विपदाम् ।
नरीनर्तु स्वैरं वचनलहरी निर्जरपुरी-
सरिद्वीचीनीचीकरणपटुः आस्ये मम सदा ॥

க்ஷணாத்தே காமாக்ஷி ப்ரமரஸுஷமா சிக்ஷணகுரு:
கடாக்ஷ வ்யாக்ஷேபோ மம பவது மோக்ஷாய விபதாம்|
நரீநர்த்து ஸ்வைரம் வசனலஹரீ நிர்ஜர புரீ
ஸரித்வீசீ நீசீகரணபடுராஸ்யே மமஸதா ||

தேவியின் கடாக்ஷ வீக்ஷண்யம் நம் மேல் பட்டால் எல்லா ஆபத்துக்களை யும் கடந்து விடுதலை அடைவோம். 'பதம் தே கீர்த்தினாம் ப்ரபத மபதம் தேவி விபதாம்' ஸௌ.ல. 88 தேவியின் பாதங்களின் முன்பாகம் அடியார்களைக் காப்பதாக உள்ளது விபத்துக்களிலிருந்து காப்பாற்றுகிறது. இந்த 2 ஸ்லோகங் களும் நாம் தினமும் அனுஸந்தானம் செய்ய வேண்டும். இந்தக் காலத்தில் விபத்துக்கள் மிக அதிகமாக உள்ளது. நம்மை விபத்துக் களிலிருந்து தேவி காப்பாற்றி விடுவாள். தேவியை நாம் உளம் நெகிழ்ந்து, மனமுருகி ஸ்துதிகள் செய்து பாடுகிறோம். சிவன் பிரணயகலகத்தில் தேவியை வணங்கும்போது கங்கையும் கீழே இறங்குகிறாள். வாக்குகளின் சக்தியானது கங்கை வெள்ளத் தையும் கிழிறங்கச்செய்கிறது. (49)

पुरस्तान्मे भूयः प्रशमनपरः स्ताद्भवरुजां
प्रचारस्ते कम्पातटविहतिसंपादिनि दृशोः ।
इमां याच्ञां ऊरीकुरु सपदि दूरीकुरु तमः-
परीपाकं मत्कं सपदि बुधलोकं च नय माम् ॥

புரஸ்தான் மேபூய: ப்ரசமனபரஸ்ஸ்தான்மம ருஜாம்
ப்ரசாரஸ்தே கம்பாதட விஹ்ருதி ஸம்பாதினி த்ருசோ:|

இமாம் யாச்ஞாம் உரீகுரு ஜனனி தூரீகுருதம:
பரீபாகம் மத்கம் ஸபதி புதலோகம் சநயமாம்||

கம்பாநதிக் கரையில் எப்பொழுதும் பாலையாக சிறு வீடுகட்டி, சிறு தேருருட்டி பல விளையாடல்களால் இன்புறும் ஸ்ரீகாமாக்ஷி தேவி என் துன்பங்களை மாய்ப்பதில் தீவிரம் கொண்ட அந்தத் திருக்கண்கள் நம் மேல் சஞ்சரிக் கட்டும். பாலா த்ரிபுர சுந்தரியும் காமாக்ஷியும் வேறு, வேறல்ல, இருவரும் ஒருவரே. (50)

उदञ्चन्ती काञ्चीनगरनिलये त्वत्करुणया
समृद्धा वाग्धाटी परिहसितमाध्वी कवयताम् ।
उपादत्ते मारप्रतिभट जटाजूटमुकुटी-
कुटीरोल्लासिन्याः शतमखतटिन्या जयपटीम् ॥

உதஞ்சந்தீ காஞ்சீ நகரநிலயே த்வத் கருணயா
ஸம்ருத்தா வாக்தாடீ பரிஹஸிதமாத்வீ கவயதாம் |
உபாதத்தே மாரப்ரதிபட ஜடா ஜூட முகுடீ
குடீரோல்லாஸின்யா: சதமகதடின்யா ஜயபடீம் ||

காஞ்சிபுரம் முழுவதுமே கோவில்களாகவே நிறைந் துள்ளது. எல்லாமே ஸ்ரீகாமாக்ஷியின் கருணைநிறைந்த சன்னிதிகள் தான். அந்தக் கருணை வெள்ளம் வளமாகப் பெருகும், கவிகளின் வாக்குகளாகவும் பெருகுகிறது. காமனை வென்றதற்கு அடையாளமாகப் பரமேஸ்வரன் தன் ஜடாமகுடம் என்ற குன்றின் மீது கங்கையின் நீர்ப்புனல் கொடிபோல் நீரைச் சொரிகிறது தேவி வெற்றி கொண்டதற்கு அடையாளமாகத் திருவடியிலே கட்டிய வெற்றிக் கொடியா கிய கங்கையைப் போன்ற தாகும். ஆதியில் சிவன் காமனை வென்று, கங்கையைக் கொடியாகத்தன் ஜடா முடியில் உயர்த் தியதை, தேவி இப்பொழுது கீழே தாழ்த்தி, தேவியின் கருணையாலே பரமசிவனை வெற்றிகொண்டு விளங்குவ தாக கவி வர்ணிக்கிறார். (51)

श्रियं विद्यां बुद्धिं जगति नमतां त्वामथ यशः
सुपुत्रान् प्रादत्ते तव जननि कामाक्षि करुणा ।
त्रिलोक्यामाधिक्यं त्रिपुरपरिपन्थिप्रणयिनि
प्रणामस्त्वत्पादे शमितदुरिते किं न कुरुते ॥

ச்ரியம் வித்யாம் தத்யா ஜ்ஜனனி நமதாம் கீர்த்திமமிதாம்
ஸுபுத்ரான் ப்ராதத்தே தவ ஜடிதி காமாக்ஷி கருணா |

த்ரிலோக்யாமாதிக்யம் த்ரிபுரபரிந்தி ப்ரணயினி
ப்ரணாமஸ்த்வத்பாதே சமித துரிதே கிம்ந குருதே ||

தேவி காமாக்ஷியை வழிபடுதலால் என்ன வெல்லாம் கிடைக்கிறது என்று இந்தப் பாடலில் தொகுத்தளிக்கிறார். அளவற்ற கீர்த்தி, நல்ல சந்ததி, மற்றும் பதினாறு பேறுகளையும் தருகிறது. 'தனந்தரும், கல்விதரும் ஒரு நாளும் தளர்வறியா மனந்தரும் தெய்வ வடிவம் தரும் நெஞ்சில் வஞ்சமில்லா இனந்தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே கனந்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக் கண்களே.' (அபி.அந்த-69) தேவி தாசர்களுக்கு தேவி போகம். மோக்ஷம் இரண்டு பேற்றினையும் அளிக்கிறாள். ஆயினும் ஞானிகள் தேவியின் திருவடியைத் தவிர எதையும் வேண்டுவதில்லை. கா, மா, க்ஷி, என்ற பெயர்ப்படி ஸ்ரீதேவியும், வாக்தேவியுமே தேவியின் இரு நேத்தி ரங்களாக விளங்குவதால் செல்வமும் ஞானமுமே ஞானியர்கள் தந்தருளும் படி வேண்டுகிறார்கள். த்ரிபுர ஸம்ஹாரியான பரமசிவனின் ஆசை மணாட்டி யான ஸ்ரீகாமாக்ஷியின் கருணை மூவுலகிலும் மேன்மை அளிக் கிறது. பாபங்களை அழிக்கிறது 'தான்யம், தனம், பசும், பஹுபுத்ரலாபம், ஸத ஸம்வத் ஸரம் தீர்க்கமாயு: என்று ஸ்ரீ சூக்தம் நம்மை வாழ்த்துகிறது. (52)

मनःस्तम्भं स्तम्भं गमयदुपकम्पं प्रणमतां
सदालोलं नीलं चिकुरजितलोलम्बनिकरम् ।
गिरां दूरं स्मेरं धृतशशिकिशोरं पशुपतेः
दृशां भोग्यं योग्यं तुहिनगिरिभाग्यं विजयते ॥

மன: ஸ்தம்பம் ஸ்தம்பம் கமயது பகம்பம் ப்ரணமதாம்
ஸதாலோலம் நீலம் சிகுரஜிதலோலம்ப நிகரம் |
கிராம் தூரம் ஸ்மேரம் த்ருத சசிகிசோரம் பசுபதே
த்ருசாம்போக்யம் யோக்யம்துஹினகிரி பாக்யம்விஜயதே||

'வருந்தா வகை என் மனத்தாமரையினில் வந்து புகுந்து இருந்தாள் பழைய இருப்பிடமாக' (அபிராமி அந்தாதி 90) தேவி அடியார்களின் மனத்தில் தேடி வந்து அமர்கிறாள். அதுவும் பழைய இருப்பிடமாக என்கிறார். இது ஜன்மாந்தரத் தொடர்பு முன் ஜன்மாவில் அமர்ந்த ஞாபகத்தால் இப்பொழு தும் என் மனத்தாமரையில் வந்து புகுந்து இருந்தாள் என்கி றார். அபிராமி பட்டர். 'புண்ணியம் செய் தனமே மனமே! புதுப் பூங்குவளைக் கண்ணியும் செய்ய கண வரும் கூடிநம் கார ணத்தால் நண்ணி இங்கே வந்து தம் அடி யார் நடு இருக்கப் பண்ணி நம் சென்னியில் மேல் பத்மபாதம் பதித்திடலே (அ.அந்41) இப்படியாக தேவி அடியார்களிடம் வந்துறைவதால் அவர்மனம் பெருமை கொள்கிறது. அதை கர்வம் என்று கொஞ்சம் மிகைப்படுத்தி சொல்ல

லாம். இயற்கையாகவே சுருட்டையானதும், சிறு வண்டுகள் சஞ்சரிப்பது போன்ற சோபையுடன் முன் நெற்றி மயிர்களால் சூழப்பெற்று தாமரை யின் அழகைப் பரிஹஸிக்கிறது. தேவியின் முன் உச்சி மயிர்களையும், கருநீல விழிகளையும் இப்படியெல்லாம் வர்ணிக்கிறார். வாக்குகளுக்கு எட்டாத தாயினும், கண்களுக்கு எட்டும்படி பாலசந்திரனை தேவி தன் திருமுடியில் சூடி, பசுபதியான ஜீவர்களுக்கு நாயகனான பரமசிவனையும் வசப்படுத்தி, அவர் கண்களுக்கு விருந்தாகி, பர்வதராஜனின் தவப்பயனான ஸ்ரீகாமாக்ஷி தேவி கம்பா நதிக்கரையில் சிறந்து விளங்குகிறாள். தேவி வாக் கிற்கும், மனத்திற்கும் எட்டாத வளாயினும், என் ஊன் கண்ணிற்கும், சிற்றறி வுக்கும் வெளிப்பட நிற்கிறாள் என்று வியந்து பாடுகிறார் அபிராமிபட்டர். (53)

घनश्यामान् कामान्तकमहिषि कामाक्षि मधुरान्-
दृशां पातान् एतान् अमृतजलशीतान् अनुपमान् ।
भवोत्पाते भीते मयि वितर नाथे दृढभवन्-
मनश्शोके मूके हिमगिरिपताके करुणया ॥

கனஸ்யாமான் காமாந்தகமஹிஷி காமாக்ஷி மதுரான்
த்ருசான் பாதானேதான் அம்ருதஜலசீதானனுபமான்|
பவோத்பாதே பீதே ।மயி விதர நாதே த்ருடபவன்
மனச்சோகே மூகே ஹிமகிரிபதாகே கருணயா||

நெற்றிக்கண்ணால் மன்மதனை எரித்தழித்த சிவபெருமானது யோக நியமத்தை உலகம் பழிக்கும்படி குலைத்து அவர் இடபாகத்தைக் கைக் கொண்டு ஆட்சிபுரியும் காமாக்ஷி அன்னையே! சிவனின் ராணியே! என் பிராட் டியே! இமயவா னின் வம்சத்திற்கு கொடிபோன்றவளே! கருமேகம் போன்ற கருநிறம், இனிமை, அமுதம் போன்ற தயை நிறைந்த கண் ணோக்கு என்ற அருவி இவைகள் ஸம்ஸாரம் என்ற தாபத்திலிருந்து இந்த ஊமை யான (முகன்மீது) என் மீது கருணையைப் பொழியவேண்டுமென்று வேண்டுகிறார். (54)

नतानां मन्दानां भवनिगलबन्धाकुलधियां
महान्ध्यं रुन्धानां अभिलषितसंतानलतिकाम् ।
चरन्तीं कम्पायास्तटभुवि सवित्रीं त्रिजगतां
स्मरामस्तां नित्यं स्मरमथनजीवातुकलिकाम् ॥

நதானாம் மந்தானாம் பவநிகலபந்தாகுலதீயாம்
மஹாந்த்யம் ருந்தாநாம் அபிலஷிதஸந்தானலதிகாம் ।

சரந்தீம் கம்பாயாஸ்தடபுவி ஸவித்ரீம் த்ரிஜகதாம்
ஸ்மராமஸ்தாம் நித்யம் ஸ்மரமதன ஜீவாது கலிகாம் ||

கழுத்தில் ஒரு துண்டோ கயிறோ போட்டு இழுத்தால் நாம் கலங்கி விடுவோம். விடுவித்துக்கொள்ள இயலாது. (லகான், கடிவாளம் முதலிய கட்டுகளால் கீழே விழும் குதிரைகளைப் போல) நம் மனம் நமக்கு வசப்படாவிட்டால் நம் மனக் குதிரையை அடக்குபவளும் தேவியே. மந்தபுத்தி உடையவர்களாயினும், தேவியின் பாதங்களில் பணிவோர்களின் அஞ்ஞானமென்னும் குருட்டுத்தனத்தை நீக்கி ஸந்தான லதை என்னும் கற்பகக் கொடியாகி, கம்பாநதிக் கரையில் உலவி வரும் மூவுலக நாயகி, அம்ருதஸஞ்ஜீவனிப் பச்சிலையாக விளங்கும் தேவியை நாம் எப்பொழுதும் பணிவோம். அச்வாரூடா என்ற தேவி ஒரு குதிரை மீது ஆரோஹணித்து கோடிக்கணக்கான மனக்குதிரைகளை அடக்குபவள். தேவி ஒப்பற்ற அம்ருதசஞ்ஜிவினிக் கொழுந்தாவாள். அதன் அடிவேர் ஸ்பர்சத்தாலேயே பிறவிக் குருடனுக்கும் கண் ணொளி ஏற்படும். மன்மதனை சிவன் நெற்றிக் கண்ணால் எரித்தார் என்று நாம் கூறுகிறோம். அந்த சக்தியை சிவனுக்கு அளித்ததும் தேவி என்னும் மூலிகையே. மூவுலகமும் உண் டாவதும் தேவியின் கருணைதான். கம்பா நதிக்கரையில் காமாக்ஷி என்ற பெயருடன் உலவி வந்து நினைக்கும் போதெல்லாம் கண் முன் வந்து நிற்பதும் இந்த கற்பகக் கொடியே ஆகும். மோந்தால் ஸ்வஸ்தமாக்கும் ஓஷதிகள் உண்டு. ஆனால் இநத அம்ருதலதையோ நினைத்தாலே ஸ்வ ஸ்தமாக்கி விடும். இந்த மூலிகையை நாடி நாம் மலை ஏற வேண்டாம் இந்த அமிர்தம் நம் போன்ற ஆர்த்தர்களை நாடி நம் இருப்பிடம் தேடியே வந்துவிடும். (55)

परा विद्या हृद्या श्रितमदनविद्या मरकत-
प्रभानीला लीलापरवशितशूलायुधमनाः
तमःपूरं दूरं चरणनतपौरंदरपुरी-
मृगाक्षी कामाक्षी कमलतरलाक्षी नयतु मे ॥

பராவித்யா ஹ்ருத் யாஸ்ரித மதனவித்யா மரகத
ப்ரபா நீலா லீலா பரவசித சூலாயுதமனா: |
தம:பூரம் தூரம் சரணநதபௌரந்தரபுரீ
ம்ருகாக்ஷீ காமாக்ஷீ கமலதரலாக்ஷீ நயதுமே ||

தேவி ஸ்ரீவித்யா ஸ்வரூபிணீ, தேவியின் ஹிருதயத்தில் காமகலை முழுதும் அமையப் பெற்றவள். பரா என்பது தேவியின் ஹ்ருதய பீஜமாகும். விடியற்காலை சிவந்த நிறத்தவளாக ஸௌ: என்னும் பீஜம் (பாலா மந்த்ரத்தின் மூன்றாவது பீஜம்) த்யானம் செய்யப்படவேண்டும்.

ஸௌ: என்ற பராபீஜம் ஆலமரத்தின் விதைபோல் செழித்து எல்லா பீஜங்களுக்கும் இருப்பிடமாகிறது. விதை மறைந்திருந் தாலும் அதன் சக்தி அளப்பரியது. பஞ்சதசீ, ஷோடஸீ, மஹாஷோடஸீ, பரா ஷோடஸீ என்பதாகப் பல நிலைகள் உள்ளது. பஞ்சதசாக்ஷரீ மந்த்ரத்திற்கே ஸ்ரீவித்தை என்னும் சிறப்புப் பெயர் பொருந்தும். மூன்று கூடங்களுடன் கூடிய ஸ்ரீவித்யா தேவியின் ஸ்தூலரூபமாகவும் பரிணமித்தது என்பது காம கலாரஹஸ்யம். காமகலாவின் விளக்கம். ஊர்த்வ பிந்து ஒன்று. அதன் கீழ் இரட்டை பிந்து, அதற்குங்கீழே ஒருபிந்து. இவை ஈச்வர, ஜகத், ஜீவர் களைக்குறிப்பன. இம்மூன்றிற்கும் அதிஷ்டானம் சுத்த சைதன்யம். காம கலை என்பது சிவசக்தி சாமரஸ்யம் அல்லது ஜீவப்ரும்ம ஐக்யம். பூர்ணா ஹந்தாஸ்வரூப ப்ரஹ்மமே நான் என்ற அனுஸந் தானமே காமகலா த்யானத் தின் ரகசியம். காமாக்ஷி காமகலா ஸ்வரூபிணி. கமலாம்பாளும் காம கலையே, ஸ்ருஷ்டி யோஜ னையில் ஆழ்ந்திருக்கிறாள். மன்மத வித்தையான காதி வித் தையே மிகச்சிறந்தது. ஹாதி, ஸாதி வித்யா மற்றும் பல பஞ்சதசீ வித்தைகள் இருந்தபோதிலும், மன்மதனை உஜ்ஜீவனம் செய்து, அவன் செய்த வித்தைக்கே முதலிடம் அளிக்கப் படுகிறது. மரகத வடிவினளான தேவி சூலபாணி யான சிவ னின் மனதை விளையாட்டாகவே தன் வசப்படுத்தி என் அஞ்ஞானத்தை ஒழித்துவிட்டாள். (56)

अहन्ताख्या मत्कं कबलयति हा हन्त हरिणी
हठात् संविद्रूपं हरमहिषि सस्याङ्कुरमसौ ।
कटाक्षव्याक्षेपप्रकटहरिपाषाणपटलैः
इमामुच्चैरुच्चाटय झटिति कामाक्षि कृपया ॥

அஹந்தாக்யா மத்கம் கபலயதி ஹாஹந்த ஹரிணீ
ஹடாத்ஸம்வித்ரூபம் ஹரமஹிஷி ஸஸ்யாங்குரமஸௌ|
கடாக்ஷவ்யாக்ஷேப ப்ரகட ஹரிபாஷாண படலை:
இமாம் உச்சைருச்சாடய ஜடிதி காமாக்ஷி க்ருபயா||

பரமேஸ்வரரின் பிரியத்துக்குகந்த ராணி காமாக்ஷிதேவி ஸம்வித் என்ற ஞான வடிவானவள். ஸம்வித் என்பது நன்றாக விகஸித்த ஞானம். அந்த ஞானம் மனதில் முளைவிடுகிறது. மேலும் மேலும் அது செழித்து வளர வேண்டும். அப்பொழுது தான் மனபரிபாகம் ஏற்படும். ஆயினும் நான் என்னும் அகங்காரம் ஒரு மான் போல் மிக தைரியமாக அந்த முளைப் பயிரைத் தின்று விடுகிறது. தேவி தன் திருநோக்கால் இந்த அகங்காரம் என்ற மானை விரட்ட வேண்டும். ஒரு கல் விட்டெறிந்தால் மான் ஓடிவிடும். தேவியின் கண்கள் இந்த்ர நீலக்கற்கள் போல் பிரகாசிக்கிறது. கண் என்ற இந்தக் கல்லால் மானை அடிக்க வேண்டும். (57)

बुधे वा मूके वा तव पतति यस्मिन् क्षणमसौ
कटाक्षः कामाक्षि प्रकटजडिमक्षोदपटिमा ।
कथंकारं नास्मै करमुकुलचूडालमुकुटाः
नमोवाकं ब्रूयुर्नमुचिपरिपन्थिप्रभृतयः ॥

புதேவா மூகேவா தவ பததி யஸ்மின் க்ஷணமஸௌ
கடாக்ஷ: காமாக்ஷி ப்ரகட ஜடிமக்ஷோதபடிமா|
கதங்காரம் நாஸ்மை கரமுகுல சூடாலமுகுடா
நமோ வாகம் ப்ரூயு: நமுசி பரிபந்தி ப்ரப்ருதய:||

புத்திமான் ஆயினும், ஊமையாயினும், அவன் மீது ஜடத் தனத்தை, அஞ் ஞானத்தை அழிக்கும் ஆற்றலுடைய ஸ்ரீகா மாக்ஷி தேவியின் கடாக்ஷ வீக்ஷண்யம் ஒரு கணப் பொழுது விழுந்தால் அவனை தேவேந்திரன் போன்றவர்கள் தங்கள் கிரீடங்களின் மேல் கைகளைக் கூப்பி (அப்படிக் கைகளைக் கூப்புவதால் தாமரை மொட்டுபோல் கைகள் காணப்படும். தலையில் சூடிக்கொள்ளும் சூடாமணி என்றும் கொள்ளலாம்.) நம: என்று வந்தனம் கூறுவார்கள். தேவியின் கடா க்ஷத்தைப் பெற்றவர்களில் அறிவாளி, அறிவிலாத ஊமை என்ற பாகுபாடு இல்லை. (58)

प्रतीचीं पश्यामः प्रकटरुचिनीवारकमणि-
प्रभासध्रीचीनां प्रदलितषडाधारकमलाम् ।
चरन्तीं सौषुम्ने पथि परपदेन्दुप्रविगलत्-
सुधार्द्रां कामाक्षीं परिणतपरज्योतिरुदयाम् ॥

ப்ரதீசீம் பச்யாம: ப்ரகடருசி நீவாரகமணி
ப்ரபாஸத்ரீசீனாம் ப்ரதலித ஷடாதார கமலாம்|
சரந்தீம் ஸௌஷும்னே பதிபரபதேந்து ப்ரவிகலத
ஸூதார்த்ராம் காமாக்ஷீம் பரிணதபரஞ்ஜ்யோதிருதயாம்||

நீவாரம் என்ற காட்டு நெல்லின் மணிகளின் காந்தியைத் தோற்கடிக்கும், சந்த்யாகால சிவப்பு அப்படிப்பட்ட சிவந்த நிறமுடைய தேவி என்று கூறுகிறார். 'நீல தோயத மத்ய ஸ்தாத் வித்யுல்லேகே பாஸ்வரா; நிவார ஸூகவத்தன்வீ பீதா பாஸ்வத்யணூ பமா' (நாராயண ஸூக்தம்) இந்த வர்ணனை இந்த இடத்தில் தேவிக்கும் பொருந்தும். நீவாரம் என்னும் நெல்மணி மெல்லிய தாகவும், ஒளியுடன் கூடியது. இப்படிப் பட்ட வைபவம் பொருந்திய காமா

க்ஷியை பரஞ்ஜோதி, பரம்தாம என்பதாகக் கண்டு கொள்ள தேவி அருள் புரிய வேண்டும். முரண்பாடுகள் இருந்தால் தான் கவித்வம் இன்னும் அழகு பெறுகிறது. பச்சைப்புடவைக்கு அரக்குக் கரை போடுவதுபோல் சூரியன் - சந்திரன். அஸ்த மனம் - உதயம்; குண்டலினிப்பெருக்கு; ஸுஷும்னா நாடி மூலம் செல்லும் ஸூக்ஷ்மதை. ஒளியின்பரப்பு இப்படி யெல்லாம் பொருத்தி மகிழலாம். (59)

जम्भारातिप्रभृतिमुकुटीः पादयोः पीठयन्ती
गुम्फान् वाचां बुधजनकृतान् स्वैरमारामयन्ती ।
शम्पालक्ष्मीं मणिगणरुचा पादपान् प्रापयन्ती
कम्पातीरे कविपरिषदां जृम्भते भाग्यसीमा ॥

ஜம்பாராதி ப்ரப்ருதி முகுடீ: பாதயோ: பீடயந்தி
கும்பான் வாசாம் கவி ஜனக்ருதான்ஸ்வைரமாராமயந்தீ
சம்பாலக்ஷ்மீம் மணி கணருசா பாடலை: ப்ராபயந்தீ
கம்பாதீரே கவிபரிஷதாம் ஜ்ரும்பதே பாக்யஸீமா ||

த்ரயாணாம் தேவானாம் (ஸௌ.ல.25.) இந்தப்பாடலில் மும்மூர்த்திகளும் தேவியின் திருவடிகளைத் தாங்கும் மணி பீடத்தின் அருகிலேயே குவித்த கைகளை கீரீடத்தில் வைத்துக்கொண்டு நிற்பதாக உள்ளது. கவிகள் இயற்றிய வாக்குகள் சோலைகளாகி, அதில் பூம்பொழில்களில் தேவி நடமாடுகிறாள். கம்பர், காளிதாஸர், மூகர் போன்றவர்கள் இயற்றிய கவிதைகளே தேவியின் நடமாடும், நடனமாடும் அரங்கமாகும். பூம்பொழில்களாகும். ஸர்வாருணா என்று லலிதா ஸஹஸ்ரநாமா தேவியைப் புகழ்கிறது. (ஸர்வாருணா, அவைத்யாங்கி, ஸர்வாபரண பூஷிதா) அணி, துகில், மாலை, பூஷணம் எல்லாவற்றிலும் தேவி செந் நிறத்தவள், தலையிலணிந்த புஷ்பமோ பாடலிப்பூக்கள் 'பாடலீகுஸும ப்ரியா' மின்னல் போன்ற நிறம் படைத்தது. தேவி காமாக்ஷி கம்பா நதிக்கரையில் செவ்வொளியோடும், மின்னலின் காந்தியோடும் கவிகளின் சங்கங்களுக்குரிய, மிகச் சிறந்த பாக்யமாக, செல்வத்தின் பேரெல்லையாக விளங்குகிறாள். கவிகள் கம்பா நதிக்கரையில் சங்கமித்து பாடிக் கொண்டாடுகிறார்கள். தேவி அவர்கள் கண்களுக்கு விருந்தாகிறாள். (60)

चन्द्रापीडां चतुरवदनां चञ्चलापाङ्गलीलां
कुन्दस्मेरां कुचभरनतां कुन्तलोद्धूतभृङ्गाम् ।
माराराতेर्मदनशिखिनं मांसलं दीपयन्तीं
कामाक्षीं तां कविकुलगिरां कल्पवल्लीमुपासे ॥

சந்த்ராபீடாம் சதுரவதனாம் சஞ்சலாபாங்கலீலாம்
குந்தஸ்மேராம் குசபரநதாம் குந்தலோத்தூதப்ருங்காம்|
மாராராதே: மதனசிகினம் மாம்ஸலம் தீபயந்தீம்
காமாக்ஷிம் தாம் கவிகுலகிராம் கல்பவல்லீம் உபாஸே||

சந்திரனைத் திருமுடியில் மாலையாக அணிந்திருக்கும், பரந்த திரு முகமண்டலம், அதில் ஒளிரும் கடைக்கண் பார்வையுடன் தேவி உல்லாச மாகக் காக்ஷி அளிக்கிறாள். முல்லையைப் போன்ற புன்முறுவல் மந்தஸ் மிதப்ரபா பூரமஜ்ஜத் காமேச மானஸா (லலிதா ஸஹஸ்ரநாமம் 28) புன்முறு வல் என்ற ஒளிப்பிரவாகத்தில் காமேஸ்வரரின் மனம் முழுகிக் கொண்டிருக்கச் செய்பவள். ஸ்தனங்களின் கனத்தால் சிறிது முன்புறம் வளைந்த திருமேனி, கருவண் டினை நிகர்த்த கூந்தல், அக்னிக் கண்ணால் மன்மதனை எரித்த சிவனுக்கு காதல் என்ற அக்னியை நன்றாகவே ஜ்வலித்து ஜாஜ்வல்யமாக மூட்டி விடுகிறவள், கவிகளுக்கு கற்பகக் கொடியானவள். (61)

कालाम्भोदप्रकरसुषमां कान्तिभिस्तर्जयन्ती
कल्याणानामुदयसरणिः कल्पवल्ली कवीनाम् ।
कंदर्पारेः प्रियसहचरी कल्मषाणां निहन्त्री
काञ्चीदेशं तिलकयति सा कापि कारुण्यसीमा ॥

காலாம்போத ப்ரகரஸுஷமாம் காந்திபிஸ்தர்ஜயந்தீ
கல்யாணாநாம் உதயஸரணீ: கல்பவல்லீ கவீனாம்|
கந்தர்பாரே: ப்ரியஸஹசரீ கல்மஷாணாம் நிஹந்த்ரீ
காஞ்சி தேசம் திலகயதி ஸா காபி காருண்யஸீமா||

தேவி சூல் கொண்ட கரிய மேகங்களின் காந்தியை தன்னுடைய காந்தி யால் பயமுறுத்தி ஜெயித்தவள். மேகங்கள் அடைந்து சிறிது நேரத்தில் மழையை வர்ஷிக்கிறது. தேவி அந்த மேகத்திற்கு சிறிதும் சளைத்தவள் அல்ல. கருணை என்னும் மழையை அமோகமாக வர்ஷிப்பதில் கை தேர்ந்த வள்ளல். 'சர்வ மங்கள மாங்கல்யே சிவே ஸர்வர்த்த ஸாதிகே' என்றபடி தேவி எல்லா மங்களங்களுக்கும் மங்களமானவள். கவிகளுக்கு வேண்டியவற்றை அளிக்கும் கற்பகக்கொடி போன்றவள். ஸர்வாபாதா ப்ரஸமனம் த்ரைலோக் யஸ்ய அகிலேச்வரீ ஏவமேவா த்வயா கார்யம் அஸ்மத் வைரி விநாசனம் என்று தேவி மஹாத்ம்யம் தேவியைப் புகழ்கிறது. கருணை கசிந்தொழுகும் கடைக்கண் நோக்கினால் கணத்தி னில் அருளும் காமாக்ஷியே போற்றி! மங்களவடிவே சிவையே போற்றி! மாலயன் தேடியும் காணாச்சிவனார்

நின்வயமாய் நிற்கும் அத்புதம் தான் என்னே! என்னே! இயம்பவொண்ணாதே! மன்மதனை அழித்த சிவனின் பிரியபத்தினியாய், காஞ்சி நாட்டின் திலகம் போல் விளங்குகிறாள். (62)

ऊरीकुर्वन्नुरसिजतटे चातुरीं भूधराणां
पाथोजानां नयनयुगले पारिपन्थ्यं वितन्वन् ।
कम्पातीरे विहरति रुचा मोघयन्मेघशैलीं
कोकद्वेषं शिरसि कलयन् कोऽपि विद्याविशेषः ॥

ஊரீகுர்வன் உரஸிஜதடே சாதுரீம் பூதராணாம்
பாதோஜானாம் நயனயுகலே பாரிபந்த்யம் விதன்வன்|
கம்பாதீரே விஹரதிருசா மோகயன் மேகசைலீம்
கோகத்வேஷம் சிரஸி கலயன் கோபி வித்யாவிசேஷ: ||

தேவியின் திருவோலக்க வர்ணனையாகவே இந்தப் பாடலும் அமைகிறது எனலாம். ஸ்தனங்களை மலைகளின் கடினத்துக்கும், மலைகள் கடின மாயிருப்பதால் அதன் திறமையை மெச்சித்தன் ஸ்தனங்களுக்கு உவமையாக்கிக் கொள்கிறாள். கண்கள் இரண்டும் தாமரை மலர்களை விரோதித் துக் கொண்டிருக்கிறது. மேகங்களின் கூட்டத்தை தேவியின் திருமேனிப்ரகாசம் பயனற்றதாகச் செய்கிறது. சக்கரவாகப் பக்ஷிகளின் விரோதியான சந்திரனை சிநேகித்துத் தன் தலையில் அணிந்து கொண்டிருக்கிறாள் இதுபோல் ஒருபாடல் ஸௌந்தர்ய லஹரியில் உண்டு. ஆனால் அது தள்ளாமல், கொள்ளுவதாகவே அமைந்த பாடல் 'அராலா கேசேஷு.' கூந்தலில் சுருளும் தன்மை, புன்சிரிப்பில் இயற்கையான இனிமை, மனதில் வாகைப்பூவின் மிருதுத்தன்மை, நகில்களில் கல்லின் (ரத்தினத்தின்) கடினம், இடையில் மெலிவு, மார்பிலும், நிதம்பத்திலும் பருமன் இப்படியான வர்ணனை நிறைந்தது. ஒப்பற்றதொரு தனி வித்யை ஆன ஸ்ரீவித்யா சொரூபிணி எங்கள் அன்னை காமாக்ஷி தேவி. பரமசிவனார் அறுபத்தி நாலு வித்தைகளைப் படைத்து உலகிற்களித்தார். தேவி இதைப்பார்த்து த்ருப்தி அடையாததால், தேவியின் விருப்பத் திற்கு இணங்கி அறம், பொருள், இன்பம், வீடு என்ற சதுர்வித புருஷார்த்தமும் அளிக்க வல்ல தேவியுடையதேயான தந்திரமான ஸ்ரீவித்தையை உலகில் அவதரிக்கச் செய்தார். அவரே தேவிக்கு ஸ்ரீவித்தையை உபதேசித்த ஆதிகுரு ஆவார். லலிதா மஹா த்ரிபுரஸுந்தரி பரா பட்டாரிகா என்று தீக்ஷா நாமமும் தேவிக்கு இடப்பட்டது. 'ஸதாசிவ ஸமாரம்பாம் சங்கராசார்யமத்யமாம், அஸ்மதாசார்ய பர்யந்தம் வந்தே குரு பரம்பராம்' என்று குரு பரம்பரையும் ஏற்பட்டது. (63)

काञ्चीलीलापरिचयवती कापि तापिञ्छलक्ष्मीः
जाड्यारण्ये हुतवहशिखा जन्मभूमिः कृपायाः

माकन्दश्रीर्मधुरकविता चातुरी कोकिलानां
मार्गे भूयान्मम नयनयोर्मान्मथी कापि विद्या ॥

காஞ்சீலீலா பரிசயவதீ காபி தாபிஞ்ச்ச லக்ஷ்மி:
ஜாட்யாரண்யே ஹுத வஹசிகா ஜன்மபூமி: க்ருபாயா:|
மாகந்தஸ்ரீ: மதுரகவிதா சாதுரீ கோகிலானாம்
மார்கே பூயான் மம நயன யோ: மான்மதீ காபி வித்யா||

ஸ்ரீ காமாக்ஷி பசுமையான தமாலவிருக்ஷத்தின் புஷ்பத்தைப் போன்ற ஒப்பற்ற காந்தியுடையவள். அஞ்ஞானம் என்னும் காட்டுக்கு தீயின் ஜ்வாலையாகவும், கருணைக்குப் பிறப்பிடமாகவும், தேவி விளங்குகிறாள். வஸந்த காலத்தில் செடிகள் துளிர்க்கும். அந்த இனிமை யான சூழ்நிலையில் மாமரத்தில் அமர்ந்து குயில்கள் பாடும். தேவி மாமரத்தடியில் வாசம் செய்பவள். மயில் போன்ற சாயலும், குயில் போன்ற மதுரச் சொற்களும் உடையவள். ஸரஸ்வதி தேவியின் வீணை ஒலி தேவியின் ஸாது வசனத்தின் முன்னே எப்படி ஒரு நாள் தேவியின் தர்பாரில் மதிப்பிழந்தது. எனவே ஸரஸ்வதி தேவி வீணையைக்கட்டி உரையில் இட்டு விட்டாள் என்பது நாமறிந்ததே. காம கலாப்ரதர்ஸினி என்று போற்றப்படும் ஸ்ரீகாமாக்ஷி தேவி என் கண் முன்னே தோன்ற வேண்டும். (64)

सेतुर्मातर्मरकतमयो भक्तिभाजां भवाब्धौ
लीलालोला कुवलयमयी मान्मथी वैजयन्ती ।
काञ्चीभूषा पशुपतिदृशां कापि कालाञ्जनाली
मत्कं दुःखं शिथिलयतु ते मञ्जुलापाङ्गमाला ॥

ஸேதுர்மாத: மரகதமயோ பக்தி பாஜாம் பவாப்தௌ
லீலாலோலா குவலயமயீ மான்மதீ வைஜயந்தீ |
காஞ்சீபூஷா பசுபதித்ருசாம் காபி காலாஞ்ஜநாலீ
மத்கம் து:க்கம் சிதிலயது தே மஞ்ஜுலா பாங்கலீலா||

ஸம்ஸாரம் என்னும் கடல்; இதில் எல்லோரும் தத்தளிக் கிறோம். காமாக்ஷி தாஸர்களாக நாம் இருந்து விட்டாலோ, மரகதவடிவுடைய நம் அன்னை, நமக்காக மரகத மயமான அணைகட்டித்தருகிறாள். தேவதைகளுக்கு மலர் அடையா ளமுண்டு லக்ஷ்மி, பிரம்மாவுக்கு செந்தாமரை, ஸரஸ்வதிக்கு வெண்டாமரை. அதுபோல் ரதியின் கையில் நீலோத்பலம். சிவனை ஜயித்த சந்தோஷத்தை மன்மதன் நீலோத்பல மலரை வெற்றிக் கொடியாக்கினான்.

காஞ்சி என்பது ஒட்யாணம் அணியும் இடைப்பிரதேசம். காஞ்சி ஒட்யாண பீடம் ஆகும். தேவி காமகலை; காமகோடி பீடத்தில் உறைபவள். பசுக்களின் பதியான பசுபதி என்னும் பரமசிவன் கண்களுக்கு தேவி அஞ்ஜனமாகிறாள். தேவி தானே குரு வடிவில் நின்று நமக்கு அஞ்ஞானத்தை ஒழித்து, ஞானம் என்னும் அஞ்ஜனத்தை நம் கண்களைத் திறந்து (மையிடுவதற்கு ஸலாக் என்னும் குச்சி உண்டு) கண்களில் இட்டு நம்ஞானக் கண்ணைத் திறந்து வைக்கி றாள். அதே குருமூர்த்தியான தேவி சிவனாரின் கண்களில் ஆசை என்னும் கரியமையைத் தீற்றுகிறாள். தேவியின் நீலோத்பவ விழிகளின் நோக்கு ஒருகருநீல மாலையாக நம்மீது விழுந்து நம் துக்கங்களை சிதறச் செய்யட்டும். மிக அபூர்வயுக்திகள் நிறைந்த பாடல் இது. (65)

व्यावृण्वानाः कुवलयदलप्रक्रियावैरमुद्रां
व्याकुर्वाणा मनसिजमहाराजसाम्राज्यलक्ष्मीम् ।
काञ्चीलीलाविहृतिरसिके काङ्क्षितं नः क्रियासुः
बन्धच्छेदे तव नियमिनां बद्धदीक्षाः कटाक्षाः ॥

வ்யாவ்ருண்வானா: குவலயதல ப்ரக்ரியா வைரமுத்ராம்
வ்யாகுர்வாணாமனஸிஜமஹாராஜ ஸாம்ராஜ்ய லக்ஷ்மீம்|
காஞ்சீலீலாவிஹ்ருதி ரஸிகே காங்க்ஷிதம் ந: க்ரியாஸு
பந்தச்சேதே தவநியமினாம் பத்ததீக்ஷா: கடாக்ஷா:||

காஞ்சீ புரத்தில் திருவிளையாடல்கள் புரிவதில் தேவி மிகவும் குதூகலிப்பவள். நீலோத்பல மலரைப் பழிக்கும் தேவி தன் கண்களில் ரதி, மன்மத அபிப்ராயத்தைக் கொண்டு விளங்குவதாக இங்கு மூககவி காதல் ரஸம் ததும்பக் கூறுதல் மிக அழகானது. இப்படி காமத்தைப் பற்றிச் சொன்னவர். அடுத்த வரியில் என்ன சொல்கிறார் என்று பார்ப்போம். ஒடுக்கமுடையவர்கள், உலக ஆசையினின்றும் தன்னை விலக்கிக் கொண்டவர். ஸம்ஸாரபந்தத்தை அறுத்தொழிப்பது என்று விரதம் பூண்டு கங்கணம் கட்டிக் கொண்டவர்கள் இவர்கள் விஷயத்தில் அதே கடைக்கண்களால் தேவி பந்த பாசங்களைத் துடைத்தொழிக்கிறாள். எந்தக் கண்கள் காமக்கணை வளர்த்ததோ, உலக க்ஷேமத்தை வாரிக்கொடுத்ததோ, அதே கண்கள் மோக்ஷக்கதவையும் திறந்து விடுகிறது. யாகம் செய்பவர்கள் அதை செய்து முடிக்க எவ்வளவு இடையூறு நேர்ந்தாலும் பொருட்படுத்தாது, கையில் கங்கணம் அணிந்து உத்தேசித்த காரியத்தை நிறைவேற்றுவதுபோல் தேவியின் கடைக்கண் நோக்கால் ஸம்ஸாரத்தை அழித்தல் என்பது நடைபெற வேண்டுமென்பது ப்ராத்தனை யாகும். மனஸிஜனின் சாம்ராஜ்ய லக்ஷ்மி என்ற கோர்வை வெகு நேர்த்தியாக உள்ளது. (66)

कालाम्भोदे सितरुचि दलं कैतकं दर्शयन्ती
मध्येसौदामिनि मधुलिहां मालिकां राजयन्ती ।
हंसारावं विकचकमले मञ्जुमुल्लासयन्ती
कम्पातीरे विलसति नवा कापि कारुण्यलक्ष्मीः ॥

காலாம் போதே ஸிதருசிதலம் கைதகம் தர்ஸயந்தீ
மத்யே ஸௌதாமினி மதுலிஹாம் மாலிகாம் ராஜயந்தீ |
ஹம்ஸாராவம் விகசகமலேமஞ்ஜுமுல்லாஸயந்தீ
கம்பாதீரே விலஸதி நவாகாபி காருண்ய லக்ஷ்மீ: ||

காமாக்ஷியை லக்ஷ்மி காமாக்ஷி என்றும் சொல்வதுண்டு. தேவி கருணையைப் பொழிவதால் கருணை என்ற லக்ஷ்மி யாகி, தன் கூந்தலில் தாழம்பூமடலைப்போல் பிறைச் சந்தி ரனை சூடிக்கொண்டு பிரகாசிக்கிறாள். வரலக்ஷ்மி பூஜை யில் தேவிக்கு தாழம்பூ சூட்டியே நாம் பூஜை செய்கிறோம். மின்னல் போன்ற இடையில் வண்டுகள் போன்ற ரோம வரிசை தாமரைப் பாதங்களில் நூபுரங்கள் என்ற ஹம்ஸங் களின் ஒலி, வேத நிகர் ஒலி பெறப்படுகிறது. மிகவும் அழகான கற்பனை ஒரே செடியில் மூன்று விதப்பூக்கள், தேவி ஓர் பூங்கொடி அதன் உச்சி பாகத்தில் தாழம்பூ போல் பிறைச்சந்திரன் ஒளிவிடுகிறான். கூந்தல் என்னும் கரிய இலைகளின் நடுவே பூத்தது போன்ற தோற்றம். தேவியின் இடையோ பெயரளவில் தோன்றி மறையும் மின்னல் போல் தோன்றுகிறது. ரோமவரிசை என்று ஒன்று இருப்பதால் தான் இடையை ஊஹிக்க முடிகிறது. ரோம வரிசையோ தேன் உண்ணும் வண்டுக்கூட்டம்போல் உள்ளது. பாதமென்ற தாமலர: அதில் சப்திக்கும் சிலம்புகள். நூபுரங்களுக்கு ஹம்ஸமென்றும் ஒரு பெயர் உண்டு. எனவே பாத தாமரையில் ஹம்ஸங்களின் சப்தம் பெறப்படுகிறது. தேவியை லக்ஷ்மி என்று கூறுவதால் கார்மேகம் போன்ற திருமால் அவர் வக்ஷஸ்தலத்தில் லக்ஷ்மி தாழைமடல்போல் வளங்குகிறாள். திருமாலின் மார்பின் கீழே உள்ள கரிய ரோமராஜியை பிரகாசிக்கச் செய்யும் மின்னலொளி போலவும் தாமரை போன்ற அகன்ற மார்பில் என்றும் பிரியேன் 'அகலகில்லேன்' என்று ஹம்ஸம் போல விளங்குகிறாள். (67)

चित्रं चित्रं निजमृदुतया भर्त्सयन् पल्लवालीं
पुंसां कामान् भुवि च नियतं पूरयन् पुण्यभाजाम् ।
जातः शैलान्न तु जलनिधेः स्वैरसंचारशीलः
काञ्चीभूषा कलयतु शिवं कोऽपि चिन्तामणिर्मे ॥

சித்ரம் சித்ரம் நிஜம்ருதுதயா பர்த்ஸயன் பல்லவாலீம்
பும்ஸாம் காமான்புவி ச நியதம் பூரயன் புண்ய பாஜாம்|
ஜா:த: சைலாந்நது ஜலநிதே: ஸ்வைர ஸஞ்சாரசீல:
காஞ்சீபூஷா கலயது சிவம் கோபி சிந்தாமணிர்மே||

காஞ்சிபுரத்தில் கோவில் கொண்டுள்ள ஸ்ரீகாமாக்ஷி தேவி ஓர் சிந்தா மணியாக காஞ்சி என்னும் ஒட்டியாணத்திற்கு அலங்காரமாக விளங்குகிறாள். தேவர்களும், அசுரர் களும் அம்ருத மதனம் செய்தபோது பாற்கடலிலிருந்து கிடைத்த கிந்தாமணி அன்று இது. இது மலையரசன் ஹிமவானுக்குப் பெண்ணாகப் பிறந்த மணி ஆகும். இது ஜடப்பொருளன்று இது எங்கும் எல்லோரிலும் நிறைந்த சித் என்னும் எங்கும் செல்லும் சேதனாரூபமாகும். புண்ய சாலியான மனிதர்களை, அவர்கள் எங்கிருந்தாலும் தேடிச் சென்று அவர்கள் நினைந்தாலும், நினைக்காவிட்டாலும் அவர்களுடைய மனோரதங்களைப் பூர்த்தி செய்கிறது. காமாக்ஷி என்ற சிந்தாமணியோ, கடின வஸ்துவாக இராமல், தளிர்களைக்கூடக்கடினம் என்று சொல்லக்கூடிய அந்த அளவுக்கு மிக மிருதுவாக விளங்கும் இந்த 'ம்ருணாளி' என்று சொல்லக் கூடியபடி காஞ்சியில் விளங்குகிறாள். இந்த அற்புத சிந்தாமணி எனக்கு மங்களமே வடிவான சிவத்தை அளிக்கட்டும். என்னை சிவமாக்கட்டும். நம் சிந்தையில் மணிபோல் ஒளிர்பவள் தேவி காமாக்ஷி என்னும் சிந்தாமணி ஆவாள். எனவே இது ஆச்சர்யம்! ஆச்சர்யம்! (68)

ताम्राम्भोजं जलदनिकटे तत्र बन्धूकपुष्पं
तस्मिन् मल्लीकुसुमसुषमां तत्र वीणानिनादम् ।
व्यावृण्वाना सुकृतलहरी कापि काञ्चीनगर्यां
ऐशानी सा कलयतितरां ऐन्द्रजालं विलासम् ॥

தாம்ராம் போஜம் ஜலத நிகடே தத்ர பந்தூக புஷ்பம்
தஸ்மின் மல்லீகுஸுமஸுஷமாம் தத்ர வீணாநிநாதம் |
வ்யாவ்ருண்வானா ஸுக்ருதலஹரீகாபி காஞ்சீநகர்யாம்
ஐஸாநீ ஸா கலயதிதராம் ஐந்த்ர ஜாலம் விலாஸம் ||

தேவி காமாக்ஷி காஞ்சிபுரியில் கம்பாநதிக்கரையில் மணல் லிங்கம் பிடித்து வைத்து ஈச்வரனை பூஜித்தாள். தேவியின் பிரிவு ஆற்றாமல் கம்பையில் ஈசன் வெள்ளம் வரவிட்டார். ஈச்வரனின் நல்வினைப் பயனான வெள்ளம் தேவியை அவருடன் சேர்த்து வைத்தது. திருவானைக்காவல் என்னும் க்ஷேத்திரத்தில் தேவி ஜலத்தையே லிங்கமாக்கிப் பூஜித்தாள். ப்ருத்வீக்ஷேத்ரமான காஞ்சியில

வெள்ளமே தேவ தேவியரைச் சேர்த்து வைத்தது. ஈசானரான பரமசிவனின் நல்வினைப் பயனான அந்த வெள்ளம் காஞ்சிபுரத்தில் காமா க்ஷியாக விளங்குகிறது. தேவியின் திருமுகம் கூந்தல் என்னும் வெள்ளத்தில் தாமரை போலவும், சிவந்த உதடுகள் செம்ப ரத்தை மலர் போலவும், பல்வரிசைகள் முல்லையரும்புகள் ஒளி வீசுவது போலும், அந்த உதடுகளக்குள்ளே ஏதோ ஓர் இன்னிசை கேட்கிறதே என்று பார்க்குமிடத்து அது தேவியின் குரல் வீணை ஒலியைப்போல் (வீணைஒலியைத் தோற் கடித்தஸாது வசனம் என்ற அதுவேறு கதை) இன்னொலி, இப்படியெல்லாம் இந்த்ரஜால வித்தைகள் காஞ்சியில் நடைபெறுகிறது. தேவியை ஆகாயத்தாமரையாகக் கூறும் போது இந்த திருமந்திரப்பாடல் நினைவில் வந்தது.

பாரில்லை, நீரில்லை, பங்கயம் ஒன்றுண்டு
தாரில்லை, வேரில்லை, தாமரை பூத்தது
ஊரில்லை, காணும் ஒளியது ஒன்றுக்கு
கீழில்லை, மேலில்லை கேள்வியிற் பூவே (திருமந் 844)

ஆகாயத்தாமரை, தாமரையில் செம்பருததிப்பூ, அதனுள் முலலை அரும் புகள், அதன் வழியே வரும் வீணை ஒலி இப்படி இந்த்ரஜால வித்தைபோல் பரமசிவபத்தினி காஞ்சி நகரத்து மக்களுக்குக் காக்ஷி அளிக்கிறாள். (69)

आहारांशं त्रिदशसदसां आश्रये चातकानां
आकाशोपर्यपि च कलयन्नालयद्वन्द्वं एषाम् ।
कम्पातीरे विहरतितरां कामधेनुः कवीनां
मन्दस्मेरो मदननिगमप्रक्रियासंप्रदायः ॥

ஆஹாராம்சம் த்ரிதச ஸதஸாம் ஆச்ரயே சாதகானாம்
ஆகாசோபர்யபிச கலயன் ஆலத்வந்த்வ மேஷாம் |
கம்பாதீரே விஹரதிதராம் காமதேனு: கவீனாம்
மந்தஸ்மேரோ மதனநிகம ப்ரக்ரியா ஸம்ப்ரதாய: ||

யௌவனம் மாத்திரம் உடைய தேவர் ஸமூ ஹத்திற்கு உணவாகிய அமிர் தம், அமிர்தம் நிறைந்த நிலவு, இது ஆகாயத்தை அலங்கரிக்கிறது. ஆகாயத் தின் மீது தேவர் களுக்கு உயர்ந்த வாஸஸ்தானம் அதாவது ஸ்வர்கத்தை அளித்திருக்கிறாள். ஆகாயம் தேவியின் நாபிப்ரதேசம் என்று வர்ணிக்கப் படுகிறது. ஈசன் நெற்றிக் கண்ணைத் திறந்து காமனை எரிக்க முயற்சித்தபோது கோபாக்கினி சூழ்ந்த மன்மதன் தாபம் தாங்காமல் தேவியின் நாபி என்ற மடுவில் வீழ்ந்தான். அக்னி ஜலத்தில் விழுந்தால் புகை கிளம்பும். அதுவே தேவியின் நாபிமேல் காணப்படும். சன்னமான ரோமவரிசை. இப்படியாக தேவியின் நாபியை மன்மதன் இருப்பிடமாகக் கூறப்படுகிறது. அதே நாபி

மன்மதனை எரித்த பரமேஸ்வரனுக்கு காமவிகாரத்தை உண்டு பண்ணக் கூடிய சௌபாக்கியத்துடன் கூடியது என்பது தாத்பர்யம். மன்மதனுடைய வேதமாகிய காமசாஸ்திரத்தின் எல்லா முறைகளையும் தேவி அனுஷ்டிப்பது நினைவுபடுத்தப் படுகிறது. கவிகளுக்கு வேண்டியவற்றை எல்லாம் சுரக்கும் காமதேனு போன்றவள். லக்ஷ்மிதேவி, அமிர்தம், சந்திரன், சிந்தாமணி கற்பக விருக்ஷம், காமதேனு எல்லாம் நம் எதிரில் நிற்பது போல் ஓர் தோற்றம். ஆகாயமே தேவிக்கு இடுப்பாகவும், ஆலயங்களே ஸ்தனங்களாகவும் தரிசனம் ஆகிறது. (70)

आर्द्रीभूतैरविरलकृपैः आत्तलीलाविलासैः
आस्थापूर्णैरधिकचपलैः अञ्चिताम्भोजशिल्पैः ।
कान्तैर्लक्ष्मीललितभवनैः कान्तिकैवल्यसारैः
काश्मल्यं नः कवलयतु सा कामकोटी कटाक्षैः ॥

ஆர்த்ரீபூதை: அவிரலக்ருபை: ஆத்தலீலாவிலாஸை:
ஆஸ்தாபூர்ணை:இதிகச பலைரஞ்சிதாம் போஜசில்பை:|
காந்தை: லக்ஷ்மீ லலிதபவனை: காந்தி கைவல்யஸாரை:
காச்மல்யம்ந: கபலயது ஸாகாமகோடீகடாக்ஷை:||

வர்ணனையில் எட்டாத தேவி காமாக்ஷி என்னும் காமகோடியானவள் 'நித்யக்லின்னா' லலிதா ஸஹஸ்ர நாமா 388. தயையால் நனைந்த உள்ளம் உடையவள். திருவிளை யாடல்களாலேயே பக்தர்களின் ஆசைகளை நிறைவேற்று வதாக அமைகிறது. தேவியின் கடைக்கண் பார்வையால் எங்களை மாசற்றவர்களாக ஆக்க வேண்டும். லக்ஷ்மி, ஸரஸ்வதி இருவரும் காமாக்ஷியின் இரு கண்களாவார்கள். காமாக்ஷியை வழிபட்டால் லக்ஷ்மிகடாக்ஷம், ஸரஸ்வதியின் வித்யாஞானம் இரண்டையும் அடையலாம். 'ஸசாமர ரமா வாணி ஸவ்ய தக்ஷிண ஸேவிதா' என்று லலிதா ஸஹஸ்ரநாமா கூறுகிறது. 'வக்த்ர லக்ஷ்மி பரிவாஹ சலன்மீனாபே லோசனா' வீட்டு வாயிலில் சுபகாரியம் நடக்கும்போது தோரணங்கள் தொங்கவிடுவோம். அது வீட்டினுள் வருபவர்களை உள்ளே வா என்று அழைப்பது போல் தேவியின் புருவங்கள் என்ற தோரணம், அப்படி அழைத்துக் கண்கள் என்ற லக்ஷ்மி சம்பத்துக்களைக் கொடுக்கவே நம்மை அழைக்கிறது. (71)

आधून्वत्यै तरलनयनैराङ्गजीं वैजयन्तीं
आनन्दिन्यै निजपदजुषां आत्तकाञ्चीपुरायै ।
आस्माकीनं हृदयं अखिलैरागमानां प्रपञ्चैः
आराध्यायै स्पृहयतितरां आदिमायै जनन्यै ॥

ஆதூன் வந்த்யைதரலநயனை: ஆங்கஜீம் வைஜயந்தீம்
ஆனந்தீன்யை நிஜபதஜுஷாம் ஆத்த காஞ்சீபுராயை|
ஆஸ்மாகீனம் ஹ்ருதய மகிலை: ஆகமானாம் ப்ரபஞ்சை:
ஆராத்யாயை ஸ்ப்ருஹயதி தராமாதிமாயை ஜனன்யை||

தேவி மன்மதனை உயிர்ப்பித்ததால் அவனைத்தன் பிள்ளையைப்போல் பாசத்தைப் பொழிந்து அவனுக்கு எல்லாத் தகுதிகளையும் அளிக்கிறாள். காமேஸ்வரரையே மன்மதவித்தையை அனுஸந்தானம் செய்யும்படி கட்டளையிடுகிறாள். அவரும் அதற்கிணங்கி தேவியின் வசமாகிறார். மன்மதன் சிவனை ஜயித்தது அவன் வெற்றிக்கொடி நாட்டியது தேவிக்கே உரித்தானது. தேவியின் கண்ணோக்கால் உயிர்பெற்ற மன்மதன், அவன் கொடியும் தேவியின் கண்ணோக்காலேயே படபடவென்று காற்றிலே அடித்துக் கொண்டு விளங்குகிறது. தேவிதாசர்களுக்குக் கிட்டாதது எதுவும் இல்லை. தேவி போக, மோக்ஷம் இரண்டையுமே அளிப்பவள். வேத, ஆகமங்கள் எவற்றால், எந்த தேவதையை பூஜித்தாலும் தேவியையே பூஜித்தாலும் அந்த பூஜித்த மலர்கள் தேவி யிடம் போய்ச்சேர்கிறது. தாய்க்கு ஐந்து பெயர் ஜனனீ, மாதா, ப்ரஸவித்ரீ, தாத்ரீ, அம்பா. லலிதா ஸஹஸ்ர நாமா தேவியை, இப்படித் தாயின் வடிவில் நமக்குக் காட்டுகிறது. (72)

दूरं वाचां त्रिदशसदसां दुःखसिन्धोस्तरित्रं
मोहक्ष्वेलक्षितिरुहवनी क्रूरधारासिपत्रम् ।
कम्पातीर प्रणयि कविभिर्वर्णितोद्यच्चरित्रं
शान्त्यै सेवे सकलविपदां शांकरं तत्कलत्रम् ॥

தூரம்வாசாம் த்ரிதசஸதஸாம் து:க்கஸிந்தோள் தரித்ரம்
மோஹக்ஷ்வேலக்ஷி திருஹவனே க்ரூரதாரம் குடாரம் |
கம்பாதீரப்ரணயி கவிபி: வர்ணிதோ த்யச்சரித்ரம்
சாந்த்யைஸேவே ஸகலவிபதாம் சாங்கரம் தத்கலத்ரம்|

தருணியான தேவியை யௌவனத்தோடு கூடிய தேவ சபையிலுள்ளவர்கள் 'ஸ்தோத்ரப்ரியா' 'ஸ்துதிமதீ' என்று தோத்தரிக்கிறார்கள். தேவி துதிகளுக்கும் அப்பாற் பட்டவள். ஸம்ஸாரபங்க நிர்மக்ன ஸமுத்தரண பண்டிதா (லலிதா ஸஹஸ்ரநாமா 880) துன்பம் என்ற ஸமுத்ரத்திலிருந்து அக்கரை சேர்க்கும் படகு, ஸம்ஸாரச் சேற்றில் முழுகியவர் களைத் தூக்கி எடுப்பதில் நிபுணி, அஞ்ஞானம் என்ற மரங்கள் அடங்கிய காட்டிற்கு கோடரி போன்றவள், கவிகளால் வர்ணிக்கப்பட்டவள், சற்குண சம்பன்னை, பரமசிவனுக்கே உரியவள், அந்த சிவமஹிஷி, சகல மங்களங்களையே அருள்பவள். (73)

खण्डीकृत्य प्रकृतिकुटिलं कल्मषं प्रातिभश्री-
शुण्डीरत्वं निजपदजुषां शून्यतन्द्रं दिशन्ती ।
तुण्डीराख्ये महति विषये स्वर्णवृष्टिप्रदात्री
चण्डी देवी कलयति रतिं चन्द्रचूडालचूडे ॥

கண்டீக்ருத்ய ப்ரக்ருதி குடிலம் கல்மஷம்ப்ராதிபஸ்ரீ
சுண்டீரத்வம் நிஜபதஜுஷாம் சூன்ய தந்த்ரம் திசந்தீ|
துண்டீராக்யே மஹதிவிஷயே ஸ்வர்ணவ்ருஷ்டி ப்ரதாத்ரீ
சண்டீதேவி கலயதி ரதிம் சந்த்ர சூடாலசூடே||

தொண்டை மண்டலத்தில் பொன்மழை பொழிந்த வரலாறும் உண்டு. தொண்டை நாட்டு மன்னன் ஆகாசபூபதி தேவி காமாக்ஷியிடம் பிள்ளை வரம் கேட்டான். தேவியும் மனமிரங்கி தன் மூத்த பிள்ளை கணபதியையே புத்திரனாகக் கொடுத்தாள். குழந்தைக்குப் பெயரிடும் வைபவத்தன்று பந்தி போஜனம் நடக்கும் சமயம் மழை பெய்தது. பொன் மாரியும் பெய்தது. ஸ்வர்ண மணிகள் விண்ணிலிருந்து ஒரு முகூர்த்த நேரம் 'சோ' என்ற இரைச்சலும் கொட்டியது. நாடு, நகரம் முழுவதும் தங்கக்குவியல், தேவி காமாக்ஷி இப்படியாக ஸ்வர்ண வ்ருஷ்டி ப்ரதாத்ரீ ஆகிறாள். பந்தியில் தேவியே அமர்ந்து சாப்பிட்டதாகவும். பலரும் இதை தரிசித்ததாகவும் வரலாறு உள்ளது. பிரணய கோபத்தைத் தணிக்க தேவியின் திருவடிகளில் தலை வணங்ககிறார் ஈச்வரன். தேவி அதைக் கண்டு கொள்ளாமல், அந்த சமயத்தை நமக்குப் பயன்படுத்தி அடியார்களின் தவறுகளை திருத்தி, அவர்களுக்கு ஞானமளிப்ப துடன் தொண்டை நாடு முழுவதும் பொன்மாரி கடைக் கண்ணாலேயே பெய் வித்து அருள்மழை, பொருள் மழை இரண்டையும் அருள்கிறாள். பொன் விளைந்த களத்தூர் என்று தொண்டை நாடு பெருமை பெறுகிறது. எனவே தேவியின் ஊடலால் நாட்டிற்கும், நமக்கும் லாபம். ஊடுதல் காமத்திற்கும் இன்பம் அதனால் சிவனாருக்கும் லாபம். இதை மூககவி வெகு நேர்த்தியாக கூறியுள்ளார். (74)

येन ख्यातो भवति स गृही पूरुषो मेरुधन्वा
यद्दृक्कोणे मदननिगमप्राभवं बोभवीति ।
यत्प्रीत्यैव त्रिजगदधिपो जृम्भते किंपचानः
कम्पातीरे स जयति महान्कश्चिदोजो विशेषः ॥

யேன க்யாதோ பவதிஸ க்ருஹீபூருஷோ மேருதன்வா
யத்த்ருக்கோணே மதனநிகம ப்ராபவம் போபவீதி |

யத்ப்ரீத்யைவத்ரிஜகததிபோ ஜ்ரும்பதே கிம்பசான:
கம்பாதீரே ஸஜயதி மஹான் கச்சிதோஜோ விசேஷ:||

தேவி காமாக்ஷி, ஜோதியாய் நின்ற உமாதேவி, அந்த தேவியைக் கைப் பிடித்ததால்தான் பரமேஸ்வரன் கிருஹஸ் தனாக, இல்லறத்தில் புருஷனாக, மேருமலையை வில்லாக ஏந்தியவராக உலகமெல்லாம் புகழும்படி கியாதியுடன் விளங்குகிறார். மூகர் இந்தப்படலில் அம்பாளை தேஜோரூ பமாக வர்ணிக்கிறார். இந்தத் தேஜோ ரூபத்தை ஆர்யாதி விஸதியில் துர்வாஸர் எப்படி வர்ணிக்கிறார் என்று பார்ப்போம்.

நதஜனஸுலபாய நமோ: நாலீகஸ-நாபி-லோசநாய நம:
நந்தித கிரிசாய நமோ மஹஸே நவ-நீப-பாடலாயநம:

அம்பாளை ஒளி, தேஜஸ் என்றே கூறுகிறார். வணங்கும் அடியாருக்கு எளிதில் கிட்டும ஒளிக்கு நமஸ்காரம், தாமரைக் கண் படைத்த ஒளிக்கு நமஸ்காரம், பரமேசனை மகிழ்விக்கும் ஒளிக்கு நமஸ்காரம், புத்தம் புதுக்கடம்ப மலர்போல் சிவந்த ஒளிக்கு நமஸ்காரம். கேனோபநிஷதில் ஓர் அரிய உண்மையைக் காண்கிறோம். நிகரிலா எழிலுடன், உமா தேவி, பர்வதபுத்திரி பேரொளியுடன் நின்றாள். இந்திரன் அவ்வொளியை அணுகி தாயே! இது யார்? என்று கேட்கவே, தேவி இதுவே பரம் பொருள். இவரின்றி உலகில் அணு கூட அசையாது. இவரால் தான் நீங்கள் வெற்றி அடைந்தீர்கள் என்றாஎ. தேவி. அந்த ஜோதி வடிவான உமாதேவியே காமாக்ஷி தேவியாவாள். அவளே துர்க்கை. (75)

धन्या धन्या गतिरिह गिरां देवि कामाक्षि यन्मे
निन्द्यां भिन्द्यात्सपदि जडता कल्मषादुन्मिषन्तीम् ।
साध्वी माध्वीरसमधुरताभञ्जनी मञ्जुरीतिः
वाणीवेणी झटिति वृणुतात् स्वर्धुनीस्पर्धिनी माम् ॥

தன்யா தன்யா கதிரிஹ கிராம் தேவி காமாக்ஷி யன்மே
நிந்த்யாம் பிந்த்யாம்ஸபதி ஜடதா கல்மஷாதுன்மிஷந்தீம்|
ஸாத்வீ மாத்வீரஸ மதுரதா பஞ்ஜினீ மஞ்ஜரீதி:
வாணீவேணீ ஜடிதிவ்ருணுதாத்ஸ்வர்துனீஸ்பர்தினீமாம்||

தேவி காமாக்ஷியிடம் மூககவி வேண்டுகிறார். வாக்கு களின் போக்கு, அதை சொல்லும் முறை, அது உணர்த்தும் நன்மைகள். அக்ஞானத்தை விரட்டுவதாக இருக்கட்டும், பாபதோஷங்களை விலக்கட்டும் அப்படிப் பட்ட வாக்குகள் உதயமானால் அது வாக்யமேயாகும். மறுபடியும் வாக்குகளை வர்ணிக்கிறார். தேனின் இன்சுவையை சுவையற்றதாக்கும் தேவலோகத்து

நதியான கங்கை அவளுடைய நீர்ப்போக்கு டன் போட்டி போட்டுக் கொண்டு, வாக்கின் நடை, மேன்மை, அழகு, இனிமை இவற்றில் கங்கையை வென்று, இனிமையிலும், குணத்தி லும் வாக் என்ற மங்கையானவள் என்னை நாயகனாக வரிக்கட்டும் என்கிறார். (76)

यस्या वाटी हृदयकमलं कौसुमी योगभाजां
यस्याः पीठी सततशिशिरा शीकरैर्माकरन्दैः ।
यस्याः पेटी श्रुतिपरिचलन्मौलिरत्नस्य काञ्ची
सा मे सोमाभरणमहिषी साधयेत्काङ्क्षितानि ॥

யஸ்யா வாடீஹ்ருதயகமலம் கௌஸுமி யோகபாஜாம்
யஸ்யா: பீடி ஸததசிசிரா சீகரை: மாகரந்தை:|
யஸ்யா: பேடீச்ருதி பரிசலன் மௌலிரத்னஸ்ய காஞ்சீ
ஸாமே ஸோமாபரண மஹிஷீ ஸாதயேத் காங்க்ஷிதானி||

தேவி காமாக்ஷியை யோகிகளின் அதாவது சிறந்த ஞானத்தைப் பெற்றவர்களின் உள்ளம் என்ற தாமரையில் பூம்பொழிலாக உருவகப்படுத்துகிறார். தேவி அமர்ந்திருக்கும் ஸஹஸ்ரதளபத்மம், மணி பீடம். ஸாதாகலை பிரகாசிக்கும் இடம். பூர்ண சந்திரனின் குளிர்ச்சி, பத்மம் எனவே மகரந்தப் பொடி, சந்திரனின் அம்ருதத்துளிகள் குளிர்ந்த திவலைக ளாகிறது. இப்படி தேவி ஸஹஸ்ரதளபத்மத்தில் சிவனுடன் அமர்ந்திருக்கிறாள். வேதங்களின் திருமுடிகளாகிற உப நிஷத்துகளிலே விளங்குவது தேவியின் திருவடியான ரத்தி னமே, அவள் அணிந்துள்ள ஆபரணங்களே. அந்த தேவி காமாக்ஷி நிரந்தரவாசம் செய்வது காஞ்சீபுரத்திலே. எனவே காஞ்சியை நகைப்பெட்டி என்று சொல்வது மிகப்பொருத் தமே. நீலகண்ட தீக்ஷிதர் ஆனந்த ஸாகரஸ்தவம் 70வது பாடலில் பதினான்கு லோகங்களையும் கர்பத்தில் வைத்துக் காப்பாற்றவே பொன்மயமான பருத்த ஒட்டியாண்மானது தேவி இடுப்பில் அணிந்திருக்கிறாள். அதுவும் காஞ்சிபுர காமாக்ஷிக்கே இது பொருந்துகிறது. இந்தப் பாடலில் தேவியை ஹ்ருதயத்திலும், ஸஹஸ்ர தளபத்மத்திலும், த்யா னிக்கும் முறை. நகைப்பெட்டியான காஞ்சி என்பது மணி பூரகத்தில் த்யானம் என்பதும் பெறப்படுகிறது. (77)

एका माता सकल जगतामीयुषी ध्यानमुद्रां
एकाम्राधीश्वरचरणयोरेकतानां समिन्धे ।
ताटङ्कोद्यन्मणिगणरुचा ताम्रकर्णप्रदेशा
तारुण्यश्रीस्तबकिततनुः तापसी कापि बाला ॥

ஏகா மாதா ஸகல ஜகதாமீயுஷீ த்யானமுத்ராம்
ஏகாம்ராதீஸ்வர சரணயோ: ஏகதானாம் ஸமிந்தே|
தாடங்கோத்யன் மணிகணருசா தாம்ரகர்ணப்ரதேசம்
தாருண்ய ஸ்ரீஸ்தபகிததனுஸ்தாபஸீகாபி பாலா||

தேவி ஒப்பற்ற பெருமைவாய்ந்த இளம் பெண், தருணீ, பாலாத்ரிபுர சுந்தரி ஆவாள். ஸ்ரீவித்தையில் தேவியை பாலையாக, பாலா த்ரிபுரசுந்தரியாக, பஞ்சதசி என்ற வித்தை யாக லலிதாமஹா த்ரிபுரசுந்தரியாக, மஹா ஷோடஸீ, ஷோட ஸீயாக லலிதா மஹாத்ரிபுர சுந்தரி பராபட்டாரிகாவாகக் கூறுவது மரபு. உலகங்கள் அனைத்தையும் கருப்பெறாதீன்ற கன்னி, இப்படியெல்லாம் தேவி பல ரூபங்கள், வடிவங்கள் கொண்டவள். காஞ்சியில் அன்னை தவமிருந்தது, த்யான அடையாளங்கள் எல்லாம் நாமறிந்ததே. மாங்காட்டில் தேவி பஞ்சாக்னி மத்தியில் ஊசிமுனையளவு கால் கட்டைவிரலை ஊன்றித் தவமிருந்தாள். பிரளயத்திலும் அழியாத ஜோதி லிங்கப்பரசிவஸ்தானமான மாமரத்தடியில் தேவி தவம் இருந்தாள். ஈசனைப் பூஜித்தாள். காதில் ஒளிவீசும் தாடங்கங்கள் என்ற காதோலைகளின் ரத்தினக்கற்களின் ப்ரதிபலிப்பு கன்னங்களில்படுகிறது. இதை ஸௌந்தர்ய லஹரி 59 மன்மதனுடைய ரதம் போன்ற முகம் என்று வர்ணிக் கிறார். எல்லோருக்கும் தாய், ஆயினும் இளம்பெண், அழகு பூத்த இளமையிலே தவவேடம், தாடங்கம் போன்ற அணிகள்: அத்துடன் சிவத்யானம் செய்வதின் தவவேடங்கள். இது என்ன சேராச்சேர்த்தி என்று அதிசயிக்கிறோம். (78)

दन्तादन्तिप्रकटनकरी दन्तिभिर्मन्दयानैः
मन्दाराणां मदपरिणतिं मथ्नती मन्दहासैः ।
अङ्कूराभ्यां मनसिजतरोरङ्कितोराः कुचाभ्यां
अन्तःकाञ्चि स्फुरति जगतामादिमा कापि माता ॥

தந்தா தந்தி ப்ரகடனகரீ தந்திபிர்மந்தயானை:
மந்தாராணாம் மதபரிணதிம் மத்னதீ மந்தஹாஸை:|
அங்கூராப்யாம்மனஸி ஜதரோ: அங்கிதோரா: குசாப்யாம்
அந்த: காஞ்சி ஸ்புரதி ஜகதாம் ஆதிமா காபிமாதா||

தேவி பரமசிவ பத்தினியாக தக்ஷயக்ஞத்தில் தன் உடலை த்யாகம் செய்து விட்டு, காத்யாயனியாக பதரிகாச்ரமத்தில் அவதரித்து தவம் செய்யும் நோக்குடன் காஞ்சி வந்தாள். எவ்வளவோ செயல்கள் நடைபெற்ற பின் தேவி காஞ்சி புரத்தில் உலகங்கள் அனைத்திற்கும் ஆதியாகிய ஒப்பற்ற தனித்தாயாக

ஸ்ரீவித்யா பீடேச்வரியாக செங்கோல் ஓச்சுகிறாள். தேவியின் நடையை பெண்யானை நடைக்கு ஒப்பிடு வது வழக்கம். புன்முறுவல்களாலே மந்தார மலர்களின் மலர்ச்சியை கலக்கி அழிப்பவளாகவும், காமம் என்னும் மரத்தின் செழுமையால் இருமுளைகளைப் போன்ற கொங்கைகள் இவற்றால் தேவி நிமிர்ந்து விளங்குகிறாள். மார்பு முழுவதும் தனக்குப் பரந்த இடமாக ஆக்கிக் கொண்டு பருத்துத் தம்முள் ஒன்றனை ஒன்று ஒத்து வளர்ந்து தளர்ச்சி யின்று இறுகி, மெத்தெனஃ குழைந்து மெல்கி, முத்து மாலைகளைத் தன் மீது அணி யாகக் கொண்ட ஸ்தனங்களாகிய மலையைக் கொண்டு சிவ பெருமானது வலிய நெஞ்சைத் தான் நினைத்தவாறெல்லாம் ஆட்டி வைக்கும் கொள்கை யையுடைய தேவி காமாக்ஷி ஆவாள். (79)

त्रियम्बककुटुम्बिनीं त्रिपुरसुन्दरीं इन्दिरां
पुलिन्दपतिसुन्दरीं त्रिपुरभैरवीं भारतीम् ।
मतङ्गकुलनायिकां महिषमर्दिनीं मातृकां
भणन्ति विबुधोत्तमा विहृतिमेव कामाक्षि ते ॥

த்ரியம்பககுடும்பினீம் த்ரிபுரஸுந்தரீம் இந்திராம்
புலிந்தபதி ஸுந்தரீம் த்ரிபுரபைரவீம் பாரதீம் |
மதங்ககுலநாயிகாம் மஹிஷமர்தனீம் மாத்ருகாம்
பணந்தி விபுதோத்தமா விஹ்ருதிமேவ காமாக்ஷி தே ||

தேவி காமாக்ஷியை ஞானியர்கள் பலவாறாகக் கூறுகிறார்கள். முக் கண்படைத்த சிவனாரின் மனைவி என்றும், திரி புரத்தை அழித்தவரின் காதலி என்றும் திரிபுரசுந்தரிக்கு மற்ற விளக்கங்களைக் காண்போம். மூவுலகிலும் அழகியவள் திரிபுரசுந்தரி. லலிதா மஹா திரிபுரசுந்தரி என்கிறோம். 'லலிதா' லலிதம் 'ல' லக்ஷியப்பொருள். அடையாளமான லிங்கம் ஏதுமற்ற 'லி' பவக்கடலைக்கடத்துவிக்கும் தாரகமாம் 'தா'. இதுவே லலிதா. திரிபுரம் - முப்புரங்கள் - ஜீவதசையின் மூன்று நிலைகள். இந்த முப் புரங்க ளையும் அழகுபடுதது பவள் - த்ரிபுரசுந்தரி. தேவியே மஹாலக்ஷ்மியுமாவாள். அர்ஜுனனுக்குப் பாசுபதம் கொடுக்கவும், பிரமனிடமிருந்து திலோத்த மையை ரக்ஷிக்கவும் தேவ, தேவியர் வேட வேஷத்தில் வந்தார்கள். திரிபுர ஸம்ஹாரியான சிவனாரின் பத்தினி. ஸரஸ்வதி தேவியும் தேவியே ஆவாள். மஹிஷா ஷுரனை வதைத்த துர்கைப்யும் அவளே. மதங்கமுனிவர் தேவி தனக்குப் பெண்ணாக வரவேண்டுமென்ற வேண்ட அவ்வாறே மாதங்கி எனப் பெயருடன் தேவி அவருக்குப் பெண்ணாக வந்தாள். இந்த தேவி மீனாக்ஷிதேவி போன்ற வள் என்று சொல்வது வழக்கம். அமுதல் ஹவரை மாத்ருகா அக்ஷரங்கள் தேவியின் ஸ்வரூபம் ஆகும். மாத்ருகாசரஸ்வதி என்று கூறுவதுண்டு. துர்கா, லக்ஷ்மி, சரஸ்வதியாக விளங்கு வதும் தேவியே; தச

மஹாவித்தையின் காளிகுலம், ஸ்ரீகுலம் இப்படி விளங்குவதும் தேவியே. எல்லா தேவபேதங்களும் தேவியேயாவாள். இப்படி ஒன்றேயான சித் ஆன தேவியை பலவாறாகக் கூறுவதும் ஆனந்தமே. (80)

महामुनिमनोनटी महितरम्यकम्पातटी-
कुटीरकविहारिणी कुटिलबोधसंहारिणी ।
सदा भवतु कामिनी सकलदेहिनां स्वामिनी
कृपातिशयकिङ्करी मम विभूतये शाङ्करी ॥

மஹாமுனிமனோநடீ மஹிதரம்யகம்பாதடீ
குடீசகவிஹாரிணீ குடிலபோத ஸம்ஹாரிணீ |
ஸதாபவது காமினீ ஸகல தேஹினாம் ஸ்வாமினீ
க்ருபாதிசயசங்கரீ மம விபூதயே சாங்கரீ||

பெரிய முனிவர்கள், மகான்கள் அவர்கள் மனம் என்னும் அரங்கத்தில் லாஸ்யம் என்னும் நடனத்தைச் செய்யும் பெண்ணாக நிற்கும் தேவி கம்பா நதிக் கரையில் கோவில் கொண்டுள்ள ஸ்ரீகாமாக்ஷி தேவி நல்லோர் உள்ளத்தில் இன்புற்று விளையாடுகிறாள். கோணல் மாணலான புத்தியை அழித் தொழிப்பவள், எல்லா ஜீவர்களுக்கும் கிருபை, கருணையைப் பொழியும் விஷயத்தில் திறமையுடைய வேலைக்காரியை உடையவளும் மங்களங்களை எப்பொழுதும் செய்யும் பரமசிவனின் காதலியுமான ஸ்ரீகாமாக்ஷி தேவி, பார்வத ராஜகுமாரி முனிவர்களில் மனத்தில் வசிப்பவள், எல்லா தேகத்திலும் உயிராக 'சித்' ஆக விளங்கும் தேவி காமாக்ஷி என்னை ரக்ஷிக்கட்டும். (81)

जडाः प्रकृतिनिर्धनाः जनविलोचनारुन्तुदाः
नरा जननि वीक्षणं क्षणमवाप्य कामाक्षि ते ।
वचस्सु मधुमाधुरीं प्रकटयन्ति पौरंदरी-
विभूतिषु विडम्बनां वपुषि मान्मथीं प्रक्रियाम् ॥

ஜடா: ப்ரக்ருதி நிர்தனா ஜனவிலோசனாருந்துதா
நராஜனனி வீக்ஷணம் க்ஷணமவாப்ய காமாக்ஷிதே |
வசஸ்ஸு மதுமாதுரீம் ப்ரகடயந்தி பௌரந்தரீ
விபூதிஷுவிடம்பநாம் வபுஷி மான்மதீம் ப்ரக்ரியாம் ||

தேவியை பூஜிப்பவர்கள் பிரம்மாவும், விஷ்ணுவும் கூடப் பொறாமைப் படக்கூடிய கல்வியுடனும், செல்வத்து டனும், மன்மதன் போன்ற உடலழகு, ரதியின் கற்பை கலங்கடிப்பது போன்ற அழகு. இத்துடன் பேரானந்தமும் எய்துகிறான். இவ் வளவு பேறுகள் பெற்றவனுக்கு தீர்க்காயுஸும் வேண்டுமே! தேவி அவர்களுக்கு நீண்ட ஆயுளையும் கொடுக்கிறாள். வேதம் நம்மை எப்படி ஆசீர்வதிக்கிறது. தான்யம், தனம், பசும் பஹுபுத்ரலாபம், சதஸம் வத்ஸரம் தீர்க்கமாயு: இதையே மூகரின் பாடலில் பார்க்கிறோம். தேவியின் திருக் கண் ணோக்கு க்ஷணப்பொழுது பெற்றாலே போதும் ஞான மில்லா தவன், ஜடத்தன்மையுடடையவன், பிறவி தரித்திரன், காண சகிக்காத அருபன் இப்படி அவல குணங்கள் நிரம்பியவ னையும் ரூபலாவண்யம் உள்ளவனாகவும், வாக்குகளில் தேனின் இனிமையையும், இந்திரனை விட சிறந்த செல்வா னாகவும், மன்மதனைப்போன்ற அழகையும் பெறுவான். மேலும் சிறந்த கவித்துவம், சாதுரியமான சொல், நடை இவற்றையும் பெறுவான். (82)

घनस्तनतटस्फुटस्फुरितकञ्चुली चञ्चली-
कृतत्रिपुरशासना सुजनशीलितोपासना ।
दृशोः सरणिमश्नुते मम कदा नु काञ्चीपुरे
परा परमयोगिनां हृदय चित्कला पुष्कला ॥

கநஸ்தனதடஸ்புடஸ்புரித கஞ்சுலீ சஞ்சலீ
க்ருதத்ரிபுர சாஸனா ஸுஜன சீலிதோ பாஸனா |
த்ருசோ: ஸரணிமச்னுதே மமகதானு காஞ்சீபுரே
பராபரமயோகீனாம் ஹ்ருதயசித்கலா புஷ்கலா ||

தேவி பரமயோகிகளின் மனதிலே எப்பொழுதும் விளங்குகிறாள். பூர்ண சித்கலாஸ்வரூபிணி த்ரிபுர ஸம்ஹாரியான சிவனின் மனோதிடத்தைத் தன் ஸ்தனங்களாலேயே குலைப்பவள். 'அத்தர் சித்தமெல்லாம் குழைக்கும் கள பக்குவிமுலை யாமளைக் கோமளமே' என்பர் அபிராமிபட்டார். உலகத் தந்தையாகிய சிவனின் திருவுள்ளம் முழுதும் உருகும்படி செய்யும் கலவைச் சந்தனத்தை அணிந்த குவிந்த ஸ்தனங்களையுடைய யாமளையாகிய கட்டழகு பொருந்தியவள் தேவி. சித்-ஞானம்; தேவிசித் என்னும் கலையோடு கூடியவள். ப்ரும்மத்தின் ஒரு பகுதியே சித் ஆகும். பத்ம புராணத்தில் அம்பாளுடைய மூர்த்திகளைப் பற்றி சொல்கையில் ஸகல சரீரிகளின் சித்தங்களில் இருப்பது சித்கலா என்று சொல்லப்படுகிறது. ஸத்-சித்-ஆனந்தம், மூன்றும் தனித்ததல்ல பூர்ணமாக பிரும்மத்தின் தன்மையை மூன்றுமே விளக்கும். ஆனாலும் மூன்றும் தனித்தனி அம்சமாக அறியப்படும் நிலையில் மூன்றுமே ப்ரும்மத்தின் அம்சங்களாகிறது. சித் எனும் ப்ரம்மத்தின் அம்சமாக கலையாக இருப்பவள் தேவி. பிரும்ம சைதன்யம் ஜீவ

தன்யமாகிறது. அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டாலும் அதன் அம்சம் கலை மட்டும் அறியப்படும. இதுவே அம்சகலை, சித்கலை என்று கூறப்படுகிறது. சித் என்னும் கலையைவிட ஆனந்தத்தின் கலை மிக சூக்ஷ்மம். எனவே ஆனந்த கலிகா மொட்டு மலரும் தருணத்தை நோக்கியுள்ளது. ப்ரேமரூபா மொட்டான ஆனந்தம்விரிந்து அன்பே வடிவாகிறது. ப்ரியம்கரீ அன்பே வடிவான தேவி நம் விருப்பத்தை ஈடேற்றி வைக்கிறாள். (83)

कवीन्द्रहृदयेचरी परिगृहीतकाञ्चीपुरी
निरूढकरुणाझरी निखिललोकरक्षाकरी ।
मनःपथदवीयसी मदनशासनप्रेयसी
महागुणगरीयसी मम दृशोस्तु नेदीयसी ॥

கவீந்த்ர ஹ்ருதயேசரீ பரிக்ருஹீத காஞ்சீபுரீ
நிரூட கருணாஜ்ரீ நிகில லோக ரக்ஷாகரீ |
மன: பததவீயஸீமதன சாஸன ப்ரேயஸீ
மயாகுணகரீயஸீ மம த்ருசோஸ்து. நேதீயஸீ ||

பகவத்பாதர்கள் போன்ற சிறந்த ஞானிகளின் மனதிலே நடமாடு கின்றவள், காஞ்சிபுரத்தைக் கோவிலாகக் கொண்ட வளும், வெள்ளமெனப் பாயும் கருணாவாரிதியும், உலகரக்ஷணம் செய்பவளும், மனோவீதிக்கு எட்டாதவளும், மன்மதனை ஜயித்து வெற்றி பெற்ற பரமேஸ்வரனுக்குக் காதலி யுமான ஸ்ரீகாமாக்ஷி தேவி நல்ல குணங்களே நிறைந்தவளான நம் அன்னை நம் கண்களில் எப்பொழுதும் தரிசனம் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். (84)

धनेन न रमामहे खलजनान्न सेवामहे
न चापलमयामहे भवभयान्न दूयामहे ।
स्थिरां तनुमहेतरां मनसि किञ्च काञ्चीरत-
स्मरान्तककुटुम्बिनीचरणपल्लवोपासनाम् ॥

தனேன நரமாமஹே கலஜனான் நஸேவாமஹே
நசாபல மயாமஹே பவபயான் நதூயாமஹே |
ஸ்திராம் தனு மஹேதராம் மனஸி கிம்து காஞ்சி ரத
ஸ்மராந்தக குடும்பினீ சரணபல்லவோபாஸானாம் ||

அம்மா தேவி காமாக்ஷியே! நாங்கள் செல்வத்தை அடைவதில் இன்பம் அடைவதில்லை. செல்வத்திற்காக நல்லோர்கள் அல்லாதவர்கட்கு ஆட்பட்டோம். என் கொங்கை நின் அன்பர் அல்லார்தோள் சேரற்க; எங்கை உனக் கல்லாதெப்பணியும் செய்யற்க (திருவெம்பாவை) தேவியின் திருவடியைப் பற்றியவர்களுக்கு ஸம்ஸாரத்தாபம் இல்லை. பொருள் வேண்டிக் கயவர்களிடம் சென்று யாசியோம். தேவி திரிபுரசுந்தரியைப்பாடுவதை விரதமாக வைத்துக் கொள்ள வேண்டும். (அபிராமி அந்தாதி 54) எங்கள் மனதிலே ஸ்ரீகாமாக்ஷி தேவியின் திருவடிகளையே நிரப்பிக் கொள்ளுகிறோம். மன்மதனை அழித்த சிவனாரின் மனைவியான ஸ்ரீகாமாக்ஷியின் திருவடித்தளிர்களை வழிபடுவதையே எங்கள் கர்த்தவ்யமாக வைத்துக் கொள்கிறோம். (85)

सुराः परिजना वपुर्मनसिजाय वैरायते
त्रिविष्टपनितम्बिनीकुचतटी च केलीगिरिः ।
गिरः सुरभयो वयस्तरुणिमा दरिद्रस्य वा
कटाक्षसरणौ क्षणं निपतितस्य कामाक्षि ते ॥

ஸு ரா: பரிஜனா வபுர்மனஸிஜாய வைராயதே
த்ரிவிஷ்டபநிதம்பினீ குசதட சகேலீகிரி: |
கிர: ஸுரபயோ வயஸ்தருணிமா தரித்ரஸ்ய வா
கடாக்ஷஸரணௌ க்ஷணம் நிபதிதஸ்ய காமாக்ஷிதே||

தேவியின் கடைக்கண் நோக்கு சிறிதுபட்டாலும், உலக முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆள்வார்கள். அவன் தேவேந் திரனாகி ஐராவதத்தில் ஊர்ந்து, தேவர்கள் அவனுக்கு ஏவல் புரிய மன்மதன் பார்த்துப் பொறாமை கொள்ளும்படி எழில் படைத்து, தேவதாஸிகள், அப்ஸரஸ்கள் காதல் கொண்டு கிரீடிப்பவர்கள் ஆகிறார்கள். அவன் வாக்குகளில் தாம்பூல நறுமணம் வீசும். யௌவனத்துடன் விளங்குவான். (86)

पवित्रय जगत्त्रयीविबुधबोधजीवातुभिः
पुरत्रयविमर्दिनः पुलककञ्चुलीदायिभिः ।
भवक्षयविचक्षणैर्व्यसनमोक्षणैर्वीक्षणैः
निरक्षरशिरोमणिं करुणयैव कामाक्षि माम् ॥

பவித்ரய ஜகத்த்ரயீவிபுத போதஜீவாதுபி:
புரத்ரயவிமர்தின: புலகஞ்சலீதாயிபி:|

பவக்ஷயவிசக்ஷணை: வ்யஸனமோக்ஷணைர்வீக்ஷணை:
நிரக்ஷரசிரோமணிம் கருணயைவ காமாக்ஷிமாம் ||

'சிவே ச்ருங்காராத்ரா' தேவியின் நோக்கில் சிவன் முழுவி விடுகிறார். மெய்புளகம் ஏற்படும்போது அப்படி ஒரு சட்டையை அணிந்தாற்போன்ற தோற்றம். சிவனுக்குக் காமத்தை ஊட்டும் காமக்கண்ணி, நம்மையெல்லாம் சம்ஸாரச் சேற்றினின்றும் தூக்கி எடுத்துக் காப்பாற்றுகிறாள். சூடாமணி என்பது மேல்த் தலையில் அணிந்த கொள்ளும் ஓர் ஆபரணம். பார்வையில்படும்படி யாக இருக்கும். மூகர் தன்னை ஒன்றுமறியாத நிரக்ஷர சிரோமணி என்று கூறிக்கொள்கிறார். இது மிகவும் வினயசம்பத்துள்ள வார்த்தையாகும். மஹா பெரியவர்கள் தன்னை இப்படித்தான் கூறிக்கொள்வார்கள். தன்னைக் கருணை என்ற நோக்கால் பரிசுத்தனாக்கும்படி கேட்டுக்கொள்கிறார். ஸௌந்தர்ய லஹரியில் ஆதிசங்கரர், த்ருசா த்ராகீயஸ்யா (57) தீனனாகிய என்னையும் கூட (மாம் அபி) செல்வனாக்கு என்று கூறுகிறார். 100வது பாட லிலோ வினயத்தின் உச்சியில் நின்று அம்மா நீ கொடுத்த வாக்குகளால் உன்னைப்பாடினேன். இதில் என்செயலாவது எதுவுமில்லை என்று கூறுகிறார். மூகர் போன்ற நல்லோர்கள் நம்மைப் போன்றவர்களுக்காக தேவியிடம் வேண்டிக் கொள்கிறார்கள். (87)

कदा कलितखेलना: कथमिवाम्ब काञ्चीपुरे
कलायमुकुलत्विष: शुभकदम्बदूर्वाङ्कुरा: ।
पयोधरभरालसा: कविजनेषु ते बन्धुरा:
पचेलिमकृपारसा: मम पतन्ति मार्गे दृशो: ॥

கதா கலிதகேலனா: கருணயைவ காஞ்சீபுரே
கலாயமுகுலத்விஷ: சுபகதம்பதூர்வாங்குரா: |
பயோதர பராலஸா: கவி ஜனேஷுதேபந்துரா:
பசேலி மக்ருபாரஸா: பரிபதந்தி மார்கேத்ருஸோ: ||

தேவி காயாம்பூ மேனியள். அவள்மேனி கடைந்தெடுத்த எஃகை போல், காயாம்பூ வண்ணத்தாள். நன்மைகளைச் செய்ய, நன்மைகள் வளரக் காரணமான முளைகளாக இருப்பவள். என்னென்ன நன்மைகள் என்று பார்ப்போமா? காமாக்ஷி தேவியின் இருகண்களிலும் லக்ஷ்மியும், சரஸ்வதி யும், செல்வத்தையும், வித்தையையும் வாரி வழங்குகி றார்கள். ரதி, இந்திராணி காளாஞ்சி ஏந்தி நிற்கிறார்கள். அழகுச் செல்வத்தையும் மற்றும் எல்லாப் பேறுகளையும் தந்தருளு வார்கள். தேவி 'மந்தகமனா' மெதுவாக நடப்பவள். காரணம் கொங்கைகளின் கனத்தினால் மெதுவாகவே நடக்கிறாள். பழுத்த பழத்தின் சாறு போன்ற கிருபை ரஸ்யாவாக இருக்கிறாள். காஞ்சிபுரத்தில் திருவிளையாடல் புரியும் காமாக்ஷி தேவி நம் மீது கருணை கொண்டு, என்று தான் அவள் பார்வை நம் மீது விழும்? (88)

अशोध्यमचलोद्भवं हृदयनन्दनं देहिनां
अनर्घमधिकाञ्चि तत्किमपि रत्नमुद्द्योतते ।
अनेन समलंकृता जयति शङ्कराङ्कस्थली
कदास्य मम मानसं व्रजति पेटिकाविभ्रमम् ॥

அஸோத்யம்அசலோத்பவம்ஹ்ருதயநந்தனம்தேஹினாம்
அனர்க்கமதிகாஞ்சி தத்கிமபி ரத்னமுத்த்யோததே|
அனேன ஸமலங்க்ருதா ஜயதி சங்கராஸ்த்தலீ
கதாஸ்ய மமமானஸம் வ்ரஜதி பேடிகாவிப்ரமம்||

தேவி மலையரசனின் பெண்ணாகத் தோன்றியவள். மலையில் தோன்றினாலும் (கல்லின்தன்மை தேவியிடம் கொஞ்சமும் இல்லை.) எனவே தீட்ட முடியாதது. தீட்ட வேண்டிய அவசியமுமில்லை. நம் போன்றோர்கள் மனங்களுக்கு மிகுந்த ஆனந்தம் அளிப்பதும், விலை மதிக்க முடியாத ரத்தினமாகவும் காஞ்சியில் காமாக்ஷி தேவி ஒளி வீசிக்கொண்டிருக்கிறாள். பரம மங்களங்களையும் அளிக்கும் சிவனின் மடித்தலத்தில் அமாந்துள்ளதேவியை ஆர்யா த்விஸதீ வர்ணனையில் பார்ப்போம்.

தஸ்யாங்கபுவி நிஷண்ணாம் தருண கதம்ப ப்ரஸூன கிரணாபாம்

சீதாம்சுகண்டசூடாம் ஸீமந்தன்யஸ்த ஸாந்த்ரஸிந்தூராம் (160)

ஸ்ரீகாமேஸ்வரரின் மடியில் வீற்றிருப்பவளும், மலர்ந்த கதம்பப் புஷ்பத்தின் காந்தி போன்ற திருமேனியுடன், சந்த்ர ரேகையை சிரஸில் தரித்து மகுட்டில் அதிக குங்குமத்தை அணிந்திருப்பவள். (காமாக்ஷி என்னும் நம் அன்னை யாவாள்) சிவனுடைய மடியில் பரவஸ்துவை ஸ்தோத்திரம் செய்யயார் வல்லவர்கள்? நிஜத்திலேயே ஸ்துதி சதகம் இந்தப் பாடல்கள் எல்லாம் சாமான்யமான விளக்கங்கள் அளிப்பதல்ல! நம் ஆன்மாவுடன் உறவிட்டு விளையாடுகிறது. (89)

परामृतझरीप्लुता जयति नित्यमन्तश्चरी
भुवामपि बहिश्चरी परमसंविदेकात्मिका ।
महद्भिरपरोक्षिता सततमेव काञ्चीपुरे
ममान्वहमहंमतिर्मनसि कापि माहेश्वरी ॥

பராம்ருதஜரீப்லுதா ஜயதி நித்யமந்தஸ்சரீ
புவாமபி பஹிஸ்சரீ பரமஸம்விதே காத்மிகா|

மஹத்பிரபரோக்ஷிதா ஸததமேவ காஞ்சிபுரே
மமான்வஹம் அஹம்மதி: மனஸிபாது மாஹேஸ்வரீ||

சிவ, சக்தி ஐக்ய பாவத்தால் பெருகும், அமிர்தம் அருவியாகப் பெருகித் திளைக்கச் செய்து நாடி நரம்புகளை எல்லாம் நனைக்கிறது. புவனங்களைப் படைத்து அதன் வடிவாகவே தேவி புவனேஸ்வரியாக இருக்கிறாள். பூமியில் அந்தர்யாமி யாக மறைந்தும், வெளியில் பரவியும், பஞ்ச பூதங்களாகவும் இருக்கிறர்ள். இப்படிப்பல வடிவாக தேவி இருந்தாலும் அவள் ஞானமே வடிவானவள். ஆதிசங்கரர் காஞ்சியில் காமாக்ஷியின் அருளுக்கு எப்படி பாத்திரமாக இருந்தார் என்ற வரலாறு நமக்குத் தெரிந்ததே. நம் காஞ்சிப் பெரியவரும், காமாக்ஷியும் வேறு, வேறு அல்ல என்பது நம் அனுபவம். ஸௌந் தர்யலஹரி (7) க்வணத்காஞ்சீதாமா புரஸ்தா - தாஸ்தாம்ந: புரமதிது - ராஹோபுருஷிகா. முப்புரத்தை அழித்த பரமசிவனு டைய அகம்பாவ வடி வினளான பராசக்தி எங்களுக்கு எதிரில் எழுந்தருளட்டும் அஹமிதயேவ விபா வயே பவானீம் தேவியை அஹம் என்னும் தன்னுணர்வாக பாவிக்கிறேன்.(90)

உடையாள் உன்தன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீ இருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் (திருவாசகம்)

तमोविपिनधाविनं सततमेव काञ्चीपुरी-
विहाररसिका परा परमसंविदुर्वीरुहे ।
कटाक्षनिगलैर्दृढं हृदयदुष्टदन्तावलं
चिरं नयतु मामकं त्रिपुरवैरिसीमन्तिनी ॥

தமோவிபினதாவினம் ஸததமேவ காஞ்சிபுரே
விஹாரரஸிகா பராபரமஸம் விதுர்வீருஹே|
கடாக்ஷ நிகலைர்த்ருடம் ஹ்ருதயதுஷ்டதந்தாவலம்
சிரம் நயது மாமகம் த்ரிபுரவைரிஸீமந்தினீ||

முப்புரங்களையும் எரித்த பரமேச்வரர், ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களையும் பகை கொண்டு ஸ்ரீகாமாக்ஷி காஞ்சிபுரத்தில் திருவிளை யாடல் புரிவதில் சந்தோஷமடைபவள். அஞ்ஞானமென்னும் காட்டில் அலைகின்ற மன மெனும் மதயானையை தன் கடைக்கண்கள் என்ற சங்கிலி களால் ஞானமே உருவான அந்த் ஒட்டுமரத்தடியில் வெகு காலம் கட்டிப் போடவேண்டும். (91)

त्वमेव सति चण्डिका त्वमथ देवि चामुण्डिका
त्वमेव परमातृका त्वमसि योगिनीरूपिणी ।

त्वमेव किल शांभवी त्वमिह कामकोटी जया
त्वमेव विजया त्वयि त्रिजगदम्ब किं ब्रूमहे ॥

த்வமேவஸதிசண்டிகா த்வமஸி தேவி சாமுண்டிகா
த்வமேவ பரமாத்ருகா த்வமஸீ யோகினீ ரூபிணீ|
த்வமேவகில சாம்பவீ த்வமஸி காமகோடீ ஜயா
த்வமேவ விஜயா த்வயித்ரிஜகதம்ப கிம்ப்ரூமஹே||

சரஸ்வதி வல்லபர்கள் ஆகலாம். செல்வத்தை வசமாக்கிக் கொண்டு லக்ஷ்மிபதி ஆகலாம். ஆனால் பார்வதீபதி எவரும் ஆகமுடியாது. தேவி பதி வ்ரதைகளுக்குள் முதன்மையா னவள். அதனால் தான் தேவிக்குசதி தேவி என்றே பெயர். அவள் பரமேஸ்வரனுக்கு மட்டுமே வசப்பட்டவள். சண்ட, முண்ட, சும்ப, நிசும்பாதிகளை ஸம்ஹறித்த சண்டிகா தேவி யும், சாமுண்டா தேவியும் ஸ்ரீபரதேவதையேதான். சகல உலகுக்கும், உயிர்களுக்கும் தேவியே தாய் ஆவாள். ஸ்ரீமாதா, ஸ்ரீமஹாராக்ஞீ, ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரீ, ஆக்கல், காத்தல், அழித்தல் எல்லாமே தேவியால் நடைபெறுகிறது. ஆப்ரும்ம கீடஜனனி ப்ரும்மா முதல் புழு ஈறாக யாவருக்கும் தாய். 'யாபஞ்சப்ரணவாதி ரேப ஜனனீ, யாசித்கலா மாலினீ, ஸாபாயாத் பகவதி ஸ்ரீராஜ ராஜேஸ்வரீ.' தேவி எத்தனை எத்தனைரூபங்கள் ஏற்றாலும் என்னவெல்லாம் செய்தாலும் அவள் ஸ்வ ரூபத்தை யாராலும் அறிய முடியாது. (92)

परे जननि पार्वति प्रणतपालिनि प्रातिभ-
प्रदात्रि परमेश्वरी त्रिजगदाश्रिते शाश्वते ।
त्रियम्बककुटुम्बिनि त्रिपदसङ्गिनि त्रीक्षणे
त्रिशक्तिमयि वीक्षणं मयि निधेहि कामाक्षि ते ॥

பரேஜனனி பார்வதி ப்ரணதபாலினி ப்ராதிப
ப்ரதாத்ரி பரமேஸ்வரி த்ரிஜகதாச்ரிதே சாஸ்வதே|
த்ரியம்பககுடும்பினி த்ரிபத ஸங்கினீ த்ரீக்ஷணே
த்ரிசக்திமயிவீக்ஷணம் மயி நிதேஹி காமாக்ஷி தே||

எல்லாப்பொருளிலும், சகல தேவதைகளிலும் மிகச்சிறந்த தேவதை பரதேவதை ஆவாள். அவள் எல்லோராலும் அடிவ வணங்கப்படுபவள் ஆவாள். உலகத்தாய், மலைமகள். மன இருளை நீக்கி நல்லொளி எனும் ஞான ஒளியை அளிப்பவள். எல்லா தெய்வங்களையும் ஆட்சி செய்யும் ஈச்வரி, சிவனாரின் மனைவி, பஞ்சதசீ என்ற மூன்று கூடங்களையுடைய மஹாமந்திரமாக வணங்கப்பெறுபவள். த்ரிபதா காயத்ரி என்னும் சூரிய காயத்ரி வடிவாகவே

தேவி இருக்கிறாள். காயத்ரீ என்ற திருநாமம் தாங்கி காலையில் பிரும்ம ஸ்வரூபிணியாக அன்னவாகனத்தில் நான்கு முகத்துடன் கமண்டலு, அக்ஷமாலை தாங்கியும், ஸாவித்ரீ, மாத்யான் ஹிகத்தில், ருத்ரரூபிணி, ஐந்து முகம், த்ரிசூலம் தாங்கி விருஷபாரூடராகவும், ஸரஸ்வதி ஸாயங் காலத்தில் விஷ்ணுரூபிணீ சங்கு, சக்கரம் தாங்கி கருடாரூடையாகவும் ஸ்ரீபர தேவதையே விளங்குகிறாள். பஞ்சதசியின் ஒவ்வொரு கூடமும் ஓர் பூர்ண காயத்ரிக்கு சமம். ஸ்ரீவித்யா பதத்தில் பத்ததியில் த்ரிபதா காயத்ரி என்பது முக்யமானது. 'த்ரிபுர சுந்தரி வித்மஹே, பீடகாமினி தீமஹி தந்நக்லின்னே ப்ரசோதயாத் மற்றும் ஒரு முறையும் உள்ளது. பக்தி, யோகம், ஞானம் என்று மூன்று வழி களாலும் தேவியை அடையலாம். சூரியன், சந்திரன், அக்னி என்ற மூன்றையும் தன் மூன்று கண்களாகக் கொண்டு முக்கண்ணி என்று போற்றப்படுபவள். இச்சாசக்தி கிரியாசக்தி, ஞானசக்தி என்ற மூன்று சக்தி வடிவானவள். சிவக்கனி என்று போற்றப்படும் முருகப்பெருமான் ஞான வடி வேலைக் கையிலேந்தி ஞானசக்தியாக, வள்ளி, தெய்வ யானை என்ற இச்சா, க்ரியா சக்திகளுடன் கூடக் காக்ஷிய ளிப்பதும் தேவியின் அம்சமேயாகும். (93)

मनोमधुकरोत्सवं विदधती मनीषाजुषां
स्वयंप्रभववैखरीविपिनवीथिकालम्बिनी ।
अहो शिशिरिता कृपामधुरसेन कम्पातटे
चराचर विधायिनी चलति कापि चिन्मञ्जरी ॥

மனோமதுகரோத்ஸவம் விதததீ மனீஷா ஜுஷாம்
ஸ்வயம் ப்ரபவ வைகரீவிபிநவீதி காலம்பினீ |
அஹோ சிசிரிதா க்ருபாமதுரசேன கம்பாதடே
சராசர விதாயினீ சலதி காபி சின்மஞ்ஜரீ ||

கவிவாணர்கள் கவிதைகளைப் பூங்கொத்துப்போல் செய்து அந்த இனிமை யில் மூழ்கியபோது, அவர்கள் மன மெனும் வண்டு அப்பூங்கொத்தில் உள்ள தேனை ருசிக்கிறது. கவி இயற்ற முடியாத பாமரர்களும் பக்தி என்ற புஷ் பத்தில் உள்ள தேனை மனம் என்னும் வண்டால் மொண்டு குடிக்கின்றனர். பெரிய திருவிழாவே கொண்டாடுகிறார்கள். 'எழுதாக்கிளவி' என்று புகழ்பெற்ற வேதங்கள், இதில் சாகைகள் (கிளைகள்) ஜடைகள் (வேர்கள்) போன்ற இன்னும் பல பாகங்கள் இருப்பதால் இதை ஒரு காட்டிற்கு ஒப்பிடலாம். அந்தக் காட்டில் உள்ள மரங்களில் தேன் வண்டுகள் கூடுகட்டி, ஏராளமான தேன், அது தேவியின் கிருபை என்னும் தேன், ஆத்ம ஞானமாகிய கல்பக விருக்ஷத் தின் பூங்கொத் தின் ரஸப்ரவாஹம், இப்படிப்பட்ட தேவி காமாக்ஷி சராசர ஜகன் னாதா லலிதாஸஹஸ்ரநாமம் 244 அசைவதும், அசை யாததுமான உலகிற்கே தலைவி ஆவாள். இப்படிப் பட்ட 'சித்' என்னும் பூங்கொடி கம்பா நதிக்கரையில், காஞ்சி க்ஷேத் திரத்தில் உலவி வருகிறது! இந்த தேவியின் திருக்கண் ணோக்கு நம் எல்லார் மீதும் பரவட்டும். (94)

कलावति कलाभृतो मुकुटसीम्नि लीलावति
स्पृहावति महेश्वरे भुवनमोहने भास्वति ।
प्रभावति रमे सदा महितरूपशोभावति
त्वरावति परे सतां गुरु कृपाम्बुधारावति ॥

கலாவதி கலாப்ருதோ முகுடஸீம்நி லீலாவதி
ஸ்ப்ருஹாவதி மஹேச்வரே புவன மோஹனே பாஸ்வதி|
ப்ரபாவதி ரமே ஸதா மஹிதரூப சோபாவதி
த்வராவதி பரே ஸதாம் குருக்ரு பாம்புதாராவதி ||

கலாவதியாக தேவி இருக்கிறாள். கலா என்ற பதத்தால் அக்னி, சூர்ய, சந்த்ர என்ற மூன்று தேஜோ மண்டலத்தின் கலைகள், தேவியின் வடிவவானவை. 'சதுஷ்ஷஷ்டி கலாமயீ' என்றபடி தேவி அறுபத்திநான்கு கலை வடிவானவள். ஆயகலைகள் அறுபத்தி நான்கையும் ஏய உணர்விக்கும் என் அம்மை (கம்பர்) சந்த்ரகலையை தேவி சிரஸில் அணிந்து கொண்டிருக்கிறாள். ஞானிகளையும் மயக்குபவள் தேவி. ஒளி மயமானவள். ஒளி பொருந்தியவள். தேவி என்ற சொல் லுக்கே ஒளி என்றே பொருள். லக்ஷ்மி ரூபமாக உள்ளவளும் தேவியே. பரப்ரும்ம மஹிஷியும் நீயே. நல்லவர்களுக்கு அதிக கிருபை புரிந்து, அருள் என்னும் நீர்ப்பெருக்கில் முழுக்கி வைக்க வேண்டுகிறேன். (95)

त्वयैव जगदम्बया भुवनमण्डलं सूयते
त्वयैव करुणार्द्रया तदथ रक्षणं नीयते ।
त्वयैव खरकोपया नयनपावके हूयते
त्वयैव सति कामया जगति संततं स्थीयते ॥

த்வயைவ ஜகதம்பயா புவன மண்டலம் ஸூயதே
த்வயைவ கருணார்த்ரயா ததபி ரக்ஷணம் நீயதே |
த்வயைவ கரகோபயா நயனபாவகே ஹூயதே
த்வயைவ ஸதிகாமயா ஜகதி ஸந்ததம் ஸ்த்தீயதே ||

தேவியின் உள்ளம் எப்பொழுதும் தயை என்னும் ஈரக்கசிவுள்ளதாகவே இருக்கிறது. அதனால் உலக ரக்ஷணம் நடைபெறுகிறது. கடைசியில் ஊழி என்னும் காலத்தில் தேவியின் நெற்றிக்கண்ணுக்கு உலகமே ஹோமமாகி எரிக்கப் படுகிறது. உலகங்கள் தோன்று முன்பும், தோன்றியபோதும், அது அழிந்த பின்னும் நித்திய பொருளாக, சாஸ்வதமாக தேவியின் மிதுனமே நிலை பெற்றிருக்கிறது. லலிதா ஸஹஸ்ர நாமாவின் முதல் மூன்று நாமாக்கள்

'ஸ்ரீமாதா-சகல உயிருக்கும், உலகுக்கும் தாய்' ஸ்ரீமஹாராக்ஞீ - படைத்த உலகையும் உயிர்களையும் அரசனைப்போல் ரக்ஷிக்கிறாள். ஸ்ரீமத் ஸிம் ஹாஸனேச்வரி. ஸிம்மாதனத்தில் அமர்ந்து அவரவ ருக்கு உள்ளபடி தண்டனை அளிக்கிறாள். இந்த நாமாக் களில் ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற பிரம்ம, விஷ்ணு, ருத்ரரின் காரியங்களையும் தேவியே மறைமுகமாக செய்கி றாள் என்பது பெறப்படுகிறது. தேவி பஞ்சக்ருத்ய பராயணீ என்பதும் நாம் அறிந்தது. (96)

चराचरजगन्मयीं सकलहृन्मयीं चिन्मयीं
गुणत्रयमयीं जगत्त्रयमयीं त्रिधामामयीम् ।
परापरमयीं सदा दशदिशां निशाहर्मयीं
परां सततसन्मयीं मनसि कामकोटीं भजे ॥

சராசர ஜகன் மயீம் ஸகலஹ்ருன்மயீம் சின்மயீம்
குணத்ரயமயீம் ஜகத்ரய மயீம் த்ரிதாமாமயீம் |
பராபரமயீம் ஸதாதசதிஸாம் நிசாஹர்மயீம்
பராம் ஸததஸன்மயீம் மனஸீ காமகோடீம் பஜே ||

சராசர ஜகன்னாதா அசையும் பொருள், அசையாப் பொருள், ஸ்தாவர ஜங்கமம் என்ற கூறப்படும் எல்லாமே தேவியின் ஸ்வரூபமே. தாமஸ, ராஜஸ, ஸாத்வீக என்னும் மூன்று குணங்களாகவும், அம்முக்குண ஸ்வரூபிகளான மும்மூர்த்திகளாகவும், முக்குணங்களையும் கடந்தவளாக வும், அதற்கும் மேல் துரியம், துரியாதீதமாகவும் தேவி விளங்குகிறாள். பூமி, ஆகாயம், ஸ்வர்க்கம் என்ற மூன்று உலகங்களாகவும், சந்திரன், சூரியன், அக்னி என்ற மூன்று ஒளியாகவும் தேவியின் ஸ்தானம் அதற்கும் மேற்பட்டு 'நதத்ர ஸூர்யோ பாதி நசந்த்ரதாரகம்' ஸ்வயம் பிரகாசியான தேவியை பின்பற்றியே அனைத்தும் ப்ரகாசிக்கிறது. பரம், அபரம் என்ற ப்ரும்ம ஸ்வரூபிணீ. கிழக்கு, தென் கிழக்கு, தெற்கு தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு ஆகிய எட்டுத்திசைகளாகவும் இந்திரன், அக்னீ, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் அஷ்டதிக்பாலகர்களாகவும், மேல் என்ற அந்தரிக்ஷம், கீழ் என்ற பூமி இப்படியாக தசதிக்குகளாகவும், அதன் நாயகர் களாகவும், இரவாகவும், பகலாகவும் தேவியே இருக்கிறாள். தேவி கால மாகவும் இருக்கிறாள். காலாதீதமாகவும் இருக்கிறாள். 'ஸத்' என்ற சிவ ஸ்வரூபமாகவும் 'சித்' என்ற தேவிஸ்வ ரூபமாகவும் இரண்டும் சேர்ந்த ஸச்சித் ஆனந்தமாகவும் எல்லாவற்றிலும் சிறந்து விளங்கும் பரதேவதை எப் பொழுதும் நம் மனதிலே நிலை பெறட்டும். (97)

सति जगदम्बिके हरकुटुम्बिनि वक्त्ररुचा
जितशरदम्बुजे घनविडम्बिनि केशरुचा ।

परमवलम्बनं भव समादृतकाञ्चिपुरे
मम गतसंविदो जडिमडम्बरताण्डविनः ॥

ஜய ஜகதம்பிகே ஹரகுடும்பினி வக்த்ரருசா
ஜிதசரதம்புஜே கனவிடம்பினி கேசருசா|
பரமவலம்பனம் குரு ஸதா பரரூபதரே
மம கதஸம்விதோ ஜடிமடம்பரதாண்டவின: ||

போற்றி! அனைத்துலகும் ஈன்றதாயே! ஹரதேவரின் வாழ்க்கைத் துணைவியே! ஸதா சிவ குடும்பினி என்று உன்னைப் போற்றுகிறோம். திருமுக மண்டத்தின் ஒளியாலே சரத்கால சந்திரனை வென்றவளே; தாமரையைப் பழிக்கும் முகம் கொண்டவள். கூந்தலின் காந்தியாலே மேகங்களைப் பழிக்கின்றவள். நமக்கெல்லாம் தேவி காமாக்ஷியின் வடிவம் தான் மிகச்சிறந்த தேவதையாகத் தெரிகிறது. காமாக்ஷியினுள் சிவன் இருக்கிறார். தக்ஷிணாமூர்த்தியினுள் தேவி இருக்கிறாள். ஸம்வித் என்ற பரிபூர்ண ஞானம் ஏற்படாமல் அஞ்ஞானத்தின் வசப்பட்டு தள்ளாடுகின்ற நம் போன்றோர்க்கு, தேவி தன் திருவடிகளை ஒரு ஊன்று கோல் போல் தந்தருளி நம்மையெல்லாம் பவக்கடலைக் கடத்து விக்கவேண்டும். (98)

भुवनजननि भूषाभूतचन्द्रे नमस्ते
कलुषशमनि कम्पातीरगेहे नमस्ते ।
निखिलनिगमवेद्ये नित्यरूपे नमस्ते
परशिवमयि पाशच्छेदहस्ते नमस्ते ॥

புவன ஜனனி பூஷாபூத சந்த்ரே நமஸ்தே
கலுஷசமனி கம்பாதீரகேஹே நமஸ்தே |
நிகிலநிகம வேத்யே நித்யரூபே நமஸ்தே
பரசிவமயி பாசத்சேதஹஸ்தே நமஸ்தே ||

தேவி உலகெலாம் பெற்றவள். கருப்பெறாதின்ற கன்னி! புவனேஸ்வரி என்று புவனங்களைப் பெற்ற தாயாவாள். துண்டப்பிறையை, அம்புலியின் கீற்றை தலைக்கு அணியாகக் கொண்டவள். தாயே உனக்கு நமஸ்காரம். பாபங்க ளையும், அதனால் ஏற்படும் தோஷங்களையும் அழிப்பவள். கம்பா நதிக்கரையில் கோவில் கொண்டவள் தேவி காமாக்ஷி. அந்தத் தாய்க்கு நமஸ்காரம். எல்லா வேதங்களும் தேவி யையே ப்ரதிபாதனம் செய்கிறது. வேத வேத்யா தேவி வேதங்களால் அறியத்தக்கவள். தேவியே தன்னை

அறிவிக்கும் நூல்களாக வேதங்களைப் படைத்தாள். தேவி எப்பொழுதும் உள்ளவள். தேவிக்கு நமஸ்காரம். சிவனும் நீயே! உன்னில் சிவத்தைக் காண்கின்றேன். சிவத்தில் உன்னைக் காண்கின்றேன். ஸத்தைவிட்டுப் பிரியாத சித்தாகவே தேவி இருக் கிறாள். பாசத்தையும், அங்குசத்தையும் தேவி கைகளில் தாங்கி இருந்தாலும் பாசஹஸ்தா: பாசஹந்த்ரி (லலிதா ஸஹஸ்ர நாமம் 810 - 811) பாசங்கள் என்னும் அவித்தையை அழிப்பவள். தேவிக்கு நமஸ்காரம். (99)

क्वणत्काञ्ची काञ्चीपुरमणिविपञ्चिलयझरी
शिरःकम्पा कम्पावसतिरनुकम्पाजलनिधिः ।
घनश्यामा श्यामा कठिनकुचसीमा मनसि मे
मृगाक्षी कामाक्षी हरनटनसाक्षी विहरतात् ॥

க்வணத் காஞ்சீபுரமணி விபஞ்சீலயஜரீ
சிர:கம்பா கம்பாவஸதிரனுகம்பாஜலநிதி: |
கனச்யாமா ச்யாமா கடினகுசஸீமா மனஸிமே
ம்ருகாக்ஷீ காமாக்ஷீ ஹரநடனஸாக்ஷீ விஹரதாம்||

ஒலிக்கின்ற காஞ்சி என்னும் ஒட்டியாணத்தை உடையவளும், மாணிக்க வீணையேந்தும் மாதேவி கலைவாணியின் வீணாகானத்திற்கு 'ஸாது' வசனம் கூறி தலையசைத்து ஆமோதித்தவளுமான லலிதா மஹாத்ரிபுர சுந்தரி காமாக்ஷி கம்பா நதிக்கரையில் எப்போதும் இருப்பவள். கம்பைக் கரையில் வாழ்பவளும், அனுகம்பை என்னும் கருணைக் கடலும் ஆகிய காமாக்ஷி எங்கள் மனதில் களித்து விளையாடட்டும். தேவி காமாக்ஷி கனச்யாமா மேகம் போன்ற சாமள நிறங்கொண்ட இளம்பிராயத்தினளாகவும் ஓர் அவதாரம் (அவஸரம்) மேற்கொண்டதாக வரலாறு உள்ளது. மஹேஸ்வர மஹாகல்ப மஹாதாண்டவஸாக்ஷிணி (லலிதா ஸஹஸ்ரநாமம் 231) ஈச தாண்டவ ஸாக்ஷிணீ (லலிதாத்ரிசிதி நாமா55) மஹாப்ரலயத்தில அழிவுறாமல் மிகுந்திருந்தது மறைக்க வேண்டியதைத் தன்னிடம் மறைத்து வைப்பது திரோதானம். இதற்கு சாக்ஷி, தேவியே. ஒரு பொருளை அழித்தால் மறுபடி உண்டாக்கமுடியாது. மறைத்தால் மறுபடி வெளிக்கொணரலாம். ஈச்வர தாண்டவத்தில் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்கிரஹம் இவை எல்லாமே உள்ளது. பரமேஸ்வரன் ஆனந்த தாண்டவத்தி னால் அறு பத்திநான்கு கலைகளையும் உபதேசிக்கிறார். தேவி அதற்கு சாக்ஷி 'ந்ர்தநாத்தி பரேசஸ்ய சது: ஷஷ்டி கலா ஜனி:' என்ற ப்ரதோஷ ஸ்தோத்திரம் இதற்குப் பிரமாணம். ஸௌந்தர்லஹரி தவாதாரேமூலே 41வது பாடல் இதிலும் சிவன் தாண்டவம், தேவி லாஸ்யம் என்று நடனமாட திரோபவம் ஆன உலகு மறுபடி அனுக்ரஹம் என்றபடி தோன்றுகிறது. (100)

समरविजयकोटी साधकानन्दधाटी
मृदुगुणपरिपेटी मुख्यकादम्बवाटी ।
मुनिनुतपरिपाटी मोहिताजाण्डकोटी
परमशिववधूटी पातु मां कामकोटी ॥

ஸமரவிஜயகோடீ ஸாதகாநந்ததாடீ
ம்ருதுகுணபரிபேடீ முக்யகாதம்பவாடீ |
முனிநுதபரிபாடீ மோஹிதாஜாண்டகோடீ
பரமசிவவதூடீ பாது மாம் காமகோடீ ||

போரிலே பெறும் வெற்றியின் பேரெல்லையாகி விளங்கு பவள். வாழ்க்கையே ஒரு போர்தான். தர், மார்த்த, காம, மோக்ஷ என்ற சதுர்வித பல புருஷார்த்தம் என்று சொல்வதில் காமத்தின் கோடியாக மோக்ஷம் உள்ளதால் காமகோடி என்னும் காமாக்ஷியே மோக்ஷமாகிறாள். தன்னை உபாஸிப்பவர்களுக்குத் பேரானந்தத்தை அளிக்கிறாள். மென்மையான குணங்கள், கடப்ப மரங்களையுடைய பூம் பொழில் அதாவது தேவியின் இருப்பிடமான ஸ்ரீநகரம் தெய்வ விருக்ஷங்கள் நிறைந்த காடுகளுக்கு மத்தியில் கதம்பவனத்தின் மத்தியில் அமைந்துள்ளது. தேவியை முனிவர்கள், சித்தர்கள், சாரணர் கள் இன்னும் எல்லா தேவதேவியரும் இடைவிடாமல் ஸ்துதித்து வருகிறார்கள். கோடி ப்ரும்மாண்டங்களையும் தன் அழகால் ஈர்த்து, பரமசிவ பத்தினியாக விளங்கும் ஸ்ரீகாம கோடித்தாய் நம்மை ரக்ஷிக்கட்டும். (101)

इमं परवरप्रदं प्रकृतिपेशलं पावनं
परापराचिदाकृतिप्रकटनप्रदीपायितम् ।
स्तवं पठति नित्यदा मनसि भावयन्नंबिकां
जपैरलमलं मखैरधिकदेहसंशोषणैः ॥

இமம் பரவரப்ரதம் ப்ரக்ருதி பேசலம் பாவநம்
பராபரசிதாக்ருதி ப்ரகடன ப்ரதீபாயிதம் |
ஸ்தவம் படதி நித்யதா மநஸி பாவயந்நம்பிகாம்
ஜபைரலமலம் மகைரதிகதேஹ ஸம்சோஷணை: ||

இந்தப் பாடல் பலஸ்துதியாகும். மூக பஞ்சசதீ இந்தத் துதிகளைப் படிப்பவர் களுக்கு வேண்டிய வரங்கள் எல்லாம் வரப்ரஸாதமாகும். படிப்பவர்கள் பரிசுத்

தர்கள், தூய்மையா னவர்களாகி விடுவார்கள். பரமாகவும், அபரமாகவும் இருப்பவள் சித்ரூபியானவள் தேவி காமாக்ஷி. பிரும்ம வித்தை, ரஹோயாகம், சக்தி, பரம்பொருள், பரா எனும் ஒலிவடிவு, துரியநிலை, மந்த்ரவடிவம், உயர்ந்தது இது போன்றவைகள் பரத்தின் பாற்படும்: மற்ற வித்தைகள், வெளிப்படை யான யாகம், சிவன், உலகம், பச்யந்தி, மத்யமா, வைகரி மற்ற ஒலி, முக்குண நிலை, தனிமனிதனின் சக்தி, தாழ்ந்தது இவைகள் அபரத்தைச் சேர்ந்தது. இப்படிப்பட்ட தேஜஸ் பொருந்திய இந்தத் துதியை மனதிலே சிந்தித்துக் கொண்டு எப்பொழுதும் சொல்லிக் கொண்டே இருந்தால் ஜபம் செய்ய வேண்டிய தில்லை. இதுவே, ஜபமாகும். யாகாதிகள் செய்ய வேண்டாம். தேவி, 'ஸுகாராத்யா' 'சோபனா சுலபாயை கத்யை' சுகமாக ஆராதிக்கக் கூடியவள். நித்யானந்தத்தை அளிப்பதால் 'சோபனா' 'சுலபாகதி' நாடி அடையவேண்டிய இடம் அதுவும் எளிதில் சென்றடையலாம். (102)

# 4. கடாக்ஷ சதகம்

मोहान्धकारनिवहं विनिहन्तुमीडे
    मूकात्मनामपि महाकवितावदान्यान् ।
श्रीकाञ्चिदेशशिशिरीकृतिजागरूकान्
    एकाम्रनाथतरुणीकरुणावलोकान् ॥

மோஹாந்தகாரநிவஹம் விநிஹந்து மீடே
    மூகாத்மனாமபி மஹாகவிதாவதான்யான் ||
ஸ்ரீகாஞ்சி தேச சிசிரிக்ருதி ஜாகரூகா
    நேகாம்ரநாத தருணீ கருணாவலோகான் ||

அஞ்ஞானமென்னும் இருட்டை, இருட்டுக்கூட்டத் தையே நன்றாக மிச்ச மீதியில்லாமல் அழிப்பவள் தேவி. மூககவி இந்த இடத்தில் தன்னைப்பற்றி சொல்லிக்கொள்வ தாகவும் கொள்ளலாம். ஊமையர்களுக்கும் சிறந்த, பெருமை வாய்ந்த கவித்வத்தை அளிக்கும் ஸ்ரீகாமாக்ஷி தேவி, காஞ்சி நாட்டின் வெப்பத்தைத் தணித்து அதனைக் குளிர்ச்சி யாக்குவதில் கருத்துடையவள். ஏனெனில் தேவி தயையால் நனைந்த உள்ளத்தவள் ப்னிமலை அரசனின் புதல்வி, பனிமலையில் வதியும் பரமசிவபார்யை, மேலும மாமரத் தடியில் அமர்ந்த ஏகாம்ரநாதனுடன் அமர்ந்தவள். மரத்தடி எப்போதும் குளிர்ச்சியாகவே இருக்கும். தலையில் இருவ ருமே நிலாத்துண்டை அணிந்தவர்கள். கருணை குளிர்ச்சி யானது. கோபம் தான் வெப்பமுடையது. எனவே தேவி காமாக்ஷி, மாமரத்தடியில் வாசம் செய்யும் ஏகாம்ர நாதனின் பத்னீ, தேவியின் கருணை பொழியும் நோக்குகளைப் புகழ்கின்றேன். (1)

मातर्जयन्ति ममताग्रहमोक्षणानि
    माहेन्द्रनीलरुचिशिक्षणदक्षिणानि ।
कामाक्षि कल्पितजगत्त्रयरक्षणानि
    त्वद्वीक्षणानि वरदानविचक्षणानि ॥

மாதர்ஜயந்தி மமதாக்ரஹ மோக்ஷணானி
    மாஹேந்த்ரநீல ருசிசிக்ஷணதக்ஷிணானி |
காமாக்ஷி கல்பித ஜகத் த்ரய ரக்ஷணானி
    த்வத் வீக்ஷணானி வரதான விசக்ஷணாணி ||

தேவி காமாக்ஷியின் சுபவீக்ஷணமானது மமதை என்னும் பிசாசை அடித்துத் துரத்தி அடியார்களை மமதையினின்றும் விடுவிக்கிறது. தேவியின் கடைக் கண் நோக்கு கருணை மயமானது. கருணையின் நிறம் சிவப்பு. எனவே இந்த்ர நீல ரத்னம் போன்ற விழிகளின் பார்வைபட்டதும் கருணையால் சிவந்து நனைந்து காணப்படுகிறது. தேவி அநேக கோடி ப்ரும்மாண்ட ஜனனீ.' எனவே பூலோகம், சுவர்க்கம், பூமியின் கீழே உள்ள பாதாளம் போன்ற எல்லா லோகங்க ளையும் சிருஷ்டித்து, காத்து, ரக்ஷித்து எல்லாமே தேவியின் கர்த்தவ் யமாகும். தேவி காமாக்ஷி கருணையே வடிவானவள். கோரிய வரங்களைத் தருவதில், ஏன் கேட்பதற்கு அதிகமாகவே வரங்களை அளிப்பதில் வாஞ்சாஸமதிக, வாஞ்சிதார்த்தப் ரதாயினீ அள்ளிக் கொடுப்பதில் வல்லவள். (2)

आनङ्गतन्त्रविधिदर्शितकौशलानां
आनन्दमन्दपरिघूर्णितमन्थराणाम् ।
तारल्यमम्ब तव ताडितकर्णसीम्नां
कामाक्षि खेलति कटाक्षनिरीक्षणानाम् ॥

ஆனங்கதந்த்ர விதி தர்சித கௌசலானாம்
ஆனந்த மந்த பரிகூர்ணித மந்த ராணாம் |
தாரல்யமம்ப தவ தாடித கர்ணஸீம்னாம்
காமாக்ஷி கேலதி கடாக்ஷநிரீக்ஷணானாம் ||

அன்னை காமாக்ஷி தன் கண்களாலேயே காமனை உயிர்ப்பித்தாள். ஒரு சமயம் மன்மதனை எரித்த பரமேஸ்வர னையே தன் கண்களால் (மதனனை உயிர்ப்பித்து) ஆகர்ஷித்த காமக்கண்ணி காமாக்ஷி ஆவாள். பரமேஸ்வ ரனுக்கு ச்ருங்கார சாஸ்திரத்தின் விதிகளை விளக்குவதில் தீக்ஷாகுருவாகவே தேவி விளங்குகிறாள். ஆனந்தம் என்பது கண்களில் பளிச்சிடும். கடைக்கண் பார்வை, காதளவு ஓடிய கண்ணோக்கு, கருணை என்ற ஈரம் நிறைந்துள்ள தால், சிறிது நனைந்து, அதனால் பளபளத்துக் காணப்படுகிறது. தேவியின் பார்வையில் இனிமையும் உள்ளது. (3)

कल्लोलितेन करुणारसवेल्लितेन
कल्माषितेन कमनीयमृदुस्मितेन ।
मामञ्चितेन तव किञ्चन कुञ्चितेन
कामाक्षि तेन शिशिरीकुरु वीक्षितेन ॥

கல்லோலிதேன கருணா ரஸவேல்லிதேன
கல்மாஷிதேன கமனீயம்ருதுஸ்மிதேன |

மாமஞ்சிதேன தவ கிஞ்சன குஞ்சிதேன

காமாக்ஷி தேன சிசிரீகுரு வீக்ஷிதேன ||

தேவியின் கண்கள் கருணை வெள்ளத்தால் அலை மோதும் கடலைப் போல் உள்ளது. ஸௌந்தரியலஹரியில் கண்வர்ணனைக்கு பதினோறு பாடல்கள் உள்ளது. கங்கை நீர்ப்பிரவாஹத்தை தேவியின் கண்களுக்கு ஒப்பிட்டுக் கூறுகிறார். கடலில் அலைகள் வரும்போது கருநிறமும், வெண்ணிறமும் கலந்து தோன்றும். சில அலை வளைந்தும், சில குறுகியும் இன்னும் பல விதமாகத் தோன்றும். அதே போல் தேவியின் கடைக்கண்பார்வையும் பல விதத்தோற்றங்களை அளித்து நம்மை மெய்சிலிர்க்க வைக்கிறது. தேவி காமாக்ஷி! அப்படிப்பட்ட உன்னுடைய கருணைக்கண்ணால் எங்களை மெய்குளிரச்செய்வாயம்மா என்று வேண்டுவோம். (4)

साहाय्यकं गतवती मुहुरर्जुनस्य

मन्दस्मितस्य परितोषितभीमचेताः ।

कामाक्षि पाण्डवचमूरिव तावकीना

कर्णान्तिकं चलति हन्त कटाक्षलक्ष्मीः ॥

ஸாஹாய்யகம் கதவதீ முஹுரர்ஜுனஸ்ய

மந்தஸ்மிதஸ்ய பரிதோஷிதபீமசேதா: |

காமாக்ஷி பாண்டவ சமூரிவதாவகீனா

கர்ணாந்திகம் சலதி ஹந்த கடாக்ஷ லக்ஷ்மீ:||

பயங்கரமூர்த்தியான பரமசிவனின் மனதைக் கொள்ளை கொண்ட புன் சிரிப்பு. தேவியின் முகப்புன்சிரிப்பில் காமேஸ் வரர் மூழ்கி இருக்கும். ஆசை ஓர்புறம், வெளியே வந்து மற்ற அழகுகளைக் காணும் ஆசை ஓர்புறமுமாக அவர் மனம் ஊசலாடுகிறது. தேவியின் கண்கள் காதுவரை நீண்டிருப் பதால் கடைக்கண்ணோக்குகள் காதுகளின் பக்கமாகச் செல்கின்றன. மூககவி நயம் படக் கூறுகிறார். கர்ணாந்திகம் என்ற கர்ணம் என்ற (கர்ணன்) காதுகள் வரை கண்கள் செல்கிறதே! தருமயுத்தம் செய்யும் அர்ஜுனன், உதவியை யும், பீம ஸேனன் மனதை சந்தோஷப்படுத்தலையும் செய்து பாண்டவர்களுக்கு உதவி செய்யும் கண்கள் காதுகள் வரை (கர்ணன், இவன் துரியோதனாதி களைச் சேர்ந்தவன். அதர்ம யுத்தம் செயபவன்) செல்கிறதே! பாரதயுத்தம் நடை பெறும் முன்பு பாண்டவர்கள் துர்கா தேவியை துதித்து, அவளிடம் ஆசி பெற் றுத் தான் யுத்த களம் புகுந்தார்கள். எனவே தேவி அவர்களைக் கடைக்கண் நோக்கால் காத்து வெற்றியடையச் செய்தனள் என்பது வரலாறு. (5)

अस्तं क्षणान्नयतु मे परितापसूर्यं

आनन्दचन्द्रमसं आनयतां प्रकाशम् ।

कालान्धकारसुषमां कलयन् दिगन्ते
कामाक्षि कोमलकटाक्षनिशागमस्ते ॥

அஸ்தம் க்ஷணான்னயது மே பரிதாபஸூர்யம்
ஆனந்த சந்த்ர மஸமானயதாம் ப்ரகாசம் |
காலாந்தகார ஸுஷமாம் கல்யன் திகந்தே
காமாக்ஷி கோமல கடாக்ஷ நிசாகமஸ்தே ||

காமாக்ஷி தேவியின் அழகு நிறைந்த கடைக்கண் நோக்கு என்ற மாலைப் பொழுது, மனப்புழுக்கத்தை, ஸூரியனின் தாபத்தை ஒரு க்ஷணத்தில் அஸ்த மிக்க வேண்டும் என்று வேண்டுகிறார். இரவு வந்தால் இருள் சூழ்ந்து விடுமே என்று ஏங்குகிறோம். அந்தக் காரிருளையும் திசைகளின் கோடியில் அடைத்து விடலாம். அப்பொழுது அந்தகாரம் இருக்காது. இந்த நேரத்தில் நிலா உதயம் ஏற்பட்டுவிட்டால் எவ்வளவு சந்தோஷமாயிருக்கும்? தேவியின் கடைக் கண் நோக்கு தாபத்தைத் தணிக்க வேண்டும். மனஇருளை அகற்றவேண்டும். குளிர்ச்சியான நிலவு, தாபத்தைத்தீர்க்கும். ஆனந்த அனுபவம் இதையே நாம் அனைவரும் தேவியிடம் பிரார்த் திப்போம். (6)

ताटङ्कमौक्तिकरुचाङ्कुरदन्तकान्तिः
कारुण्यहस्तिपशिखामणिनाऽधिरूढः ।
उन्मूलयत्वशुभपादपं अस्मदीयम्
कामाक्षि तावककटाक्षमतङ्गजेन्द्रः ॥

தாடங்க மௌக்திகரு சாங்குரதந்த காந்தி:
காருண்யஹஸ்த பசிகாமணினாதிரூட: |
உன்மூலயத் வசுபபாதபமஸ்மதீயம்
காமாக்ஷி தாவக கடாக்ஷ மதங்கஜேந்த்ர:||

தேவியின் கண்ணோக்கை யானைக்கு ஒப்பிடுகிறார். தேவியின் காதுகளில் தாடங்கங்கள் என்னும் காதோலை நவரத்தினங்கள் பதிக்கப்பட்டு விளங்கு கிறது. அந்த நவரத் தினத்தில் ஒன்றான நல்முத்து முளைபோல் விளங்குவதா கவும், அதை யானை தந்தத்துக்கு ஒப்பாகக் கூறுகிறார். கருணை என்ற பாக னால் நடத்தப்பெறும் யானை என்னும் கடைக் கண்ணோக்கு தீமைகள் என்ற மரத்தை வேரோடு பிடுங்கி எறியவேண்டும் என்கிறார். தேவியின் தாடங்கம் பற்றி ஸௌந்தரியலஹரியில் வெகுவாகப் பேசப்பட்டிருக்கிறது. தேவர்கள் மூப்பு மரணங்களை விலக்கும் அம்ருதத்தைச் சாப்பிட்டும், ப்ரம்மா, இந்திரன் முதலிய எல்லா தேவர்களும் பிரளய காலத்தில் அழிவுறுகிறார்கள். கொடிய

விஷத்தை சாப்பிட்ட சிவனுக்கு காலத்தின் முடிவு இல்லை என்றால் அதன் காரணம் தேவியின் காதிலுள்ள தாடங்க மகிமைதான் திருவானைக்காவில் ஒரு காலத்தில் அகிலாண்டேச்வரி மிகுந்த உக்ரமாக இருந்தாள். ஆதி சங்கரர் தேவியின் காதுகளில் ஸ்ரீசக்கரத்தைத் தாடங்கமாக்கி அணிவித்தார். தேவி யின் சன்னிதிக்கு நேர் எதிலே கணபதியை பிரதிஷ்டித்தார். அதன்பின் தேவி சாந்தமாகி உள்ளதாக்க் கூறுவது வழக்கம். தேவியின் தாடங்கம் அவ்வளவு மஹிமை வாய்ந்ததாகும். அதனால் தான் ஸுவாஸினிகள் ஒருபோதும் காதில் பூஷண மில்லாமல் இருக்கலாகாதென்பதை உபதேசமாகக் கொள்ள வேண்டும். - அருணாமோதினீ. (7)

छायाभरेण जगतां परितापहारी
ताटङ्करत्नमणितल्लजपल्लवश्रीः ।
कारुण्यनाम विकिरन् मकरन्दजालं
कामाक्षि राजति कटाक्षसुरद्रुमस्ते ॥

சாயாபரேண ஜகதாம் பரிதாபஹாரீ
தாடங்கரத்ன மணிதல்லஜ பல்லவஸ்ரீ: |
காருண்யநாம விகிரன் மகரந்த ஜாலம்
காமாக்ஷி ராஜதி கடாக்ஷஸுரத்ருமஸ்தே||

தேவியின் கடைக்கண்நோக்கு கற்பக விருக்ஷத்துகு ஒப்பிடப்படுகிறது. விருக்ஷம் இருண்ட நிழலால் உலகத்தின் வெப்பத்தைப் போக்குகிறது. அதைப்போல் தேவியின் கண்நோக்கும் உலகத்தாரின் தாபத்தைப் போக்குகிறது. விருக்ஷம் என்றால் தளிர்கள் உண்டு. பூக்கள் உண்டு. அந்தப் பூக்களிலிருந்து கருணை என்னும் தேன் அதிகமாக வடிகின் றது. இப்படியாக தேவியின் கண்கள் என்னும் கற்பக விரு க்ஷம், காதில் உள்ள தாடங்கங்களே விருக்ஷத்தின் தளிர்கள், கருணையே பூக்களில் வடியும் தேன் இப்படியாக நாம் இந்தப்பாடலை அனுபவிக்கிறோம். (8)

सूर्याश्रय प्रणयिनी मणिकुण्डलांशु-
लौहित्यकोकनद कानन माननीया ।
यान्ती तव स्मरहराननकान्ति सिन्धुं
कामाक्षि राजति कटाक्षकलिन्दकन्या ॥

ஸூர்யாஸ்ரய ப்ரணயினீ மணிகுண்டலாம்சு
லௌஹித்ய கோகனதகானன மானனீயா|

யாந்தீதவ ஸ்மரஹரானன காந்தி ஸிந்தும்
காமாக்ஷி ராஜதி கடாக்ஷ களிந்த கன்யா||

தேவி காமாக்ஷியின் கடைக்கண் நோக்கு கருமை நிறத்தில் யமுனைபோல் காண்கிறது. யமுனை சூரியபுத்திரி. பரமசிவன் ஸூரியமண்டத்தில் உரைபவர்.

அஹம் அக்னிசிரோநிஷ்ட: த்வம் ஸோமசிரஸி ஸ்ததா
அக்னீஷோமாத்மகம் விச்வம் ஆவாப்யாம் ஸமதிஷ்டிதிம்"

என்று பரமசிவன் அம்பாளுக்கு சொன்னதாக சிவபுராணத் தில் சொல்லப் பட்டிருக்கிறது. தேவி சந்த்ரமண்டல மத்ய காவாக உள்ளவள். சூரிய மண்டத் தில் வசிக்கும் பரம சிவனின் காதலியான தேவியின் காதுகளிலே ரத்னக் குழைகளின் ஒளிகளாகிய செந்தாமரை மலர்கள் பூத்த காடாகிக் கொண் டாடத் தக்கதாகி விளங்குகிறது. தேவியின் கண்கள் பரமசிவனிடமே நிலைத் திருப்பதால், கண்கள் என்ற ஒளிவெள்ளம் பரமசிவன் என்னும் கடலை நோக்கிச் செல்வதாக விளங்குகிறது. (9)

प्राप्नोति यं सुकृतिनं तव पक्षपातात्
कामाक्षि वीक्षणविलासकलापुरंध्री ।
सद्यस्तमेव किल मुक्तिवधूर्वृणीते
तस्मान् नितान्तमनयोरिदमैकमत्यम् ॥

ப்ராப்னோதியம் ஸுக்ருதினம் தவ பக்ஷ பாதாத்
காமாக்ஷி வீக்ஷண விலாஸகலா புரந்த்ரீ |
ஸத்யஸ்தமேவ கில முக்தி வதூர் வ்ருணீதே
தஸ்மாந்நிதாந்த மனயோரிதமைகமத்யம் ||

காமாக்ஷியின் கருணாகடாக்ஷம் எந்தப்புண்ணியசாலியின் மேல் விழுகி றதோ அவனுக்கு மோக்ஷம் கிட்டுகிறது. அந்தக் காலத்தில் அரசர்கள் சுவயம் வரம் என்று, அரசகுமாரிகள் தாங்களே வரனை வரிப்பது உண்டு. கையில் மாலையுடன் ஸ்வயம்வர மண்டபத்தில் வரும் பெண்ணுடன் வாணிப் பெண் என்னும் தோழி ஒவ்வோர் வரனையும் பற்றிக் கூறு வாள். பிடித்தமான வனையே கணவனாக மாலையிட்டு வரிப்பாள். தேவியின் கருணாகடாக்ஷம் எந்த வரன் மேல் விழுகிறதோ அப்பொழுதே முக்தி என்ற பெண்ணும் அவனுக்கு மாலையிட்டு விடுகிறாள். இப்படிப்பட்ட ஓர் ஒற்றுமையை கவி வியந்து பாராட்டுகிறார். (10)

यान्ती सदैव मरुतामनुकूलभावं
भ्रूवल्लिशक्रधनुरुल्लसिता रसार्द्रा ।

कामाक्षि कौतुकतरङ्गितनीलकण्ठा
कादम्बिनीव तव भाति कटाक्षमाला ॥

யாந்தீ ஸதைவ மருதாம் அனுகூலபாவம்
ப்ருவல்லி சக்ரதனுருல்லஸிதா ரஸார்த்ரா |
காமாக்ஷி கௌதுகதரங்கித நீலகண்டா
காதம்பிநீவ தவ பாதி கடாக்ஷமாலா ||

தேவி காமாக்ஷியின் கடைக்கண் நோக்கமே ஒருமாலை போல் ஒரு சங்கிலி போல் மருத்துககள் என்ற தேவர்களின் மேல் எப்பொழுதுமே படுவதால் அவர்களுக்கு அனுகூலமே ஏற்படுகிறது. தேவியின் புருவம் இந்த்ரவில் போல் ஒளி பெற்றுவிளங்குகிறது. சிவே ச்ருங்காரார்த்ரா என்று நவ ரஸங்களில் முதல் ரஸமான சிருங்கார ரஸத்தில் சிவனை நனைத்தவள் தேவி. கடைசி ரஸமான கருணா என்னும் ரஸத்தாலேயும் சிவனை நனைத்து, நீல கண்டரான சிவன் தேவியுடன் கூடவே தாண்டவம் என்ற நடனத்தைச் செய்து ப்ரலயத்தில் லயம் செய்த உலகை இருவருமாக உண்டாக்கு கிறார்கள். நீலகண்ட என்பது மயிலுக்கும் பொருந்தும். மயிலின் கழுத்து நீலநிறமாயுள்ளதால் அதற்கும் நீலகண்ட என்ற பெயர் உண்டு. கருநிற மேகங்களைக் கண்ட மயில் உற்சாகத்துடன் நடனமாடுகிறது. கருநிறத்தாலும், கருணை பொழிவதாலும் மேகங்களையொத்த கடாக்ஷங்களை, சிலேடையாலே வாயுவை அனுகூல மாகப்பெற்று வானவில் லோடு மின்னி மயில்களைக் களிப்பிக்கும் தன்மையுடைய மேகங்களுக்கு ஒப்புமை கூறுகிறார். (11)

गङ्गाम्भसि स्मितमये तपनात्मजेव
गङ्गाधरोरसि नवोत्पलमालिकेव ।
वक्त्रप्रभासरसि शैवलमण्डलीव
कामाक्षि राजति कटाक्षरुचिच्छटा ते ॥

கங்காம்பஸி ஸ்மிதமயே தபனாத்மஜேவ
கங்காதரோரஸி நவோத்பலமாலிகேவ |
வக்த்ரப்ரபாஸரஸி ஸைவல மண்டலீவ
காமாக்ஷி ராஜதி கடாக்ஷருசிச்சடாதே ||

காமாக்ஷியின் கடைக்கண் நோக்கின் காந்தியின் திரளானது முறுவல் மயம், புன்சிரிப்பு மயமான கங்கா ஜலத்தில் கலக்கும் கருநிறமான யமுனா ஜலம் போல இருக்கிறது. கங்கை வெண்மைநிறம், யமுனை கருப்பு நிறம்.

கருநிறம், வெண்மை நிறத்தின் சங்கமம் ஆயிற்று. மூன்றாவதாக கங்கையை சிரஸில் தரிக்கும் கங்காதரரான பரமசிவனின் மார்பில் விளங்கும் அப்பொழுது தான் மலர்ந்த நெய்தல் மலர் (கருங்குவளை) மாலை போல விளங்குகிறது. தேவியின் திருமுக மண்டலாகிய ஜோதி மயமான ஏரியில் பாசி படிந்திருப் பதுபோல, பாசி நல்லபசிய நிறம்.மேலும் அதில் வெல்வெட்போல் ஒரு பள பளப்பு அப்படியாக விளங்குகிறது. எனவே தேவியின் நோக்கில் வெண்மை, கருமை, சிவப்பு, பசுமை இவ்வளவும் சேர்ந்த ஒரு கலவை அதுவும் ஜாஜ்வல்ய மாகப் பிரகாசத்துடன் கூடியது என்று கொள்ளலாம். (12)

संस्कारतः किमपि कन्दलितान् रसज्ञा-
केदारसीम्नि सुधियामुपभोगभाग्यान् ।
कल्याणसूक्तिलहरीकलमाङ्कुरान् नः
कामाक्षि कन्दलयतु त्वदपाङ्गमेघः ॥

ஸம்ஸ்காரத: கிமபி கந்தலிதான் ரஸஜ்ஞ
கேதாரஸீம்னி ஸுதியாம் உபபோக யோக்யான் |
கல்யாண ஸூக்தி லஹரீ கலமாங்குரான் ந:
காமாக்ஷி கந்தலயது த்வதபாங்கமேக:||

காமாக்ஷி தேவியின் கடைக்கண் என்ற மேகம் தன்னுடைய சேர்த்தியி னாலே மூகரைப் போன்ற கவிகளின் நாக்கு, ரஸங்களையறியும் தன்மை கொண்ட நாக்கு, என்னும் ஈரமு டைய வயலில் மங்களகரமான பாசுரங்களாக விளையட்டும். தேவியின் துதிகள் நல்லோர் வாக்கினின்றும் வெளிப் போந் தால் அதை முக்யமாக ஞானிகள், மற்றப்படி யாவருமே ரசித்து ஆனந்த மடைவோம். தேவியின் கடாக்ஷத்தால் கவிகளின் நாக்கில் தேவியைப்பற்றிய துதிகள் மங்களகர மான பாடல்கள் விளைவதால் அவை செந்நெல்மணி என்று சொல்வதால் ஞானியர்க்கும் மற்றவர்க்கும் உணவு ஆகிறது. கருணா கடாக்ஷம் என்ற மேகத்தினின்று கருணை வெள்ளம் பாய்ந்த வயலிலே தான்: இங்கு ஷட்ரஸத்தையும் அறியும் நாவிலேதான்: ஸ்துதிகள் புறப்படும். வயலிலே செந்நெல் பயிர் செழிப்பாக வளரும். (13)

चाञ्चल्यमेव नियतं कलयन्प्रकृत्या
मालिन्यभूः श्रुतिपथाक्रमजागरूकः ।
कैवल्यमेव किमु कल्पयते नतानां
कामाक्षि चित्रमपि ते करुणाकटाक्षः ॥

சாஞ்சல்யமேவ நியதம் கலயன் ப்ரக்ருத்யா
மாலின்யபூ: ஸ்ருதி பதாக்ரமஜாகரூக: |
கைவல்யமேவ கிமு கல்பயதே நதானாம்
காமாக்ஷி சித்ரமபி தே கருணா கடாக்ஷ: ||

தேவியின் கருணைததும்பும் கடைக்கண்ணோக்கமானது இயல்பாகவே எப்பொழுதும் துள்ளி விளையாடிக் கொண்டு சஞ்சலமான நோக்கோடு, கருநிறமுடையதாயிருந்தும், அசஞ்சலமான பக்தியையும், சிறிதும் தமோ குணக்கலப் பில்லாத ஞானத்தையும் அளிக்கிறதே! இது ஆச்சர்யமே. தேவி யின் கடைக்கண்கள் ச்ருதி கேட்கும் கருவியான காதுவரை ஆக்ரமித்துள்ளது. ச்ருதியை ஆக்ரமித்தாலும் வேதத்தை வணங்குபவர்கள் பக்கமே தேவியின் கடைக்கண் நோக்குபதிகிறது. வேத மாக்கத்தில் உள்ளவர்களுக்கு கைவல்யம் என்னும் மோக்ஷத்தையே அளிக்கிறாள். சஞ்சலம், (ஆணவம், கன்மம், மாயை என்ற) மும்மலங்க ளுக்கு இடமானவனும், வேத நெறியை விலகி நிற்பவன் இப்படிப் பட்ட ஆசார்யனாக, தேவியை உருவகப்படுத்துகிறார். இப்படிப்பட்ட குரு, தன்னை அண்டியவர்களுக்கு கைவல்யம் என்ற உயர்ந்த இடத்தைத் தருவது ஆச்சர்யமே. (ச்ருதி-வேதம், காது). (14)

संजीवने जननि चूतशिलीमुखस्य
संमोहने शशिकिशोरकशेखरस्य ।
संस्तंभने च ममताग्रहचेष्टितस्य
कामाक्षि वीक्षणकला परमौषधं ते ॥

ஸஞ்ஜீவனே ஜனனி சூதசிலீமுகஸ்ய
ஸம்மோஹனே சசிகிசோரக சேகரஸ்ய |
ஸம்ஸ்தம்பனே ச மமதாக்ரஹ சேஷ்டிதஸ்ய
காமாக்ஷி வீக்ஷணகலா பரமௌஷதம் தே ||

காமாக்ஷி தேவியின் கைகளிலும், காமேஸ்வரரின் கைகளி லும் மன்மதன் கைகளிலும் மலரம்புகள் உள்ளது. மாமரத்தடி யில் ஏகாம்பரநாதர் கோவிலில் மாவடிசேவை என்பதாக தேவ, தேவியரின் திருமணக்கோலம் காணப் பெறு கிறோம். இந்த சம்பவங்கள் நடைபெறு முன்னேயே, காமன் பஞ்சபாணங் களில் ஒன்றான மாம்பூவை அம்பாகக்கொண்டு, அதை பரமேஸ்வரன் மேல் எறிந்ததால் சிவனால் நீராக்கப்பட்டான். தேவி காமாக்ஷியாக வந்து காமனைத் தன் சந்த்ர நேத்திரத்தால் உஜ்ஜீவனம் செய்தாள். ஸோமனின் இளம் பிறையை சூடிய பரமசிவனை தேவி தன்னிடம் மயங்க வைத்தாள். மன்மத உஜ்ஜீவனம் ஆனபின் பரமேஸ்வரரின் மிக மிக வேண்டுதல்கள் நிகழ்ந்த

பின்னே திருமணம் கௌரி என்ற தேவியுடன் நடைபெற்றது. இவ்வளவு கோலாஹலங்கள் பொருந்திய காமாக்ஷி என்னும் தேவியின் கடைக்கண் ணோக்கு மமதை என்ற பிசாசினால் ஆடும் ஜீவர்களை அதனின்றும் விடு வித்து கருணைக்குப் பாத்திரனாக வேண்டும் என்று வேண்டு கிறோம். (15)

नीलोऽपि रागमधिकं जनयन्पुरारेः-
लोलोऽपि भक्तिमधिकां द्रढयन् नराणाम् ।
वक्रोऽपि देवि नमतां समतां वितन्वन्
कामाक्षि नृत्यतु मयि त्वदपाङ्गपातः ॥

நீலோ(அ)பி ராகமதிகம் ஜநயன் புராரே:
லோலோபி பக்தி மதிகாம் த்ருடயன் நராணாம் |
வக்ரோபி தேவி நமதாம் ஸமதாம் விதந்வன்
காமாக்ஷி நருத்யது மயி த்வதபாங்கபாத: ||

தேவி காமாக்ஷி கடைக்கண்ணோக்கு கருநிறமுடையதா யிந்தாலும், த்ரிபுர ஸம்ஹாரியான பரமசிவனுக்கு ராகம் என்னும் ஆசையை (ராகம் சிவப்பு) செவ்விய காதலை அதிகமாக உண்டுபண்ணுகிறது. கண்கள் எப்பொழுதும் சலனமுடையதாயினும், மனிதர்களுக்கு சலனமில்லாத, சஞ்சலமில்லாத தன்மையளித்து பக்தியை திடப்படச் செய் கிறது. தேவியின் கண்கள் அருளை அருவிபோல் வளைந்து சொரிந்தாலும், அவளை உடல் வளைந்து வணங்கு வோர்க்கு வேண்டியபேறுகளை வழங்குகிறது. தேவியின் கண்நோக்கு ஸம மாக எல்லோர் பேரிலும் அமைகிறது. நம் அனைவர் மனதிலும் நடனமேடை அமைத்துக்கொண்டு நடனமிட வேண்டுமென்று விரும்புகிறோம். ஸௌந்தர் யலஹரி (57) பாடலில் த்ருசாத்ராகீஸ்யா அம்மாதாயே! உன் பார்வை அனைவரிடத்திலும் ஸமமாக விழட்டும் 'ஸமகர நிபாதோ ஹிமகர:' என்று ப்ரார்த்திக்கிறார். (16)

कामद्रुहो हृदययन्त्रणजागरूका
कामाक्षि चञ्चलदृगञ्चलमेखला ते ।
आश्चर्यमम्ब भजतां झटिति स्वकीय-
संपर्क एव विधुनोति समस्तबन्धान् ॥

காமத்ருஹோஹ்ருதய யந்த்ரண ஜாகரூகா
காமாக்ஷி சஞ்சலத்ருகஞ்சல மேகலாதே |

ஆஸ்சர்யம்ப பஜதாம் ஜடிதி ஸ்வகீய
ஸம்பர்க்க ஏவ விதுநோதி ஸமஸ்தபந்தான் ||

தேவி காமாக்ஷியம்மையின் கடைக்கண் நோக்கு ஒரு கயிறு போல் காமனைக் காய்ந்து அழித்த பரமசிவனின் மனதைத் தன்னிடம் ஈர்த்துக் கொள்கிறது. இதுவிஷயம் துர்வாஸர் இயற்றிய 'ஆர்யாத்விசதீயில் அடிக்கடி பேசப்படுகிறது. 'ரஸங்களில் முதலாவது ரஸமான ச்ருங்கார ரஸத்தின் தேவதையான தேவி ஈஸ்வரன் மடியில் வசிக்கும் ஒரு தேஜஸ் 'சந்த்த் சேகரரின் அந்தப்புரம்' 'சூலபாணியான பரமேஸ்வரனது சுத்தாந்தக்கரணம்' (180, 182, 185) இப்படியாக தேவி சிவனின் மனதை ஈர்த்துக்கொண்ட விபரம் உள்ளது. அதே சமயத்தில் தேவியைத் தொழுபவர்களின் பந்தங்களை தொழு தெழுந்த அப்பொழுதே தன்னுடைய கருணையாலே, சேர்க்கையாலே அறவே ஒழித்து விடுகிறாள். இது ஆச்சர்யமே. நம் காஞ்சி பரமாசாரியார் கூறுவார்:- அம்பாளுக்கும், கரும்புவில், பஞ்சபாணம், மன்மதனுக்கும் அதே பஞ்சபாணம், கரும்புதான் ஆயுதம், முன்னது ஆசையை ஒழிக்கும் பின்னது ஆசையை வளர்க்கும். (17)

कुण्ठीकरोतु विपदं मम कुञ्चितभ्रू-
चापाञ्चितः श्रितविदेहभवानुरागः ।
रक्षोपकारमनिशं जनयन् जगत्यां
कामाक्षि राम इव ते करुणाकटाक्षः ॥

குண்டீகரோது விபதம் மமகுஞ்சித ப்ரூ
சாபாஞ்சித: ச்ரிதவிதேஹபவாநுராக: |
ரக்ஷோபகாரமனிசம் ஜனயஞ் ஜகத்யாம்:
காமாக்ஷி ராம இவதே கருணாகடாக்ஷ: ||

தேவியின் கருணைக் கடைக்கண்ணானது சிவனின் கோபத்தால் சரீரத்தை இழந்து தேவியைச்சரண் அடைந்த தால் மீண்டும் உஜ்ஜீவனம் பெற்ற மன்மதனனிடம் தயை உடையதாகவும், தேவியிடம் காதல் கொண்ட பரமசிவனி டத்தில் அன்பாகவும் விளங்குகிறது. தேவியின் கடைக் கண்கள். ஸாது ஜனங்களை ரக்ஷிப்பதில் உபகாரம் செய்து கொண்டும், தீய அரக்கர்களை அழிப்பதில் அபகா ரத்தை செய்து கொண்டும், ஸ்ரீராமனைப் போலவே விளங்குகிறது. மிதிலை மன்னான ஜனக ராஜனின் மகளான ஸீதா தேவியிடம் மிகுந்த அன்பு கொண்ட ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி, ஸாது ஜனங்கள் ரக்ஷணம் கருதி தீய அரக்கர்களை அழிப்பவராக விளங்கும் ஸ்ரீராமரைப் போலவே ஸ்ரீதேவியின் கருணை கசிந்தொழுகும் கடைக்கண்கள் நம் சங்க டங்களை அழிக்கட்டும் கடைக்கண் ராமரைப் போல கருநிறமுடையது ராமர் கை

கோதண்டம் அம்பு மழை போல் கடைக் கண்ணும் புருவம் என்ற வில்லில் நோக்குகளையே அம்பாகத் தொடுத்து நல்லோரை ரக்ஷித்துக் தீயோரை தண்டிக்கிறது. ஸ்ரீராமரைப் போர்புரியும் படி செய்ததைப் போல, பரமசிவனிடத்தில் கடைக்கண்ணுக்கு இருக்கும் அன்பே கருணை மழையைப் பெய்யும் படி செய்கின்றது. ஸம்ஸாரம் என்ற ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டு தவிப்பவர்களை அருள் மழை என்னும் தேவியின் கருணா விலாஸம் காப்பதாக. (18)

श्री कामकोटि शिवलोचनशोषितस्य
शृङ्गारबीजविभवस्य पुनः प्ररोहे ।
प्रेमाम्भसार्द्रमचिरात्प्रचुरेण शङ्के
केदारमम्ब तव केवलदृष्टिपातम् ॥

ஸ்ரீகாமகோடி சிவலோசன சோஷிதஸ்ய
ச்ருங்கார பீஜவிபவஸ்ய புன: ப்ரரோஹே |
ப்ரேமாம் பஸார்த்ரம் அசிராத் ப்ரசுரணே சங்கே
கேதாரமம்ப தவகேவல த்ருஷ்டி பாதம் ||

தேவியின் கண் ணோக்கம் ச்ருங்கார ரஸம் நிறைந்த விதையினின் றும் செழித்து வளர்ந்த மன்மதனான பயிரை மங்களமேயான பரமசிவனின் கண்ணாலேயே எரிந்து கரிந்து போன போது, அப்பயிர் மீண்டும் செழித்து வளர்ந்தது. பரம சிவன் நெற்றிக் கண் கொண்டு மன்மதப் பயிரை எரித்து சாம்பலாக்கினார். தேவி ச்ருங்காரரஸத்தை ஊற்றி மன்மதப் பயிரைத் தன் கண்ணோக்கம் என்ற வயலிலே மீண்டும் செழித்து வளரும்படி அன்பு எனும் நீரைப் பாய்ச்சி, கண்ணால் எரிந்து போனவனைக் கண்ணாலேயே உண்டாக்கினாள். (19)

माहात्म्यशेवधिरसौ तव दुर्विलंघ्य-
संसारविन्ध्यगिरि कुण्ठनकेलिचुञ्चुः ।
धैर्याम्बुधिं पशुपतेश्चुलुकीकरोति
कामाक्षि वीक्षणविजृम्भणकुम्भजन्मा ॥

மாஹாத்ம்யசேவதி ரஸௌ தவ துர்விலங்க்ய
ஸம்ஸாரவிந்த்ய கிரிகுண்டன கேளி சுஞ்சு: |
தைர்யாம்புதிம் பசுபதேஸ் சுலகீகரோதி
காமாக்ஷி வீக்ஷண விஜ்ரும்பண கும்பஜன்மா||

ஒரு சமயம் அகஸ்திய முனிவர்விந்திய மலையை அவர் கடந்து செல்ல வேண்டி குறுகிய தாகச் செய்தார். பெருங் கடலையும் ஆசமனியம் செய்து விட்டார் என்பது வரலாறு தேவியின் கண்ணோக்கின் பரப்பு ஸம்ஸாரம் என்னும் மலையைக் கடக்கும் விஷயத்தில் விந்திய மலையை அகஸ்கியர் குறுக்கி எளிதாக கடந்து சென்றதைப் போலாகும். 'மாஷம்' என்பது கையைப் பசுவின் காதுபோல் மடக்கி உள்ளங்கையில் உத்தரணி ஜலம் கொள்ளும் குழியாகும் ஜீவர்களாகிய பசுக்களுக்கு பதியாகிய பரமசிவன் தைர்ய மாகிய பெருங்கடலை ஓர் மாஷம் அளவு செய்கிறார். ஸம்ஸார மாகிய மலையைக் கடப்பதற்கு தேவியின் கடாக்ஷமே துணை செய்து அதைத் தாழ்த்த வேண்டும். அந்தக் கருணை நோக்கு, கடல் போன்ற கம்பீரமான பரம சிவனின் தைர்யத் தைக் குறுக்கி ஓர் உத்தரணி ஜலமாக்கிவிட்டது. (20)

पीयूषवर्षशिशिरा स्फुटदुत्पलश्री-
मैत्री निसर्गमधुरा कृततारकाप्तिः ।
कामाक्षि संश्रितवती वपुरष्टमूर्तेः
ज्योत्स्नायते भगवति त्वदपाङ्गमाला ॥

பீயூஷவர்ஷ சிசிரா ஸ்ப்புட துத்பல ஸ்ரீ
மைத்ரீ நிஸர்க மதுராக்ருததாரகாப்தி: |
காமாக்ஷி ஸம்ஸ்ரித வதீ வபுரஷ்டமூர்த்தே:
ஜ்யோத்ஸ்னாயதே பகவதி த்வத பாங்கமாலா ||

தேவி காமாக்ஷி, பகவதியின் கடைக்கண் நோக்குக்கள் ஒரு மாலை போல் உள்ளது. தேவியின் கண்ணோக்கு அஷ்ட மூர்த்தித்வம் வாய்ந்த பரம சிவனின் பேரிலேயே எப்பொழுதும் இருக்கிறது. இரவில் சந்திரனின் கிரணங் கள் அம்ருதத்தைப் பொழிந்து குளிர் ஏற்படுவதும், இரவில் மலரும் கருநீல மலர்கள். மலர்வதும் தேவியின் கருணையாலேதான். பரமசிவனின் சிரஸிலே விளங்கும் நிலாவாக விளங்குவதும் தேவியின் கண்ணோக்கின் விசேஷ மாகும். உண்மையில் தேவியின் கண்ணோக்கு கருநிறமும், நிலாவைவிடக் குளிர்ச்சியாக பரமசிவனின் மேலேயே லயித்திருப்பதால் ஜடையின் மேல் பட்டும், படாமலும் இராமல் பரமசிவனு டைய எட்டு மூர்த்திகளின் மீதும் நன்றாகப் பொருந்திப் பிரகாசிக்கும் தன்மையாலும் கருநிறமும், குளிர்ச்சியும் இனிமையும் இயல்பாகவே அமைந்திருப்பதால் நிலைவைக் காட்டிலும் சிறந்ததாகும். தேவியின் கண்ணோக்கு ஈச்வரன் மேலேயே இருக்கிறது என்பது தான் முக்ய விஷயம். (21)

अम्ब स्मरप्रतिभटस्य वपुर्मनोज्ञं
अम्भोजकाननमिवाञ्चितकण्टकाभम् ।

भृङ्गीव चुम्बति सदैव सपक्षपाता
कामाक्षि कोमलरुचिस्त्वदपाङ्गमाला ॥

அம்பஸ்மரப்ரதி படஸ்ய வபுர்வமனோஜ்ஞும்
அம்போஜகானன மிவாஞ்சித கண்ட காபம் |
ப்ருங்கீவ சும்பதி ஸதைவ ஸபக்ஷபாதா
காமாக்ஷி கோமலருசிஸ்த்வதபாங்கமாலா ||

பெண் வண்டானது தன் சிறகுகளைத் தாழ்த்திக் கொண்டு தாமரை மலர்களை முத்தமிடுவது போல தேவியின் கண்ணோக்குகளாகிய மாலை என்னும் பெண்மணி, மனதிற்கு இன்பமளிப்பதும், மயிர்க்கூச் செறிவதால் (தண்டுகளின்) முட்கள் படர்ந்த தாமரைக்காட்டை யொத்த திருமேனியை ஆசை மிகுதியால் எப்பொழுதுமே முத்த மிட்ட வண்ணமாயி ருக்கிறாள். கடைக் கண்ணின் பரந்த பார்வை மதன விரோதி யான சிவனை எப்பொழுதும் பார்க்கிறது. 'ஸௌந்தர்யலஹரி' (68) முப்புர மெரித்த சிவனின் புஜங்களின் தழுவுதலால் எப்போதும் மயிர்க் கூச்சத்தால் முட்களுடன் இருப்பதால் இது தேவியின முகமென்னும் தாமரைக்கு தண்டுபோல் காணப்படுகிறது. (22)

केशप्रभापटलनीलवितानजाले
कामाक्षि कुण्डलमणिच्छविदीपशोभे ।
शङ्के कटाक्षरुचिरङ्गतले कृपाख्या
शैलूषिका नटति शंकरवल्लभे ते ॥

கேசப்ரபாபடல நீல விதானஜாலே
காமாக்ஷி குண்டல மணிச்சவிதீபசோபே |
சங்கே கடாக்ஷருசி ரங்கதலே க்ருபாக்யா
சைலூஷிகா நடதி சங்கரவல்லபே தே ||

தேவி காமாக்ஷி மங்களங்களை யளிக்கும் சிவனாரின் பத்தினீ. தேவியின் கூந்தல் ஒளி நிறைந்த நீல விதானம் போலும், குண்டலங்களின் ரத்னங்களின் காந்தியானது தீபம் போலும் பிரகாசிக்கிறது. கடைக்கண்கள் என்னும் நடன மேடைக்கு இவையெல்லாம் அலங்காரமாகவும், கடைக்கண்களின் பரந்த ஒளியாகிய நடன மேடையிலே நடனம் செய்கிறாள் என்று தோன்றுகிறது. நடன மேடையில் நீலப்பட்டாலான மேற்கட்டு இருக்கும். கரிய கூந்தலை கருநீலம் என்று சொல்வதுண்டு. ஏற்கனவே தேவியின் கூந்தலை (ஸௌ.ல.

43) இந்தப் பாடலில், 'பரமசிவ பத்னியே, உங்களுடைய கூந்தலின் கருமை எங்கள் அகவினைப் போக்கட்டும்' என்று வேண்டுகிறார். நடனமேடையில் தீபம் ஏற்றி வைக்கப்பட்டிருக்கும். கடாக்ஷம் என்ற இடத்தில் தேவியின் கூந்தல் (அடியாரின் மலின வாசனைகளை நீக்கும்) அதன் எல்லையில் காதுக்குண்டலங்களின் ஒளிகளும், நீல விதானம், தீப ஒளியாகவும் விளங்கி நம்மை ரக்ஷிக்கிறது. (23)

अत्यन्तशीतलमतन्द्रयतु क्षणार्धं
अस्तोकविभ्रममनङ्गविलासकन्दम् ।
अल्पस्मितादृतमपारकृपाप्रवाहं
अक्षिप्ररोहमचिरान् मयि कामकोटि ॥

அத்யந்தசீதலமதந்த்ரயது க்ஷணார்த்தம்
அஸ்தோக விப்ரமம் அனங்கவிலாஸகந்தம் |
அல்பஸ்மிதாத்ருதபார க்ருபாப்ரவாஹம்
அக்ஷிப்ரரோஹ மசிரான் மயி காமகோடி ||

காமகோடித்தாயே! என்று மூகர் மனமுருகி வேண்டுகிறார். மிகவும் குளிர்ந்ததான. அழகான, சலனமான பார்வையை நம்மீது தேவி செலுத்த வேண்டும் அன்பு கனிந்த பார்வை என்பது குளிர்ச்சியாக இருக்கும் தேவியின் கண் பார்வை யாலேயே மன்மதன் உஜ்ஜீவனம் செய்யப் பெற்றான். தேவியின் குழந்தை என்ற பெருமிதத்தை மன்மதன் பெற்றான். தேவியின் கருணை என்பது நம்மீது கணநேரம் பட்டால் போதும். யுகங்களில் செய்த பாவங் களும் பறந்தோடிவிடும். அருணகிரியார். 'சரண கமலா யத்தை அரை நிமிஷ நேர மட்டில் தவ முறை தியானம் வைக்க' என்கிறார். சரணங்கள் என்ற கமலங்க ளாலேயே ஆன ஆலயம், கோவில் என்று கொள்ளலாம். 'ஒரு கணம் வாராயோ - என் உள்ளே (மதி) ஒளி எனச்சேராயோ - அம்மா! (24)

मन्दाक्षरागतरलीकृतिपारतन्त्र्यात्
कामाक्षि मन्थरतरां त्वदपाङ्गडोलाम् ।
आरुह्य मन्दं अतिकौतुकशालि चक्षुः
आनन्दमेति मुहुरर्धशशाङ्कमौलेः ॥

மந்தாக்ஷ ராக தரளீக்ருதி பாரதந்த்ர்யாத்
காமாக்ஷி மந்தரதராம் த்வதபாங்கடோலாம் |

ஆருஹ்ய மந்த மதி கௌது கசாலி சக்ஷு:
ஆனந்த மேதி முஹுரர் தசசாங்க மௌளே:||

தேவி காமாக்ஷியை பரமேஸ்வரனுடன் மணமேடையில் அமர்த்தி அந்தக் காக்ஷியைச் சித்தரிக்கும் பாடல் இது. தேவியின் கடைக்கண் என்னும் ஊஞ்சலின்மீது மெதுவாக ஏறி வீற்றிருந்து, அதனால் மிகுந்த மகிழ்ச்சியுடன் துண்டப் பிறை முடிசூடியபெம்மான், அவருடைய கண் என்பவன் இடைவிடாத ஆனந்தத்தை எய்துகிறான். தேவியின் கண் ணோக்கோ பரமசிவனை வைத்த கண் வாங்கமாமல் பார்த் தாலும் வெட்கம் வந்தபோது கண் களைத் தாழ்த்தி யும், ஆகையால் முன் நோக்கியும் ஊஞ்சல் பலகை யின் நிலை யில் இருக்கிறது. 'அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள், என்பதும் உண்டு பரமசிவனின் நோக்குகளும் தேவியின் நோக்குகளும ஒன்றோடொன்று பொருந்துவதும் உண்டு. சிவனாரின் நோக்கு வெட்கமறியாதவை. எனவே தேவியின் நோக்கை ஊஞ்சலைப்போல் ஆட்டுகிறது தேவிக்கு வெட்கமும் காதலும் அதிகரிக்கிறது. தேவியின் காதலை நாணத்தில் மறைத்துக் கொள்கிறாள். 'மந்தஸ்மித ப்ரபாபூர மஜ்ஜத்காமேச மானஸா' (லலிதா ஸஹஸ்ரநாமா 28) காமேஸ்வரன் மணமகனானார். தேவியின்முகத்தில் புன் சிரிப்பு தவழ அதில் காமேஸ்வரார் மூழ்கி இருக்கும் ஆசை ஓர் புறம், மற்ற அவயவங்களைக் காண வெளிவர வேண்டிய ஆசை மற்றோர் புறமாக அவர் மனம் ஊஞ்சலாடுகிறது. 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்ற கம்பராமாயண வரிகள் நினைவில் வருகிறது. (25)

त्रैयम्बकं त्रिपुरसुन्दरि हर्म्यभूमि:
अङ्गं विहारसरसी करुणाप्रवाह: ।
दासाश्च वासवमुखा: परिपालनीयं
कामाक्षि विश्वमपि वीक्षणभूभृतस्ते ॥

த்ரையம்பகம் த்ரிபுரஸுந்தரி ஹர்ம்யபூமி
ரங்கம் விஹார ஸரஸீ கருணாப் ரவாஹ: |
தாஸாஸ்ச வாஸவமுகா: பரிபாலனீயம்
காமாக்ஷி விஸ்வமபி வீக்ஷண பூப்ருதஸ்தே||

தேவி த்ரிபுரசுந்தரி. மூவுலகிலும் அழகிய பொருள் த்ரிபுர சுந்தரி. அழகு என்பது வெளி அழகுமட்டுமல்ல, ஒவ்வொருவ ருக்கும் அவருடைய தாயார் மிக அழகாகவே கண்ணில் தெரி வாள். அது அன்பின் அடர்த்தியில் ஏற்படும் அழகு. சத்தியத் தின் சேர்த்தியால் ஏற்படும் அழகு, அதுவே சௌந்தர்யம். ஸ்தூல, சூக்ஷ்ம, காரண என்ற மூன்று சரீரங்களுக்கும், அத னால் ஏற்படும் முப்புரங்களுக்கும் அழகு, 'மும்மல காரியங் களை ஒழித்து, பசுபாசம் களைந்து

சிவமாக்கி நம்மை ஆளுப வன் திரிபுர ஸம்ஹாரன் சிவமான பின் எல்லாமே சுந்தரமா கவே தென்படும் இன்னும் எழுதினால் இதுவே விரியும் த்ரிபுரசுந்தரியான தேவி காமாக்ஷியின் கண்ணோக்கமாகிய மன்னவனுக்கு முக்கண்ணராகிய பரமசிவனின் மடியே உப்பரிகை யாகவும், கருணை, என்னும் வெள்ளமே ஜலக்ரீடை செய்யும் பொய்கையாகவும், இந்திரன் போன்ற தேவர்களே அடியார்களாகவும், சகல உலகங்களுமே அரசு செலுத்தும் ராஜ்யங்களாகவும் ஆகிறது. தேவியின் கண்கள் பரமசிவனின் திருமேனியி லேயே பதிந்திருப்பதால், கருணை மிகுதியால் எல்லா வுயிர்களையும் ஆட்கொண்டு உலகங் களை ரக்ஷணம் செய்கின்றது. (26)

वागीश्वरी सहचरी नियमेन लक्ष्मीः
भ्रूवल्लरीवशकरी भुवनानि गेहम् ।
रूपं त्रिलोकनयनामृतमम्ब तेषां
कामाक्षि येषु तव वीक्षणपारतन्त्री ॥

வாகீச்வரீ ஸஹசரீ நியமேன லக்ஷ்மீ
ப்ரூவல்லரீ வசகரீ புவனானி கேஹம் |
ரூபம் த்ரிலோகநயனாம் ருத மம்ப தேஷாம்
காமாக்ஷி யேஷுதவ வீக்ஷணபாரதந்த்ரீ ||

காமாக்ஷியின் இருகண்களும் லக்ஷ்மியும். சரஸ்வதியு மாகும். எனவே தேவி காமாக்ஷியின் கடாக்ஷம் ஏற்பட்டவர் களுக்கு செல்வமும், கல்வியும் குறைவின்றிக்கிட்டும். 'ஸசாமர ரமாவாணி ஸவ்ய தக்ஷிண ஸேவிதா' தேவி காமாக்ஷி வலது, இடது பக்கங்களில் லக்ஷ்மி, வாணியால் சாமரம் வீசப் பெறு பவள். எனவே அவர்கள் கடாக்ஷமும் அடியவர்க ளுக்கு உண்டு. கடாக்ஷ கிங்கிரீ பூத கமலா கோடி ஸேவிதா (ல.ஸ.நா 590) கடைக்கண் பார்வையால் இட்ட ஏவலை நிலைற வேற்றும் கோடிக்கணக் கான லக்ஷ்மி தேவிகளால் வழி படப் பட்டவள். 'கிம்கரோமி' என்ன செய்யவேண்டு மென்று தேவியின் கடைக் கண் பார்வை விழுமிடத்து நின்று கொண்டு ஏவல் செய்யக் காத்திருக்கும் கோடிக் கண்க்கான லக்ஷ்மிகள். தேவியின் கண்ணோக்கு யார் மேல் விழுகி றதோ அவர்களுக்கு செல்வம் அளிக்கிறார்கள். 'லக்ஷ்மி ஸஹஸ்ரை: பரிக் ரீடதே' (ஸ்யாமளா தண்டகம்) தேவியை நினைக்கிறவன் ஆயிரக் கணக்கான லக்ஷ்மிகளை விளையாட்டுத் தோழிக ளாக அடைகிறான். (27)

கலைமகளோ நின் பணியை அன்போடும் கடைப்பிடித்தாள்.
அலைமகளோ அன்பொடு பிடித்தாளெற் கறைதி கண்டாய்
தலைமகளே அருட்தாயே செவ்வாய்க்கருந்தாழ் குழற்பொன்
மலைமகளே யொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே (18)

வடிவுடை மாணிக்கமாலை- வள்ளலார்

மிகப்பொருத்தமான ஒரு ஸௌந்தர்யலஹரி பாடல் 99 ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதிஹர ஸபத்நோவிஹரதே' ஸ்ரீதேவியை பூஜிப்பவன் ப்ரம்மாவும், விஷ்ணுவும் கூடப் பொறாமைப்படக் கூடியவனாய் கல்வியுடனும், செல்வத்துடன் இன்பத்தை எய்துகிறான். மன்மதன் போன்ற உடலழகால் ரதி தேவியின் கற்பையும் கலங்கச் செய்கி றான். கபிலர், மார்க்கண்டேயர் போல் நித்ய ஸித்தனாய் ப்ரம்மானந்தத்தை இங்கேயே அனுபவித்துக் கொண்ட சிரஞ்சீவி ஆகி விளங்குகிறான். (27)

माहेश्वरं झटिति मानसमीनं अम्ब
कामाक्षि धैर्यजलधौ नितरां निमग्नम् ।
जालेन शृङ्खलयति त्वदपाङ्गनाम्ना
विस्तारितेन विषमायुधदाशकोऽसौ ॥

மாஹேஸ்வரம் ஜடிதி மாஸை மீனமம்ப
காமாக்ஷி தைர்ய ஜலதௌ நிதராம் நிமக்னம் |
ஜாலேனச்ருங் கலயதி த்வத பாங்க நாம்னா
விஸ்தாரிதேன விஷமாயுத தாச கோஸௌ ||

கரும்புவில்லும், அதில் தொடுத்ததடிக்க ஒற்றைப் படை எண்ணான ஐந்து புஷ்ப பாணங்களும் மன்மதனின் ஆயுதங்க ளாகிறது. மன்மதன் என்னும் செம்படவன் மஹேச்வரராகிய பரமசிவனின் தைரியமான கடலிலே நன்றாக மூழ்கி ஆழ்ந்திருக்கும் மனமெனும் மீனை தேவியின் கடைக்கண் ணோக்கங்கள் என்ற நன்றாக விரிக்கப்பட்ட பெருவலை யாலே கட்டிப்போட்டுவிட்டான். ஈச்வரர் மனது மீன், தேவி யின் கடைக்கண்பார்வை மீன்பிடிக்கும் வலை, மன்மதன் செம்படவன்; இதுமிக அழகான கற்பனை. தேவியின் கருணா கடாக்ஷத்துக்குப் பாத்திரமானவன் ஒருவித ஸாதனமும் இல்லாமலேயே உலகை எவ்வாறு ஜயிக்கிறான். ஏன் பரமேஸ்வரனையே ஜயிக்கிறான் என்று ஸௌந்தர்யலஹரி 6வது பாடல் கூறுகிறது. உடலேயில்லாமல் ஒடிந்து போகக்கூடிய கரும்பு வில்லையும், அதற்கு புஷ்பங்களே பாணமாகவும் தென்றல் காற்றே தேராகக் கொண்டு வேறு உதயில்லாமல் பரமேஸ்வரன் முதல் மஹா புருஷர்களையும் மன்மதன் ஜயிக்கிறான் என்றால் அது தேவியின் கருணை. அவன் பிரசித்தமான ஸ்ரீவித்யாரத்னத்தை அடைந்தான் கையில்லா மல் சேர்த்து பிடித்தான். கழுத்தில்லாமல் மணியை அணிந்து கொண்டான் நாக்கில்லாமல் ருசி பார்த்தான். (28)

उन्मथ्य बोधकमलाकरं अंब जाड्य-
स्तम्बेरमं मम मनो विपिने भ्रमन्तम् ।

कुण्ठीकुरुष्व तरसा कुटिलाग्रसीम्ना
कामाक्षि तावक कटाक्षमहाङ्कुशेन ॥

உன்மத்ய போதகமலாகரமம்ப ஜாட்ய
ஸ்தம்பேரமம் மமமனோவிபினேப் ரமந்தம் |
குண்டீகுருஷ்வ தரஸா குடிலாக்ர ஸீம்னா
காமாக்ஷி தாவக கடாக்ஷ மஹாங்குஸேன ||

மனம் என்னும் அலைந்து திரிகின்ற அஞ்ஞானமாகிய காட்டு யானையை தேவியின் கடைக்கண்ணோக்கமாகிய வளைந்த முனையையுடைய பெரிய அங்குசத்தாலே வசமாக்கி வேகமாக அடக்கும்படி நாம் தேவியிடம் வேண்டு வோம். அந்தக் காட்டுயானை என்ற அஞ் ஞானமோ அறிவு என்னும் தாமரை ஓடையைக் கலக்கி மனம் என்னும் காட் டிலே அலைந்து திரிகின்றது. கண்ணோக்கு என்ற அங்குசத்தால் அடக்கும்படி வேண்டுகிறார். (29)

उद्वेल्लितस्तबकितैर्ललितैर्विलासैः
उत्थाय देवि तव गाढकटाक्षकुञ्जात् ।
दूरं पलाययतु मोहमृगीकुलं मे
कामाक्षि सत्वरमनुग्रह केसरीन्द्रः ॥

உத்வேல்லிதஸ்த பகிதை: லலிதைர் விலாஸை
உத்தாய தேவி தவ காடகடாக்ஷ குஞ்ஜாத் |
தூரம் பலாயயது மோஹம்ரு கீகுலம்மே
காமாக்ஷி ஸத்வரமனுக்ரஹ கேஸரீந்த்ர: ||

ஸிம்ஹம் என்ற உருவம் ஆண்ஸிம்ஹத்திற்கே, அதன் அழகான பிடரி மயிரால் ஏற்படுகிறது. கடாக்ஷம் என்ற குகை என்று கூறியதால், குகையிலி ருந்து சிங்கம் வெளிவருகிறது. என்ற கூற்றே பொருத்தமானது அடர்ந்தபிடரி மயிருடன் கூடிய ஸிம்ஹம்குகையிலிருந்து மேன்மேலும் விலாஸங்கள், பிரஸ ரணங்கள் அதிகரித்து பூங்கொத்துப்போல் அழகும், எழுச்சியுமுடைய நடை களாலே , தேவியின் அனுக்ரஹம் என்ற ஸிம்ஹராஜன் நம் முடைய அஞ் ஞான மென்னும்மான் கூட்டத்தை வெகு வேகமாக, வெகுதூரம் ஓடும்படி செய்யட்டும். (30)

स्नेहार्द्रितां विदलितोत्पलकान्तिचोरां
जेतारमेव जगदीश्वरि जेतुकामः ।

मानोद्धतो मकरकेतुरसौ धुनीते
कामाक्षि तावककटाक्षकृपाणवल्लीम् ॥

ஸ்நேஹாத்ருதாம் விதலி தோத் பல காந்தி சோராம்
ஜேதாரமேவ ஜகதீச்வரீ ஜேதுகாம: |
மானோத்ததோ மகரகேது ரஸௌ துனீதே
காமாக்ஷி தாவக கடாக்ஷக்ருபான வல்லீம் ||

மைதீட்டப்பட்ட தேவியின் கண்கள் அன்பு ஒழுக, நன் றாக மலர்ந்த கரு நீல மலர்களின் காந்தியைக் கவர்ந்து கொண் டதாக விளங்குகிறது. கடைக் கண்ணோக்கு, மெல்லியதா யும், நீண்டதாயும், வளைந்தும் கொடி போன்ற உடை வாளைச் சுழற்றி பரமசிவனை ஜயிப்பது என்ற காரியம் நடை பெறு கிறது. தேவியின் கடாக்ஷத்தால் உயிர்த்தெழுந்த மன் மதன் மிகவும் கர்வம் கொண்டு, தேவியின் மைதீட்டிய கண்க ளுடன் நட்பு பூண்டு பரமசிவனை எதிர்த்து நின்றான். தேவி யின் கடாக்ஷத்தில் சிவனும் காமவசப்பட்டு காமனிடம் தோற்றுப்போய் தோல்வியை ஒத்துக் கொண்டுவிட்டார். (31)

श्रौतीं व्रजन्नपि सदा सरणिं मुनीनां
कामाक्षि संततमपि स्मृतिमार्गगामी ।
कौटिल्यमम्ब कथमस्थिरतां च धत्ते
चौर्यं च पङ्कजरुचां त्वदपाङ्गपातः ॥

ஸ்ரௌதீம் வ்ரஜன்னபி ஸதா ஸரணீம் முனீனாம்
காமாக்ஷி ஸந்ததமபி ஸ்ம்ருதிமார்க்ககாமீ |
கௌடில்யமம்ப கதமஸ்திரதாம் சதத்தே
சௌர்யம் சபங்கஜருசாம் த்வதபாங்கபாத: ||

தேவி காமாக்ஷியின் கடைக் கண்ணோக்கானது (காத ளவு ஓடிய கண்கள்) எனவே சுருதிகளின் (சுருதி= காது, வேதங்கள்) அதாவது வேதங்களின் மார்க்கத்தையே எப்பொழுதும் அடைந்திருக்கிறது. (ஸ்ம்ருதி-சாஸ்திரம், ஸ்மரணம்) முனிவர்களின் ஸ்ம்ருதி நூல்களில் நிலை பெற்றிருப்பதுடன், தேவியின் ஸ்மரணம் என்னும் நினை விலும் நிலை பெற்றிருக்கிறது. ச்ருதி என்னும் வேதம் எழுதாக்கிளவி, மறை, என்ற பெயரைப் பெற்றது. காதில் கேட்டுத்தான் அறிந்து கொள்ளவேண்டும். 'ஸ்மருதி என்பது காதில் கேட்டதை நினைவில் கொண்டு வருவது; மனுபோன்றவர்கள் எழுதி வைத்ததும் ஸ்ம்ருதி ஆகும். வேதங்களையும், ஸ்ம்ருதிகளை யும்

அனுசரிப்பவர்களின் நடத்தை ஒருநிலைப் பட்டதாக இருக்கும். ஆனால் கடைக்கண்ணோக்கு கோணலாகவும், சஞ்சலமாகவும் இருக்கிறதே. என்று சிலேடையாகக் கூறுகிறார். மேலும் தாமரைகளின் காந்தியைத் திருடி தன் விழிகளுடை யதாக்கிக் கொள்ளும் கள்ளத் தனத்தையும் செய்கிறது. (32)

नित्यं श्रुतेः परिचितौ यतमानमेव
नीलेत्पले निजसमीप निवासलोलम् ।
प्रीत्यैव पाठयति वीक्षणदेशिकेन्द्रः
कामाक्षि किन्नु तव कालिमसंप्रदायम् ॥

நித்யம் ச்ருதே: பரிசிதௌ யதமான மம்ப
நீலோத்பலம் நிஜஸமீப நிவாஸ லோலம் |
ப்ரீத்யைவ பாடயதி வீக்ஷணதேசி கேந்தர:
காமாக்ஷி கிம்து தவ காலிமஸம் ப்ரதாயம்: ||

காமாக்ஷி தேவியின் கடைக்கண்ணாகிய உத்தம ஆசா ரியர், எப்பொழுதும் பழக்கத்திற்காக, அருகிலேயே இருக்க விரும்புகிறார். கடாக்ஷம் என்பது கரு நெய்தல் (நீலோத்பலம்) மலரைவிடக் கருப்பாயிருப்பதால் அதனி டமே கருநிறத்தைக் கேட்டுப் பெற வந்தது போல் தோன்றுகிறது. தேவியின் கடைக் கண்ணின் அருகிலேயே விளங்கும் காதிலே சொரு கிய நீலோற்பலம், வேதாப்யாஸ மும் குருகுல வாஸமும் வாய்ந்த சிஷ்யனை ஒளி பொருந்திய நன் மார்க்கத்தில் பழக்கவேண்டி இருக்க, இவ்வாறு இருண்ட துன் மார்க் கத்தில் ஏன் பழக்க வேண் டும் என்று சிலேடையால் ஆச்சர்யப் படுகிறார். தேவி காதுகளில் பூக்கள் அணியும் நிகழ்ச்சி இந்தப் பாடலில் பேசப்படுகிறது. 'கதம்ப மஞ்ஜரீக்லுப்த கர்ண பூர மனோஹரா' (ல.ஸ.நா.21) தேவி காதில் கதம்ப மலர்க் கொத்தை அணிந்திருக்கிறாள். அதனால் அவள் அழகு அதி கரிக்கிறது. இங்கு நீலோத்பல மலர் என்ற குறிப் பிடுகிறார். கதம்பம் என்னும் கொத்தில் நீலோற் பலமும் உண்டு. (33)

भ्रान्त्वा मुहुः स्तबकितस्मितफेनराशौ
कामाक्षि वक्त्ररुचि संचयवारिराशौ ।
आनन्दति त्रिपुरमर्दन नेत्रलक्ष्मीः
आलम्ब्य देवि तव मन्दमपाङ्गसेतुम् ॥

ப்ராந்த்வா முஹு: ஸ்தபகிதஸ்மித பேன ரா சௌ
காமாக்ஷி வக்த்ரருசி ஸம்சய வாரிராசௌ |

ஆனந்ததி த்ரிபுரமர்தன நேத்ரலக்ஷ்மி:
ஆலம்ப்ய தேவி தவ மந்த மபாங்க ஸேதும் ||

பூங்கொத்துக்கள் போன்ற புன்முறுவல்களாகிய வெண் நுரைகளின் திரள்கள் தேவி காமாக்ஷியின் திருமுக மண்ட லத்திரளான நீரால் நிறைந்த கடலில் வெகுகாலம் நீந்தித் திரிந்து சளைத்து விடுகிறது. கொஞ்சம் விச்ராந்தி செய்து கொள்வதற்காக, முப்புறங்களையழித்து சிவனாரின் கண் ணுக்கு அழகுசெய்யும் நோக்கமாகிய லக்ஷ்மி மெள்ள, தேவி யின் கடைக் கண் ணோக்கு என்னும் அணையை அடைந்து இன்புறுகிறாள். புன்முறுவல் என் னும் ஒளியில் தத்தளித்த பரமசிவன்- ஒருசமயம் இவர் முப்புரங்களையே அழித்தவர். இப்பொழுது தேவியின் கண்களில் தஞ்சம் அடைந்தார். (34)

श्यामा तव त्रिपुरसुन्दरि लोचनश्रीः
कामाक्षि कन्दलितमेदुरतारकान्तिः ।
ज्योत्स्नावती स्मितरुचापि कथं तनोति
स्पर्धामहो कुवलयैश्च तथा चकोरैः ॥

ச்யாமா தவத்ரிபுரஸுந்தரி லோசன ஶ்ரீ:
காமாக்ஷி கந்தலிதமேதுரதார காந்தி: |
ஜ்யோத்ஸ்னாவதீ ஸ்மித ருசாபி கதம்தனோதி
ஸ்ப்பர்தாமஹோகுவலயைஸ்ச ததாசகோரை: ||

தேவியின் கண்கள் ஒளியாலும், வடிவாலும் குவளை மலரையும் சகோரங்களையும் ஒத்திருந்தாலும் அவற்றோடு போட்டி போடுகின்றன. கண்கள் இரவின் இருளை போல் கருநிறமுடையதும், முறுவலால் வெண்மை யான ஒளியும் உடையதாகவும், நிலாக்காலத்தையொத்து. அந்நிலவின் ஒளிக்கற்றைகளைப் பருகும் சகோர பக்ஷிக ளுக்கும், இரவில் மலரும் அல்லி மலருக்கு நண்பனாக வேண்டும். ஆயினும் சிலேடையாக சண்டையிடு வதாகக் கூறி நம்மை ஆச்சர்யத் தில் ஆழ்த்துகிறார். த்ரிபுர சுந்தரியான தேவி காமாக்ஷியின் கரிய கண்ணழகு என்னும் இரவு நேரம் , தள, தள, வென்று விளங்கும் கருவிழியின் காந்தி யானது, முளைத்தெழுந்து செழித்த நக்ஷத்திர காந்தியோடுகூடி வெண்ணிறக் காந்தி யால் நிலவை ஒத்து குவளை மலர்களுடனும், சகோர பக்ஷிகளுடனும் போட்டி போடுகின்றது. இது ஆச்சர்யமே! (35)

कालाञ्जनं च तव देवि निरीक्षणं च
कामाक्षि साम्यसरणिं समुपैति कान्त्या ।

निश्शेषनेत्रसुलभं जगतीषु पूर्वं
मन्ये त्रिनेत्रसुलभं तुहिनाद्रिकन्ये ॥

காலாஞ்ஜனம் சதவதேவீ நிரீக்ஷணம் ச
காமாக்ஷீம் ஸாம்ய ஸரணீம் ஸமுபைதி காந்த்யா |
நிஸ்சேஷ நேத்ரஸுலபம் ஜகதீஷு பூர்வம்
அன்யத் த்ரிநேத்ர ஸுலபம் துஹினாத்ரிகன்யே ||

தேவி காமாக்ஷி பனியரசனின் மகள். தேவிதன் கண் ஓரங்களில் மை தீட்டியிருக்கிறாள். அந்தக் கரிய மையும், கண்ணோக்கின் கரிய ஒளியும் ஸம மாகவே இருக்கிறது. ஆயினும் கண்ணில் மைதீட்டிக் கொள்ளும் காரியம் உலகினர்க்கு எளிதாய்க் கிடைக்கக்கூடிய விஷயம். கண்ணோக்கோ முக் கண்ணரான சிவனாருக்கு மாத்திரமே கிடைக்கப்பெறுகிறது. உமது கடா க்ஷங்கள் சிவனுக்கே உரியது; எனினும் 'நின் கண்படும் இடத்தே நான் நிற்ப துண்டோ நின் காத்திடும் அருளோடு கலப்ப துண்டோ' என்ற இந்த கவிதை 'பூவிதழ் மணமே, புன்னகை ஒளியே, காவிரி நதியே, கன்னியின் வடிவே' என்று 'திருவடிநிழல்' என்ற தலைப்பில் 'கற்பூரக்கனல்' என்ற கவிதைக் கொத்து தொகுத்தது, 'திரு. மதி ஒளி சரஸ்வதி' அவர்கள் இந்த இடத்தில் பொருத்தி மகிழ்கிறேன். தேவியின் கண்ணழகைப் பருக இரண்டு கண்கள் போதாதென்று சிவனார் மூன்று கண்களுடன் விளங்குகிறார். (36)

धूमाङ्कुरो मकरकेतनपावकस्य
कामाक्षि नेत्ररुचिनीलिमचातुरी ते ।
अत्यन्तमद्भुतमिदं नयनत्रयस्य
हर्षोदयं जनयते हरिणाङ्कमौलेः ॥

தூமாங்குரோ மகர கேதன பாவகஸ்ய
காமாக்ஷி நேத்ரருசி நீலிமசாதுரீதே |
அத்யந்த மத்புத மிதம் நயனத்ரயஸ்ய
ஹர்ஷோதயம் ஜனயதேஹரிணாங்கமௌலே: ||

தேவி காமாக்ஷியின் கண்களின் காந்தியாகிய கருநீல நிறத்தின் செழுமை நிரம்பியுள்ளது. மீனக்கொடியோனான மன்மதனின் மதனாக்கினியின் கொழுந்தாகிய புகையானது, மானாகிய மறுவையுடைய சந்திரனைத் திருமுடியில் கொண்ட பரமசிவனின் மூன்று கண்களுக்கும் அற்புதமான, ஆனந்தமான இந்த அனுபவத்தை அதிகரிக்கச் செய்கிறது. மன்மதனை

மூன்றாம் கண்ணால் சிவன் எரித்தார். மன்மதன் அக்னி வெப்பத்தால் தேவியிடம் சரணடைந்தான். நாபி ஸ்தானம் அவனுக்கு அடைக்கலம் அளித்தது. நாபி என்ற மடுவில் மன்மதன் முழுகினான் புகை கொடிபோல் எழுந்தது ஆனால் மன்மத அவஸ்தை என்ற அக்னி புகை கண்களைக் கரிக்கவில்லை. கடாக்ஷம் என்ற புகை கண்களுக்கு ஆனந்தத்தைத் தருகின்றது. மன்மதன் என்னும் அக்னி எழுப்பும் புகை, அவனை எரித்த மூன்றாவது கண்ணுக்கும் துன்பம் தரவில்லை. மொத்ததத்தில் சிவன் தேவியின் அழகில் முழுகி மிகுந்த ஆனந்த பரவசமாகிறார். (37)

आरम्भलेशसमये तव वीक्षणस्य
कामाक्षि मूकमपि वीक्षणमात्रनम्रम् ।
सर्वज्ञता सकललोकसमक्षमेव
कीर्तिः स्वयंवरणमाल्यवती वृणीते ॥

ஆரம்பலேச ஸமயே தவ வீக்ஷணஸ்ய
காமாக்ஷி மூகமபி வீக்ஷண மாத்ரநம்ரம் |
ஸர்வஜ்ஞதா ஸகல லோக ஸமக்ஷமேவ
கீர்த்தி ஸ்வயம் வரண மால்யவதீ வ்ருணீதே ||

தேவியின் கண்ணோக்கையே வேண்டி நிற்கும் ஊமையையே (மூகர் தன்னையே கூறிக்கொள்கிறார்.) தேவியின் கடாக்ஷம் பட்ட மாத்திரமே இந்த மஹானை நாயகனாக் வரித்து, கையில் புகழ் என்ற ஸ்வயம்வர மாலையை ஏந்தி வந்து அந்த நங்கையை அடைய வேண்டி மண்டபத்தில் குழுமியிருக்கும் அனைத்து மக்களும் காணவே அந்த புகழ் என்னும் மாலையை 'ஸர்வஜ்ஞதா' என்னும் மணப்பெண் அவருக்கு அணிவிக்கிறாள். சிவபெருமானும், எம்பிராட்டியும் அடியார் குழுவை சுற்றிலும் நிறுத்தி அவர்கள் காணும்படி அபிராமி பட்டரின் சிரஸில் தாமரைப் பாதங்களைப் பதித்தனர் காமாக்ஷியின் கடா க்ஷத்தை வேண்டிநிற்பவன் ஊமையே ஆனாலும், தேவி அவ னையே 'ஸகல கலாவல்ல' பீடத்திற்கு உரிய வனாக்கு கிறாள். தான் காமாக்ஷியின் கடாக்ஷத்தைப் பெற்றவுடனேயே அந்தப் பீடத்தில் வீற்றிருந்த காக்ஷியை நம்கண்முன்னே கொண்டு வந்து நிறுத்துகிறார். தேவியின் கடாக்ஷம் பெற்ற ஜீவன் ஸர்வஜ்ஞனான பரமாத் வோடு ஒன்று படுகிறான் என்று கூறுகிறார். (38)

कालाम्बुवाह इव ते परितापहारी
कामाक्षि पुष्करमधः कुरुते कटाक्षः ।

पूर्वः परं क्षणरुचा समुपैति मैत्रीं
अन्यस्तु सन्ततरुचिं प्रकटीकरोति ॥

காலாம் புவாஹ இவதே பரிதாப ஹாரீ
காமாக்ஷி புஷ்கரமத: குருதே கடாக்ஷ: |
பூர்வ: பரம் க்ஷணருசா ஸமுபைதி மைத்ரீம்
அன்யஸ்து ஸந்ததருசிம் ப்ரகடீகரோதி ||

இந்தப் பாடல் எனக்கு ஓர் ஆனந்த அனுபவம். தேவி காமாக்ஷி, அகில லோகநாயகி, அகிலாண்டேச்வரி அவளுடைய கடைக்கண் ஆனது சூல் கொண்ட கரிய கார்மேகங்களைப் போல தாபங்களைப் போக்குகிறது. ஒரு சமயம் நான் திருவானைக்காவல் சென்றிருந்தேன் இரவு கனவில் அகிலாண்டேச்வரி என் அருகே அமர்ந்து சர்வாலங்கார பூஷிதையாய் உரை யாடினாள். 'உனக்கு மணிபூரகம் சக்ரம் எது என்று தெரியுமா? அந்த தேவி யார் என்று தெரியுமா? புத்தகத்தை எடுத்து நாற்பதாவது ஸ்லோகத்தைப்பார்' என்று கூறி கால் சிலம்புகள் கலகல என்று ஒலிக்க அங்கு மாட்டியிருந்த அகிலாண்டேச்வரி படத்தில் மறைந்துவிட்டாள். ஸௌந்தர்யலஹரியில் இது 40வது பாடல் கடாக்ஷ சதகத்தில் 39வது பாடல் இவள் என் இஷ்ட தேவதை. இந்த தேவியை பற்றி எழுதுவதில் நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இப்பொழுது நம் கடாக்ஷசதகப் பாடலுக்கு வருவோம். அம்பிகையின் கடாக்ஷம், ஒளி வடிவாகிய பரமசிவனின் மேகம் போன்ற திருமேனியில் எப்பொழுதும் அமர்ந்திருந்து அத்திரு மேனியை காந்தியுடன் கூடியதாகச் செய்கிறது. (39)

सूक्ष्मेऽपि दुर्गमतरेऽपि गुरुप्रसाद-
साहाय्यकेन विचरन्नपवर्गमार्गे ।
संसारपङ्कनिचये न पतत्यमुं ते
कामाक्षि गाढमवलम्ब्य कटाक्षयष्टिम् ॥

ஸூக்ஷ்மேபி துர்கமதரேபி குருப்ரஸாத
ஸாஹாய்யகேன விசரன் அபவர்கமார்கே |
ஸம்ஸாரபங்க நிசயே நபதத்யமூம் தே
காமாக்ஷி காடமவலம்ப்ய கடாக்ஷயஷ்டிம் ||

நுண்ணியதாகவும், கடந்த செல்வதற்கு மிகவும் அரிய தாயும் உள்ள மோக்ஷமார்க்கத்தில் குருவின் திரு வருளைத் துணையாகக் கொண்டு செல்பவன், தேவியின் கடைக்கண் னோக்கையே கெட்டியாகப் பிடித்துச்

செல்ல வேண்டும். தேவியின் அருட்பார்வை ஒரு ஊன்று கோலாக குருவின் வடிவத்தில் வந்தாலொழிய அந்த சம்ஸாரச் சேற்றைக் கடக்க முடியாது. குருப்ரதான வித்தையான ஸ்ரீவித்தையைக் குறிப் பதாகவே இந்தப் பாடல் அமைகிறது. ஸ்ரீவித்தையின் மார்க்கம் மிக நுண்ணியதாகவும், கடந்து செல்ல அரியதாகவும் இருந்தாலும், தேவியின் நினைவி லேயே தோய்பவர் களை தேவியே கைப்பற்றி அழைத்துச் சென்று விடுவாள். தேவியின் கடாக்ஷம் என்ற ஊன்று கோல் உதவியால் நாம் ஸம் ஸாரச் சேற்றினின்றும் விடுபடுகிறோம். (40)

कामाक्षि संततमसौ हरिनीलरत्न-
स्तम्भे कटाक्षरुचिपुञ्जमये भवत्याः ।
बद्धोऽपि भक्तिनिगलैर्मम चित्तहस्ती
स्तम्भं च बन्धमपि मुञ्चति हन्त चित्रम् ॥

காமாக்ஷி ஸந்ததமஸௌ ஹரிநீலரத்ன
ஸ்தம்பே கடாக்ஷருசி புஞ்ஜமயே பவத்யா: |
பத்தோபி பக்தி நிகலைர் மம சித்த ஹஸ்தீ
ஸ்தம்பம் சபந்தமபி முஞ்சதிஹந்த சித்ரம் ||

நம்முடைய சித்தம் என்னும் யானையானது தேவியின் கண்ணோக்குக ளின் காந்தித்திரளான இந்த்ர நீல ரத்னங்களா லான தூணில் பக்தி என்னும் சங்கிலியால் கட்டிப்போடப் பட்டிருக்கிறது. சாதாரணமாக யானையைக் கட்ட 'நிகடம்' என்ற முட்களுள்ள இரும்புச் சங்கிலியை உபயோகிப்பர். இங்கோ மனமென்னும் யானையை தேவியின் கண் என்னும் சங்கிலியால் கட்டிப் போடப் பட்டிருக்கிறோம். கட்டுண்ட போதே கட்டுவிலகுகிறது. நம் காஞ்சிப் பெரியவர் சொல்வர் ஒரு விறகுக்கட்டு, நம் சம்ஸாரக்கட்டு என்று கொள் வோம்; நன்றாகக் கட்டப்பட் டுள்ளது. அதன் பக்கத்தில் மற்றோர் கட்டு, இறை வனிடம் பக்தி என்னும் கட்டு முன்னதைவிட இன்னும் இறுக்கமாகப் போட்டு விட்டால், முதலில் போட்ட கட்டு (சம்ஸாரக் கட்டு) நழுவி விழுந்து விடும். இது ஞானாசிரியரின் வார்த்தை அல்லவா! அஞ்ஞான பந்தம் விலக ஜீவன் தன்னை பக்தி என்றும் கயிற்றால் தேவியின் கடாக்ஷம் என்னும் ஞானத்தூணில் கட்டிக் கொள்ள வேண்டும். (41)

कामाक्षि कार्ष्ण्यमपि संततमञ्जनं च
बिभ्रन्निसर्गतरलोऽपि भवत्कटाक्षः ।
वैमल्यमन्वहमनञ्जनतां च भूयः
स्थैर्यं च भक्तहृदयाय कथं ददाति ॥

காமாக்ஷி கார்ஷ்ண்யமபி ஸந்ததமஞ்ஜனம்ச
பிப்ரன் நிஸர்கதரலோபி பவத் கடாக்ஷை: |
வைமல்ய மன்வஹ மனஞ்ஜனதாம் சபூய:
ஸ்த்தைர்யம் சபக்தஹ்ருதயாய கதம் ததாதி ||

தேவி காமாக்ஷியின் கண்கள் கருநிறத்தையும், மை தீட்டியதால் கரு நிறமையின் மாசையும், மேற்கொண்டு ஒரு நிலையில்லாமல் சுற்றிச் சுற்றி வருகிறது. ஆயினும் பக்தர்களுக்கு மாசற்ற மனதையும், (மை-கறுப்பு, மாசற்ற - தூய்மையும் வெண்மையும்) பாபசம்பந்தமே இன்றி தூய நிலையையும், அதற்கு மேலே ஒரு நிலையில் நிலைத்து நிற்கும் (கண்கள் அலைபாய்வதாகக் கூறியதற்கு எதிர் மறையாக) திடத்தன்மையையும் அதிகமாகவே அளிக்கி றதே, இது எவ்வாறு? எதிர் மறையாகக் கூறினால், கூறிய சொல்லுக்கு வலு அதிகப்படும் எனவே கவி ஒவ்வொரு பாடலிலும் இப்படிக் கூறி., சொல்லவந்த விஷயத்தை நம்மனதில் திடம் படக்கூறுகிறார். (42)

मन्दस्मितस्तबकितं मणिकुण्डलांशु-
स्तोमप्रवालरुचिरं शिशिरीकृताशम् ।
कामाक्षि राजति कटाक्षरुचेः कदम्बं
उद्यानमम्ब करुणाहरिणेक्षणायाः ॥

மந்தஸ்மித ஸ்தபகிதம் மணிகுண்டலாம் சு
ஸ்தோமப்ரவால ருசிரம் சிசிரீக்ருதாசம் |
காமாக்ஷி ராஜதி கடாக்ஷருசே: கதம்பம்
உத்யான மம்ப கருணாஹரி ணேக்ஷணாயா: ||

தேவி காமாக்ஷியின் புன்முறுவல்கள் என்ற பூங்கொத்து களை உடையதும், குண்டலங்கள் மணிகள் இழைக்கப் பெற்றதால் காந்தித் திரளை வீசுவதுமான காதணிகளின் ஒளிகண்களில் வீசுகிறது. 'கதம்ப மலர்களை காதிடை சொருகி அதனால் மிகவும் அழகினை உடையாய்' (ல.ஸ.நா. போற்றி) தேவி காதுகளின் மணிகளாற் செய்த குண்டலத்தின் ஒளித் திரட்சி, காதுகளில் அணிந்த புஷ்பக் கொத்தின் குளிர்ச்சி திசைகளை எல்லாம் குளிரச் செய்கிறது தேவியின் கடாக்ஷ காந்தித்திரள் என்னும் கருணையாகிய மான் விழியாளின் பூந்தோட்டம் போல் விளங்குகிறது. (43)

कामाक्षि तावककटाक्षमहेन्द्रनील-
सिंहासनं श्रितवतो मकरध्वजस्य ।

साम्राज्यमङ्गलविधौ मणिकुण्डलश्रीः
नीराजनोत्सवतरङ्गितदीपमाला ॥

காமாக்ஷி தாவக கடாக்ஷ மஹேந்த்ரநீல
ஸிம்ஹாஸனம் ச்ரிதவதோ மகரத்வஜஸ்ய |
ஸாம்ராஜ்ய மங்கல விதௌ மணிகுண்டலஸ்ரீ:
நீராஜனோத்ஸவ தரங்கித தீபமாலா ||

தேவி காமாக்ஷியின் கடாக்ஷங்கள் உயர்ந்த இந்த்ர நீல ரத்னங்களால் ஆன ஸிம்ஹாஸனம். மன்மதன், 'வக்த்ர லக்ஷ்மீ பரீவாஹ சலன் மீனாப லோசனா' (ல.ஸ.நா.81) முகத்தின் அழகு வெள்ளத்தில் களிக்கும் மீன்களைக் கண்டதும் மீனக் கொடியோன் ஆனதால், அதுவே தன் ஸாம் ராஜ்ய ஸிம்ஹாஸ னம் என்று அதை அடைகிறான். மன்மதன் ஸாம்ராஜ்ய பட்டாபி ஷேகம் நடைபெறும் அந்த மங்களகரமான சடங்கி னிலே தேவியின் காதுக ளிலுள்ள ரத்ன குண்டலங்களி லிருந்து வீசும் ஒளியானது தீபங்கள் அடுக்கப்பட்ட தீப ஆலயத்தியாகி சுபகாரியங்களில் சுழற்றிப்பெறும் தீபங்களின் வரிசையாக விளங்குகிறது. தீப ஆலத்தி எடுக்கும் வைபவம் கண் கொள்ளாக் காக்ஷியாகும். தேவி மன்மதனைத்தன் கண்க ளால் உயிர்ப் பித்து, அவனிடம் பிள்ளைப்பாசத்துடன், சிவனையும் ஜயிக்கச்செய்து, அவனுக்கு பட்டாபிஷேகமும், செய்து வைக்கிறாள். காஞ்சி சிவஜித்க்ஷேத்ரம் ஆகும். (44)

मातः क्षणं स्नपय मां तव वीक्षितेन
मन्दाक्षितेन सुजनैरपरोक्षितेन ।
कामाक्षि कर्मतिमिरोत्करभास्करेण
श्रेयस्करेण मधुपद्युतितस्करेण ॥

மாத: க்ஷணம் ஸ்நபய மாம்தவ வீக்ஷிதேன
மந்தாக்ஷிதேன ஸுஜனை ரபரோக்ஷிதேன|
காமாக்ஷி கர்மதி மிரோத்கர பாஸ்கரேண
ச்ரேயஸ்கரேண மதுபத்யுதி தஸ்கரே||

அம்மா காமாக்ஷி ! உன் கண் என்னும் அமுதப் பெருக்கில் என்னை ஒரு கணப்பொழுது குளிப்பாட்டம்மா! மூகர் உருகுகிறார். கரைகிறார்; நமக்கெல் லாம் இந்நிலை என்றா வது வருமா! நல்வினை, தீவினை என்ற இரு வினைகளில் தீவினையால் , அஞ்ஞானம் என்ற இருள், அதை ஒழிக்கும் சூரியனாக தேவியின் கண்நோக்கு விளங் குகிறது. ஸாதுஜனங்களால், தரிசனம்

செய்யப்படு கிறாள். மங்களங்களை வாரிவழங்கும் வள்ளண்மை பொருந்திய கண்கள், தேனுண் ணும் வண்டுகளின் காந்தியைக் கவரக் கூடிய ஒளிபொருந் திய பார்வைகளை உடையவள் தேவி அம்மா! உங்கள் கண்கள் தேன் வண்டுகள் போலவும் தேனைச் சொரிவது போலும் உள்ளது. அந்த அருள் வெள்ளத்தில் என்னைக் குளிப்பாட்டி வையம்மா! மது என்பது இரு பொருள் படக் கூடியது. தேவியிடம் வைக்கும் ப்ரேமையும் ஒரு போதை தான். (45)

प्रेमापगापयसि मज्जनमारचय्य
युक्तः स्मितांशुकृत भस्मविलेपनेन ।
कामाक्षि कुण्डलमणिद्युतिभिर्जटालः
श्रीकण्ठमेव भजते तव दृष्टिपातः ॥

ப்ரேமாபகாபயஸி மஜ்ஜன மாரசய்ய
யுக்த: ஸ்மிதாம்சுக்ருதி பஸ்மவிலேபனேன |
காமாக்ஷி குண்டல மணித்யதி பிர்ஜடால
ஸ்ரீகண்டேமேவ பஜதே தவ த்ருஷ்டிபாத ||

தேவி காமாக்ஷியின் கண்ணோக்கம் என்னும் மஹப்ரபு, காதுக் குண்டலங் களின் ரத்னங்களின் ஒளியாலே செஞ் சடைகளை உடையவரான பரமேஸ்வர னைப் போலவும் , தேவியின் கண்களில் பெருகும் பிரேமை என்னும் தீர்த்தத் தில் 'அபிஷேக ப்ரியரான' ஈச்வரன் ஸ்நானங்கள் செய்வதாகவும், தேவியின் புன்முறுவல் என்ற ஒளியால் விபூதிப் பூச்சோடு விளங்கும் ஸ்ரீகண்டராகவும் பூரிக்கிறார். தேவியின் கண்கள் புண்ய நதிகளான கங்கை, யமுனை, சரஸ்வதி இவர்கள் சங்கமிக்கும் த்ரிவேணி சங்கமம் என்றும், ப்ரும்ம , விஷ்ணு, ருத்ரர்கள் லயமாகும் இடம் என்றும், தேவியின் கண்களிலி ருந்தே மீண்டும் உலக அபிவிருத்தி என்றும் ஸௌந்தர்ய லஹரியில் தேவியின் கடாக்ஷம் பற்றி பலவாறாகக் கூறி யுள்ளது. காதளவும் செல்லும் கண்கள், எனவே ப்ரேமை, முறுவல் கலந்து ஓடுகிறது, பரமசிவத்திடமே லயித்திருக் கிறது. என்ற கருத்து விசேஷமானது. (46)

कैवल्यदाय करुणारसकिङ्कराय
कामाक्षि कन्दलित विभ्रमशङ्कराय ।
आलोकनाय तव भक्तशिवङ्कराय
मातर्नमोऽस्तु परतन्त्रितशङ्कराय ॥

கைவல்யதாய கருணாரஸ கிங்கராய
காமாக்ஷி கந்தலித விப்ரமசங்கராய |

ஆலோகநாய தவ பக்தசிவங்கராய
மாதர்நமோஸ்து புரதந்த்ரி தசங்கராய ||

தேவி காமாக்ஷியின் கடாக்ஷமானது நமக்கு என்னவெல் லாம் செய்கிறது! கைவல்யம் என்றும் தனிப்பெரு நிலையை அளிப்பதில் தேவியின் கண்களின் கருணைப் பெருக்கு ஏவலாளானகத் திகழ்கிறது. கைவல்யம் என்பது தேவியு டன் ஒன்றாய் இருக்கும் நிலை. சங்கரருக்கு மையலை ஊட்டுகிறது. அவரைத் தனக்கு ஆட்பட்ட வராகச் செய்து கொள்கிறது. 'ஸ்வாதீனவல்லபா' (ல. ஸ் நா 54) தன் வயப்பட்ட பர்த்தாவை உடையவள். சக்தியுடன் சேர்ந்து தான் சிவன் உலகீன்றனன் சக்தியின்றிச் சிவம் சற்றும் அசை வனோ! 'தவளே இவளெங் கள் சங்கரனார் மனை மங்களமாம்' என்ற படி தேவி தன் பர்த்தாவை தனக்குட்படுத்தியவள். (47)

साम्राज्य मङ्गलविधौ मकरध्वजस्य
लोलालकालिकृततोरणमाल्यशोभे ।
कामेश्वरि प्रचलदुत्पलवैजयन्ती-
चातुर्यमेति तव चञ्चलदृष्टिपातः ॥

ஸாம்ராஜ்ய மங்கலவிதெள மகரத்ஜஸ்ய
லோலாலகாவிக்ருத தோரண மால்ய சோபே |
காமேச்வரி ப்ரசலதுத்பல வைஜயந்தீ
சாதுர்யமேதி தவ சஞ்சல த்ருஷ்டி பாத: ||

காமேச்வரி! மன்மதனுக்கு ஈச்வரியாக விளங்கு பவளே! இவ்வளவு நேரம் காமாக்ஷி, காமகோடி என்றெல் லாம் கூறியவர் இப்பொழுது காமேச்வரி என்று கூறி விட்டார். வாஸ்தவத்திலேயே தேவி காமாக்ஷி காமனுக்கு மிக, மிக நெருங்கிய வள். காமனைத் தோற்றுவித்ததால் காமனுக்கு ஈச்வரி, காமேச்வரீ ஆகிறாள். ஈச்வரனையும் காமனுக்கு வசப்படுத்தியதால் அவருக்கும் காமேச் வரன் என்ற பெயர் அமைகிறது. ஸ்ரீவித்தையில் நாம் காணும் 'தேவ தேவியர்' காமேஸ்வர, காமேஸ்வரியேயாகும். தேவியின் முகம் இயற்கையாகவே சுருட்டையானதும், சிறு வண்டுகள் சஞ்சரிப்பது போன்ற சோபையுடன் கூடிய முன்நெற்றி மயிர்களால் தோரணம் கட்டியது போல் விளங்குகிறது. மன்மதனின் ஈச்வரியான காமேஸ்வரி, மீனக்கொடி யோனான மன்மதனின் சாம்ராஜ்ய பட்டா பிஷேகம், தேவியின் கண் நோக்கிலேயே நடைபெறுகிறது. புருவங்களும் அளகங்கள் என்ற முன் உச்சி மயிர்களும் அந்தப்பட்டா பிஷேகத்துக்குத் தோரண மாலைகள் ஆகிறது. ஆனந்த பரிதத்தால் மிளிர்கின்ற கண்ணோக்கானது நீலோத்பல மலர்களின் வெற்றி மாலையை சூடினாற்போல் காண்கிறது. (48)

मार्गेण मञ्जुकचकान्तितमोवृतेन
मन्दायमानगमना मदनातुरासौ ।
कामाक्षि दृष्टिरयते तव शङ्कराय
सङ्केतभूमिं अचिराදभिसारिकेव ॥

மார்கேண மஜ்ஞ்ஜுகச காந்தி தமோவ்ருதேன
மந்தாயமானகமனா மதனா துராஸௌ |
காமாக்ஷி த்ருஷ்டிரயதே தவசங்கராய
ஸங்கேதபூமிம் அசிராதபிஸாரி கேவ ||

தேவி காமாக்ஷியின் கூந்தல், கறுப்பாயிருந்தும் ஒளியுடையதாய் குழற்கற்றைகளாய் உள்ளதால், தேவியின் கண்ணோக்கம் என்றும் கருமேனி இருளில் காமத்தால் வருந்தி மெதுவாகவே நடந்து சென்று, உம்முடைய காதல ரான சங்கரரை, மங்களங்களையும், சௌக்யங் களையும் கொடுக்கும் சம்-கர: சங்கரரை, நாடிச் செல்லும் அபிஸாரி கையைப் போல் முன்னாலேயே தாங்கள் குறிப்பிட்ட ஸ்தலத்தை அடைகிறார்கள். தேவியின் கண்கள் தேவிக்கு ஏவலாளியாக இட்ட பணியை நிறைவேற்றுகிறார்கள். ரகசிய மாக கண்கள் காமாக்ஷி தேவியிடம் முறையிடுவது போன்ற வர்ணனை. (49)

व्रीडानुवृत्तिरमणीकृतसाहचर्या
शैवालितां गलरुचा शशिशेखरस्य ।
कामाक्षि कान्तिसरसीं त्वदपाङ्गलक्ष्मीः
मन्दं समाश्रयति मज्जनखेलनाय ॥

வ்ரீடாநுவ்ருத்தி ரமணீக்ருத ஸாஹசர்யா
சைவாலதாம் கலருசா சசிசேகரஸ்ய |
காமாக்ஷீம் காந்தி ஸரஸீம் த்வத பாங்கலக்ஷ்மீ:
மந்தம் ஸமாஸ்ரயதி மஜ்ஜன கேலனாய||

காமாக்ஷி தேவியின் கடைக்கண்ணோக்கு என்னும் காந்தி லக்ஷ்மியாளவள், அவளுடைனேயே தொடரும். நாணம் என்ற பெண்மணி துணை செய்ய, சந்திரனைத் திருமுடியில் சூடிய பரமசிவனுடன் 'பொய்கை நீராடல்' என்ற நீர்விளையாடற் பொருட்டு மெல்ல வந்து சேர்கின்றாள். பரம சிவனின் திருமேனி காந்தியிலே தேவியின் கடாக்ஷம் மூழ்கித் திளைக் கிறது. நீர்விளையாடல் என்ற சங்கேதத்தால் கடாக்ஷமாகிய நங்கையும் பரமசிவ

னோடு ரமிக்கிறாள் என்பது பெறப்படு கிறது. சிவனின் கழுத்தில் உள்ள கருவிஷம் காந்தி மயமான ஏரியில் ஒரு மூலையில் பாசிபோல் ஒதுக்கப் பட்டிருக்கிறது. (50)

काषायमंशुकमिव प्रकटं ददानो
माणिक्यकुण्डलरुचिं ममताविरोधी ।
श्रुत्यन्तसीमनि रतः सुतरां चकास्ति
कामाक्षि तावककटाक्षयतीश्वरोऽसौ ॥

காஷாயம் சுகமிவ ப்ரகடம் ததானோ
மாணிக்ய குண்டலருசிம் மமதாவிரோதீ |
ச்ருத்யந்த ஸீமனிரத: ஸுதராம் சகாஸ்தி
காமாக்ஷி தாவக கடாக்ஷய தீஸ்வரோஸெள ||

தேவி காமாக்ஷியின் கடாக்ஷம் என்றும் இந்த யதி சிரேஷ் டர், காதுகளி லுள்ள மாணிக்க குண்டலங்களின் காந்தியை ஒத்த காஷாய வஸ்திரங்களை நன்றாக விளங்கும்படி உடுத்தியுள்ளார்கள். அவர்கள் தேவியின் கண்க ளாகவே விளங்குகிறார்கள். உலகவழக்கில் நாம் நமக்கு மிகவும் வேண்டப் பட்டவரை 'எனக்கு அவர்கள் போன்றவர்' என்கி றோம். கண்ணே' என் கிறோம். யதிச்ரேஷ்டர்கள் தேவியாகவே விளங்குவதால் நிர்மமா, மமதா ஹந்த்ரீ (ல.ஸ.நா 164, 165,) என்ற நாமாக்களுடன் பொருத் தலாம். 'மமதா விரோதீ' தம் முடைய மமதையைப் பகைத்து அழித்தவர்; அண்டியவர் களின் மமதையையும் அழிப்பவர். கண்கள் காதுவரை நீண்டி ருப்பதால்; காது ச்ருதி என்ற பொருள் கொண்டால் வேதம், வேதாந்தம் என்று கொள்ள வேண்டும். எனவே இவர்கள் வேதாந்த விழுப்பொருளாகிய ஈச்வர விசாரத் தில் ஈடுபட்டவராக விளங்குகிறார்கள். (51)

पाषाण एव हरिनीलमणिर्दिनेषु
प्रम्लानतां कुवलयं प्रकटीकरोति ।
नैमित्तिको जलदमेचकिमा ततस्ते
कामाक्षि शून्यमुपमानं अपाङ्गलक्ष्म्याः ॥

பாஷாண ஏவ ஹரிநீல மணிர் தினேஷு
ப்ரம்லானதாம் குவலயம் ப்ரகடீகரோதி |

ஹைமித்திகோ ஜலதமேசசிமா ததஸ்தே
காமாக்ஷி சூன்ய முபமான மபாங்க லக்ஷ்ம்யா: ||

தேவி காமாக்ஷியின் கருணாகடாக்ஷத்திற்கு ஒப்புவமை தேடுகிறார். கிடைக்கவில்லை. இந்த்ர நீலக்கல்லை உவமிப் போமென்றால் அது வெறுங் கல்லேயோகும். அதில் ஸ்புரணம் இல்லை. மென்மை இல்லை. கருநீல மலரோ பகற்பொழுதி னில் வாட்டமுறும். தேவியின் கண்களோ வாடாத நீலோற் பலங்கள் கார்மேகத்தைக் கூறுவோ மென்றால், அது நீருண்டபோது, சூல் கொண்டது போது மாத்திரமே அமையும். எனவே அதையும் கூற இயல வில்லை. தேவியின் கடாக்ஷம் இயற்கையிலேயே மென்மை, கருமை, ஒளி ஒருங்கே யுடையது. எனவே மென்மை இலாத இந்த்ர நீலமணி, இரவில் மாத்தி ரம் விகஸிக்கும் கரு நீலமலர், பருவச் சேர்க்கையில் மாத்திரம் சூல் கொள்ளும் மேகம் இவைக ளுடன் தேவியின் கடாக்ஷத்தை எப்படி உவமிக்கமுடியும்!' நிர் உபமா'வான தேவிக்கு எதையும் உபமானம் சொல்ல முடியாது. (52)

शृङ्गारविभ्रमवती सुतरां सलज्जा
नासाग्रमौक्तिकरुचा कृतमन्दहासा ।
श्यामा कटाक्षसुषमा तव युक्तमेतत्
कामाक्षि चुम्बति दिगम्बरवक्त्रबिम्बम् ॥

ச்ருங்கார விப்ரமவதீ ஸுதராம் ஸலஜ்ஜா
நாஸாக்ர மௌக்திகருசா க்ருத மந்தஹாஸா |
ச்யாமா கடாக்ஷஸுஷமா தவயுக்த மேதத்
காமாக்ஷி சும்பதி திகம்பரவக்த்ரபிம்பம் ||

ச்ருங்காரரஸத்திற்குரிய செயல்களைச் செய்பவளாகவும் மிகவும் நாண முற்றவளாகவும். தேவியின் மூக்கு நுனியில் விளங்கும் முத்து மூக்குத்தியின் ஒளியால் புன்முறுவலை யுடைவளாகவும், பரமசிவனுடைய முகபிம்பம் என்னும், கோவைக்கனியை (போன்ற செவ்வாய்) முத்தமிடுகிறாள். இந்த 'ச்யாமா' என்ற தேவி அனாஹத கமலத்தில் பூர்ண கிரிபீடத்தில் ச்ருங்கார ரஸம் நிறைந்திருப்பவள். (ச்ருங்கார-ரஸ-ஸம்பூர்ணா' (ல.ஸ.நா376) லலிதா வடிவம் ச்ருங்காரப் பிரதானம். காமாக்ஷியும் அப்படியே தான். ஒரு காலத்தில் மன்மதனை எரித்தவர். காண்பதும், கேட்பதும், தொடுவதும் தீது என்று இகழ்ந்து ச்ருங்கார ரஸத்தை அறியாத திகம்பரஜைனனை அடைந்து, அவரை யும் அந்த ரஸத்துக்கு உட்படுத்துகிறாள். அறுபத்து நாலு திருவிளை யாடல்கள் மதுரையம் பதியில் பரமேச்வரன், சுந்தரேச்வராக வந்து ஸ்ரீமீனாக்ஷி தேவியை மணம் கொண்டு, நிகழ்த்தியதாக உள்ள வரலாற்றில் திகம்பர ஜைனனாக காக்ஷி அளித்து அபிஷேக பாண்டியனை ஆட்கொண்டதாக

வரலாறு உள்ளது. பரமேஸ்வரன் ஜபமாலை ஏந்தி ஜடை தரித்து த்ரிபுண்டரமணிந்து, கையில் தங்கப் பிரம்புடன் யுவனாக, சிஷ்யர்களுடன் கேட்டவர்க்கும் பார்த்தவர்க்கும் வேண்டிய வரங்களை வாரி வழங்கிக் கொண்டு மதுரை நகரில் நடமாடினார். கல்யானை கரும்பு தின்ற அதிசயம் போன்றவற்றை செய்த, அந்த சித்தரே திகம்பர் திகம்பரஜைனனாக இங்கு உருவகப்படுத்தப்படுபவர். (53)

नीलोत्पलेन मधुपेन च दृष्टिपातः
कामाक्षि तुल्य इति ते कथमामनन्ति ।
शैत्येन निन्दति यदन्वहमिन्दुपादान्
पाथोरुहेण यदसौ कलहायते च ॥

நீலோத்பலேன் மதுபேன சத்ருஷ்டிபாத:
காமாக்ஷி துல்ய இதிதே கதமாமனந்தி |
சைத்யேன நிந்ததி யதன் வஹ மிந்து பாதான்
பாதோருஹேண யதஸௌ கலஹாயதேச ||

தேவி காமாக்ஷியின் கடாக்ஷமானது நீலோத்பல (கரு நீல) மலரோடும், வண்டோடும் சமானம் என்று சொல்கிறார்களே: எப்படிப்பொருந்தும்? கடாக்ஷம் இது எப்பொழுதும். சந்திரனின் கிரணங்களை குளிர்மையால் நிந்திக்கிறது. தாமரை யோடும் விரோதம் கொள்கிறது. இரவில் மலரும் கருநீல மலருக்கு நாயகனாகி விளங்கும் சந்த்ரனையும், வண்டுகளுக்குப் புகலிடமான தாமரையையும் விட குளிர்ச்சியாலும், காந்தியாலும் கடாக்ஷம் சிறப்புற்று விளங்குகிறது. (54)

ओष्ठप्रभापटलविद्रुममुद्रिते ते
भ्रूवल्लिवीचिसुभगे मुखकान्तिसिन्धौ ।
कामाक्षि वारिभरपूरणलम्बमान-
कालाम्बुवाहसरणिं लभते कटाक्षः ॥

ஓஷ்டப்ரபா படலவித்ரும முத்ரிதே தே
ப்ரூவல்லிவீசி ஸுபகே முககாந்தி ஸிந்தௌ|
காமாக்ஷி வாரிபர பூரண லம்பமான
காலாம் புவாஹ ஸரணிம் லபதே கடாக்ஷ: ||

காமாக்ஷி தேவியின் உதடுகள், காந்தித்திரள்கள் என்று தோற்றும் பவழக் கொடிகள். பவழக்கொடிகள் கடலிலே மாத்திரம் விளையும், நவரத்தின மணிகளில் ஒன்றான செவ் வாய்க்கு உகந்த செவ்வாய் போன்ற தோற்றமுடையதாகும். புருவக்கொடிகளின் நெறிப்போ கடலலைகள், முககாந்தி என்னும் கடலில் தண்ணீரை அதிகமாக நிரப்பிக் கொண்டு தாழ்ந்த கார்மேகம் போல் கடாக்ஷம் விளங்குகிறது. எல்லோ ருடைய தாபங்களையும் தீர்ப்பதற்காக கிழிறங்கி வருகின்ற கார்மேகம் போல், தேவியின் திரு நோக்கு கடலுக்கு ஒப்ப, பவழக் கொடிகளோடும், புருவ நெறிப்பு என்ற அலைகளோ டும் எடுக்க எடுக்கக்குறையாத கடல் நீராக, அவ்வப்பொழுது மேகங்களால் நிரப்பிக் கொண்டு விளங்குகிறது. (55)

मन्दस्मितैर्धवलिता मणिकुण्डलांशु-
संपर्कलोहितरुचिस्त्वदपाङ्गधारा ।
कामाक्षि मल्लिकुसुमैर्नवपल्लवैश्च
नीलोत्पलैश्च रचितेव विभाति माला ॥

மந்தஸ்மிதை: தவலிதா மணிகுண்டலம்சு
ஸம்பர்க்க லோஹிதருசிஸ் த்வதபாங்கதாரா|
காமாக்ஷி மல்லிகுஸுமை: நவபல்ல வைஸ்ச
நீலோத்பலைஸ்ச ரசிதேவ விபாதிமாலா ||

காமாக்ஷி தேவியின் புன்முறுவல்கள் வெண்ணிற முடைய தாகவும், காதுகளிலுள்ள ரத்ன குண்டலங்களின் செந்நிறகிர ணங்களின் சேர்த்தியால் செந்நிறமுடையதாகவும், இயற்கையிலேயே கருநிறமுடைய கடைக்கண் ணோக்கங்களின் பெருக்கானது வெண்ணிற முறுவல் என்னும் மல்லிகைப் பூக்களையும், செந்நிறக்கிரணங்கள் என்னும் இளந்தளிர்களையும் இயற்கையாகவே அமைந்த கரு நிறத்தை கருநீல மலர்களாகவும் கொண்டு தொடுக்கப் பெற்ற மாலையைப் போலச் சிறந்து விளங்குகிறது. (56)

कामाक्षि शीतलकृपारसनिर्झराम्भः
संपर्कपक्ष्मलरुचिस्त्वदपाङ्गमाला ।
गोभिः सदा पुररिपोरभिलष्यमाणा
दूर्वाकदम्बकविडम्बनमातनोति ॥

காமாக்ஷி சீதலக்ருபா ரஸ நிர்ஜராம்ப:
ஸம்பர்க்க பக்ஷ்மலருசிஸ் த்வத பாங்கமாலா |

கோபி: ஸதா புரரிபோர பிலஷ்யமாணா
    தூர்வாகதம்பக விடம்பன மாதனோதி ||

தேவி காமாக்ஷியின் கண்கள் கருணை வெள்ளமென்ற குளிர்ந்த அருவி நீரின் சேர்த்தியால் மிகவும் ஒளியுடை யதாக விளங்குகிறது. திரிபுரத்தை அழித்த சிவனின் கண்களால் மிகவும் விரும்பப்படுகிறது. முப்புரங்களை எரித்த மூப்பன், பசுபதி என்ற ஜீவர்களின் பதியாகவும் அம்பிகையின் பதியாகவும் விளங்குகி றான். தேவியின் கடைக்கண் நோக்கு என்ற குளிர்ந்த பெருக்கைப் போன்ற அருவி நீர் பாய்வதால் செழிப்பாக அருகம்புல் வளர்கிறது. சிவனுக்கு அருகம்புல் பிரியம். பசுக்களுக்கும் பிரியம். பசுபதி யான சிவனால் ஸதாகாலமும் தேவி அபேக்ஷிக்கப்படுகிறாள். என்று மறைமுகமாகக் கூறுகிறார். (57)

हृत्पङ्कजं मम विकासयतु प्रमुष्णन्
    उल्लासमुत्पलरुचेस्तमसां निरोद्धा ।
दोषानुषङ्गजडतां जगतां धुनानः
    कामाक्षि वीक्षणविलासदिनोदयस्ते ॥

ஹ்ருத் பங்கஜம் மம விகாஸயது ப்ரமுஷ்ணன்
    உல்லாஸ முத்பலருசே தமஸாம் நிரோத்தா|
தோஷானுஷங்க ஜடதாம் ஜகதாம் துனான:
    காமாக்ஷி வீக்ஷண விலாஸ தினோதயஸ்தே ||

தேவி காமாக்ஷியின் கண்ணோக்கத்தில் கிளர்ந்தெழுந்த ஒளியாகிய ஸூர்யோதயமானது. சூரியனைக் கண்டதும் கூம்பும் கருநீல மலர்களின் காந்தியை கவர்ந்து கொண்டும், தேவியின் கண்பார்வை கருநிறமாக இருந்தாலும் உலகத் தோரின் அஞ்ஞானத்தை, மன இருளை விலக்குவ தாயும், தோஷங்களையும், மலினங்களையும் விலக்குவதாகவும், நம் போன்றவர்களின் உள்ளம் என்னும் தாமரையை நன்றாக மலர்த்துவதாகவும் செய்யட்டும். ஸூர்யன் தன் செவ்வொளி யால் நிகழ்த்தும் காரியங்களை, கடாக்ஷம் தன் கரிய காந்தியாலே செய்கிறது என்பது அதிசயமாகும். (58)

चक्षुर्विमोहयति चन्द्रविभूषणस्य
    कामाक्षि तावककटाक्षतमःप्ररोहः ।
प्रत्यङ्मुखं तु नयनं स्तिमितं मुनीनां
    प्राकाश्यमेव नयतीति परं विचित्रम् ॥

சக்ஷுர்விமோஹயதி சந்த்ர விபூஷணஸ்ய

காமாக்ஷி தாவக கடாக்ஷதம: ப்ரரோஹ: |

ப்ரத்யங்முகம் து நயனம் ஸ்திமிதம் முனீனாம்

ப்ராகாஸ்யமேவ நயதீதி பரம் விசித்ரம் ||

பரமேஸ்வரன் சூரியன், சந்திரன், அக்னி என்ற முச்சுடர்களையே கண்களாகக் கொண்டவர். அதற்கும் மேல் சந்திரனைத் தலைமேலே சூட்டிக்கொண்டிருக்கிறார். அவரிடம் இவ்வளவு ஒளிகள் இருந்தும், தேவி அவருடைய கண்களை தன் கரிய ஒளியாலேயே இருண்ட வையாக்கி, தேவியின் கண்களைத் தவிர வேறு எதையும் பரமேஸ்வரன் கண் காணவில்லை. பரமேஸ்வரனின் அந்தரங்கமே தேவிதான் எனவே தேவியைக் காண்பதே உள்நோக்கு, வெளி நோக்கு எல்லாமாக இருக்கிறது. வெளிஉலக நோக்கில்லாத முனிவர்களுக்கு பரம் பொருளைக்காணும் திறமையைக் கொடுக்கிறது. (59)

कामाक्षि वीक्षणरुचा युधि निर्जितं ते

नीलोत्पलं निरवशेषगताभिमानम् ।

आगत्य तत्परिसरं श्रवणावतंस-

व्याजेन नूनमभयार्थनं आतनोति ॥

காமாக்ஷி வீக்ஷணருசா யுதிநிர்ஜிதம்தே

நீலோத்பலம் நிரவசேஷ கதாபிமானம் |

ஆகத்ய தத் பரிஸரம் ச்ரவணா வதம்ஸ

வ்யாஜேன நூன மபயார்த்தன மாதனோதி ||

தேவியின் முகம் செந்தாமரை: கண்கள் இரண்டும் நீலோத் பலங்கள் 'பாலே தவமுகாம் புஜே த்ருஷ்டம் இந்தீவரத்வயம்' என்ற காளிதாஸரின் கவித்தவத்தை இங்கு நினைவு கூறலாம். காமாக்ஷி தேவியின் கண் ணோக்கு ஒளி கரு நீல மலரை ஜயித்து விட்டது. 'சாக்ஷிக் காரன் காலில் விழுவதைவிட சண்டைக் காரன் காலிலே விழுவதே மேல்' என்றபடி நீலோத்பல மலரானது தனது கர்வத்தை முற்றும் துறந்து தன்னை ஜெயித்தவரிடமே சென்று வாழலாம் என்று கண்ணுக்கு, கண்ணோக்குக்கு (காதளவோடியகண்கள் தேவியிடையது) அருகாமையில் வந்தடைந்து அபய ப்ரார்த்தனை செய்யவே தேவி அபய மளித்து செவி மடல்களில் சூட்டிக்கொண்டாள். (60)

आश्चर्यमम्ब वदनाभ्युदयावलम्बः

कामाक्षि चञ्चलनिरीक्षणविभ्रमस्ते ।

धैर्यं विधूय तनुते हृदि रागबन्धं
शंभोस्तदेव विपरीततया मुनीनाम् ॥

ஆஸ்சர்யமம்ப மதனாப்யுத யாவலம்ப:
காமாக்ஷி சஞ்சல நிரீக்ஷண விப்ரமஸ்தே |
தைர்யம் விதூய தனுதே ஹ்ருதி ராக பந்தம்
சம்போஸ்ததேவ விபரீததயா முனீனாம் ||

சாதாரணமாக ஸ்திரிகளின் பார்வை சஞ்சலமானது என்று சொல்வதுண்டு. காமாக்ஷி தேவி எல்லா ஸ்திரிகளின் பொது நிதி , பிரதிநிதி; எனவே சஞ்சலம் என்பதையே அறியாத தேவியின் கண்ணோக்கை சஞ்சலம் உடைய என்று கூறுகிறார். ஆனால் அந்தப்பார்வைதான் மன் மதனை உஜ் ஜீவனம் செய்து அவனுக்கு சிவனையும் ஜயிக்கும் பேற்றி னையும் அளித்தது. காமதேவனின் பாணத்தால் சம்புதேவர் மனதைரியம் இழந்து காதல் வயப்பட்டார். முனிவர்களுக்கு ஆசையை, பந்தத்தை எதுவிலக்குகிறதோ அது சிவனாரின் மனதில் ஆசையை மூட்டுகிறது. பந்தத்தை ஏற்படுத்து கிறது. இது ஆச்ச யர்மே! பாசஹஸ்தா' 'பாசஹந்த்ரி' (ல.ஸ.நா. 810, 811) பாசத்தைக் கையில் கொண்ட தேவியே பாசத்தை நீக்குகிறாள். (61)

जन्तोः सकृत्प्रणमतो जगदीड्यतां च
तेजस्वितां च निशितां च मतिं सभायाम् ।
कामाक्षि माक्षिकझरीमिव वैखरीं च
लक्ष्मीं च पक्ष्मलयति क्षणवीक्षणं ते ॥

ஜந்தோ: ஸக்ருத் ப்ரணமதோ ஜகதீட்யதாம் ச
தேஜஸ்விதாம் சநிசிதாம் சமதிம் ஸபாயாம் |
காமாக்ஷி மாக்ஷிக ஜரீமிவ வைகரீம்ச
லக்ஷ்மீம்ச பக்ஷ்மலயதி க்ஷணவீக்ஷணம் தே ||

தேவி காமாக்ஷியின் கடாக்ஷமானது ஒரு கணப்பொழுது அடி வணங்கு பவர்களின் மேல் பட்டால் போதும் எல்லோராலும் போற்றி மதிக்கத்தகுந்த நிலையை அடைவர்; தேவி உபாஸகர்களை நாம் பார்த்த மாத்திரத்திலேயே அடையாளம் கண்டு கொள்வோம். அப்படி ஒரு பொலிவு, தேஜஸ் பெற்றிருப் பார்கள். ஸபைகளிலே பெரிதும் மதிக்கும் படியான கூரிய புத்தி. தேனின் அருவி போன்ற வாக்கு, இத்துடன் செல்வானாகவும் விளங்குவர். மூகாசாரி யார் தன்னைப்போல் ஸர்வஞ்ஞபீடத்திலமர்ந்து ஜகத்குருவாகவும் தேன்

மழைபோன்ற சொல் வளமும், தேஜஸ்ஸும் கூடி விளங்குவான் என்று பிரதிஜ்ஞை செய்து கொடுக்கிறார். (62)

कादम्बिनी किमयते न जलानुषङ्गं
भृङ्गावली किमुररीकुरुते न पद्मम् ।
किं वा कलिन्दतनया सहते न भङ्गं
कामाक्षि निश्चयपदं न तवाक्षिलक्ष्मीः ॥

காதம் பினீ கிமயதே நஜலானுஷங்கம்
ப்ருங்காவலீ கிமுரரீ குருதே நபத்மம் |
கிம்வா கலிந்த தனயா ஸஹதே நபங்கம்
காமாக்ஷி நிச்சயபதம் நதவாக்ஷி லக்ஷ்மீ: ||

ஆகாயத்தில் மேகங்களின் வரிசையானது எப்பொழு தும் சஞ்சரித்துக் கொண்டே இருந்தாலும் மழையாகப் பொழியும் பொழுது ஓர் இடத்தில் நிலைத்து நின்று ஜலத்தோடு சேர்ந்து இருக்கும் சேதனமில்லாத நிலை அடைகிறது. வண்டுகளின் வரிசையும் தாமரை மலரை அடைந்து அதனுடன் ஒன்றாயி ருக்கிறது நதிகள் கடலை நோக்கிப் போவது இயல்பு. களிந்தனின் மகளான (சூரியபுத்திரி என்றும் கூறுவதுண்டு) யமுனையும் கடலை நோக்கிச் செல்லுகையில் ஒரு சமயம் பலபத்ர தேவர் கலப்பையாலே நீரோட்டம் தடைப்பட்டதைப் பொறுத்துக் கொள்கிறது. (இந்த வரலாறு ராமாயணத்தில் காணப் படுகிறதாம்.) ஆனால் ஸ்ரீகாமாக்ஷி என்னும் லக்ஷ்மியின் கடாக்ஷமோ யாராலும் தடைப்படாமல் அடியார்கள் மேல் எப்பொதும் பாய்ந்து கொண்டே இருக்கிறது. (63)

काकोलपावकतृणीकरणेऽपि दक्षं
कामाक्षि बालकसुधाकरशेखरस्य ।
अत्यन्तशीतलतमोऽप्यनुपारतं ते
चित्तं विमोहयति चित्रमयं कटाक्षः ॥

காகோல பாவக த்ருணீ கரணேபி தக்ஷம்
காமாக்ஷி பாலக ஸுதாகர சேகரஸ்ய |
அத்யந்த சீதலதமோப்யனு பாரதம் தே
சித்தம் விமோஹயதி சித்ரமயம் கடாக்ஷ: ||

தேவியின் குளிர்ந்த பார்வை கால கூட விஷ அக்னி யின் வெப்பத்தையும் குளிர்விக்கும் திறமையுடையது. வெப்பம் தணியும் பொருட்டு ஈச்வரன் எப்பொழுதும் தலையில் இளம்பிறையைச் சூடி இருக்கிறார். அப்படியும் சிவனது மனதை வாடி மயங்கும்படி செய்கின்றது. இது எப்படி? ஆலஹால விஷத்தை பரமசிவன் உண்டார். விஷவெப்பம் தணிய அமிர்தபானம், நிலவைத் தலையில் சூடல் போன்ற செயல்களால் தணியாத காமவெதுப்பு தேவியின் கண் நோக்கில் சீதளமாகிறது. விஷத்தின் தாபத்தைத் தணிக்க அமிர்தத்தைப் பொழிந்து கொள் வதை நாம் படங்களில் கூடக் காணலாம் 'அமிர்தம்ருத்யுஞ்ஜயர்' என்ற ரூபத்தில் தானே அபிஷேகம் செய்து கொள்வது போன்ற கோலம் உண்டு. சென்னையை அடுத்த சுருட்டப்பள்ளி என்ற திருத்தலத்தில் சிவபெருமான் விஷம் அருந்தியதால், விஷவேகம், தாங்கா மல் பள்ளிகொண்ட நிலையில் தேவர்கள், முனிவர்கள் சூழ, தேவியின் ஸ்பர்சத்துடன், தேவி பக்கலில் இருக்கக் காக்ஷி அளிக்கிறார். இது தக்ஷிணா மூர்த்தியின் எட்டுக்கோலங்களில் ஒன்றாகும். (64)

कार्पण्यपूररसवर्धितमम्ब मोह-
कन्दोद्गतं भवमयं विषपादपं मे ।
तुङ्गं छिनत्तु तुहिनाद्रिसुते भवत्याः
काञ्चीपुरेश्वरि कटाक्षकुठारधारा ॥

கார்ப்பண்ய பூரரஸவர்தித மம்ப மோஹ
கந்தோத்கதம் பவமயம் விஷபாதபம் மே |
துங்கம் சினத்து துஹினாத்ரிஸுதே பவத்யா:
காஞ்சீபுரேஸ்வரீ கடாக்ஷகுடார தாரா ||

தேவியின் கடாக்ஷமாகிய கோடரியின் கூரிய முனை இந்த ஸம்ஸாரம் என்ற விஷவிருக்ஷத்தை வெட்டி வீழ்த்த வேண்டு கிறேன். இந்த விஷவிருக்ஷ மானது வறுமை என்ற வளமை யான நீராலே போஷிக்கப் பெற்று, அஞ்ஞானம் என்னும் அடி மரத்தினின்றும் செழித்து ஓங்கி வளர்ந்து மிகவும் உயர்ந்து நிற்கிறது. எப்படி தேவியின் கண்ணோக்கு உயர்ந்த வஸ்துக்களை நமக்கு அளிக்கின்றதோ, அதே போல் கேடு களின்றும் நம்மைக் காத்து ரக்ஷிக்க வேண்டும். (65)

कामाक्षि घोरभवरोगचिकित्सनार्थ
अभ्यर्थ्य देशिककटाक्षभिषक्प्रसादात् ।
तत्रापि देवि लभते सुकृती कदाचित्
अन्यस्यदुर्लभमपाङ्गमहौषधं ते ॥

காமாக்ஷி கோர பவரோக சிகித்ஸனார்த்தம்
அப்யர்த்ய தேசிக கடாக்ஷபிஷக் ப்ரஸாதாத் |
தத்ராபி தேவி லபதே ஸுக்ருதீ கதாசித்
அன்யஸ்ய துர்லப பாங்க மஹௌஷதம் தே ||

ஸம்ஸாரம் என்னும் பயங்கரமான நோயைப் போக்கிக் கொள்ளும் பொருட்டு 'ஸம்ஸாரபங்க நிர்மக்ன ஸமுத்தரணபண்டிதா'வான ஸ்ரீதேவி கடாக்ஷத்தைப் பிரார்த்திக்க வேண்டும். தேவி 'தக்ஷிணாமூர்த்தி ரூபிணீ' 'குருமூர்த்தி' என்ற படி மனமிரங்கி நமக்கு குருவடிவிலும் வந்து நம்மை ஆட்கொள்கிறாள். தேவியின் தயவால் நாம் சற்குருவை அடைந்து, குருவின் கடாக்ஷம் என்ற வைத்தியரின் தயவி னால், புண்ணியசாலிகள் மாத்திரமே தேவியின் கடைக்கண் ணோக்கு என்ற பெரு மருந்தை அடைகி றார்கள். தெய் வத்தை வழிபட பலமுறைகள் இருந்தா லும், காணாபத்யம், ஸௌரம், வைஷ்ணவம், கௌமாரம் சைவம், சாக்தம் என்ற ஆறு சமயங்களும், இதன் தலைவி தேவியாவாள். இந்த ஆறுசமயங்களையும் தனக்குள் கொண்டதே ஸ்ரீவித்தை யாகும் சற்குருவின் துணை கொண்டு பவரோக சிகித்ஸை பெற வேண்டும். குருகடாக்ஷம் என்ற வைத்தியர் தயவினால் தேவியின் கண் ணோக்கு என்ற பவரோகத்தைப் போக்கும் மருந்தாக தேவியின் கடாக்ஷம் அமைகிறது. (66)

कामाक्षि देशिककृपाङ्कुरमाश्रयन्तो
नानातपोनियमनाशितपाशबन्धाः ।
वासालयं तव कटाक्षममुं महान्तो
लब्ध्वा सुखं समधियो विचरन्ति लोके ॥

காமாக்ஷி தேசிக க்ருபாங்குரமாச்ரயந்தோ
நானாத போநியம் நாசித பாச பந்தா: |
வாஸாலயம் தவ கடாக்ஷமமும் மஹாந்த:
லப்த்வா சுகம் ஸமதியோ விசரந்தி லோகே ||

தேவி தாஸர்கள் ஆசார்யனின் கிருபையாகிற அங்கு ரத்தை அடைந்த வர்களாய், (அதாவது செடி முளைக்க வேண்டிய சாதனங்களான விதை, ஜலம் இரண்டுமே குரு கடாக்ஷம்) பலவகை யான தவங்களாலும், நியமங்க ளாலும் பாச மெனும் பற்றுதலாகிய பந்தத்தை ஒழித்து, தேவியின் தன் மயமாகும் பேற்றினை அடைந்து அப்படிப் பட்ட பெரியோர் கள் 'தெய்வம் ஒன்று, அது உண்டு' என்று கண்டு அந்தப் பரம்பொருளில் மனதை வைத்து உலகத் திலே

இனிதாக சஞ்சரிக்கிறார்கள். ஆர்யாசதகம் 48, 'சிவ சிவ பச்யந்தி ஸமம்' என்ற பாடலுடன் இணைந்தால் சுவை அதிகமாகிறது. ஒளிரும் பிறைமதி சூடிய சடை முடியனான சிவனை, அந்த செம்பவளக் குன்றை, இயற்கை மணம் கமழும் பசுங்கொடியான தேவி தழுவி நிற்கும் காட்சியை மனக் கண் கொண்ட கண்டு, அந்த சிவானுபவத்தில் தோய்ந்து, மன வாக்குக் காயங்களால் வரும் துயரை விடடொழித்து, ஒரு நொடிப்பொழுதேனும் சிவானந்த நிலையில் லயிப்பவர்கள் கொழுவும், குருதியுடன் கூடிய பிறவியை எடுக்க மாட்டார் கள். (அபிராமி அந்தாதி) (67)

साकूतसंलपितगर्भितमुग्धहासं
व्रीडानुरागसहचारि विलोकनं ते ।
कामाक्षि कामपरिपन्थिनि मारवीर-
साम्राज्यविभ्रमदशां सफलीकरोति ॥

ஸாகூத ஸம்லபித ஸம்ப்ருத முக்தஹாஸம்
வ்ரீடானுராக ஸஹசாரி விலோகனம் தே |
காமாக்ஷி காமபரி பந்தினி மாரவீர
ஸாம் ராஜ்ய விப்ரமதசாம் ஸபலீகரோதி ||

கருத்துடையபேச்சு, புன்முறுவலுடன் நாணம், காதல், அதுவும் நிறைந்த காதல் பார்வை, இப்படிக் கண்களில் காதலைக் தேக்கிக்கொண்டு சிவனை நிலைகுலைய வைக்கிறாள். தேவி. பின்னால் இப்படி எல்லாம் நிகழும் என்று அறியாமல் ஞானநிலையில் கண்ணால் மன்மதனை எரித்துவிட்டார். மன்மதனின் வீரஸாம்ராஜ்யத்தின் பெருமையை விளக்கும் படி தேவி பரம சிவனடத்தில் தன் கண்ணோக்கைச் செலுத்துகிறாள்.

மனந்தனை மாய்ப்பவள் மன்மதனின்
மதத்தையும் மதித்துக் காத்தனள் காண்
சினந்த அச்சிவனையும் அவமாக்கி
அபஜயம் அடைவித்தருள் செய்தாள்

காமனின் அதிகாரம் அம்பிகையின் காதல் ததும்பும் கண் ணோக்கத்தால் காமனை வென்ற பரமசிவன் தேவியின் கண்ணோக்கில் ஈடுபட்டு காம பரவசராகிறார். (68)

कामाक्षि विभ्रमबलैकनिधिर्विधाय
भ्रूवल्लिचापकुटिलीकृतिमेव चित्रम् ।
स्वाधीनतां तव निनाय शशाङ्कमौले:
अङ्गार्धराज्यसुखलाभमपाङ्गवीर: ॥

காமாக்ஷி விப்ரம பலைகநிதிர் விதாய

ப்ரூவல்லி சாபகுடிலீக்ருதி மேவ சித்ரம் |

ஸ்வாதீனதாம் தவநிநாய சசாங்க மௌலே

அர்தாங்க ராஜ்ய ஸுகலா பம பாங்க வீர: ||

காமாக்ஷி தேவியின் கண்ணோக்கம் என்ற போர் வீரன், தனது படை பலத்தை வைப்புநிதியாக வைத்துக் கொண்டு அதைப்பிரயோசிக்காமல் புருவக் கொடி என்னும் வில்லை வளைத்து சந்திரனைத் தலையில் சூட்டிக் கொண்ட பரம சிவனின் சரீரத்தின் பாதியாகிய ராஜ்ய போகத்தைப் பெற்று; அவரையே தன்வசப்படுத்தி விட்டாள். ஆச்சர்யமான விஷயம் தான் இது. இதை அபிராமிபட்டர். எப்படிக் கூறுகிறார் என்று பார்ப்போம்.

அதிசயமான வடிவுடையாள் அரவிந்த மெல்லாம்
துதி சய வானன சுந்தரவல்லி! துணை இரதி
பதி ஜயமானது அபஜெயமாக முன் பார்த்தவர் தம்
மதி ஜய மாக அன்றோ வாமபாகத்தை வவ்வியதே

இரதியின் கணவன் மன்மதன், பிற இடங்களில் பெற்ற வெற்றி எல்லாம் இழந்து தோல்வியடைய் சிவன் நெற்றிக் கண்ணால் நோக்கி மன்மதனை எரித்த புத்தியை (மதியை) வெற்றி கொண்டு தேவி அவரது இடப்பாகத்தைக் கவர்ந்து கொண்டாள். (69)

कामाङ्कुरैकनिलयस्तव दृष्टिपातः

कामाक्षि भक्तमनसां प्रददाति कामान् ।

रागान्वितः स्वयमपि प्रकटीकरोति

वैराग्यमेव कथमेष महामुनीनाम् ॥

காமாங்குரைக நிலயஸ்தவ த்ருஷ்டிபாத:

காமாக்ஷி பக்த மனஸாம் ப்ரததாது காமான் |

ராகான் வித: ஸ்வயமபி ப்ரகடீகரோதி

வைராக்யமேவ கதமேஷ மஹாமுனீனாம் ||

கனிவுடன் பக்தர் விரும்புவதை ஒரு கணத்தில் அருளும் காமாக்ஷியின் கண்ணோக்கம் என்றே பிரஸித்தி வாய்ந்தது. 'கா' என்ற சரஸ்வதியையும் 'மா' என்ற லக்ஷ்மி யையும் அக்ஷிகளாகக் கொண்டதால் தேவி காமாக்ஷி என்ற பெயர் பெறுகிறாள். காமனைத் தன் கண்ணிலிருந்து தோற்று வித்தாலும் காமாக்ஷி. காமனைகளைப் பூர்த்தி செய்வதாலும் காமாக்ஷி. இதில் இயல்பானது. எது? பக்தர் களுக்கு வரங்களை வாரி வழங்குவது. கண்ணில் கருநிறம் ராகத்தோடு அதாவது ஆசையோடு கூடியதாய் இருந்தும் இந்தக்

கடாக்ஷமானது மகா முனிவர்களுக்கு வைராக்யத்தை (நிறமற்றதன்மை) அளிக்கிறது. இது எப்படி என்று அதிசயக்கிறார். (70)

कालाम्बुवाहनिवहैः कलहायते ते
कामाक्षि कालिममदेन सदा कटाक्षः ।
चित्रं तथापि नितराममुमेव दृष्ट्वा
सोत्कण्ठ एव रमते किल नीलकण्ठः ॥

காலாம் புவ ாஹ நிவஹை: கலஹாயதே தே
காமாக்ஷி காலிமமதேன ஸதா கடாக்ஷ: |
சித்ரம் ததாபி நிதராமமுமேவ த்ருஷ்ட்வா
ஸோத்கண்ட ஏவ ரமதே கில நீலகண்ட: ||

காமாக்ஷி தேவியின் கடாக்ஷமானது கண்ணின் கரு நிறத் தின் செழுமையால் நீருண்ட மேகங்களுடன் எப்பொழுதும் போர்புரிந்து வருகிறது. நீண்ட மேகங்கள் மழையைப் பெய்கிறது. தேவியும் தன் கண்ணோக்கால் கருணை என் னும் மழையைப் பெய்கிறாள். எனவே தேவி மேகங்களுடன் போட்டியிடுவதாகக் கூறப்படுகிறது. இந்தக் கண்ணோக் கைக் கண்ட ஸ்ரீநீலகண்டரான பரமேஸ்வரன் இன்புறுகிறார். மேகங்களைக் கண்ட நீலகண்டமுடைய மயிலானது பேரா வலுடன் நடனமாடுகிறது. தான் கண்டு களிக்கும் மேகங்க ளுக்கு விரோதியானவனைக் கண்டு வருந்துவதில்லை. இது வும் ஆச்சர்யமே. (71)

कामाक्षि मन्मथरिपुं प्रति मारताप-
मोहान्धकारजलदागमनेन नृत्यन् ।
दुष्कर्मकञ्चुकिकुलं कबलीकरोतु
व्यामिश्रमेचकरुचिस्त्वदपाङ्गकेकी ॥

காமாக்ஷி மன்மதரிபும் ப்ரதிமாரதாப
மோஹாந்த காரஜலதாக மனேன ந்ருத்யன் |
துஷ்கர்ம கஞ்சுகிகுலம் கபலீகரோது
வ்யாமிச்ரமேசகருசி; த்வத பாங்க கேகீ ||

தேவி காமாக்ஷியின் கரிய காந்தி பொருந்திய கடைக் கண்ணோக்கானது மயில் போல் காண்கின்றது. மன்மத தாபத்தாலே உண்டான அஞ்ஞானமென்னும் இருண்ட கார்மேகத்தின் வருகையாலே மனங்களித்து, மன்மதனை

வென்றவரான பரமசிவனை நர்த்தனம் கொண்டே அந்த மயில் வருகிறது. மயிலைக் கண்டால் பாம்புகளுக்கு பயம் அல்லவா! எங்கள் தீவினைகள் என்ற பாம்புகளை தேவி என்னும் மயில் விழுங்கட்டும். தீவினைகள் என்ற வம்சங்களே அழியட்டும் என்று மூககவி கூறுகிறார். (72)

कामाक्षि मन्मथरिपोरवलोकनेषु
कान्तं पयोजमिव तावकमक्षिपातम् ।
प्रेमागमो दिवसवद्विकचीकरोति
लज्जाभरो रजनिवन्मुकुलीकरोति ॥

காமாக்ஷி மன்மதரிபோ: அவலோகனேஷு
காந்தம்பயோஜமிவ தாவக மக்ஷிபாதம் |
ப்ரேமாகமோ திவஸவத் வீக சீகரோதி
லஜ்ஜாபரோ ரஜனீவன் முகுலீகரோதி ||

பரமேஸ்வரன் மன்மதனை ஜயித்தவர். லலிதா தேவி சிதக்னிகுண்டத்தில் அவதாரமானவுடன் தேவர்கள் தேவிக்கு பட்டாபிஷேகம் செய்ய நினைத்து முதலில் விவாஹம் செய்யவேண்டுமே என்று கலந்தாலோசித்தார்கள். பரமேஸ் வரன் தான் இவருக்கு இசைந்த கணவர்; ஆனால் அவரோ ஸ்மசானவாசி, சாம்பலும் பூசி, சடையும் தரித்து, எலும்பு பூண்டவரான அவர் அதிமோகன சுந்தரிக்கு எப்படி பர்த்தா ஆவது என்று நினைக்கும்போது, பரமேஸ்வரன் பட்டு பீதாம்பரங்களும், சகல அணி, பணிகளும் பூண்டு மன மோகன ரூபத்துடன் அங்குவந்து நின்றார். அந்தத் தோற்றமே மன்மதனை வென்ற அழகுடைய காமேஸ்வரர் ஆகும். காமேஸ்வரரின் நோக்கில் தேவியின் கண்ணோக் கானது அழகான மலர் பகலில் மலர்வது போல் உள்ளது. தேவி நாணத்துடன் கண்களை மூடிக்கொள்வது இரவில் தாமரை கூம்புவது போலும் உள்ளது. பரமேஸ்வரன் அம்பிகையை அடிக்கடி பார்க்கின்றார். அவர் பார்க்காத போது தேவியின் கண்கள் பகலில் தாமரைமலர்வது போல் மலர்கிறது. அவர்பார்க்கும் போது நாணத்தில் மூடிக்கொள்வதை தாமரை மலர் இரவில் கூம்புவதோடு ஒப்பிடுகிறார். (73)

मूको विरिञ्चति परं पुरुषः कुरूपः
कंदर्पति त्रिदशराजति किंपचानः ।
कामाक्षि केवलमुपक्रमकाल एव
लीलातरङ्गितकटाक्षरुचः क्षणं ते ॥

மூகோவிரிஞ்சதி பரம்புருஷ: குரூப:
கந்தர்ப்பதி த்ரிதசராஜதி கிம்பசான:|
காமாக்ஷி கேவல முபக்ரமகால ஏவ
லீலாதரங்கித கடாக்ஷருச: க்ஷணம்தே||

தேவி காமாக்ஷியின் கடாக்ஷங்கள் விளையாட்டாகவே அலைமோதுவது போல் காந்தியுடன் க்ஷணப்பொழுது ஊமையின் மேல்பட்டாலும், அவன் நாலு வேதங்க ளையும் ஓதவல்ல பிரம்மாவாகிறான். மிகவும் குரூபியும் மன் மதனாகிறான். பரம ஏழையும் தேவவேந்திரனாகிறான். (74)

नीलालका मधुकरन्ति मनोज्ञनासा-
मुक्तारुचः प्रकटरूढबिसाङ्कुरन्ति ।
कारुण्यमम्ब मकरन्दति कामकोटि
मन्ये ततः कमलमेव विलोचनं ते ॥

நீலாலகா மதுகரந்தி மனோஜ்ஞநாஸா
முக்தாருச: ப்ரகட கந்த பிஸாங்குரந்தி |
காருண்யமம்ப மகரந்ததி காமகோடி
மன்யேதத: கமலமேவ விலோசனம் தே ||

அன்னையே காமகோடித்தாயே! மூகரின் இந்த வார்த் தைகள் 'காருண்ய மம்ப காமகோடி' மனதை இன்ப லாஹிரி யில் அமிழ்த்துகிறது. தேவியின் முகத்தாமரை, தாமரையில் மொய்க்கும் வண்டுக்கூட்டம் போல் கற்றையான சுருண்ட முன் உச்சி மயிர் புரள்கிறது ஸௌந்தர்யலஹரி 45. வெகு அழகான வர்ணனை. தேவியின் முகம் கமலம், பல்வரிசை அதன் கேஸரங்கள், நல் மணம் வாய்ந்த முகத்தாமரையில் மன்மதனை எரித்த சிவனின் கண்கள் என்ற தேன் வண்டுகள் மயங்குகின்றன. இயற்கையாகவே சுருட்டையானதும் சிறு வண்டுகள் சஞ்சரிப்பது போன்ற சோபையுடைய முன் உச்சி மயிர்களால் அலங்கரிப்பட்டு தாமைரையின் எழிலையும் பரிகசிக்கிறது. மூக்கிலுள்ள முத்தின் வெண்ணிற ஒளிகள், அத்தாமரைத் தண்டின் முனைகளாகவும் கண்ணில் பெருகும் கருணாரஸம் மகரந்தமாகிய தேனாகவும், தேவியின் கண்ணானது தாமரை மலரை ஒத்திருக்கிறது. (75)

आकाङ्क्ष्यमाणफलदानविचक्षणायाः
कामाक्षि तावककटाक्षककामधेनोः ।

संपर्क एव कथमम्ब विमुक्तपाश-
बन्धाः स्फुटं तनुभृतः पशुतां त्यजन्ति ॥

ஆகாங்க்ஷயமாண பலதான விசக்ஷணாயா:
காமாக்ஷி தாவக கடாக்ஷக காமதேனோ: |
ஸம்பர்க்க ஏவ கதமம்ப விமுக்த பாச
பந்தா: ஸ்புடம் தனுப்ருத பசுதாம் த்யஜந்தி ||

காமதேனு என்னும் பசு; பசுவின் தன்மை அதனுடன் பழகுகின்றவர் களையும் பாசத்தாலே கட்டுவது; ஆயினும் இந்தக் கண்ணோக்கு என்ற காமதேனுப் பசு, பாசத்தையும் நீக்கி பசுபதி நாதனின் பார்வைக்கு இலக்காகி றார்களே! மோக்ஷத்தையும் எய்துகிறார்களே! என்று வியக்கிறார். நம்மிடையே ஒரு கூற்று உண்டு அதாவது வித்தை வேண் டுமா? கலை மகளை வழிபடு; செல்வம் வேண்டில் திருவை வழிபடல், ஆரோக்யத்திற்கு சூரியன் இப்படி ஒவ்வொரு தேவைக்கும் ஒவ்வொரு வழிபாடு உண்டு. ஆனால் ஸ்ரீகாமாக்ஷி பராபட்டாரிகை, ஸ்ரீலலிதா மஹாத்ரிபுரசுந்தரி, ஸ்ரீராஜ ராஜேஸ்வரியை வழிபட்டால் அதுவும் ஸ்ரீவித்யா பத்ததியுடன் வழிபட்டால் அவர்கள் போகம், மோக்ஷம் இரண்டையும் பெற்று, இவ்வுலகிலும், அழியாப் புகழ் பெற்று வாழ் வார்கள் அமரத்வமும் பெறுவார்க்ள. (76)

संसारघर्मपरितापजुषां नराणां
कामाक्षि शीतलतराणि तवेक्षितानि ।
चन्द्रातपन्ति घनचन्दनकर्दमन्ति
मुक्तागुणन्ति हिमवारिनिषेचनन्ति ॥

ஸம்ஸார கர்ம பரிதாப ஜுஷாம் நராணாம்
காமாக்ஷி சீதல தராணி தவேக்ஷி தானி |
சந்த் ராதபந்தி கனசந்தன கர்தமந்தி
முக்தாகுணந்தி ஹிமவாரி நிஷே சனந்தீ ||

தேவி காமாக்ஷியின் குளிர்ந்த பனிபோன்ற கண் ணோக்கு, (காரணம் பனிமலை அரசனின் பெண்; பனி மலையில் 'மஹாகைலாஸநிலயா' வாக வசிக்கும் பரமேஸ்வர பத்தினி; அவர் பனி நிலாவை முடியில் சூடி, போதாதற்கு கங்கை யையும் தன் சடைமுடியில் சிறைப்படுத்தி வைத்திருக் கிறார்) அவள் பாதங்களில் தஞ்சமடைந் தோரின் கோடை வெயில் தாபத்தை, (ஆத்யா மிகம், ஆதி தைவிகம், ஆதி பௌதிகம்) என்ற மூவகைத் தாபங்களையும்

போக்கி, நிலவைப்போல் அமுதைப் பொழிகிறது. செழுஞ்சந்தனக் குழம்பை வாரி மாரில் பூசிக்கொண்டது போல் குளிர்ச்சியும் மகிழ்ச்சியும் தருகிறது. கடுங்கோடையில் பனிநீரை வாரி இறைத்தாற் போல் உஷ்ணத்தை சமனப்படுத்துகிறது.

'பாபத்திரள் தரும் தாபம் அகல வரும்
பழனி வளர் கருணை மழையே வா
தாபத்ரய வெயிலற நிழல் தருவான்தருவே

என்குல குருவே வா'ஸ்ரீபாபநாசம் சிவன் பாடலில் வராளி ராகத்தில் அமைந்த பாடல். (77)

प्रेमाम्बुराशिसततस्नपितानि चित्रं
कामाक्षि तावककटाक्षनिरीक्षणानि ।
सन्धुक्षयन्ति मुहुरिन्धनराशिरीत्या
मारद्रुहो मनसि मन्मथचित्रभानुम् ॥

ப்ரேமாம் புராசி ஸததஸ்னபிதானி சித்ரம்
காமாக்ஷி தாவக கடாக்ஷ நிரீக்ஷணானி |
ஸந்துக்ஷயந்தி முஹுரிந்தன ராசிரித்யா
மாரத்ருஹோ மனஸி மன்மத சித்ரபானும் ||

தேவி காமாக்ஷியின் கண்ணோக்கு எப்பொழுதுமே
பிரேமை என்னும் தண்ணீர்க் கடலில் மூழ்கி,

'சிவே சிருங்காரார்த்ரா' என்று பரமேஸ்வரனை நவ ரஸநாயகியான அம்பிகை, முதல் ரஸமான ச்ருங்காரத்தில் நனைக்கிறாள். நம் போன்றவர் களையும் 'ப்ரேமரூபா, ப்ரியங்கரீ' (ல.ஸ. நா. 730, 731) ஆக தயா ஸமுத்திரத் தில் நனைக்கிறாள். பிரேமை என்னும் கடைக்கண், தண்ணீரில் மூழ்கும் பரமேஸ்வரன், காய்ந்த விறகுக்குவியல்களின் தன்மைகொண்டு மன்மதனை எரித்தவர். இப்பொழுது அந்த மன்மதன் என்ற அக்னி நன்றாகக் கொழுந்து விட்டெ ரியும்படி அந்த அக்னியை போஷித்து வளர்க்கிறார். சிவனை ஸ்தாணு என்று கூறுவதுண்டு. (78)

कालाञ्जनप्रतिभटं कमनीयकान्त्या
कंदर्पतन्त्रकलया कलितानुभावम् ।
काञ्चीविहाररसिके कलुषार्तिचोरं
कल्लोलयस्व मयि ते करुणाकटाक्षम् ॥

காலாஞ்ஜனப்ரதிபடம் கமனீய காந்த்யா
கந்தர்ப்ப தந்த்ர கலயா கலிதானு பாவம் |
காஞ்சீ விஹாரரஸிகே கலுஷார்த்தி சோரம்
கல்லோலயஸ்வ மயிதே கருணா கடாக்ஷம் ||

ஸ்வயம் வர பார்வதி (கல்யாணி) என்று ஓர் மந்திரம் உண்டு. அதை விவாஹமாக வேண்டிய வரன், வதூக்கள் ஜபித்தால் அவர்களுக்கு விரைவிலேயே திருமணப் ராப்தி ஏற்படும். இந்த மந்த்ரத்தின் தேவதை கையில் மண மாலையுடன் நிற்கும் ஸ்வயம் வர பார்வதியேயாகும் இந்த தேவியே காமாக்ஷி என்ற பெயருடன் காமனை உயிர்ப் பித்து, காமசாஸ்திர ஞானங்களில் சிவனுக்கே உபதேசிக் கும். 'பஞ்ச சரசாஸ்த்ரபோதன, பரமாச்சார்யேண திருஷ்டி பாதேன' (ஆர்யாசதகம்) யோகேஸ்வரியாக, காம சாஸ்திரத்தின் தேவதையாக காஞ்சிபுரத்தில் விளங்கு கிறாள். உலக ரக்ஷணையில் காமனுக்கும் பெரும் பங்கு உண்டு. பரமேஸ்வரனை பவன், பவதேவர் என்று அழைக் கிறோம். மன்மதனுக்கும் பவன் என்ற பெயர் உண்டு. இவ்வளவு பெருமை வாய்நத ஸ்ரீகாமாக்ஷியின் கருணை நோக்கு நம் மீது அலைமோதிப்பாயட்டும் என்று ப்ரார்த்திப்போம். (79)

क्रान्तेन मन्मथमदेन विमोह्यमान-
स्वान्तेन चूततरुमूलगतस्य पुंसः ।
कान्तेन किञ्चिदवलोकय लोचनस्य
प्रान्तेन मां जननि काञ्चिपुरीविभूषे ॥

க்ராந்தேன மன்மதமதேன விமோஹ்யமான
ஸ்வாந்தேன சூததருமூல கதஸ்ய பும்ஸ: |
காந்தேன கிஞ்சிதிவ லோகய லோசனஸ்ய
ப்ராந்தேன மாம் ஜனனி காஞ்சிபுரீவிபூஷே ||

மன்மதன் தேவியின் கருணையால் உயிர்த்தெழுந்த வுடன் பரமசிவனைப் பழிவாங்கத் துடித்தான். காமாக்ஷி யின் கண்களிலிருந்து உண்டானதால் மன்மதன் தேவி யின் மகன் ஆகிவிட்டான். பரமேஸ்வரன் மேல் பஞ்ச பாணங்களை எய்தான். நெற்றிக்கண் கொண்டு எரித்தவர் இப்பொழுது செயலடங்கி நின்றார். பஞ்ச புஷ்ப பாணங்க ளையும் தாமரையை பத்மாஸனமாகமாகவும், அசோகத்தைப் பதக்கமாகவும், மாம்பூவைப் பீதாம்பரமாகவும் மல்லிகையை மாலையாகவும் அடுத்த நீலோத்த பலத்தை (நீலோத்பலம் ரதியின் அடையாளம்) தன் கண்களிலேயே காம

அபிப்ராயத்தையும் ஏற்றுக் கொண்டு, காமனிடம் தோற்று கல்யாண சுந்தரனாகி மாமரத்தடியில் தேவியின் கைத்தலம் பற்றிக் கல்யாண கோலம் கொண்டார். காமாக்ஷி தேவியின் கண்களினால் ஏற்பட்ட ப்ரபாவம், இவ்வளவு பெருமை வாய்ந்த கண்ணின் நோக்கு நம்மீதும் பரவட்டும்! (80)

कामाक्षि केऽपि सुजनास्त्वदपाङ्ग सङ्गे
कण्ठेन कन्दलितकालिमसंप्रदायाः ।
उत्तंसकल्पितचकोरकुटुम्बपोषाः
नक्तंदिवप्रसवभूनयना भवन्ति ॥

காமாக்ஷி கேபி ஸுஜனாஸ்த்வத பாங்க ஸங்கே
கண்டேன கந்தலித காலிமஸம்ப்ரதாயா: |
உத்தம்ஸ கல்பிதசகோர குடும்ப போஷா
நக்தந்திவ ப்ரஸவ பூநயனா பவந்தி ||

காமாக்ஷி தேவியின் கடாக்ஷ வீசேஷத்தால், நல்லவர்கள் எப்பொழுதும் தேவியின் த்யான தத்பரர்களாக விளங்கு பவர்கள், தேவியின் நினைவிலேயே மூழ்கி தேவியைப் போன்ற சியாமளவர்ணம், சிரஸில் சந்த்ரகலை, பகலையும், இரவையும் உண்டாக்கும் சூரிய, சந்திரர்கள் அவர்களுக்குக் கண்கள் இப்படி யெல்லாம் தேவியின் தாதாத்ம்யத்தை அடைகிறார்கள். இப்படியும் கூறலாம் பரமேச்வரனைப் போன்ற நீலகண்டமும், சகோரங்களின் குடும்பத்தை ரக்ஷிக்கும் பிறைச்சந்திரனைத் தலையில் சூடி சூரிய, சந்த்ரனை நேத்ரங்களாக உடைய பகவத்ஸ்வரூப, ஸாரூப்ய நிலையை அடைந்த தாகவும் கொள்ள லாம். சிவ-சிவா; இவர்களுக்குள் எந்த பேதமும் கிடையாது. சிவ வாழ்வு மலரப் பெற்று போகம் மோக்ஷம் என்ற பேறுகளை அடைந்து காமாக்ஷி தாஸர்கள் வாழ்வார்கள். (81)

नीलोत्पलप्रसवकान्तिनिदर्शनेन
कारुण्यविभ्रमजुषा तव वीक्षणेन ।
कामाक्षि कर्मजलधेः कलशीसुतेन
पाशत्रयाद्वयममी परिमोचनीयाः ॥

நீலோத்பல ப்ரஸவகாந்தி நிதர்சனேன
காருண்ய விப்ரம ஜுஷா தவ வீக்ஷணேன |
காமாக்ஷி கர்மஜலதே: கலசீ ஸுதேன
பாசத்ரயாத்வயமமீ பரிமோசனீயா: ||

தேவியின் கடைக்கண் இதுவிஷயத்தில் கும்பத்தில் பிறந்தவரான அகஸ்திய முனிவரின் செயலை செய்கிறது. ஏழுகடலையும் தன் உள்ளங்கையில் எடுத்து ஆசமனீயம் செய்தவர் அகஸ்தியர். எனவே இந்த இடத்தில் லோபா முத்ரையின் பதியான அகஸ்தியர் தேவியின் கண் நோக்குடன் ஒப்பிடப்பட்டார். காஞ்சிபுரத்துடன் அகஸ்திய மஹரிஷி தொடர்பு கொண்டவர். (82)

अत्यन्तचञ्चलमकृत्रिममञ्जनं किं
झंकारभङ्गिरहिता किमु भृङ्गमाला ।
धूमाङ्कुरः किमु हुताशनसंगहीनः
कामाक्षि नेत्ररुचि नीलिम कन्दली ते ॥

அத்யந்த சஞ்சலம் அக்ருத்ரிம மஞ்ஜனம் கிம்
ஜங்கார பங்கி ரஹிதாகிமு ப்ருங்கமாலா !
தூமாங்குர: கிமு ஹுதாசன ஸங்கஹீன:
காமாக்ஷி நேத்ரருசி நீலிமகந்தலீ தே ||

தேவி காமாக்ஷியின் கண்களின் காந்தியாகிய செழித்த கருமையானது ஒருவராலும் செய்யப்படாத மிகவும் அலை கின்ற ஸ்வபாவத்தை உடைய கண்ணின் மைபோல் தோற்று கிறது. அல்லது வண்டுகளின் கோர்வை போன்ற மாலையோ? வண்டுகளானால் ஜங்கார ஒலிகேட்க வேண்டும். கேட்காத ததால் இது வண்டின் வரிசையுமன்று. புகையின் கொழுந்து என்றால் அக்னியின் சம்பந்தம் காணப்படவில்லையே! எனவே இது புகையுமன்று தேவியின் கண்களின் கருநிறக் காந்திதான் இப்படியெல்லாம் தோற்றமளிக் கிறது. இந்த இடத்தில் என்னுடைய ஓர் அத்யந்த அனுபத்தைக் கூற வேண்டும். என ஆத்மநண்பர் திரு ரமேஷ் என்பவர் நம் வீட்டிற்கு அடிக்கடி வருவார். இருவரும் மணிக்கணக்கில் ஸ்ரீவித்யை பற்றியும் தெய்வீக விஷயங்கள் பற்றியும் பேசுவோம். 'மாமி' நான் காஞ்சி காமாக்ஷிக்கு அபிஷேகத்திற்கு, குறிப்பிட்ட தேதியில் ஏற்பாடு செய்துள்ளேன். நீங்களும் மாமாவும் அவசியம் வரவேண்டும். நீங்கள் பூந்தமல்லியில் எங்களைச் சந்தித்துக்கொண்டு, அதன்பின் ஒரே வாகனத்தில் காஞ்சிபுரம் செல்வோம் என்று ஒருநாள் கூறினார். குறிப்பிட்ட தினத்தில் நானும் என் கணவரும் பூந்த மல்லிசென்றோம். போகும் வழியிலே எனக்கு ஜுரம், கடுமையான தலைச்சுற்றல் வந்து விட்டது. எனவே நாங்கள் பூந்தமல்லியில் திரு. ரமேஷைச் சந்தித்து எங்களின் வர இயலாத நிலைமையைக் கூறிவீடு திரும்பிவிட்டோம். ஒருவாரம் கழித்து நாங்கள் திடீரென்று காஞ்சி சென்று கோவிலுக்குள் நுழையும்போதே திரு. ரமேஷைச் சந்தித்தோம். அவர் கூறினார் 'அன்று கோவில் குருக்கள் அபிஷேக ஏற்பாடுகள் செய்ய மறந்து விட்டாராம்.

எனவே இன்றுதான் அந்த அபிஷேகம் ஏற்பாடாகி இருக்கிறது. எப்படியோ காமாக்ஷி உங்களை அபிஷேகத்திற்கு வரும்படி செய்து விட்டாள்' என்றார். அம்மா காமாக்ஷி! உனக்கு என்ன கருணையாம்மா! நான் வந்தால்தான் அபிஷேகம் செய்து கொள்வாயா அம்மா! என் மனம் ஆயிரங்கோடி நன்றிகளைக் கூறியது. நாங்கள் அனைவரும் கண்குளிர, மனங்குளிர அபிஷேகம் கண்டோம் தேவிக்கு சந்தனக்காப்பு செய்தார்கள். சந்தனத்தில் குளித்ததேவியின் முகமலரில் கண்களைத் திறந்துவிட்டார்கள். இது என்ன நிஜமா! பிரமையா! நாம் காணு மிடங்களிலெல்லாம் தேவியும் தன் கருவழியை உருட்டி, உருட்டி, சுழற்றிப் பார்ப்பது தெரிந்தது. என்ன ரமேஷ்! இந்தக் கருவிழிகள் என்றவுடன் அவர் 'உங்களுக்கும் அப்படித் தெரிகிறதா? எனக்குத்தான் பிரமையோ என்று நினைத்தேன்' என்றார் என் கணவரும் அதையே கூறினார். தேவியின் பார்வையை சந்திக்கமுடியாமல் தலையைக் குனிந்து கொண்டேன். (83)

कामाक्षि नित्यमयमञ्जलिरस्तु मुक्ति-
बीजाय विभ्रम मदोदयघूर्णिताय ।
कंदर्पदर्पपुनरुद्भवसिद्धिदाय
कल्याणदाय तव देवि दृगञ्चलाय ॥

காமாக்ஷி நித்ய மயமஞ்ஜலிரஸ்து முக்தி
பீஜாய விப்ரம மதோதயகூர்ணிதாய |
கந்தர்ப் பதர்ப்ப புனருத்பவ ஸித்திதாய
கல்யாணதாய தவ தேவி த்ருகஞ்சலாய ||

அடியவர்களின் கோடி, கோடி விருப்பங்களையும் பூர்த்தி செய்வதால் அன்னை காமாக்ஷி காமகோடி ஆகிறாள். ஸ்ரீவித்யா உபாஸகர் கள் போகம், மோக்ஷம் இரண்டையும் அடைகிறார்கள். இப்படியாக வேண்டுவார்க்கு வேண்டியபடி உதவும் கண்க ளில் பெருமிதம் குடிகொண்டிருப்பது ஞாயமே ஆகும். தேவி தன் கண்களால் மன்மதனைத் தோற்று வித்தாள். பரமேஸ் வரன் மன்மதனை அழித்ததால் அவன் அங்கமின்றி, அனங்க னாகி காமாக்ஷியிடம் வந்து தனக்கு இறைவன் விளைத்த கொடுமைகளைக் கூறி நியாயம் வேண்டினான். தேவியும் விஷயங்களை சீர்தூக்கிப் பார்த்து, சிவனையும், சக்தியையும் சேர்க்கும் பணியினால் மன்மதன் தன்னை இழந்த தால், தேவி பரமகருணை கொண்டு அவனுக்கு ஊக்க மளித்தாள். (84)

दर्पाङ्कुरो मकरकेतनविभ्रमाणां
निन्दाङ्कुरो विदलितोत्पलचातुरीणाम् ।

दीपाङ्कुरो भवतमिस्रकदम्बकानां
कामाक्षि पालयतु मां त्वदपाङ्गपातः ॥

தர்ப்பாங்குரோ மகரகேதன விப்ராமாணாம்
நிந்தாக்குரோ விதலிதோத்பல சாதுரீணாம் |
தீபாங்குரோ பவதமிஸ்ரகதம்பகானாம்
காமாக்ஷி பாலயது மாம் த்வதபாங்கபாத: ||

மீனக்கொடியான மன்மதன் விஷயத்தில் தேவி அபாரமான கருணையைப் பொழிந்திருக்கிறாள். காமனை, பரமசிவனை ஜயித்த ஜயசீலனாக்க வேண்டி, அன்றுதான் கண்ணால், காமனை புனருற்பத்தி செய்ததைப்போல் இன்று கோடி காமர்களைத் தன் கண்ணினால் படைத்தாள். ஆயினும் யுத்தம் செய்யாமலேயே தோல்வியை ஒப்புக்கொண்டார். காமனின் செருக்கிற்குக் காரணமான தேவியின் கண்கள், மலர்ந்த கருநீலமலர்களை விட இன்னும் கறுப்பாக நீலோத்பலங்களை பழிப்பதாகவும், இருளைப்போல் இருந்தாலும், இருளின் கூட்டங்களை விரட்டும் தீபமாகவும் விளங்கும். (85)

कैवल्यदिव्यमणिरोहणपर्वतेभ्यः
कारुण्यनिर्झरपयः कृतमज्जनेभ्यः ।
कामाक्षि किंकरितशङ्करमानसेभ्यः
तेभ्यो नमोऽस्तु तव वीक्षणविभ्रमेभ्यः ॥

கைவல்ய திவ்யமணி ரோஹண பர்வதேப்ய:
காருண்ய நிர்ஜரபய: க்ருத மஞ்ஜனேப்ய: |
காமாக்ஷி கிங்கரிதசங்கர மானஸேப்ய:
ஸ்தேப்யோ நமோஸ்து தவ வீக்ஷண விப்ரமேப்ய: ||

ஸாலோக, ஸாமீப, ஸாரூபய, ஸாயுஜ்ய, கைவல்ய என்ற ஐந்து நிலைகளில் ஐந்தாவதான முக்தியே கைவல்யம் ஆகும். காமாக்ஷி தேவி கைவல்யம் என்ற முக்தியை அளிப்ப வள். பரமேஸ்வரன் தருவதாகவும் கொள்ளலாம். 'கைவல்ய பத தாயினி' ல.ஸ.நா.625. ஏற்றத்தைக் கொடுப்பதால் ரோஹணம் என்னும் பெருமலை என்று கைவல்யத்தைக் கூறலாம். பரமேஸ்வரன் 'சம்கரன்' சகல மங்களங்களையும் தருபவர். (86)

अल्पीय एव नवमुत्पलमम्ब हीना
मीनस्य वा सरणिरम्बुरुहां च किं वा ।

दूरे मृगी दृगसमञ्जसमञ्जनं च
कामाक्षि वीक्षणरुचौ तव तर्कयामः ॥

அல்பீய ஏவ நவமுத் பலமம்ப ஹீனா
மீனஸ்ய வாஸரணி ரம்புருஹாம் ச கிம் வா |
தூரே ம்ருகீத்ருக ஸமஞ்ஜஸ மஞ்ஜனம் ச
காமாக்ஷி வீக்ஷணருசாம் தவ தர்க்கயாம: ||

அப்பொழுதே மலர்ந்த கருநீல மலர் கண்களை விடப் பெரிதாகத்தான் இருக்கும். தேவியின் கண்களுடன் ஒப்பிடும்போது அது சிறியது தேவிதன் கயல் விழிகளால், நம்மைப் பேணிவளர்க்கிறாள். எனவே மீனாக்ஷி என்ற திருப்பெயரையும் தாங்கி நிற்கிறாள். மீன் கண் பார்வையி லேயே குஞ்சுகளைப் பராமரிப்பது போல் தேவியும் செயல் படுவதால் அங்கயற் கண்ணி என்று பெயர் ஆயினும் தேவியின் கண்கள் மீன்கள் துள்ளிச் செல்லும் பாங்கையும் இகழ்வதாக உள்ளது. மான் போன்ற மருட்சியுடைய விழி என்ப தால் மான்விழியாள் என்று கூறுவதுண்டு தேவியின் கண்ணுடன் ஒப்பு வைக்க முடியாதபடி, மானின் கண்கள் விளங்குகிறது. தாமரை ஓடையில் தாம ரைகள் வரிசையாகப் பூத்திருக்கும். தேவியின் கண்ணழகுக்குத் தாமரையை ஒப்புநோக்க இயலாது மை இட்டுக் கொள்வது கண்களுக்குத் தெளிவு ஏற்படவே, ஆயினும் தேவியின் விஷயத்தில் அதுவும் பொருத்த மன்று இப்படியெல்லாம் தேவியின் கண்களை மிக உயர்வாகக் கூறுகிறார். (87)

मिश्रीभवद्गरलपङ्किलशङ्करोरस्
सीमाङ्गणे किमपि रिङ्खणमादधानः ।
हेलावधूतललितश्रवणोत्पलोऽसौ
कामाक्षि बाल इव राजति ते कटाक्षः ॥

மிஸ்ரீ பவத்கரல பங்கில சங்கரோ ரஸ்
ஸீமாங்கணே கிமபி ரிங்கண மாததான: |
ஹேலாவதூ தலலித ச்ரவணோத் பலோऽஸௌ
காமாக்ஷி பால இவ ராஜதி தேகடாக்ஷ: ||

தேவி காமாக்ஷியின் கடாக்ஷமானது காலகூடவிஷம் நிறைந்த கழுத்தை யும், மார்பு என்னும் முற்றப் பிரதேசத் தையும் தழுவுவது போல் தோற்ற மளிக்கிறது. பரமேஸ்வரன் ஆலம் குடித்த வரலாறு யாவரும் அறிந்ததே. சங்கரரின் மார்புப் பிரதேசத்தில் தேவியின் கடாக்ஷம் செல்லும்போது , ஏற்க

னவே முன்பொரு பாடலில் குறிப்பிட்ட கரு நீலமலரைக் கீழே தள்ளிவிடும் குழந்தைபோல் விளங்குகிறது. கண்களின் காந்தி கருநீல மலரை இகழ்ந்து, காதளவோடிய கண்கள், எனவே தனதருகில் இருக்கத் தகுதி அல்லை என்று கீழே தள்ளிவிடுகிறது. (88)

प्रौढीकरोति विदुषां नवसूक्तिधाटी-
चूताटवीषु बुधकोकिललाल्यमानम् ।
माध्वीरसं परिमलं च निर्गलं ते
कामाक्षि वीक्षणविलासवसन्तलक्ष्मीः ।

ப்ரௌடீ கரோதி விதுஷாம் நவஸூக்தி தாடீ
சூதாடவீஷு புதகோகில லால்யமாநம் |
மாத்வீரஸம் பரிமல்ஞ்ச் நிரர்கலம் தே
காமாக்ஷி வீக்ஷண விலாஸ வஸந்த லக்ஷ்மீ: ||

வஸந்த காலத்தில் மாமரம் பூத்து இளந்தளிர்களோடு விளங்கும். குயில் அம்மாமரங்களின் இளந்தளிர், தேனையும் உண்பதாலேயே, அம்மணத்தை சுவைப்பதாலேயே, இனிய குரலோடு கூவுகிறது. தேவியின் கடாக்ஷத்தாலே தளிர்த்துப் பூத்த அறிவாளிகளின் தெய்வீகப் பாடல்களின் இனிமையையும் நறுமணத்தையும் புத்திமான்கள் உட்கொண்டு அதைக் கொண்டாடுகிறார் கள். காமாக்ஷியின் வீக்ஷண மென்னும் 'வஸந்த லக்ஷ்மி' என்ற இடம் வெகு அருமை. (89)

कूलंकषं वितनुते करुणाम्बुवर्षी
सारस्वतं सुकृतिनः सुलभं प्रवाहम् ।
तुच्छीकरोति यमुनाम्बुतरङ्गभङ्गी
कामाक्षि किं तव कटाक्षमहाम्बुवाहः ॥

கூலங்கஷம் விதனுதே கருணாம்புவர்ஷீ
ஸாரஸ்வதம் ஸுக்ருதின: ஸுலபம் ரவாஹம் |
துச்சீ கரோதி யமுனாம் புதரங்க பங் கீம்
காமாக்ஷி கிம் தவ கடாக்ஷ மஹாம் புவாஹ: ||

காமாக்ஷி தேவியின் கடாக்ஷம் நீருண்ட மேகம் போல் கருணை மழை பொழிகிறது. அந்தக் கடாக்ஷ பாக்யத்தைப் பெற்ற புண்ணியவான்களின்

வாக்கில் சரஸ்வதி நதி என்ற வாக்வெள்ளத்தையும் கரை புரண்டு ஓடும்படி செய்கிறது. யமுனா நதி பூமியில் பள்ளத்தாக்கில் அலை, மேலலையாகப் பெருகுகிறது. யமுனையும் கருநிறம் படைத்ததுதான். கடாக்ஷமென்னும் கருநிறத்துடன் அது போட்டி போட முடியாது, என்பதாக யமுனை நதியைப் பழித்து, ஸரஸ்வதி நதிக்குப் பெருமை அளித்து கடாக்ஷம் என்ற பெருநதி யானது சுயேச்சையாக விளையாடுகிறது. (90)

जागर्ति देवि करुणाशुकसुंदरी ते
ताटङ्करत्नरुचि दाडिमखण्डशोणे ।
कामाक्षि निर्भरकटाक्षमरीचि पुञ्ज-
माहेन्द्रनीलमणिपञ्जरमध्यभागे ॥

ஜாகர்த்தி தேவி கருணா சுகஸுந்தரீதே
தாடங்க ரத்ன ருசி தாடிம கண்ட சோணே |
காமாக்ஷி நிர்பர கடாக்ஷமரீசி புஞ்ஜ
மாஹேந்த்ர நீலமணி பஞ்ஜரமத்ய பாகே ||

தேவி காமாக்ஷியின் கடைக்கண்ணின் கடாக்ஷத்தின் காந்தி காதுகளின் எல்லையைத் தாண்டியும் பரவியிருப்பதால், அந்தக் கடாக்ஷகாந்தி என்னும் இந்த்ர நீலரத்ன மணிக் கூண்டின் மத்தியிலே தாடங்கத்தின் செவ்வொளி மாதுளை முத்துக்கள் வைக்கப்பட்டது போல் காண்கிறது காதோலை களிலுள்ள ரத்னங்களின் ஒளிமயமான மாதுளையின் துண் டத்தாலே சிவந் துள்ள மத்திய பாகத்திலே தேவியின் கருணை என்னும் பெண்கிளி அதைக் கொத்தும் பொருட்டு விழித்துக் கொண்டிருக்கிறது கருணை என்னும் கடா க்ஷம் காந்தி கண்மணி என்ற கூண்டின் மத்தியிலே தாடங்கத்தின் செவ்வொளி மாதுளங்களியின் துண்டம்போல் வைக்கப்பட்டி ருக்கிறது இப்படிப்பட்ட தேவியின் கருணை எப்பொழுதும் விழித்த வண்ணமாய் நம்மை ரக்ஷிக்கக் காத்திருக்கிறது. (91)

कामाक्षि सत्कुवलयस्य सगोत्रभावात्
आक्रामति श्रुतिमसौ तव दृष्टिपातः ।
किं च स्फुटं कुटिलतां प्रकटीकरोति
भ्रूवल्लरीपरिचितस्य फलं किमेतत् ॥

காமாக்ஷி ஸத்குவலயஸ்ய ஸகோத்ரபாவாத்
ஆக்ராமதி ச்ருதிமஸௌ தவ த்ருஷ்டிபாத: |

கிம்ச ஸ்புடம் குடிலதாம் ப்ரகடீகரோதி
ப்ரூவல்வரீ பரிசிதஸ்ய பலம் கிமேதத் ||

தேவி காமாக்ஷியின் நீலோற் பலம் போன்ற கரு விழிகள் கருநீல மலர் என்ற குலத்தின் வழியில் வந்ததால் இந்தக் கடைக்கண்கள் சுருதியை அனுசரித்தே (அதவாது காதள வோடிய கடைக்கண் கடாக்ஷம்) செல்கிறது. அப்படியும் கொஞ்சம் கோணலையும் வெளிப்படுத்துகிறதே! அது எப்படி? புருவக் கொடியோடு பழகுவதால் தான் அப்படி இருக் கும். நற்குடியிற் பிறந்தோர்கள். ச்ருதி என்னும் வேத மார்க் கத்தை விட்டுவிலக மாட்டார்கள். சில சமயம் அவர்களும் ஸஹவாச தோஷத்தால் கெட்டுப்போவார்கள் என்பதை சிலேடையாகக் கூறுகிறார். (92)

एषा तवाक्षिसुषमा विषमायुधस्य
नाराचवर्षलहरी नगराजकन्ये ।
शङ्के करोति शतधा हृदि धैर्यमुद्रां
श्रीकामकोटि यदसौ शिशिरांशुमौलेः ॥

ஏஷாம் தவாக்ஷி ஸுஷமா விஷமாயுதஸ்ய
நாராசவர்ஷலஹரீ நகராஜ கன்யே |
சங்கே கரோதி சததாஹ்ருதி தைர்ய முத்ராம்
ஸ்ரீகாமகோடி யதஸௌ சிசி ராம் சுமௌலே: ||

பரமசிவனின் மனதின் திடத்தை (தைரியத்தை) மன்மதன் ஐந்து புஷ்ப பாணங்களினாலேயே தைரியம் என்ற கேடயத் தைத் தகர்த்து விட்டான். மன்மதன் புஷ்பங்களையே சரமாக்கி மழையைப் போல் தேவனின் கடினமான மார்பில் வர்ஷித்தான். மன்மதன் முதல் அம்பான தாமரை மலரை சிவன் மேல் எறிந்தான். இதுகாறும் பிரேதாஸனம் கொண்ட பரமேஸ்வரன் பத்மாஸனம் கொண்டார். அடுத்து அசோ கத்தை, சோகமில்லாமல் சந்தோஷத்துடன் மாலையில் அணிந்தார். அடுத்து மாம்பூ, தளிர், ஆடையாகியது. அடுத்து மல்லி, முல்லைகளை மாலையாகச் சூடினார். கடைசியில் நீலோத் பலம் வந்தது எந்த நெற்றிக்கண் அன்று அக்னியாகக் காமனை எரித்ததோ அதே கண்ணில் மேல் திலகமாக வந்து அமைந்தது. பரமேஸ்வரனின் வெள்ளை நெற்றியில் நீல நிலவைப் போல் நீலோத்பலம் ஒளி வீசிற்று. எந்தப் பஞ்ச பாணனைத் தீக்கிரையாக்கினாரோ, அதே பஞ்சபாணத்தால், பரமேஸ்வரன் தேவியை, மணக்க வேண்டிய தகுதிகள் அனைத்தையும், அந்த பஞ்சபாணனான காமனே அளித் தான். பஞ்சமியை பஞ்சமவருடன் சேர்த்து வைத்தான். (93)

बाणेन पुष्पधनुषः परिकल्प्यमान-
त्राणेन भक्तमनसां करुणाकरेण ।
कोणेन कोमलदृशस्तव कामकोटि
शोणेन शोषय शिवे मम शोकसिन्धुम् ॥

பாணேன புஷ்பதனுஷ: பரிகல்ப்யமான
த்ராணேன பக்த மனஸாம் கருணாகரேண |
கோணேன கோமலத்ருச: தவ காமகோடி
சோணேன சோஷய சிவே மம சோக ஸிந்தும் ||

தேவி காமாக்ஷியின் கண்களினின்றும் மன்மத பாணங்களைத் தொடுத் தடிக் கும் விஷயத்தில் தேவிகாமாக்ஷி மிக, மிக, ஓத்தாசையாக இருக்கிறாள் என்பது தெளிவு. அதே சமயத்தில் பக்தர்களின் மனங்களைப் பாதுகாக்கும் செயலை யும் தேவியின் கருணைக் கண்களே செய்கிறது. கருணைக் குப் பிறப்பிடமாகிறதும், கடைக்கண் சிவந்துமுள்ள தேவி யின் தயா திருஷ்டி நம்மேல் எப்பொழுதும் விழுந்து துன்பக் கடலை வற்றச் செய்யவேண்டும். தேவியின் கடாக்ஷத்தை ஒரு பாணமாகக் கொண்டு, ஸ்ரீராமரின் ஒரு பாணம் கடலை வற்றவைத்ததுபோல் என் துன்பக் கடலை வற்ற வைப்பா யம்மா! என்று வேண்கிறார். (94)

मारद्रुहा मुकुटसीमनि लाल्यमाने
मन्दाकिनीपयसि ते कुटिलं चरिष्णुः ।
कामाक्षि कोपरभसाद्वलमानमीन-
संदेहमङ्कुरयति क्षणमक्षिपातः ॥

மாரத்ருஹா முகுடஸீம்னி லால்யமானே
மந்தாகினீ பயஸி தே குடிலம் சரிஷ்ணு: |
காமாக்ஷி கோபரபஸாத் வலமான மீன
ஸந்தேஹ மங்குரயதி க்ஷணமக்ஷி பாத: ||

மன்மதனை வென்ற பரமசிவன் தன் முடியில் மீது கங்கை என்னும் நதி மங்கையைத் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டாடுகிறார். கோபம் கொண்டதேவி சக்களத்திக் காய்ச்சலால் தன் பார்வையை கங்கை மீது செலுத்துகிறாள் கோபத்தால் வளைந்த நோக்கு வளைந்து செல்லும் மீன்

போல் தோற்றமளிக்கிறது. பர்வதராஜனுக்கு இருபெண்கள். கங்கை பார்வதி இருவரையுமே பரமசிவனுக்குப்பர்வதன், அளித்துவிட்டார். இதையே தாயுமான ஸ்வாமிகள் 'வரை ராஜனுக்கு கிருகண் மணியா யுதித்தமலைவளர் காதலிப் பெண் உமையே' என்று கூறுகிறார். இரண்டு பெண்டாட்டிக் காரரான பரமேஸ்வரன் படும்பாடு சொல்லத்தரமன்று ஒரு மனைவியைத் தலையில் மேலேயே வைத்துக் கொண்டு கூத்தாடுகிறார். நம் அன்னை தன் உடம்பில் பாதி பாகத் தையே கொடுத்து அர்த்த நாரீச்வராக நிற்கிறார். இதைத்தான் நம் அன்னை மதி ஒளி சரஸ்வதி அவர்கள் 'கற்பூரக்கனல்' என்ற கவிதைக் தொகுப்பில் 'ஏழையடா-அவன்-இறைவ னடா' என்ற பாடலில் வெகு அழகாகக் கூறுகிறார். 'பூசை யென்று கல்லடியைப் பொறுமையுடன் ஏற்றுநின்ற' ஏழை யடா இறைவன். (95)

தன்னுடைய வீட்டிலும்
தான்பாதி இழந்துவிட்டும
என்ன இனி இழப்பதற்கோ
ஏழை இந்த இறைவனுக்கே - ஏழையடா. அவள். இறைவனடா

कामाक्षि संवलितमौक्तिककुण्डलांशु
चञ्चत्सितश्रवण चामरचातुरीकः ।
स्तम्भे निरन्तरं अपाङ्गमये भवत्या
बद्धश्चकास्ति मकरध्वजमत्तहस्ती ॥

காமாக்ஷி ஸம்வலித மௌக்திக குண்டலாம்சு
சஞ்சத்ஸித ச்ரவண சாமர சாதுரீக: |
ஸ்தம் பே நிரந்தரமபாங்க மயே பவத்யா
பத்தஸ்சகாஸ்தி மகரத்வஜ மத்தஹஸ்தீ ||

காமாக்ஷி தேவியின் நீண்ட கரிய நிறமுடைய கடைக் கண் களை கல் தூணுக்கு ஒப்பிடுகிறார். அந்தக் கல்தூணில் கட்டப்பட்ட மீன்கொடியோனான மன்மதன் என்னும் மத யானை, ஓரங்களில் கட்டிய முத்துக்களின் வெண்மை ஒளி பொருந் திய ரத்ன குண்டலத்தின் கிரணங்கள் என்னும் வெண்சாமரங்க ளாகிய காதுகள் இரண்டையும் அசைப்பதில் தேர்ச்சியுடன் விளங்குகிறது. கடாக்ஷத்தில் கட்டப்பட்ட மன்மதன் யானை; முத்து மாலை பூண்ட அந்த யானையின் காதுகள் வெண்சாம ரங்கள். அவை தேவிக்கு இரு புறமும் வீசப்படுகிறது. (96)

यावत्कटाक्षरजनीसमयागमस्ते
कामाक्षि तावदचिरान्नमतां नराणाम् ।

आविर्भवत्यमृतदीधितिबिम्बमम्ब
संविन्मयं हृदयपूर्वगिरीन्द्रशृङ्गे ॥

யாவத் கடாக்ஷ ரஜனீ ஸமயாகமஸ்தே
காமாக்ஷி தாவ தசிராந்நமதாம் நராணாம் |
ஆவிர்பவத்யம்ருத தீதிதி பிம்ப மம்ப
ஸம்வின் மயம் ஹ்ருதய பூர்வ கிரீந்த்ரச்ருங்கே ||

தேவி காமாக்ஷியின் கடாக்ஷம் என்ற மாலைப் பொழுதின் வரவு எப்பொழுது நேர்கின்றதோ, அப்பொழுது உன்னை வணங்கும் பக்தர்களுக்கு சிறிதும் தாமதமில்லாமல், அவர்க ளுடைய மனமென்னும் சிறந்த உதய பர்வதத்தின் கொடு முடியில் ஸம்வித் ஞானமென்னும் அமிர்த கிரணங்களையு டைய சந்தர மண்டலமானது நன்கு விளங்குகிறது. தேவி யின் கடைக்கண்நோக்கு ஏற்பட்டவுடனேயே சிறிதும் தாமத மின்றி ஸம்வித், நன்றாய் விகஸித்த ஞானம் ஏற்படுகிறது. ஞானத்தை வர்ணிக்க இயலாது அது அனுபவம் ஆக வேண்டும். (97)

कामाक्षि कल्पविटपीव भवत्कटाक्षो
दित्सुः समस्तविभवं नमतां नराणां ।
भृङ्गस्य नीलनलिनस्य च कान्तिसंपत्-
सर्वस्वमेव हरतीति परं विचित्रम् ॥

காமாக்ஷி கல்பவிடபீவ பவத்கடாக்ஷோ
தித்ஸு: ஸமஸ்த விபவம் நமதாம் நராணாம் |
ப்ருங்கஸ்ய நீல நலினஸ்ய சகாந்தி ஸம்பத்
-ஸர்வஸ்வமேவ ஹரதீதி பரம் விசித்ரம் ||

தேவி காமாக்ஷியின் கடாக்ஷமானது தன்னை வணங்கும் மனிதர்களுக்கு கற்பக விருக்ஷம் போல் எல்லா வைபவங் களையும் அளிக்கிறது. வேண்டு பவர்கரு வேண்டியவற்றைத் தடையின்றி வாரிவழங்கும் தேவியின் கடாக்ஷம் நீலோத் பலம். வண்டு இவற்றின் கரிய காந்தி என்னும் செல்வத்தையும் அவைகளிடமிருந்து அபஹரிக்கிறது அதாவது நீலோத்பலத்தையும். கருவண்டினையும் இகழும் கருநீல மலர்போன்ற கடாக்ஷம். தேவியின் கண்கள் ஒருக்கால், கருநீல மலர், கரு வண்டு இவைகளிடமிருந்துதான் கருமையை எடுத்துக் கொண்டதோ என்ற ஐயப்பாடு ஏற்படுகிறது. (98)

अत्यन्तशीतलं अनर्गलकर्मपाक
काकोलहारि सुलभं सुमनोभिरेतत् ।
पीयूषमेव तव वीक्षणं अम्ब किन्तु
कामाक्षि नीलमिदमित्ययमेव भेदः ॥

அத்யந்த சீதலம் அனர்கல கர்மபாக
காகோலஹாரி ஸுலபம் ஸுமனோ பிரேதத் |
பீயூஷமேவ தவ வீக்ஷணமம்ப கிந்து
காமாக்ஷி நீலமித மித்யயமேவ பேத: ||

காமாக்ஷியின் கடாக்ஷமானது மிகவும் குளிர்ச்சியுடையதாயும், தடையில்லாத இரு வினைப்பயன் களின் விஷத் தைப் போக்குவதும் தேவர்களுக்கும், நல்ல வர்கள் எல்லோ ருக்குமே எளிதில் கிடைக்ககூடிய இந்தப் பார்வை, இந்த குணங்களால் அமிர்தம் போன்றது ஆனால் தேவியின் கண்கள் கருநீல நிறமுடையது என்ற இது ஒன்றுதான் அமிர் தத்திற்கும் இதற்குமுள்ள வித்தியாசம். (99)

अज्ञात भक्तिरसं अप्रसरद्विवेकं
अत्यन्तगर्वं अनधीत समस्तशास्त्रम् ।
अप्राप्तसत्यं असमीपगतं च मुक्तेः
कामाक्षि नैव तव काङ्क्षति दृष्टिपातः ॥

அக்ஞாத பக்திரஸம ப்ரஸரத்விவேகம்
அத்யந்த கர்வம் அனதீத ஸமஸ்த ஸாஸ்த்ரம் |
அப்ராப்த ஸதயம் அஸமீபகதம்ச முக்தே:
காமாக்ஷி நைவ தவ காங்க்ஷதி த்ருஷ்டிபாத: ||

'பக்தியின் சுவையை அறியாதவனும், பகுத்தறிவு கொஞ் சமும் இல்லாதவனும், வேத சாஸ்திரங்களை ஓதி உணராதவனும், ஸத்யப் பொருளைப் பெறாதவனும், மோக்ஷத்திற்கு அருகே செல்லாதவனுமானவனை, தேவியின் கண்ணோக்கம் ஒரு பொழுதுமே விரும்புவதில்லை. அப்படி இருக்கின்ற என் னை உனது கருணை ததும்பும் கடைக்கண்களால் காத்தருள்வாயாக என்று கவி நமக்காக தேவியிடம் வேண்டுகிறார். கடாக்ஷமானது ஒருவனையும் துர்க்குணங்களை உடையவனாக இருக்க விடுவதில்லை. பக்தியின் சுவையை அறிந்து கர்வத்தை ஒழித்து பகுத்தறி வுடன் சாஸ்திரங்களைக் கற்று உண்மையை உணர்ந்து நற்கதியில் கொண்டு சேர்க்கும் என்பது கருத்தாகும்.(100)

पातेन लोचनरुचेस्तव कामकोटि
पोतेन पातकपयोधि भयातुराणाम् ।
पूतेन तेन नवकाञ्चनकुण्डलांशु-
वीतेन शीतलय भूधरकन्यके माम् ॥

பாதேன லோசனருசே: தவ காமகோடி
போதேன பாதகபயோதி பயாது ராணாம் |
பூதேன தேன நவகாஞ்சன குண்டலாம் ஸு
வீதேன சீதலஸ்ய பூதரகன்யகே மாம் ||

காமகோடியே! மலைமகளே! பாபங்கள் நிறைந்த கடலிலே விழுந்து பயத்தாலே வருந்துகின்றவர்களுக்குப் புணையா கவும். பரிசுத்தமதான தாயும், பொன்னாற் செய்த குண்டலங் களின் புதிய ஒளியாலே சூழப்பெற்றதான அந்தக் கண்ணொ ளியின் வீச்சினால் என்னுடைய அகமும் புறமும் குளிரும்படி செய்தருள் வேண்டும்.

ஏதத் கடாக்ஷ சதகம் கனஸார ரம்யம்
பக்த்யாஸக்ருத் படதிய: க்ருத நித்ய கர்மா
தஸ்மை ப்ரஸீததிதராம் கில காமகோடி:
தர்மாத்த காமமதுலம் பரமஞ்ச ஸௌக்யம்!!

இந்தக் கடாக்ஷ சதகத்தை தினசரி படிப்பவர்கள், ஸ்ரீகாம கோடித்தாயின் கருணையால் தர்மார்த்த காமமோக்ஷம் என்ற சகல சௌக்யங்களையும் அடைவார்கள். (101)

# 5. மந்தஸ்மித சதகம்

बध्नीनो वयमञ्जलिं प्रतिदिनं बन्धच्छिदे देहिनां
कन्दर्पागमतन्त्रमूलगुरवे कल्याणकेलीभुवे ।
कामाक्ष्या घनसारपुञ्जरजसे कामाद्रुहश्चक्षुषां
मन्दारस्तबकप्रभामदमुषे मन्दस्मितज्योतिषे ॥

பத்நீமோ வயமஞ்ஜலிம் ப்ரதி தினம் பந்தச்சிதே தேஹிநாம்
கந்தர்ப்பாகம தந்த்ரமூல குரவே கல்யான கேளீபுவே |
காமாக்ஷ்யா கநஸாரபுஞ்ஜரஜஸே காமத்ருஹச் சக்ஷுஷாம்
மந்தார ஸ்தபக ப்ரபா மதமுஷே மந்தஸ்மி ஜ்யோதிஷே ||

மாந்தர்களின் பாபசம்பந்தத்தை ஒழிக்கிறதாயும், கோகேஹ சாஸ்திரம் என்னும் மன்மதனுடைய ஆகம தந்த்ரத்திற்கு ஆதிகுருவும், மங்களங்களுக்கு விளையாட்டிடமும், தேவி பத்ரம் என்னும் மங்களமே வடிவானவள். காமாரியான பரம சிவனின் கண்களுக்கு மலர்ச்சியை ஏற்படுத்தும் பச்சைக் கர்ப்பூரப் பொடியாகவும், மந்தாரப்பூங்கொத்தின் காந்திக்கு உள்ள கர்வத்தை அடக்குவதுமான, தேவி காமாக்ஷியின் புன்சிரிப் பின் ஜோதியை நாம் ஒவ்வொரு நாளும் அஞ்ஜலி செய்து வணங்குகிறோம். கல்யாணம், மங்களம் என்ற சொல்லுடனேயே இந்த சதகத்தைத்துவக்குவது குறிப்படத்தக்கது.

மங்களே மங்களாதாரே மாங்கள்யே மங்களப்ரதே
மங்களார்த்தம் மங்களேசி மாங்கல்யம் தேஹிமேஸதா
ஸர்வ மங்கள மாங்கல்யே சிவேஸர்வார்த்த ஸாதிகே
சரண்யே த்ரியம்பகே கௌரீ நாராயணி நமோஸ்துதே (1)

सध्रीचे नवमल्लिकासुमनसां नासाग्रमुक्तामणेः
आचार्याय मृणालकाण्डमहसां नैसर्गिकाय द्विषे ।
स्वर्धुन्या सह युध्वने हिमरुचेरर्धासनाध्यासिने
कामाक्ष्याः स्मितमञ्जरीधवलिमाद्वैताय तस्मै नमः ॥

ஸத்ரீசே நவமல்லிகா ஸுமநஸாம்
நாஸாக்ர முக்தாமணே:
ஆசார்யாய ம்ருணாள காண்ட
மஹஸாம் நைஸர்கிகாயத்விஷே |

ஸ்வர்துந்யா ஸஹ யுத்வநே
ஹிமருசேரர்த்தா ஸநாத்யாஸிதே
காமாக்ஷ்யா: ஸ்மிதமஞ்ஜரீ தவளி
மாதவைதாய தஸ்மை நம: ||

கொடைமல்லிகைப் புஷ்பங்களுக்கு ஸமானமாயும், மூக்கில் நுனியில் இருக்கும் சிறந்த புல்லாக்கு முத்துக்கு ஆசார்யனாயும், தாமரைத் தண்டின் காந்திகளுக்கு இயற்கை யான சத்துருவாகவும், தேவ கங்கையோடு எதிர்த்து யுத்தம் செய்வதும், சந்த்ரனோடு ஒரே ஆசனத்தில் அமர்வதுமான, புன்னகை என்ற பூங்கொத்து ஒளியுடன் திகழ்கிறது. கங்கை நீர் நுரைகளுடன் ஆகாயத்திலிருந்து விழும் போது வெண்மையான பூங்கொத்து போல் காணப்படும். (2)

कर्पूरद्युतिचातुरीं अतितरां अल्पीयसीं कुर्वती
दौर्भाग्योदयमेव संविदधती दौषाकरीणां त्विषाम् ।
क्षुल्लानेव मनोज्ञमल्लिनिकरान्फुल्लानपि व्यञ्जती
कामाक्ष्या मृदुलस्मितांशुलहरी कामप्रसूरस्तु मे ॥

கர்பூரத்யுதி–சாதுரீமதிராம்
அல்பீயஸீம் குர்வதீ
தௌர்பாக்யோதயமேவ ஸம்விதததீ
தௌஷாகரீ ணாம்த்விஷாம் |
க்ஷுல்லாநேவ மனோக்ஞ–மல்லி
நிகராந் புல்லாநபீ வ்யஞ்ஜதீ
காமாக்ஷ்யாம்ருதுல ஸ்மிதாம்சு–
லஹரீகாம ப்ரஸூரஸ்துமே ||

கற்பூரக் கட்டியின் அழகிய காந்தியை மிகவும் அல்பமாகச் செய்கிற தாயும், சந்திரனின் காந்திகளுக்கு அழகில்லாமை யையே செய்வதாக வும், மலர்ந்த நல்ல மல்லிகைப் பூக்க ளையும் அல்பமாக தோன்றும் படி செய்கிறதாயு மிருக்கிற காமாக்ஷிதேவியின் மேன்மேலும் வளரும் மெல்லிய புன்னகை யின் காந்தி நம் விருப்பங்களை நிறைவேற் றட்டும். (3)

या पीनस्तनमण्डलोपरि लसत्कर्पूरलेपायते
या नीलेक्षणरात्रिकान्तिततिषु ज्योत्स्नाप्ररोहायते ।
या सौन्दर्यधुनीतरङ्गततिषु व्यालोलहंसायते
कामाक्ष्याः शिशिरीकरोतु हृदयं सा मे स्मितप्राचुरी ॥

யாபீன–ஸ்தந–மண்டலோபரி
ல்ஸத் கர்ப்பூரலேபாயதே
யாநீலேக்ஷண–ராத்ரி–காந்தி–ததிஷு
ஜ்யோத்ஸ்நா ப்ரரோஹாயதே |
யாஸௌந்தர்ய–துநீ தரங்க
ததிஷுவ்யாலோல ஹம்ஸாயதே
காமாக்ஷ்யா: சிசிரீ கரோது ஹ்ருதயம்
ஸாமேஸ்மித–ப்ராசுரி ||

எந்த நிறைந்த புன்சிரிப்பானது பருத்தஸ்தந மண்டலத்தின் மேல் பிரகாசிக்கின்ற பச்சைக் கர்ப்பூரப் பூச்சாகத் தோன்றுகிறதோ, எந்தப் புன்சிரிப்பானது கருத்த கடாக்ஷங் களின் காந்தியாகி இராக்காலக்கூட்டத்தில் புதிய நிலாவாகத் தோன்றுகிறதோ, எந்த புன்சிரிப்பானது அழகு என்ற நதியின் அலைகளில் ஸஞ்சரிக்கின்ற ஹம்ஸமாகத் தோன்றுகிறதோ, அப்படிப்பட்ட காமாக்ஷியின் நிறைந்த புன்சிரிப்பானது நம் மனதைக் குளிரச் செய்யட்டும்.(4)

येषां गच्छति पूर्वपक्षसरणिं कौमुद्वतः श्वेतिमा
येषां संततमारुरुक्षति तुलाकक्ष्यां शरच्चन्द्रमाः ।
येषामिच्छति कम्बुरप्यसुलभां अन्तेवसत्प्रक्रियां
कामाक्ष्या ममतां हरन्तु मम ते हासत्विषां अङ्कुराः ॥

யேஷாம் கச்சதி பூர்வபக்ஷ–ஸரணிம்
கௌமுத்வத: ச்வேதிமா
யேஷாம் ஸந்த தம் ஆருருக்ஷதி
துலாகக்ஷ்யாம் சரத்–சந்த்ரமா: |
யேஷாமிச்சதி கம்புரப்ய ஸுலபாம்
அந்தே–வஸத்ப்ரக்ரியாம்

காமாக்ஷ்யா மமதாம் ஹரந்து மமதே
ஹாஸ த்விஷா மங்குரா: ||

தேவி காமாக்ஷியின் மந்த ஹாஸத்தின்முன் அல்லியின் வெண்மை தோல்வியடைகிறது சரத்கால சந்திரன் சமநிலை அடைய எப்பொழுதும் விரும்புகிறான். வெள்ளொளிவீசும் சங்கு தேவியின் மந்தஹாஸத்தின் முன் சீடனாயிருக்க அவாவுகின்றது. அந்த மந்தஹாஸத்தின் முளைகள் எனது மமதையைப் போக்கடிக்கட்டும். (5)

आशासीमसु संततं विदधती नैशाकरीं व्याक्रियां
काशानां अभिमानभङ्गकलनाकौशल्यं आबिभ्रती ।
ईशानेन विलोकिता सकुतुकं कामाक्षि ते कल्मष-
क्लेशापायकरी चकास्ति लहरी मन्दस्मितज्योतिषाम् ॥

ஆசா–ஸீமஸு ஸந்ததம் விதததீ
நைசாகரீம் வ்யாக்ரியாம்
காசாநாம் அபிமான பங்க
கலனா–கௌசல்யம் ஆபிப்ரதீ |
ஈசாநேந விலோகிதா ஸகுதுகம்
காமாக்ஷி தேகல்மஷ
க்லேசாபாயக ரீசகாஸ்தே லஹரீ
மந்தஸ்மித ஜ்யோதிஷாம் ||

தேவி காமாக்ஷியின் இளநகையின் ஒளிப்பெருக்கு, எப்பொழுதும் திசைகளின் எல்லைப் புறங்களில், நிலவின் செயலைச் செய்வதும், 'தாங்களே வெண்மையில் சிறந்த வர்கள்' என்ற நாணல் பூக்களின் கொழுப்பை அடக்கும் விஷயத்தில் மிகுந்த சாமர்த்யம் அடைந்திருப்பதாகவும், பரமசிவனால் ஆவலோடு பார்க்கப்பட்டதும், பாபங்களால் ஏற்படும். துன்பங்களை அழிப்பதுமாகத் துவங்குகிறது. ஸ்ரீ அம்பாளின் புன்சிரிப்பின் ஒளியானது திக்குகளில் பரவும் போது, அங்கு நிலவின் உதயம் விளங்குவதாக உள்ளது. (6)

आरूढस्य समुन्नत स्तनतटी साम्राज्य सिंहासनं
कन्दर्पस्य विभोर्जगत्त्रय जयप्राकट्य मुद्रानिधेः ।

यस्माश्चामरचातुरीं कलयते रश्मिच्छटा चञ्चला
सा मन्दस्मितमञ्जरी भवतु नः कामाय कामाक्षि ते ॥

ஆரூடஸ்ய ஸமுந்நத ஸ்தநதட
ஸாம்ராஜ்ய ஸிம்ஹாஸனம்
கந்தர்ப்பஸ்ய விபோ: ஜகத்த்ரய
ஜயப்ராகட்ய முத்ராநிதே: |
யஸ்யா: சாமரசாதுரீம் கலயதே
ரச்மிச்சடா: சஞ்சலா
ஸா மந்தஸ்மித மஞ்ஜரீ பவதுந:
காமாய காமாக்ஷிதே ||

மூவுலகையும் ஜயித்ததால் உண்டான புகழுடைய முத்திரைக்கு நிதி யான மன்மதன், ஸ்ரீகாமாக்ஷி தேவியின் உயர்ந்த ஸ்தனமென்னும் ஸாம் ராஜ்யசிங்காதனத்தில் வீற்றிருக்கிறான். அப்படிப்பட்ட மதனவேளுக்கு, தேவி யின் புன்முறு வலின் சஞ்சலமான கிரணக்கூட்டங்கள், சாமரம் வீசுவது போல் அல்லவா உள்ளது! (7)

शंभोर्या परिरम्भसंभ्रमविधौ नैर्मल्यसीमानिधिः
गैर्वाणीव तरङ्गिणी कृतमृदुस्यन्तां कलिन्दात्मजाम् ।
कल्माषीकुरुते कलङ्कसुषमां कण्ठस्थलीचुम्बिनीं
कामाक्ष्याः स्मितकन्दली भवतु सा कल्याणसन्दोहिनी ॥

சம்போர்யா பரிரம்ப ஸம்ப்ரம
விதௌ நைர்மல்ய ஸீமாநிதி:
கைர்வாணீவ தரங்கிணீ க்ருத-ம்ருது-
ஸ்யந்தாம் களிந்தாத் மஜாம் |
கல்மாஷீ-குருதே களங்க- ஸுஷமாம்
கண்ட ஸ்தலீ சும்பிநீம்
காமாக்ஷ்யா: ஸ்மித கந்தலீ பவதுஸா
கல்யாண ஸந்தோஹிநீ ||

மெதுவாய் ஓடும் கருத்த யமுனா நதியை வெளுப்பான தேவநதியான கங்கை கலந்து விசித்ர வர்ணமுள்ளதாகச் செய்வதுபோல், பரமேஸ்வரன் பரபரப்புடன் தேவியை ஆலிங்கனம் செய்யும் ஸமயத்தில் அவர் கழுத்தில் உள்ள கருப்பு நிறமானது. தேவியின் வெளுத்தபுன்சிரிப்புடன் கலந்து, வெண்மையும் கருமையுமான ஓர்விசித்திர வர்ணச் சேர்க்கை ஏற்படுகிறது. கல்யாணம் என்ற பதம் சுபம், தங்கம் என்றும் பொருள்படும். (8)

जेतुं हारलतामिव स्तनतटीं संजग्मुषी सन्ततं
गन्तुं निर्मलतामिव द्विगुणितां मग्ना कृपास्रोतसि ।
लब्धुं विस्मयनीयतामिव हरं रागाकुलं कुर्वती
मञ्जुस्ते स्मितमञ्जरी भवभयं मथ्नातु कामाक्षि मे ॥९

ஜேதும் ஹாரலதாமிவ ஸ்தந தடீம்
ஸஞ்ஜக்முஷீ ஸந்ததம்
கந்தும் நிர்மலதாமிவ த்விகுணிதாம்
மக்னா க்ருபாஸ்ரோதஸி |
லப்தும் விஸ்மயநீயதாமிவ ஹரம்
ராகாகுலம் குர்வதீ
மஞ்ஜுஸ்தே ஸ்மித மஞ்ஜரீ பவ–
பயம் மத்நாது காமாக்ஷி மே ||

காமாக்ஷி தேவியின் வெண்மையான புன்சிரிப்பு ஸ்தனப்ர தேசத்தில் விளங்கும் வெளுப்பான முத்து மாலையை ஜயிப்ப தாயும், இருமருங்கிலும் விளங்கும் முத்துமாலையை கருணை பரவாஹத்தில் மூழ்கடிப்பதாகவும், வியப்புறும் நிலையில் உலகை அழிக்கும் சிவனை உவகை நிறைந்த வனாகச் செய்வதும், இன்னும் ஒன்றும் நமக்காக செய்ய வேண்டுமே; அது என்ன வெனில், தேவியின் அழகிய புன் சிரிப்பு என்ற பூங்கொத்து நம் ஜனன, மரண பயத்தை அதா வது ஸம்ஸார பீதியை போக்கடிக்கட்டும். (9)

श्वेतापि प्रकटं निशाकररुचां मालिन्यमातन्वती
शीतापि स्मरपावकं पशुपतेः सन्धुक्षयन्ती सदा ।
स्वाभाव्यादधराश्रितापि नमतां उच्चैर्दिशन्ती गतिं
कामाक्षि स्फुटमन्तरा स्फुरतु नस्त्वन्मन्दहासप्रभा ॥

ச்வேதாபி ப்ரகடம் நிசாகரருசாம் மாலிந்யம் ஆதந்வதீ
சீதாபிஸ்மர பாவகம் பசுபதே: ஸந்துக்ஷயந்தி ஸதா |
ஸ்வாபாவாத்அதராச்ரிதாபிநமதாம் உச்சைர்திசந்தீகதிம்
காமாக்ஷிஸ்புடம் அந்தராஸ்புரதுந: த்வத்மந்தஹாஸப்ரபா||

அதரம் என்பது கீழ் உதடு என்றும் அ-தரம், கீழான மனிதன் என்பதும் பொருள். தாழ்ந்த மனிதனை அடுத்தி ருக்கும் மந்தஹாஸம், தன்னை வந்திப் பவர்களுக்கு உயர் கதியைக் கொடுக்கிறது. புன்முறுவல் வெண்மையும் குளிர்ச்சியும், பொருந்தியது, ஆயினும் சந்திரனுக்கு களங்கம் தரு வது, சிவ னுக்கு மன்மத தாபம் தருகிறது. புன்னகை கீழ் உதடை ஆச்ரயித்தாலும், ஆச்ரயித்தவர்களை மேலான கதிக்கு இட்டுச் செல்கிறது. (10)

वक्त्रश्रीसरसीजले तरलितभ्रूवल्लिकल्लोलिते
कालिम्ना दधती कटाक्षजनुषा माधुव्रतीं व्यापृतिम् ।
निर्निद्रामलपुण्डरीककुहनापाण्डित्यमाबिभ्रती
कामाक्ष्याः स्मितचातुरी मम मनः कातर्यं उन्मूलयेत् ॥

வக்த்ர–ஸ்ரீஸரஸீஜலே தரளித ப்ரூவல்லீ கல்லோலிதே
காளிம்நாததீ கடாக்ஷ ஜநுஷாமாதுவ்ரதீம் வ்யாப்ருதீம் |
நிர்நித்ராமல–புண்டரீக குஹநாபாண்டித்யம் ஆபிப்ரதீ
காமாக்ஷ்யா:ஸ்மிதசாதுரீ மமமந: காதர்யம்உன்மூலயேத்||

தேவி காமாக்ஷியின் முககாந்தி ப்ரவாஹம் ஒரு தடாகம் போல் விளங்கு கிறது. அந்தத் தடாகத்தில் வெண்தாமரை தேவியின் முகம் ஆகிறது. தாமரை யில் மொய்க்கும் வண்டுகள் போன்ற கண்கள், புருவங்கள் அலைகளாகிறது. கடைக் கண் காந்தியே கரிய வண்டுகள் இப்படி ஒரு காக்ஷியை நம் கண்முன் கொண்ட வந்து நிறுத்துகிறார் மூககவி அவர்கள் அப்படி மலர்ந்த வெண்டாமரையின் அழகைக் கவர்ந்த புன் முறுவலின் அழகு நம் கவலை களைப் போக்கட்டும். (11)

नित्यं बाधितबन्धुजीवमधरं मैत्रीजुषं पल्लवैः
शुद्धस्य द्विजमण्डलस्य च तिरस्कर्तारमप्याश्रिता ।
या वैमल्यवती सदैव नमतां चेतः पुनीतेतरां
कामाक्ष्या हृदयं प्रसादयतु मे सा मन्दहासप्रभा ॥

நித்யம் பாதித பந்து
ஜீவமதரம் மைத்ரீஜுஷம் பல்லவை:
சுத்தஸ்யத்விஜமண்டலஸ்யச
திரஸ்கர்த்தாரம் அப்யாச்ரிதா |
யாவை மல்யவதீ ஸதைவ நமதாம்
சேத: புநிதேதராம்
காமாக்ஷ்யாஹ்ருதயம்ப்ரஸாதயது
மேஸா மந்தஹாஸப்ரபா ||

பந்துக்களை ஹிம்ஸித்து துஷ்ட ஸஹவாசம் செய்து பிராமணர்களை அவமதித்து கீழோரோடு சேர்ந்திருக்கும் வஸ்துவானது, தான் இது எதிலும் சேராமல் சுத்தமாய் தன்னை வணங்கும் அடியவர்களை பரிசுத்தம் செய்வது என்பது ஆச்சர்யம். செம்பருத்தம்பூவுக்கு ஸமமானது, தளிர்போல் மிருதுவான, பற்களை மறைக்கும். உதட்டை அடைந் துள்ள புன்சிரிப்பு, தான் வெளுப்பாக இருந்துகொண்டு வணங்குப வர்களுக்கு பரிசுத்தமான ஞானம் வழங்குகிறது. (12)

द्रुह्यन्ती तमसे मुहुः कुमुदिनीसाहाय्यमाबिभ्रती
यान्ती चन्द्रकिशोरशेखरवपुः सौधाङ्गणे प्रेङ्खणम् ।
ज्ञानाम्भोनिधिवीचिकां सुमनसां कूलङ्कषां कुर्वती
कामाक्ष्याः स्मितकौमुदी हरतु मे संसारतापोदयम् ॥

த்ருஹ்யந்தீ தமஸே முஹு:
குமுதினீ ஸாஹாய்யம் ஆபிப்ரதீ
யாந்தீ சந்த்ர கிசோர சேகர வபுஸ்
ஸௌதாங்கணே ப்ரேங்கணம் |
ஞானாம்போ–நிதி வீசிகாம் ஸுமனஸாம்
கூலங்கஷாம் குர்வதீ
காமாக்ஷ்யா: ஸ்மித கௌமுதீ ஹரதுமே
ஸம்ஸார தாபோ தயம் ||

அஞ்ஞான மென்னும் இருளை நீக்குவதும் ஆம்பல் புஷ்பங்கள் மலர்வதற்கு அநுகூலம் செய்வதும், இளஞ் சந்திரனைத் தலையில் சூடிய சிவபெருமானுடைய திரு மேனி யாகிற உப்பரிகையில் உலாவுகிறதும், நல்ல மன முடையவர்கள, வித்வான்கள், இவர்களின் ஞானமென்னும் கடலில் அலைகளைக் கரை புரண்டோடும்படி செய்வதுமான காமாக்ஷியின் புன்முறுவல், மந்தஹாஸமாகிய நிலாவானது நம் ஸமஸார தாபத்தை விலக்கவேண்டும். நிலாஇருளை நீக்கும். நீலோற்பலம் மலரத் துணை புரியும் மாடமாளிகை, கூட கோபுரங்களில் ஒளியை வீசும், ஸமுத்திர அலையை வளர்க்கும் இந்தக் காரியங்களை தேவியின் புன்சிரிப்பு என்ற நிலவும் செய்கிறது. (13)

काश्मीरद्रवधातुकर्दमरुचा कल्माषतां बिभ्रती
हंसौघैरिव कुर्वती परिचितिं हारीकृतैर्मौक्तिकैः ।
वक्षोजन्मतुषारशैलकटके सञ्चारमातन्वती
कामाक्ष्या मृदुलस्मितद्युतिमयी भागीरथी भासते ॥

காச்மீர த்ரவ–தாது கர்தமருசா கல்மாஷதாம் பிப்ரதீ
ஹம்ஸௌகைரிவகுர்வதீ பரிசிதிம்ஹாரீக்ருதைர் மௌக்திகை: |
வக்ஷோ ஜன்மதுஷாரசைல கடகேஸஞ்சார மாதந்வதீ
காமாக்ஷ்யா ம்ருதுலஸ்மித த்யுதி மயீபாகீரதீ பாஸதே||

கங்கை என்னும் புண்ணியநதியானது இமயமலையில் உற்பத்தியாகி அங்கிருந்து இறங்கிவந்து சூரிய புத்திரியான யமுனா நதி (இந்த நதி கொஞ்சம் கருப்பாயிருக்கும்) யுடன் கலக்கும்போது வேறொரு நிறம் பெற்று அங்குள்ள அன்னபக்ஷிகளுடன் கூடியிருக்கும். தேவியின் புன்சிரிப்பை கங்கை என்னும் போது இப்படியெல்லாம் நம் மனக்கண்ணில் கொண்டு வந்து ஆனந்திக்கலாம். தேவியின் புன்னகைக் காந்தி, குங்குமம், கஸ்தூரி சேர்ந்த கலவைச்சாந்தில் பரவி ஒரு விசித்ர வர்ணமடைந்து, அது ஹாரத்திலுள்ள முத்துக்களில் வீசும்போது கங்கை ஹம்ஸங்களோடு கூடியது போலும், பருத்த ஸ்தனங்க ளின்மேல் காந்தி பரவுவது இமய மலைச்சிகரத்தில் ஸஞ்சரிப்பது போலவும் தோன்றுகிறது. (14)

कम्बोर्वंशपरम्परा इव कृपासन्तानवल्लीभुवः
सम्फुल्लस्तबका इव प्रसृमरा मूर्ताः प्रसादा इव ।
वाक्पीयूषकणा इव त्रिपथगापर्यायभेदा इव
भ्राजन्ते तव मन्दहासकिरणाः कामाक्षि काञ्चीप्रिये ॥

கம்போ: வம்ச பரம்பரா இவக்ருபா
ஸந்தான வல்லீ–புவ:
ஸம்புல்ல ஸ்தபகா இவ ப்ரஸ்ருமரா
மூர்த்தா: ப்ரஸாதா இவ |
வாக்பியூஷகணா இவ த்ரிபதகா–
பரயாய –பேதா இவ
ப்ராஜந்தே தவ மந்தஹாஸ கிரணா:
காமாக்ஷி: காஞ்சீப்ரியே ||

தேவியின் கருணை என்னும் ஸந்தானக்கொடியிலிருந்து உண்டான புன்சிரிப்பின் கிரணங்கள் சங்கின் வம்சத்து வரிசைகள் போலவும், வாக்கு என்னும் அம்ருதத்தின் துளிகள் போலும் மற்றொரு கங்கை போலும் விளங்குகிறது. ஆகாயம், பூமி, பாதாளம் என்ற மூவிடங்களிலும் ஓடுவதால் கங்கைக்கு 'த்ரி பதாகா' என்று பெயர் கிருபை என்ற கற்பகக் கொடியில் உண்டான பூங்கொத்துப் போன்ற பூங்கொத்து புன்முறுவலுக்கு சமமாக பல வஸ்துக்கள் பேசப்படுகிறது. அவை; சங்குக் கூட்டங்களின் வரிசை, மலர்ந்த பூங்கொத்துக்கள், அருளே உருவான அம்சங்கள், அம்ருதத்துளிகள், கங்கை யின் ரூபம். (15)

वक्षोजे घनसारपत्ररचनाभङ्गीसपत्नायिता
कण्ठे बन्धुरदन्तपत्रकुहनाव्यापार मुद्रायिता ।
ओष्ठश्रीनिकुरुम्बपल्लवपुटे प्रेङ्खत्प्रसूनायिता
कामाक्षि स्फुरतां मदीयहृदये त्वन्मन्दहासप्रभा ॥

வக்ஷோஜே கநஸார–பத்ர–ரசநா–பங்கீ–ஸபத் நாயிதா
கண்டே பந்துர தந்த பத்ரகுஹநாவ்யாபார முத்ராயிதா
ஓஷ்டஸ்ரீ நிகுரும்ப–பல்லவபுடேப்ரேங்கத் ப்ரஸூநாயிதா
காமாக்ஷி ஸ்புரதாம் மதீயஹ்ருதயேத்வத்மந்தஹாஸப்ரபா

தேவி காமாக்ஷியின் ஸ்தனத்தில் பச்சைக் கற்பூரத்தில் எழுதப்பட்ட மகரிகா பத்திரங்களுக்கு எதிரிபோல், கழுத்தில் அணிந்த அழகிய மாலையின் சோபைக்கு ஓர்முத்ரை போன்றதும், உதடுகளின் காந்தி தளிர்களில் பூத்த ஓர் புஷ்பம் போலும் தேவியின் புன்னகையின் பிரகாசம் நம் மனதில் பிரகாசிக் கட்டும். ஸ்திரீகள் கன்னங்கள் [illegible] த்தில் வாஸனை சேர்த்த சந்தனக்

கலையைப் பூசிக்கொளவதுண்டு புன்னகையின் வெண்மையின் காந்தி ஸ்தனங்கள் மேல் படுவது மகரிகாபத்ரங்கள் எழுதப்பட்டதுபோல் இருக்கிறது. மந்தஸ் மிதத்தின் ஒளி கழுத்துப்பக்கம் பரவும்போது அழகிய காதணி யின் சோபைபோலிக்கிறது. 'தந்த பத்ரம்' யானை தந்தத்த தால் செய்யப்பட்ட காதில் அணியும் ஓர் ஆபரணம். தேவி அணிந்திருக்கிறாள். (16)

येषां बिन्दुरिवोपरि प्रचलितो नासाग्रमुक्तामणिः
येषां दीन इवाधिकण्ठमयते हारः करालम्बनम् ।
येषां बन्धुरिवोष्ठयोररुणिमा धत्ते स्वयं रञ्जनं
कामाक्ष्याः प्रभवन्तु ते मम शिवोल्लासाय हासाङ्कुराः ॥

யேஷாம்பிந்துரிவோபரி ப்ரசலிதோ
நாஸாக்ர முக்தாமணி:
யேஷாம் தீந இவாதிகண்டமயதே
ஹார: கராலம்ப நம் |
யேஷாம் பந்துரிவோஷ்டயோ ரருணிமா
தத்தேஸ்வயம் ரஞ்ஜனம்
காமாக்ஷ்யா: ப்ரபவந்து தே மம
சிவோல்லாஸாய ஹாஸாங்குரா: ||

புல்லாக்கின் முத்து காமாக்ஷி தேவியின் புன்சிரிப்புகளின் மேல் நோக்கிச் செல்லும் ஒருதிவலை போலும், ஓர்பிந்து போலவும் துலங்குகின்றது. கழுத்தில் அணிந்த ஹாரங் களுக்கு ஒரு உதவி வேண்டுவது போலவும், உதடுகளின் செவ்வொளி உறவினர் போல் தானாகவே எவைகளின் ப்ரீதி ஆதரவை அடைகிறதோ அப்படிப்பட்ட புன்முறுவல் கள் எனக்கு க்ஷேமங்களை அபிவிருத்தி செய்வதாக அமையட்டும். (17)

या जाड्याम्बुनिधिं क्षिणोति भजतां वैरायते कैरवैः
नित्यं या नियमेन या च यतते कर्तुं त्रिनेत्रोत्सवम् ।
बिम्बं चान्द्रमसं च वञ्चयति या गर्वेण सा तादृशी
कामाक्षि स्मितमञ्जरी तव कथं ज्योत्स्नेत्यसौ कीर्त्यते ॥

யாஜாட்யாம்பு நிதிம் க்ஷிணோதி

பஜதாம் வைராயதே கைரவை:

நித்யம்யா நியமேந யா சயததே
கர்த்தும் த்ரிநேத்ரோத்ஸவம் |
பிம்பம் சாந்த்ரமஸம் சவஞ்சயதியா
கர்வேண ஸா தாத்ருசீ
காமாக்ஷி ஸ்மித மஞ்ஜரீ தவ கதம்
ஜ்யோத்ஸ் நேத்யஸௌ கீர்த்யதே ||

நிலவு கடலை பொங்கச் செய்யும்; ஆம்பல் மலரை மலரச் செய்யும்; சந்திரனுக்கும் சோபை கொடுக்கும்; புன்முறுவல் என்ற நிலவோ அக்ஞானக்கடலை வற்றச் செய்கிறது. தன் வெண்மையின் காந்தியால் ஆம்பல்மரையும் ஜயிக்கிறது; சோபையின் கர்வத்தால் சந்த்ர மண்டலத்தையும் விஞ்சி ஒளி வீசுகிறது. இப்படி நிலாவினின்றும் விபரீத குணங்கள் கொண்ட தேவியின் புன்முறுவலை கவிகள் எங்ஙனம் நிலவுடன் பொருத்துகிறார்கள்? (18)

आरूढा रभसात्पुरः पुररिपोराश्लेषणोपक्रमे
या ते मातरुपैति दिव्यतटिनीशङ्काकरी तत्क्षणम् ।
ओष्ठौ वेपयति भ्रुवौ कुटिलयत्यानम्रयत्याननं
तां वन्दे मृदुहासपूरसुषमां कामाक्षि कामप्रदे ।।

ஆரூடா ரபஸாத்புர: புரரிபோ:
ஆச்லேஷணோ பக்ரமே
யாதே மாதருபைதி திவ்யதடினீ
சங்காகரீ தத்க்ஷணம் |
ஓஷ்டௌ வேபயதி ப்ருவௌ
குடிலயத்யாநம் ரயத்யானனம்
தாம் வந்தே ம்ருது ஹாஸ பூர
ஸுஷமாம் காமாக்ஷி! காமப்ரதே ||

(ஏகாம்ரநாத்ப்ரியே என்றும் பாடம்) காமாக்ஷி! காமப்ரதே! கல்வி, செல்வம், ஞானம் முன்றையும் மூன்று கண்களால் வழங்கும், மற்றும் எல்லாக் காமனைகளையும் பூர்த்தி செய்யும் தேவியே! மந்தஹாஸப் பெருக்கு என்னும் கருணை ப்ரவாஹத்திற்கு வணங்குகிறேன். எங்களுக்கெல்லாம் தாயாகவும் 'ஸ்ரீமாதா' (ல.ஸ.நா.) என்றே ஆரம்பமாகிறது. வேண்டியவர்க்கு வேண்டிய

வாறு உதவும் வள்ளண்மையுடன் கூடியவளாகவும் இருக்கும் காமாக்ஷி தேவியே! என்று தேவியிடம் பேசுவதுபோல் அமைந்த பாடல் முப்புரமெரித்த சிவன் தேவியை ஆலிங்கனம் செய்ய ஆரம்பிக்கும்போதே புன்னகையின் வெண்மையான காந்தி வெள்ளம் போல் பிரவஹிக்கிறது. அது சிவனின் தலையில் விழுவதைப் பார்த்தால், அவர் சிரஸில் வஹிக்கும் கங்கா தேவி தானோ என்ற சந்தேஹம் தேவிக்கு ஏற்படுகிறது. ப்ரணய கலஹத்தால் ஏற்பட்ட கோபத்தினால் உதடுகள் துடிக்கிறது; புருவங் கள் நெரிகிறது; தேவி கொஞ்சம் தலையைக் குனிந்து கொள்கிறாள். இப்படிப்பட்ட மந்த ஹாஸப் ரவாஹத்திற்கு, அதன் காந்திக்கு நமஸ்கரிக்கிறேன். (19)

वक्त्रेन्दोस्तव चन्द्रिका स्मितरुचिर्वल्गु स्फुरन्ती सतां
स्याच्चेद्युक्तमिदं चकोरमनसां कामाक्षि कौतूहलम् ।
एतच्चित्रमहर्निशं यदधिकामेषा रुचिं गाहते
बिम्बोष्ठद्युमणिप्रभास्वपि च यद्बिब्वोकमालम्बते ॥

வக்த்ரேந்தோ: தவ சந்த்ரிகா ஸ்மிதருசி
வல்கு ஸ்புரந்தீ ஸதாம்
ஸ்யாத் சேத் யுக்தமிதம் சகோர மநஸாம்
காமாக்ஷி கௌதூஹலம் |
ஏதத் சித்ரமஹர்நிசம் யததிகா
மேஷா ருசிம் காஹதே
பிம்போஷ்டத்யு மணி ப்ரபாஸ்வபி
சயத் பிப்வோக மாலம்பதே ||

புன்னகை இரவும் பகலும் அதிகமான ஒளியைப் பெற்று விளங்குகிறது. என்பதும் கோவைப்பழம் போன்ற உதடு களென்னும் சூரியனின் வெளிச்சம் இருக்கும்போதும் விலா ஸத்தைப் பெற்றுத் திகழ்கிறது என்பதும் ஆச்சர்யமே. முகம் என்ற சந்திரன் நிலவு போன்ற புன்சிரிப்பு, இரவும் பகலும் அதிகமான காந்தியை அடைந்திருக்கிறது. கோவைப்பழம் போன்ற உதடுகள் என்னும் சூரியன் ஒளி வீசி பிரகாசத்தை அதிகரிக்கச் செய்கிறது என்பது அதிசயம். சூரியன் ஒளிவீசும் போது சந்திரன் சோபை குன்றி இருக்குமே தவிர விலா ஸத்தை அடைய மாட்டாது. ஆனால் தேவியின் முகமாகிய சந்திரனின் நிலவு போன்ற புன்சிரிப்பு இதற்கு மாறாக இருக்கிறது. (20)

सादृश्यं कलशाम्बुधेर्वहति ते कामाक्षि मन्दस्मितं
शोभामोष्ठरुचाम्ब विद्रुमभवां एतद्विदां ब्रूमहे ।

एकस्मादुदितं पुरा किल पपौ सद्यः पुराणः पुमान्
अद्याप्यन्यसनुद्भवं रसयते माधुर्यरूपं रसम् ॥

ஸாத்ருச்யம் கவசாம்புதே வஹதிதே
காமாக்ஷி மந்தஸ்மிதம்
சோபா மோஷ்ட ருசாம்ப வித்ரும பவாம்
ஏதத்பிதாம் ப்ரூமஹே |
ஏகஸ்மாத் உதிதம் புராகில பபௌ
ஸத்ய: புராண: புமான்
அத்யாப்யந்ய ஸமுத்பவம் ரஸயதே
மாதுர்ய ரூபம் ரஸம் ||

தேவி காமாக்ஷியின் புன்சிரிப்பு பாற்கடலோடு ஒற்று மையை அடைந்திருக்கிறது: உதடுகளின் காந்தியால் அதிலுள்ள பவழத்தின் சோபையைப் பெற்றிருக்கிறது. ஆனால் இரண்டுக்குள்ளும் ஒரு வித்தியாசம் உள்ளது பாற்கடலிலிருந்து உண்டான ரஸமென்று இங்கு குறிப்பிடப்படும் ஆலஹால விஷத்தை உடனே பருகிவிட்டார்; பவழத்தின் சோபையோடு கூடிய மந்தஸ்மிதம் என்னும் அம்ருதத்தையோ இன்னும் பருகிக் கொண்டே இருக்கிறார். (21)

उत्तुङ्गस्तनकुम्भशैलकटके विस्तारिकस्तूरिका-
पत्रश्रीजुषि चञ्चलाः स्मितरुचः कामाक्षि ते कोमलाः ।
सन्ध्यादीधितिरञ्जिता इव मुहुः सान्द्राधरज्योतिषा
व्यालोलामलशारदाभ्रशकलव्यापारमातन्वते ॥

உத்துங்க—ஸ்தந கும்ப சைல
கடகே விஸ்தாரி— கஸ்தூரிகா
பத்ர ஸ்ரீ ஜுஷி சஞ்சலா: ஸ்மிதருச:
காமாக்ஷிதே கோமலா: |
ஸந்த்யா தீதிதி ரஞ்ஜிதா இவமுஹு:
ஸாந்த்ரா தர ஜ்யோதிஷா

வ்யாலோலாமல சாரதாப்ர சகல
வ்யாபாரம் ஆதந்வதே ||

தேவி காமாக்ஷியின் உயர்ந்த ஸ்தனபாரங்கள் கஸ்தூரியில் எழுதப்பட்ட மகரிகா பத்ரங்களின் அழகோடும் நறு மணத் தோடும் விளங்குகிறது. அப்படிப்பட்ட ஸ்தனபாரங்க ளென்ற பர்வதங்களின் தாழ்வைரயில் ஸஞ்சரித்துக் கொண்டு மனோஹரமாக விளங்கி, அழகிய உதடுகளின் ஸந்த்யாகால செவ்வொளியில் சிவப்பாகச் செய்யப்பட்டு புன்முறுவலின் காந்திகள் விளங்குகின்றன சரத்காலத்து வெண்மையான மேகங்களின் சிதறிய துண்டங்களின் சோபையை வெளிப் படுத்துவதாக புன்முறுவல்கள் அமைகிறது. சரத் காலத்தில் ஆகாயம் அலம்பப்பட்டாற்போல் தூய்மை யாகக் காணப்படும். அப்பொழுது வெண்மையான மேகங்கள் மலை அடிவாரங் களில் சஞ்சரிக்கும்போது, ஸந்த்யாகாலம் வந்தால், மேற்திசையின் செவ் வொளி அம்மேகங்களில் விழுந்து அவைக ளுக்கு ஒரு புதிய சோபையை ஏற் படுத்துகிறது. தேவியின் வெண்ணிறமான புன்சிரிப்பின் வெள்ளம் என்னும் காந்தியே மெதுவாக உலவும் சரத்கால மேகங்கள், உன்னதமான ஸ்தனங்களே; பரவதத்தின் தாழ்வரைகள், ஸந்த்யாகால செவ்வாளி; இதனால் புன்சிரிப்பின் காந்தி அதரங்களின் சிவந்த காந்தி அதரங்களின் சோபையோடு கலந்து மார்பில் விழுவதைப் பார்த்தால் மலைகளில் மாலைநேரத்தில் சஞ்சரிக்கும் சரத்கால மேகத்துண்டங்கள் போல் அழகாக இருக்கிறது. (22)

क्षीरं दूरत एव तिष्ठतु कथं वैमल्यमात्रादिदं
मातस्ते सहपाठवीथिमयतां मन्दस्मितैर्मञ्जुलैः ।
किञ्चेयं तु भिदास्ति दोहनवशात् एकं तु सञ्जायते
कामाक्षि स्वयमर्थितं प्रणमतां अन्यत्तु दोदुह्यते ॥

க்ஷீரம் தூரத ஏவ திஷ்டது கதம்
வைமல்ய–மாத்ராதிதம்
மாதஸ்தே ஸஹபாட வீதி மயதாம்
மந்த ஸ்மிதைர் மஞ்ஜுளை |
கிஞ்சேயம் து பிதாஸ்தி தோஹன
வசாத் ஏகம் துஸஞ்ஜாயதே
காமாக்ஷி! ஸ்வயமர்த்திதம் ப்ரணமதாம்
அந்யத் (ஏதத்) தோதுஹ்யதே ||

காமாக்ஷி தேவியின் புன்சிரிப்பின் பெருமையோடு ஒப்பிட்டால் பால் தூரத்திலேயே நிற்க வேண்டும் பால், புன்சிரிப் பைப்போல் வெண்மை நிறத்தில் மாத்திரம் ஒற்றுமையாக இருக்கிறது. ஆயினும் வேற்றுமையும் இருக்கிறதே! அதா வது பாலோ என்றால் பிறர் கறப்பதனால் உண்டாகிறது. ஆனால் மற்றதோ, அதாவது புன்னகை வணங்கவோர்களுக்கு வேண்டியவற்றை அதிகமாக சுரந்து கொடுக்கிறது. பால் வேறொருவர் கறப்பதால் உண்டாகிறது. மந்தஸ்மிதமோ அன்போடு வணங்குபவர்களுக்கு வேண்டியதைத் தானாகவே சுரந்து காமதேனுவைப் போல் அளிக்கிறது. இரண்டுமே வெண்மை தான். எனவே தேவியின் புன்சிரிப்புடன் பாலை ஒப்பிடுகையில் பால் லஜ்ஜையுடன் ஒதுங்கி நிற்கும். (23)

कर्पूरैरमृतांशुभिर्जननि ते कान्तैश्च चन्द्रातपैः
मुक्ताहारगुणैर्मृणालवलयैर्मुग्धस्मितश्रीरियम् ।
श्रीकाञ्चीश्वरि सज्जनैः समतया कामाक्षि संस्तूयते
तत्तादृङ्मय तापशान्तिविधये किं देवि मन्दायते ॥

கர்ப்பூரை: அம்ருதாம் சு(பு)பி: ஜனனி!
தேகாந்தை: ச சந்த் ராதபை:
முத்தாஹார குணை ம்ருணாள வலயை:
மந்தஸ்மித ஸ்ரீரியம் |
ஸ்ரீகாஞ்சீச்வரி ஸஜ்ஜனை:
ஸமதயா காமாக்ஷி ஸம்ஸ்தூயதே
தத் தாத்ருக் மமதாப சாந்தி விதயே
கிம் தேவி மந்தாயதே ||

தேவியின் இந்த மந்தஹாஸ காந்தியானது அம்ருத கிரணங்களோடும், பச்சைக் கர்ப்பூரத்தோடும், அழகு பொருந்திய நிலாவோடும் முத்து ஹார ஸரங்களோடும், தாமரைத் தண்டுகளோடும் ஒத்திருப்பதாக நல்லோர்களால் புகழப்படுகிறது. தேவியோ உலகுக்கெல்லாம் தாயானவள். இருந்தும், நம்முடைய வினையின் பயனாக ஸம்ஸார தாபத் தில் வருந்தும் நமக்கு தாப சமனம் செய்யவில்லையே? (24)

मध्ये गर्भितमञ्जुवाक्यलहरीमाध्वीझरीशीतला
मन्दारस्तबकायते जननि ते मन्दस्मितांशुच्छटा ।
यस्या वर्धयितुं मुहुर्विकसनं कामाक्षि कामद्रुहो
वल्गुर्वीक्षणविभ्रमव्यतिकरो वासन्तमासायते ॥

மத்யே–கர்பித–மஞ்ஜுவாக்ய லஹரீ
மாத்வீஜ்ஜரீ சீதளா
மந்தார ஸ்தப காயதே ஜனனீ
மந்தஸ்மிதாம் சுச் சடா|
யஸ்யா வர்த்தயிதும் முஹுர் விகஸநம்
காமாக்ஷி காமத்ருஹ:
வல்குர் வீக்ஷண–விப்ரம வ்யதிகரோ
வாஸந்த மாஸாயதே||

எந்தப் புன்சிரிப்பின் மலர்ச்சியை அடிக்கடி அதிகப்படுத்து வதற்காக காமனைகொன்ற பரமசிவனின் அழகிய பார்வை யின் சம்பந்தம் வஸந்த ருதுவின மாதமாகிறதோ, அந்த இள நகையின் கிரணக்கூட்டம் நடுவில் அமைந்த அழகிய சொற் பெருக்கென்னும் தேன் அருவியால் குளிர்ந்த மந்தார மலர்க் கொத்தாய் விளங்கு கின்றது தேவியின் புன்சிரிப்பை மந்தா ரப்புஷ்பத்திற்கு, வாக்விசேஷத்தைப் புஷ்பத்தில் உள்ள தேனுக்கும் பர மேஸ்வரனுடைய பார்வையை வஸந்த ருதுவுக்கும் ஒப்பிடுகிறார். (25)

बिम्बोष्ठद्युतिपुञ्जरञ्जितरुचिस्त्वन्मन्दहासच्छटा
कल्याणं गिरिसार्वभौमतनये कल्लोलयत्वाशु मे ।
फुल्लन्मल्लिपिनद्धहल्लकमयी कामाक्षि मालेव या
श्रीकाञ्चीश्वरि मारमर्दितुरुरोमध्ये मुहुर्लम्बते ॥

பிம்போஷ்டத்யுதி புஞ்ஜ ரஞ்ஜித
ருசிஸ் த்வன் மந்த ஹாஸச்சடா
கல்யாணம் கிரி ஸார்வ பௌம தநயே
கல்லோல யத்வாசுமே |
புல்லன் மல்லி–பிநத்த ஹல்லக–
மயீ காமாக்ஷி! மாலேவயா
ஶ்ரீகாஞ்சீச்வரி! மார மர்த்திது:
உரோமத்யே முஹுர் லம்பதே||

ஆநந்தமே வடிவவாகவுடையவள் கல்யாணீ. 'விஞ் ஞான மானந்தம் ப்ரஹ்ம' என்ற ஸ்ருதிபடி நிரங்குஸ நித்யா நந்த ஸ்வரூப ப்ரஹ்ம் லக்ஷணமாய் விளங்குபவள் பர தேவதை என்ற காமாக்ஷி ஆவாள். 'பவது ஸா கல்யாண ஸந் தோஹிநீ' என்ற இதே சதகத்தின் 8-வது ஸ்லோகத்தின் கருத்தும் இதன் பாற்படும். தேவி தன் நாயகனாக பரம சிவனை புன்முறு வலுடன் நோக்கும் காலையில் அதரங்க ளின் சிவப்பும், புன்முறுவலின் வெளுப்பும் கலந்து அவர் மார்பின் மீது வீசுவதைப் பார்த்தால் மல்லிகைப் புஷ்பங்க ளையும், செங்கழுநீர்ப்பூக்களையும் சேர்த்துத் தொடுத்த ஒருமாலை அவர் மார்பில் விளங்குவது போல் உள்ளது என்கிறார். (26)

बिभ्राणा शरदभ्रविभ्रमदशां विद्योतमानाप्यसौ
कामाक्षि स्मितमञ्जरी किरति ते कारुण्यधारारसम् ।
आश्चर्यं शिशिरीकरोति जगतीमालोक्य चैनामहो
कामं खेलति नीलकण्ठहृदयं कौतूहलान्दोलितम् ॥

பிப்ராணா சாதப்ர விப்ரம தசாம்
வித்யோதமா நாப்யஸௌ
காமாக்ஷீ ஸ்மித மஞ்ஜரீ கிரதிதே
காருண்ய தாராரஸம் |
ஆச்சர்யம்! சிசி ரீ கரோதி
ஜகதீ மாலோக்ய சைநாமஹோ
காமம் கேலதி நீலகண்டஹ்ருதயம்
கௌதூஹலாந் தோளிதம் ||

நீலகண்டன், மயில்-இரு பொருள்படும். கடாக்ஷசதகம் 71-வது சுலோகத் தில் நீலகண்டன் என்ற மயில் கடாக்ஷமாகிய கரிய மேகத்தைக் கண்டு ஆனந் திக்கிறது என்பதைக் காண்க சிவானந்த லஹரி 53 வதுபாடல் 'ஆகாசேன சிகீஸமஸ்த' என்ற பாடலும் மயிலுக்கும் சிவனுக்கும் சிலேடை யாக அமைந்த பாடல் 'ஆகாசேந சிகீ' 'வ்யோமகேசத்வாத்' மயில் உயர்ந்த கொண்டை உடையது சிவன் ஆகாயத்தைத் தலையாக உடையவன். நீருண்ட மேகத்தைத் கண்டால் குளிர்ச்சியாயிருக்கும். தேவியின் புன்னகையோ வெளுத்தமேகம் போல் இருந்தும் தாபத்தைப் போக்குகிறது. கார் முகிலைக் கண்டு மயில் ஆடும் இங்கு தேவியின் புன்முறுவலான வெளுத்த மேகம் கண்டு நீலகண்டனான பரமசிவன் மிகவும் குதூஹலிக்கிறார். (27)

प्रेङ्खत्प्रौढकटाक्षकुञ्जकुहरेष्वत्यच्छगुच्छायितं
वक्त्रेन्दुच्छविसिन्धुवीचिनिचये फेनप्रतानायितम् ।
नैरन्तर्यविजृम्भितस्तनतटे नैचोलपट्टायितं
कल्माषं कबलीकरीतु मम ते कामाक्षि मन्दस्मितम् ॥

ப்ரேங்கத் ப்ரௌட கடாக்ஷ குஞ்ஜ
குஹரேஷ்வ த்யச்ச குச்சாயிதம்
வக்த்ரேந்துச் சவி ஸிந்து வீசி நிசயே
பேன ப்ரதா நாயிதம் |
நைரந்தர்ய விஜ்ரும்பித ஸ்தனதடே
நைசோலபட்டாயிதம்
கல்மாக்ஷம் கபளீகரோது மமதே
காமாக்ஷி! மந்தஸ்மிதம் ||

தேவியின் கறுத்த நேத்ரங்களிலிருந்து கம்பீரமாய் ஒளி பொருந்திய கடாக்ஷங்கள் பரவுவதைப் பார்த்தால் அடர்ந்து பசுமையுடன் கூடிய (புதர்) ஒரு லதாக்ருஹம்போல் இருக் கிறது. புன்முறுவல் அதில் புஷ்பித்த மிகவும் வெளுப்பான ஒரு பூங்பொத்து சந்திரன் போன்ற தேவியின் முககாந்தியின் வெள்ளமே ஸமுத்திரத்தின் அலைகள் புன்முறுவலோ அவ்வலைகளின் நடுவே விளங்கும் நுரை. வக்ஷஸ்தலம் முழுவதும் ஆக்ரமித்துள்ள பெருத்த ஸ்தனங்களின் மீது பரவும் புன்னகை, நகில்களை மறைப்பதற்கேற்ற வெண்பட்டு ரவிக்கை போல் இருக்கிறது. இப்படிப்பட்ட தேவி காமாக்ஷியின் புன்சிரிப்பு நம்முடைய தோஷங்களைப் போக்கடிக் கட்டும். (தடங்கள் அமைத் தது தாயின் தகைமை சேர்ப்புன்னகை யாம்; விடுங்கள் இனியுமேன் வேதனை உங்களை வீழ்த்து வதே' (அம்மாதிரு இதழ்ப்பத்து; அன்னைதாசன்) (28)

पीयूषं तव मन्थरस्मितमिति व्यर्थैव साऽपि प्रथा
कामाक्षि ध्रुवमीदृशं यदि भवेदेतत्कथं वा शिवे ।
मन्दारस्य कथालवं न सहते मथ्नाति मन्दाकिनीं
इन्दुं निन्दति कीर्तिते च कलशीपाथोधिमीर्ष्यायते ॥

பீயூஷம்தவ மந்த்ர ஸ்மித மிதி
வ்யர்த்தைவஸா(அ)பி (ப)ப்ரதா

காமாக்ஷி! த்ருவமீத்ருசம் யதிபவே
தேதத் கதம் வாசிவே |
மந்தாரஸ்ய கதாலவம் நஸஹதே
மத்நாதி மந்தாகினீம்
இந்தும் நிந்ததி கீர்த்திதே
சகலசீபாதோதிம் ஈர்ஷ்யாயதே ||

திருப்பாற் கடலைக் கடைந்தபோது அதனின்றும் அம்ரு தம், மந்தாரப் புஷ்பம், சந்திரன் முதலியன உண்டான தாகப் புராணம் கூறுகிறது. புன் சிரிப்பை அம்ருதத்துக்கு ஒப்பு என்றால் இங்கு கூறியபடி அம்ருதத்துடன் உடன்பிறப்பான மற்றைய வஸ்துக்களை ஏன் வருத்துகிறது? அம்ருதம் முத லான வஸ்துக்கள் வெண்மையாலும் சோபை யாலும் புன்சிரிப்பை ஜெயிக்க முடிவதில்லை. எனவே புன் சிரிப்பு அனைத்தையும் விஞ்சி நின்று, அவற்றைக் கலக்குகிறது என்கிறார் கவி. (29)

विश्वेषां नयनोत्सवं वितनुतां विद्योततां चन्द्रमाः
विख्यातो मदनान्तकेन मुकुटीमध्ये च संमान्यताम् ।
आः किं जातमनेन हाससुषमामालोक्य कामाक्षि ते
कालङ्कीमवलम्बते खलु दशां कल्माषहीनोऽप्यसौ ॥

விச்வேஷாம் நயநோத்ஸவம் விதநுதாம்
வித்யோததாம் சந்த்ரமா:
விக்யாதோ மதநாந்தகேந முகுட
மத்யே(ந) ச ஸம்மான்யதாம் |
ஆ:கிம் ஜாதமனேன ஹாஸ ஸுஷமாம்
ஆலோக்ய காமாக்ஷிதே
காளங்கீம் அவலம் பதே கலுதசாம்
கல்மாஷ ஹீநோ-ப்யஸௌ ||

சந்திரன் உலகில் எல்லோர் கண்களுக்கும் ஆனந்தம் அளிக்கிறான்; அளிக்கட்டும். மிகவும் பிரஸித்தியாகவும் இருக்கிறான்; இருக்கட்டும் பரமசிவனால் தலையில் தாங்கி கௌரவிக்கப்படுகிறான்; கௌரவிக்கப் படட்டும். இதனா லெல்லாம் சந்திரனுக்கு பெரிய பெருமை ஒன்றும் வந்து

விடாது. இந்தச் சந்திரன் களங்கமற்றவனாய் இருந்தா லும்தேவியின் புன்முறுவலின் காந்தியைப் பார்த்து (கலக்க மடைந்த) களங்கமுள்ள நிலையை அடைகிறான். எனவே தேவி காமாக்ஷியின் மந்தஸ்மிதத்தின் முன் வெண்மை நிறமும், பிரகாசப் பிரஸித்தியும் உடைய சந்திரன் பரமசிவன் தலை மீது தாங்கினாலும் நிற்கமுடியாது என்பது தாத்பர்யம். (30)

चेतः शीतलयन्तु नः पशुपतेरानन्दजीवातवो
नम्राणां नयनाध्वसीमसु शरच्चन्द्रातपोपक्रमाः ।
संसाराख्यसरोरुहाकरखलीकारे तुषारोत्कराः
कामाक्षि स्मरकीर्तिबीजनिकरास्त्वन्मन्दहासाङ्कुराः ॥

சேத: சீதளயந்து ந: பசுபதே
ராநந்த ஜீவாதவ:
நம்ராணாம் நயநாத்வ ஸீமஸு
சரத் சந்த்ராதபோ பக்ரமா: |
ஸம்ஸாராக்ய ஸரோருஹாகர
கலீகாரே துஷா ரோத்கரா:
காமாக்ஷி–ஸ்மர கீர்த்திநி பீஜநிகரா
த்வந் மந்த ஹாஸாங்குரா: ||

தேவி காமாக்ஷியின் புன்னகை பசுபதி என்னும் பரமசிவனுக்கு, ஆனந்தத்தைக் கொடுப்பதால் அந்த ஆனந்தத்திற்கு உயிர்நிலையாகிறது. மேலும் நமஸ்கரிப்பவர்களின் கண்கள் செல்லும் பிரதேசங்களில் சரத் கால நிலவொளி போலவும் ஸம்ஸாரமென்ற தாமரைக் குளத்தை கடும்பனி நாசம் செய்வது போலும் புன்னகை செயல்படுகிறது. காமாக்ஷி மன்மதனை உயிர்ப்பித்து அவனிடம் மிகுந்த வாத்ஸல்யம் உடைய, தாயாவதால் மன்மதனின் கீர்த்தியை விளைவிக்கும் விஷயத்தில் வித்துக்கள் போலவும் திகழும் தேவியின் புன்னகையானது நம்முடைய உள்ளங்களைக் குளிரச்செய் யட்டும். (31)

कर्मौघाख्यतमः कचाकचिकरान् कामाक्षि सञ्चिन्तये
त्वन्मन्दस्मितरोचिषां त्रिभुवनक्षेमङ्करानङ्कुरान् ।
ये वक्त्रं शिशिरश्रियो विकसितं चन्द्रातपाम्भोरुह-
द्वेषोद्घोषणचातुरीमिव तिरस्कर्तुं परिष्कुर्वते ॥

கர்மௌ காக்ய தம கசா கசிகராந்
காமாக்ஷி ஸம்சிந்தயே
த்வந் மந்தஸ்மித ரோசிஷாம்
த்ரிபுவனக்ஷேமம் கராநங்குராந் |
யேவக்த்ரம் சிசிர ச்ரியோ விகஸிதம்
சந்த்ராத பாம்போருஹ
த்வேஷோத் கோஷண சாது ரீமிவ
திரஸ்கர்த்தும் பரிஷ்குர்வதே ||

தேவி காமாக்ஷியின் குளிர்ச்சியுள்ள எந்தப் புன் சிரிப்பு அங்குரங்கள், நிலவு தாமரைகள் மீது த்வேஷத்தைப் பறை சாற்றும் திறத்தை மறைப்பவைகள் போல் மலர்ந்து முகத்தை சிறப்பிக்கின்றனவோ; கர்மக்கூட்டமெனும் இருளோடு சண்டையிடுகிறதோ; மூவுலகிற்கும் நன்மை விளைவிப் பதோ அந்த மந்தஸ்மித காந்திகளின் முளைகளை நாம் தியானிக்க வேண்டும். 'கசாகசி' தலைமயிரை இழுத்து சண்டை போடுதலைக் குறிக்கும் சந்திரன் வெளியே வந்தால் தாமரை மூடிக் கொள்கிறது. (32)

कुर्युर्नः कुलशैलराजतनये कूलंकषं मङ्गलं
कुन्दस्पर्धनचुञ्चवस्तव शिवे मन्दस्मितप्रक्रमाः ।
ये कामाक्षि समस्तसाक्षिनयनं सन्तोषयन्तीश्वरं
कर्पूरप्रकरा इव प्रसृमराः पुंसामसाधारणाः ॥

குர்யுர்ந: குலசைல ராஜதநயே!
கூலங்கஷம் மங்களம்
குந்த ஸ்பர்த்த நசுஞ்சுவ
தவசிவே மந்தஸ்மித ப்ரக்ரமா: |
யே காமாக்ஷி! ஸமஸ்த ஸாக்ஷி
நயநம் ஸந்தோஷயந்தீச்வரம்
கர்பூர ப்ரகரா இவ ப்ரஸ்ருமரா:
பும்ஸாம ஸாதாரணா: ||

குலாசலங்களின் அரசனான இமவானின் புத்திரியாகவும், பரமசிவனின் பத்னியாகவும் உள்ள ஸ்ரீகாமாக்ஷிதேவியின் புன்சிரிப்பு எங்களுக்கு கரை புரண்டோடும் மங்களத்தைக் கொடுக்கட்டும் புருஷர்களால் அடைய இயலாததும் பரவுகின்றதும் ஆன தேவியின் புன்னகைகள், எல்லாவற் றிற்கும் சாக்ஷியான ஆதித்தனை கண்ணாகக் கொண்ட பரமசிவனை, கர்ப்பூரப் பொடிகளைப் போல் இன்புறச் செய்கிறது. குந்தமலரோடு போட்டி போடுவதில் மிகவும் சாதுர்யமானது. 'வள்ளலார்' வடிவுடை மாணிக்க மாலை' யில் காண்போம். 'வாணாளடைவர் வறுமையுறார் நன் மனை, மக்கள் வான் பூணா ளிடம் புகழ் போதம் பெறுவர், பின் புன்மை ஒன்றும் காணார், நின்நாமம் கருதுகின்றோர்; ஒற்றிக்கண்ணுதல் பால் மாணார்வமுற்ற மயிலே! வடிவுடை மாணிக்கமே.' (33)

क्रमेण स्नपयस्व कर्मकुहनाचोरेण मारागम-
व्याख्याशिक्षणदीक्षितेन विदुषामक्षीणलक्ष्मीपुषा ।
कामाक्षि स्मितकन्दलेन कलुषस्फोटक्रियाचुञ्चुना
कारुण्यामृतवीचिकाविहरणप्राचुर्यधुर्येण माम् ॥

கம்ரேண ஸ்நபயஸ்வ கர்ம குஹநா
சோரேண மாராகம
வ்யாக்யா சிக்ஷண தீக்ஷிதேந
விதுஷா மக்ஷீண லக்ஷ்மீ புஷா |
காமாக்ஷி! ஸ்மித கந்தளேந கலுஷ
ஸ்போடக்ரியா சுஞ்சுநா
காருண்யா ம்ருத வீசிகா விஹரண
ப்ராசுர்ய துர்யேணமாம் ||

வனப்புள்ளதும், கர்மங்களின் சூதைப்போக்குவதும் மதன சாஸ்திரத்தை விவரித்துக் கற்பிப்பதில் தீக்ஷை பூண்டதும், (தேவி மதனசாஸ்திரத்தை கற்பிப்பதில் ஆதி குரு தக்ஷிணாமூர்த்திக்கும் குருவானவள்) அறிஞர்களுக்கு குறைவற்ற செல்வத்தை அளிப்பதும் பாபங்களைக் கை தட்டி விரட்டுவதில் திறமை வாய்ந்ததும், கருணை என்னும் அம்ருத ப்ரவாஹத்தில் அதிகமாக விளையாடுவதில் முதன்மையானதும் ஆன தேவி காமாக்ஷியின் புன்சிரிப் பில் நம்மை எல்லாம் முழுக்காட்ட வேண்டும் என்று இறைஞ்சு கிறேன். (34)

त्वन्मन्दस्मितकन्दलस्य नियतं कामाक्षि शङ्कामहे
बिम्बः कश्चन नूतनः प्रचलितो नैशाकरः शीकरः ।

किञ्च क्षीरपयोनिधिः प्रतिनिधिः स्वर्वाहिनीवीचिका-
बिब्वोकोऽपि विडम्ब एव कुहनामल्लीमतल्लीरुचः ॥

த்வந்மந்த ஸ்மித கந்தலஸ்ய
நியதம் காமாக்ஷி! சங்காமேஹே
பிம்ப: கச்சந நூதன ப்ரசலிதோ
நைசாசர (சீ) ஸ்ரீகர: |
கிஞ்ச க்ஷீரபயோநிதி: ப்ரதி நிதி
ஸ்வர்வாஹினீ வீசிகா
பிப்வோகோ(அ)பி விடம்ப
ஏவ குஹனா மல்லீ மதல்லீ ருச: ||

உலகத்தில் வெண்மை என்பதாகச் சொல்லப்படும் பாற்கடல், கங்கை அலை, மல்லிகை மலர் இவைகளில் எதுவுமே ஸ்ரீகாமாக்ஷி தேவியின் மந்தஸ்தத்தின் முன்நிற்க முடியாது. 'ஸ்ரீகர' என்று கொண்டால் அழகு அல்லது லக்ஷ்மியைக் கொடுக்கும் சந்திரன் என்று பொருள். (35)

दुष्कर्मार्कनिसर्गकर्कशमहस्संपर्कतप्तं मिलत्-
पङ्कं शंकरवल्लभे मम मनः कामाक्षि काञ्चीश्वरि ।
अम्ब त्वन्मृदुलस्मितामृतरसे मङ्क्त्वा विधूय व्यथां
आनन्दोदयसौधशृङ्गपदवीमारोढुं आकाङ्क्षति ॥

துஷ்கர்மார்க்க நிஸர்க்க கர்க்கச–
மஹ: ஸம்பர்க்க தப்தம் மிலத்
பங்கம் சங்கர வல்லபே மம மந:
காமாக்ஷி காஞ்சீஸ்வரி |
அம்ப த்வந் ம்ருதுள ஸ்மிதாம்ருத
ரஸே மங்க்த்வா விதூய வ்யதாம்
ஆனந்தோதய ஸௌத ச்ருங்க
பதவீமாரோடுமா காங்க்ஷதி ||

தீய்க்கும் வெயில் தகிக்கப்பெற்று, அத்துடன் சேற்றுப் பூச்சும் பூசப்பட்ட ஒருவன் குளிர்ந்த ஜலத்தில் மூழ்கி தாபத்தைத் தணித்துக்கொண்டு சேற்றையும் அலம்பிக் கொண்டு, தாபமும் சேறும் சென்றடைய முடியாத மாளிகை யின் மேல்மாடிக்குச் செல்ல விரும்புவதைப் போல் தீய கர்மங்களால் தபிக்கப்பெற்று பாபமாகிய சேறு பூசிய மனமானது தேவியின் புன்னகை என்னும் அமுதரஸத்தில் மூழ்கி பாபங்களும் தாபங்களும் அற்ற பேரானந்தம் என்ற மாளிகையின் மேல் மாடியில் ஏறி உலவ விரும்புகிறது. இதே கருத்தைப் பாதாரவிந்த சதகம் 48வது ஸ்லோகத்தில் 'நகாங்ககூரஸ்மேர்' என்ற பாடலில் காணலாம். (36)

नम्राणां नगराजशेखरसुते नाकालयानां पुरः
कामाक्षि त्वरया विपत्प्रशमने कारुण्यधाराः किरन् ।
आगच्छन्तमनुग्रहं प्रकटयन्नानन्दबीजानि ते
नासीरे मृदुहास एव तनुते नाथे सुधाशीतलः ॥

நம்ராணாம் நகராஜ சேகர ஸுதே நாகாலயாநாம் புர:
காமாக்ஷித்வரயா விபத்ப்ரசமநே காருண்ய தாரா: கிரன்|
ஆகச்சந்தமனுக்ரஹம் ப்ரகடயந் ஆனந்த பீஜாநி தே
நாஸீரே ம்ருதுஹாஸ ஏவதநுதே நாதே ஸுதா சீதள: ||

காமாக்ஷி கருணையே வடிவமாக உடையவள். தன்னை அடைந்த பக்தர் களின் பிறவித் துக்கத்தை உடனே நாசம் செய்து மோக்ஷ சுகத்தைத் தருகி றாள். தேவி தேவாஸுர யுத்த காலங்களில் துர்கையாகவும் மஹிஷாசுர மர்தனியாகவும் அவதரித்து தேவர்களை அசுரர்பிடியினின்றும் விடுவித்து பிரும்ம, விஷ்ணு, ருத்ர, இந்த்ராதியரை ரக்ஷித்த வரலாறுகள் உள்ளது. இந்த இடத்தில் தேவி சண்டி, சாமுண்டி, நவாக்ஷரி மந்த்ரங்களையும் நாம் நினைவு கூர்வோம். (37)

कामाक्षि प्रथमानविभ्रमनिधिः कन्दर्पदर्पप्रसूः
मुग्धस्ते मृदुहास एव गिरिजे मुष्णातु मे किल्बिषम् ।
यं द्रष्टुं विहिते करग्रह उमे शंभुस्त्रपामीलितं
स्मेरं कारयति स्म ताण्डवविनोदानन्दिना तण्डुना ॥

காமாக்ஷி! ப்ரதமாந–விப்ரம–நிதி:
கந்தர்ப்ப–தர்ப்ப – ப்ரஸூ:

முக்தஸ்தே ம்ருதுஹாஸ ஏவகிரிஜே
முஷ்ணாது மே கில்பிஷம் |
யம் த்ரஷ்டும் விஹிதே கரக்ரஹ உமே
சம்புஸ்த்ரபா–மீலிதம்
ஸ்மேரம் காரயதி ஸ்மதாண்டவ
விநோதாநந்திநா தண்டுநா ||

மலைமகளே, உமையே, காமாக்ஷி என்றெல்லாம் நெஞ் சுருக மூககவி தேவியை விளிக்கிறார். குரல் கொடுத்து மகிழ்கிறார். மகிழ்ச்சி ஏனென்றால் இது தேவ, தேவியரின் விவாஹக்கோலம், கோலாஹலம், கல்யாண காலத்தில் தேவி வெட்கத்தால குனிந்து கொண்டிருந்ததால் புன்சிரிப்பை சிவனால் சந்திக்க இயலவில்லை. ஏதாவது, வேடிக்கை, விளையாட்டுக்கள் செய்தால் தன்னையறியாமலேயே சிரிப்பு வந்து விடும். தேவி நாணத்தால் முகம் புதைத்து பாணிக் ரஹண காலத்தில் அமர்ந்த கோலத்தை நாம் மனக்கண்முன் கொண்டு வருவோமா! நந்திகேஸ்வரரைக் கொண்டு நடனமாடச்சொல்ல, நடனத்தைக் கண்ட தேவி முகம் நிமிர்ந்து முத்துப்பற்கள் ஒளி வீசி நகை சிந்தினாள். மன்மதன் சிவனை ஜயித்ததால் கொஞ்சம் கர்வம் அடைந்து நிற்கி றான். மன்மதனின் விலாஸமாகவே அமையும் அந்தப் புன்சிரிப்பு, சிறுநகை நம் பாபங்கலைளக் களையட்டும். நம்மைப் புனிதப் படுத்தட்டும். (38)

क्षुण्णं केनचिदेव धीरमनसा कुत्रापि नानाजनैः
कर्मग्रन्थिनियन्त्रितैरसुगमं कामाक्षि सामान्यतः ।
मुग्धैर्द्रष्टुमशक्यमेव मनसा मूढस्य मे चक्षुषो
मार्गं दर्शयतु प्रदीप इव ते मन्दस्मितश्रीरियम् ॥

க்ஷுண்ணம் கேந சிதேவ தீர –
மனஸா குத்ராபிநாநா ஜநை:
கர்மக்ரந்தி–நியந்த்ரிதைரஸுகமம்
காமாக்ஷி! ஸாமாந்யத: |
முக்தைர்த்ருஷ்டு மசக்யமேவ
மநஸாமூடஸ்ய மேசக்ஷுஷோ
மார்க்கம் தர்சயது ப்ரதீப இவதே
மந்தஸ்மித ஸ்ரீரியம் ||

தேவி காமாக்ஷியின் புன்னகை ஒளியானது பெரிய தீபம் போல் நமக்கு எளிதில் முக்தி மார்க்கத்தைக் காண்பிக்கட்டும். சிவ ஞானப்ரதாயினீ என்று லலிதா ஸஹஸ்ர நாமத்தில் சிவ விஷயமான ஞானத்தை அம்பாள் தன் பக்தர்களுக்குக் கொடுக்கிறாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தேவி 'தக்ஷிணாமூர்த்தி ரூபிணீ' 'ஸனகாதி ஸமாராத்யா' இப்படி குரு மூர்த்தமாகி, ஸனகாதிகளால் ஆராதிக்கப்பட்டு சிவ ஞானம் என்னும் ப்ரும்மரஸத்தை அளிக்கிறாள். பரமேச்வரன் ஒருவனாலேயே ஞானமார்க்கம் கிட்டும அதுவும் ஈச்வரன், ஈசவரி இவர்கள் அருளினாலேயே அடைய முடியும் என்பது இந்தப்பாடலின் கருத்து. (39)

ज्योत्स्नाकान्तिभिरेव निर्मलतरं नैशाकरं मण्डलं
हंसैरेव शरद्विकाससमये व्याकोचमम्भोरुहम् ।
स्वच्छैरेव विकस्वरैरुडुगणैः कामाक्षि बिम्बं दिवः
पुण्यैरेव मृदुस्मितैस्तव मुखं पुष्णाति शोभाभरम् ॥

ஜ்யோத்ஸ்நா—காந்திபிரேவ நிர்மலதரம்
நைசாகரம் மண்டலம்
ஹம்ஸைரேவ சரத்விகா(லா)ஸ ஸமயே(ய)
வ்யாகோசம் அம்போருஹம் |
ஸ்வச்சைரேவ விகஸ்வரை: உடுகணை:
காமாக்ஷி! பிம்பம்திவ:
புண்யைரேவ மருதுஸ்மிதை ஸ்தவ
முகம் புஷ்ணாதி சோபா பரம் ||

மாசற்ற மதியின் மண்டலம் நிலவின் ஒளிகளால் அழகு பெறுகிறது. தாமரை என்பது புஷ்பங்களிலேயே அழகானது. அதுவும் சரத்காலத்தில் உண்டாகும் தாமரை பன்மடங்கு அழகானது. அதில் ஹம்ஸங்களும் அமர்ந்து விளையாடினால் எப்படியிருக்கும்? மிக அழகாகவே இருக்கும். சரத்காலத்தில் வானம் நிர்மலமாக, தூய்மையாக விளங்கும். அப்பொழுது விண்மீன்களால் ஆகாயம் ஒளிபெறுகிறது. இவ்வாறாக, சந்திரமண்டலம் நக்ஷத்திரக்கூட்டங்கள் இவைகளால் ஆகாயம் விலாஸம் அடையுமாப்போல் தேவியின் முகமும் புன்சிரிப்பினால் சோபை பெறுகிறது. (40)

मानग्रन्थिविधुंतुदेन रभसादास्वाद्यमाने नव-
प्रेमाडम्बरपूर्णिमाहिमकरे कामाक्षि ते तत्क्षणम् ।

आलोक्य स्मितचन्द्रिकां मुहुरिमां उन्मीलनं जग्मुषीं
चेतः शीलयते चकोरचरितं चन्द्रार्धचूडामणेः ॥

மாந-க்ரந்தி-விதுந்துதேந
ரபஸாத் ஆஸ்வாத்யமாநேநவ
ப்ரேமாடம்பர-பூர்ணிமா-
ஹிமகரே காமாக்ஷி! தே தத்க்ஷணம் |
ஆலோக்ய ஸ்மித சந்த்ரிகாம்
முஹுரிமா முந்மீலனம் ஜக்முஷீம்
சேத: சீலயதே சகோர சரிதம்
சந்த்ரார்த்த சூடாமணே: ||

சந்திரனைக் கண்டதும் சகோரப்பறவை இன்புறும். அது போல் தேவியின் புன்சிரிப்பென்னும் நிலவைக்கண்டு பரமேஸ்வரன் ஆனந்திப்பதால் சிவனின் மனம் சகோரத்தின் செயலை ஒத்திருக்கிறது. பூர்ணிமைச்சந்திரனை ராகு விழுங்குவதை சந்திரக்ரஹணம் என்பர். அது கொஞ்ச காலத் தில் நிலவை விட்டுவிடும். அதுபோல் தேவிக்குப் பரமசிவன் மீது காதல் பூர்ணமாயிருந்தும் மாநம் அதைத் தடுத்து விடுகிறது. முன்பு ஒரு பாடலில், கடாக்ஷ சதகம் 25 'மந்தாக்ஷராக' தேவி தன் காதலை நாணத்தில் மறைத்து விட்டாள் என்று பார்த்தோம். தேவி அதை மாநத்தில் மறைத்துக் கொள்கிறாள். மாநம் அதைத்தடுக்கிறது. இந்த இடத்தில் மானம் மாநம் இவற்றின் பொருளை அறிய வேண்டும. ராகு சிறிது நேரத்தில் நிலவை விட்டு விலகுவது போல், தேவியும் கோபம் தணிந்து புன்முறுவல் பூக்க சிவனாரும் அதைக்கண்டு மகிழ்ந்தார். அபிராமி பதிகத்தில். 16வது பாடலான 'ஞானம் தழைத்து உன் ஸ்வரூபத்தை' இரண்டாவது அடியில் 'ஈனம் தன்னைத் தள்ளி, எனது நான் எனும் மாநம் இல்லாமலே துரத்தி' என்பதாக உள்ளது. மாநம் நான் உயர்ந்தவன் என்னும் எண்ணம். தேவி மிக, மிக உயர்ந்தவள். யௌவனச் செழிப்பு அதிகர்விதா ஆகிய பண்புகள் நிறைந்தள். இதை நினைவு கூறல் வேண்டும். (41)

कामाक्षि स्मितमञ्जरीं तव भजे यस्यास्त्विषामङ्कुरान्
आपीनस्तनपानलालसतया निःशङ्कमङ्केशयः ।
ऊर्ध्वं वीक्ष्य विकर्षति प्रसृमरानुद्दामया शुण्डया
सूनुस्ते बिसशङ्कयाशु कुहनादन्तावलग्रामणीः ॥

காமாக்ஷிஸ்மித மஞ்ஜரீம் தவபஜே
யஸ்யாஸ் த்விஷாமங்குரா
ஆடீந ஸ்தன பான லாலஸத
யாநி:சங்கமங்கேசய: |
ஊர்த்வம் வீக்ஷ்ய விகர்ஷதி ப்ரஸ்ருமரான்
உத்தாமயா சுண்டயா
ஸூநுஸ்தே பிஸ-சங்கயாசு குஹநா-
தந்தாவல க்ராமணீ: ||

ஸ்ரீகாமாக்ஷி தேவியின் புதல்வனான மாயா கஜமுகன் விக்நேச்வரன், மடியில் படுத்துக்கொண்டு அன்னையின் பருத்த ஸ்தனங்களின் பாலைப் பருகுகிறான். தேவியின் முகத்தில் பரவும் புன்சிரிப்பின் ஒளிக்கதிர்களை தாமரைத் தண்டென்று அண்ணாந்து நோக்கித் தனது நீண்ட துதிக்கை யால் சீக்கிரம் இழுத்துப்பார்க்கிறார். அந்தப் புன்னகையெனும் பூங்கொத்தை நாங்கள் வழிபடுகிறறோம். யானைக்குத் தாமரைத் தண்டில் அதிக விருப்பம். தாமரைக்குளத்தில் கலக்கி விளையாட யானைக்கு மிகவும் ஆசை உண்டு. ஸௌந்தர்யலஹரி ஸமம் தேவி ஸ்கந்த 72, அமூதே வக்ஷோஜா 73 இந்தப் பாடல்களில் தேவியின் ரத்ன கலசம் போன்ற இருஸ்தனங்களிலும் திருக்குமாரர்களான கணபதி, கந்தன் இருவரும் ஏக காலத்தில் ஞானப்பால் பருகும் வைபவம் கூறப்படுகிறது. ஞானப்பாலைப்பருகியதாலேயே ஸ்திரீ ஸங்கரஸத்தை அறியாத குழந்தைகளாவே என்றும் இளையாய், அழகியாய் என்று புகழ்ப்படுகிறார்கள். (42)

गाढाश्लेषविमर्दसंभ्रमवशाद् उद्दाममुक्तागुण-
प्रालम्बे कुचकुम्भयोर्विगलिते दक्षद्विषो वक्षसि ।
या सख्येन पिनह्यति प्रचुरया भासा तदीयां दशां
सा कामाक्षि तवास्य चेतसि कनत्वच्छा स्मितांशुच्छटा ॥

காடாச்லேஷ-விமர்த்த-ஸம்ப்ரம-
வசாத் உத்தாம முக்தாகுண
ப்ராலம்பே குசகும்பயோர் விகளிதே
தக்ஷத்விஷோ வக்ஷஸி |

யாஸக்யேந பிநஹ்யதி ப்ரசுரயா
பாஸா ததீயாம் தசாம்
ஸாகாமாக்ஷி! தவாஸ்ய சேதஸி
கநத்வச்சா ஸ்மிதாம்சுச்சடா ||

தக்ஷ சத்ருவான பரமசிவனுடைய மார்பில் இறுகத்தழுவும் ஸமயத்தில், ஆலிங்கனத்தின் பரபரப்பினால் தேவியின் கொங்கைகளில் நீண்டு தொங்கும் முத்துமாலை அறுந்து பெருகும் பொழுது ஸ்ரீகாமாக்ஷி தேவியின் வெண்மை யான புன்னகை அதிக ஒளியினால் நட்புக்கொண்டு அந்த முத்து மாலையின் நிலையைச் சேர்த்து வைக்கிறதோ அந்த பரிசுத்த மான புன்னகையின் கிரணக்கூட்டம் எப்பொழுதும் எங்கள் மனதில் விளங்க வேண்டும. தேவியின் முத்துப் போன்ற பற்களில் வீசும் ஒளியும், முத்துமாலை முத்துக்களின் ஒளியும் ஒன்று போல் இருப்பதால் ஒளியும், ஒளியும் ஒன்ற சேர்ந்து முத்துமாலையை சேர்த்து வைத்து விட்டது என்ற கவியின் சாதுரியம் அபாரமானது. (43)

मन्दारे तव मन्थरस्मितरुचो मात्सर्यमालोक्यते
कामाक्षि स्मरशासने च नियतं रागोदयो लक्ष्यते ।
चान्द्रीषु द्युतिमञ्जरीषु च महान् द्वेषाङ्कुरो दृश्यते
शुद्धानां कथमीदृशी गिरिसुतेऽशुद्धा दशा कथ्यताम् ॥

மந்தாரே தவ மந்தர ஸ்மிதருசோ
(சாம்) மாத்ஸர்ய மாலோக்யதே
காமாக்ஷி! ஸ்மர சாஸநேசநியதம்
ராகோதயோ லக்ஷ்யதே |
சாந்த்ரீஷுத்யுதி–மஞ்ஜரீஷுச
மஹான் த்வேஷாங்குரோத்ருச்யதே
சுத்தாநாம் கதமீத்ருசீ கிரிஸுதே (அ)
சுத்தா தசா கத்யதாம் ||

சுத்தாநாம் – வெண்மையாய் இருப்பவர்களுக்கு, களங்க மற்றவர்களுக்கு. அசுத்தாதசா-மாத்ஸர்யம், ராகம், த்வேஷம் என்பவை அசுத்தமானவை. ஸ்ரீகாமாக்ஷி தேவியின் புன்சிரிப் பின் ஒளிக்கு மந்தாரமலர்களிடம் பொறாமை காணப்படு கிறது. மன்மதனை அடக்கிய சிவனிடமோ அளவில்லாத, மாறாத ஆசையின் தோற்றம் தெரிகிறது. பூங்கொத்துக்கள் போன்ற சந்திர கிரணங்

களின் காந்தி ஸமூஹத்துடன் பெருத்த பகை முளைத்தெழுவது தோன்று கிறது. தேவி காமாக்ஷியின் புன்முறுவலோமாசற்றது. அப்படி மாசற்ற புன்முறு வலுக்கு, அந்த இளமுறுவல் ஒளிக்குவியலுக்கு இம்மாதிரியான மாசுள்ள நிலை எப்படித்தான் வந்ததோ? (44)

पीयूषं खलु पीयते सुरजनैर्दुग्धाम्बुधिर्मथ्यते
माहेशैश्च जटाकलापनिगडैर्मन्दाकिनी नह्यते ।
शीतांशुः परिभूयते च तमसा तस्मादनेतादृशी
कामाक्षि स्मितमञ्जरी तव वचोवैदग्ध्यमुल्लङ्घते ॥

பீயூஷம் கலுபீயதே ஸுரஜனை:
துக்தாம்புதிர் மத்யதே
மாஹே சைச்ச ஜடா – கலாப–
நிகடை: மந்தாகினீ நஹ்யதே |
சீதாம்சு: பரிபூயதேசதமஸா
தஸ்மாதநேதாத்ருசீ
காமாக்ஷி ஸ்மித மஞ்ஜரீ தவ வசோ
வைதக்த்ய முல்லங்கதே ||

பாற்கடல் கடையப்படுகிறது. தேவர்களால் அமுதம் பருகப்படுகின்றது. மஹேச்வரனுடைய சடைக்கூட்டமாகிய விலங்குகளால் கங்கையும் கட்டப்படுகிறாள். தமஸ் என்பதற்கு இருள் என்றும், ராகு என்றும் பொருள். ராகுவால் சந்திரனும் அவமதிக்கப்படுகிறான். ஸ்ரீகாமாக்ஷி தேவியின் புன்சிரிப்புக்கு ஸமமாக அமுதம், கங்கா ப்ரவாஹம் போன்ற வற்றை (நிலவு)க் கூறினாலும் அவைகளுக்கு ஏதாவது துன்பம் இருந்து கொண்டே இருக்கிறது. ஆனால் தேவியின் புன்முறுவலோ யாதொரு துன்பமுமின்றி வாக்கினால் சொல்ல முடியாத மஹிமை பெற்று விளங்குகிறது. (45)

आशङ्के तव मन्दहासलहरीमन्यादृशीं चन्द्रिकां
एकाम्रेशकुटुम्बिनि प्रतिपदं यस्याः प्रभासंगमे ।
वक्षोजाम्बुरुहे न ते रहयतः काञ्चिद्दशां कौड्मलीं
आस्याम्भोरुहमम्ब किं च शनकैरालम्बते फुल्लताम् ॥

ஆசங்கே தவ மந்தஹாஸ லஹரீ
மந்யா த்ருசீம் சந்த்ரிகாம்
ஏகாம்ரேசகுடும்பினீ! ப்ரதிபதம்யஸ்யா:
ப்ரபா ஸங்கமே |
வக்ஷோஜாம்புருஹே ந தே ரஹ(ச)யத:
காஞ்சித் தசாம் கௌட்மலீம்
ஆஸ்யாம் போருஹமம்ப ! கிஞ்ச சநகை
ராலம்பதே புல்லதாம் ||

தேவியின் புன்சிரிப்புப் பெருக்கு முழுமதியாகத் திகழ்கிறது. அந்த மந்தஹாஸத்தின் காந்தியின் சேர்க்கையில் தேவி யின் ஸ்தனங்கள் என்ற இரு தாமரைப்பூக்கள் மொட்டாக இருக்கும் நிலையை விடாதிருக்கின்றன. முகத் தாமரையும் மெதுவாக மலர்ச்சி அடைகிறது. முதலில் தேவி யின் முகத்தைச் சந்திரனாக வர்ணித்ததால், ஸ்தனங்களைத் தாமரை மலர்கள் என்று கூறியவர், நிலவின் தன்மையால் தாமரை மொட்டாகவே இருக்கும் நிலை, அதாவது யௌவனத்தின் விகாஸத்தில் மொட்டுப்போல் உள்ள ஸ்தனங்கள் என்ற உயர்ந்த சாமுத்ரிகா லக்ஷணத்தைக் கூறுகிறார். தேவியின் சிரிப்பு என்னும் அதிசயமான சந்திரன் திருமுகத்தாமரையை மலரச்செய்கிறது. அபிராமிபட்டர் தேவியை தாமரைகளாகவே வர்ணிக்கிறார். செந்தாமரை மலரிலும் எனது உள்ளமாகிய தாமரையிலும் தேவி வீற்றிருக்கிறாள். மலரும் பருவத்தில் இருக்கும் தாமரை அரும்பு போன்ற ஸ்தனங்கள் உடைய தேவி, அழகு பொருந்திய கருணைவிழி எனும் தாமரை, திருமுகத்தாமரை, கைகளாகிய தாமரை, திருவடித்தாமரை இப்படியாகத் தாமரை களாகவே வர்ணனை அமைந்துள்ளது. செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் லக்ஷ்மி தேவியும் காமாக்ஷியேயாவள். அருண கிரியார் லக்ஷ்மியை திரு என்றும் தேவியைப் பெருந்திரு என்றும் கூறுகிறார். (46)

आस्तीर्णाधरकान्तिपल्लवचये पातं मुहुर्जग्मुषी
कामद्रोहिणि मांसलस्मरशरज्वालावलिं व्यञ्जती ।
निन्दन्ती घनसारहारवलयज्योत्स्ना मृणालानि ते
कामाक्षि स्मितचातुरी विरहिणीरीतिं जगाहेतराम् ॥

ஆஸ்தீர்ணாதர–காந்தி–பல்லவ சயே
பாதம்முஹுர்ஜக்முஷீ

காமத்ரோயிணி மாம்ஸல–ஸ்மர–சர–
ஜ்வாலாவலிம் வ்யஞ்ஜதீ |
நிந்தந்தீ கனஸார – ஹாரவலய–
ஜ்யோத்ஸ்னா–ம்ருணாளாநிதே
காமாக்ஷி ஸ்மித சாதுரீ விரஹிணீ
ரீதிம் ஜகாஹேதராம் ||

விரித்த தளிர் போன்ற கீழ்உதட்டின் ஒளித்தளிர்ப் படுக்கையில் அடிக்கடி விழுந்து, மன்மதத்துரோகியான பரமசிவனிடம் கொழுந்து விடும் மதன பாணங்களை சுடர்த் தொகுதி யாக்கி வெளிக்காட்டுவதைப்போன்ற மன்மத பாண ஜ்வாலை கள். இப்படிப்பட்ட மந்தஸ்மிதம் உடையவன் நம் அன்னை காமாக்ஷிதேவி, பச்சைக்கர்ப்பூரம், முத்துமாலை இவற்றின் வெண் மையைக் காட்டிலும், மேலான வெண்மை யுடையது மந்தஸ்மிதம். கண வனை விட்டுப் பரிதவிக்கும் தலைவி தளிர்மயமான படுக்கையில் விழுந்து புரளுவாள். கணவன் நினைவில் மன்மத தாபத்தால் ஜ்வாலைகளை வெளி விடுவாள். பச்சைக் கர்பூரம் போன்ற எந்தக் குளிர்ச்சிப் பொருளும் அவள் தாபத்தை ஆற்றாது. இதையே கவி தளிர்மயமான படுக்கை என்று மந்த ஸ்மிதத்தைக் கூறுகிறார். (பாலும் கசந்ததடி ச்கியே! படுக்கை நொந்ததடி! கோலக்கிளியின் மொழியும் செவியில் குத்தல் எடுத்ததடி! என்று பாடுவது வழக்கம். (47)

सूर्यालोकविधौ विकासमधिकं यान्ती हरन्ती तमस्-
संदोहं नमतां निजस्मरणतो दोषाकरद्वेषिणी ।
निर्यान्ती वदनारविन्दकुहरान्निर्धूतजाड्या नृणां
श्रीकामाक्षि तव स्मितद्युतिमयी चित्रीयते चन्द्रिका ॥

ஸூர்யாலோகவிதௌ
விகாஸமதிகம் யாந்தீஹரந்தீதம
ஸந்தோஹம் நமதாம் நிஜஸ்மரணத:
தோஷாகர–த்வேஷிணீ|
நிர்யாந்தீ வதனாரவிந்த குஹராத்
நிர்த்தூத–ஜாட்யாந்ருணாம்
ஸ்ரீகாமாக்ஷி! தவஸ்மித–த்யுதிமயீ
சித்ரீயதே சந்த்ரிகா ||

சூரியனக்கு வெளிச்சம் கொடுப்பதும், வித்வான்களுக்கு விளக்கம் தருவதும் அம்பாளுடைய திருவருளே. தேவியின் முகமெனும் தாமரை சூரிய னைக்காண்கையில் மலர்கிறது. அறிஞர்களைக் காணும் போதும் மலர் கிறது. வணங்குவோரின் அஞ்ஞானம் என்னும் இருளை அகற்றுவதும் குற்றமுள் ளோரைக் கண்டிப்பதும் தேவியின் முகத்தாமரை யேயாகும். இந்த முகம் என் னும் தாமரையின் நடுவிலிருந்து வெளிவருவதும் மனிதர்களின் குளிர்ச் சியை அகற்றுவதும் (அதாவது அறிவின்மையை விலக்குவதும்). ஆன இந்த சிரிப் பின் ஒளியாகிய இந்த நிலவானது வியப்பிலாழ்த்துகிறது. சந்திரிகை சூரிய னைக்கண்டால் மங்கி விடும். சந்திர னைப் பகைக்காது. நினைத்த மாத்திரத் தில் இருளைப் போக்காது. தாமரையின் நடுவிலிருந்து வெளிவராது. குளிர்ச் சியை உண்டு பண்ணும். ஆனால் தேவி காமாக்ஷியின் புன்சிரிப்பின் ஒளி என்னும் நிலவு இவற்றுக்கெல்லாம் மாறுபாடாக இருக்கிறது. (48)

कुण्ठीकुर्युरमी कुबोधघटनां अस्मन्मनोमाथिनीं
श्रीकामाक्षि शिवङ्करास्तव शिवे श्रीमन्दहासाङ्कुराः ।
ये तन्वन्ति निरन्तरं तरुणिमस्तम्बेरमग्रामणी-
कुम्भद्वन्द्वविडम्बिनि स्तनतटे मुक्ताकुथाडम्बरम् ॥

குண்டிகுர்யுரமீ குபோத–கடநாம்அஸ்மந்மநோ மாதிநீம்
ஸ்ரீகாமாக்ஷி! சிவம் கரா: தவசிவேஸ்ரீமந்தஹாஸாங்குரா:|
யேதந்வந்தி நிரந்தரம் தருணிம –ஸ்தம்பேரம க்ராமணி
கும்பத்வந்த விடம்பிநி ஸ்தனதடே முக்தா குதாடம்பரம் ||

தேவி காமாக்ஷியின் புன்னகை ஒளியானது நித்ய யௌவனாவான தேவியின் யானைமத்தகத்தை ஒத்த ஸ்த னங்களில் பரவுவது ஒரு முத்துக் கோத்த விரிப்பு விரித்த தைப்போல் தோற்றுகிறது. மங்களங்களை வாரி வழங்கும் இந்த புன்னகை தேவியை வழிபடும் அன்பர்களுக்கு அஞ் ஞானம் போன்ற விக்னங்கள் ஊழ்வலிவால் இருந்தாலும், அவை தேவியின் இன்ன ருளால் நீங்கி அவர்கள் சுகம் பெறுவார்கள். ஸௌந்தர்யலஹரி 72 'ஸமம் தேவி ஸ்கந்த:' இந்தப்பாடல் மேலே உள்ள பாடலுடன் ஒத்தி ருக்கிறது. (49)

प्रेङ्खन्तः शरदम्बुदा इव शनैः प्रेमानिलैः प्रेरिताः
मज्जन्तो मदनारिकण्ठसुषमासिन्धौ मुहुर्मन्थरम् (राः) ।
श्रीकामाक्षि तव स्मितांशुनिकराः श्यामायमानश्रियो
नीलांभोधरनैपुणीं तत इतो निर्निद्रयन्त्यञ्जसा ॥

ப்ரேங்கந்த: சரதம்புதா இவ சநை:
ப்ரேமாநிலை: ப்ரேரிதா
மஜ்ஜந்தோ மதநாரி–கண்ட–ஸுஷமா
ஸிந்தௌமுஹு: மந்தரம்(ரா:) |
ஸ்ரீகாமாக்ஷி! தவஸ்மிதாம்சு–நிகரா:
ச்யாமாயமாந–ச்ரிய:
நீலாம்போதர நைபுணீம் தத இதோ
நிர்நித்ரயந் த்யஞ்ஜஸா ||

தேவி காமாக்ஷியின் புன்சிரிப்பின் கிரணக்கூட்டங்கள், சரத்காலத்து மேகங்களைப்போல் அன்பென்னும் காற்றுக் களால் தள்ளப்பட்டு மெதுவாக நகர்ந்து சென்று மன்மதனின் பகைவனான பரமசிவனின் கழுத்தழகு என்னும் கடலில் அடிக்கடி மெதுவாக மூழ்கிக் கருத்த நிறத்தையடைந்து கார் மேகங்களின் திறமையை இங்குமங்கும் வெளிப்படுத்து கிறது. (50)

व्यापारं चतुराननैकविहृतौ व्याकुर्वती कुर्वती
रुद्राक्षग्रहणं करेण सततं वागूर्मिकल्लोलिता ।
उत्फुल्लं धवलारविन्दमधरीकृत्य स्फुरन्ती सदा
श्रीकामाक्षि सरस्वती विजयते त्वन्मन्दहासप्रभा ॥

வ்யாபாரம் சதுராநநைக–
விஹ்ருதௌ வ்யாகுர்வதீ குர்வதீ
ருத்ராக்ஷக்ரஹணம்(மஹேசி) கரேண
ஸததம் வாகூர்மி–கல்லோலிதா |
உத்புல்லம் தவலாரவிந்த
மதரீக்ருத்ய ஸ்புரந்தீ ஸதா
ஸ்ரீகாமாக்ஷி! ஸரஸ்வதீ விஜயதே த்வந்
மந்த ஹாஸ–ப்ரபா ||

சதுர ஆநந = அழகிய முகம்; சதுர் ஆநந = சதுர்முகப்ரம்மா; ருத்ராக்ஷ = ருத்ராக்ஷ மாலை; ருத்ர அக்ஷ–ருத்ரனுடையபுலன்; இப்படியெல்லாம் சிலேடையோடு கூடியபாடல். மகேசனின் மனையாளான ஸ்ரீகாமாக்ஷி தேவி

ப்ரம்மா ஒருவனிடமே களியாடுவதும் (தேவி அழகிய முகத்திலே உலவு கின்றாள்) ருத்ராக்ஷத்தைக் கையில் ஏந்திக் கொண்டும் (ருத்ரனின் புலன் களை கொண்டும்) விளங்குகிறாள். வார்த்தைகள் என்னும் அலைக ளோடு கூடியதும், மலர்ந்த வெண்தாம ரையை ஆசனமாக்கிக் கொண்டு எப் பொழுதும் விளங்கும் புன்சிரிப்புடன் கலைமகளாகவும் தேவி விளங்குகிறாள். புன்சிரிப்பின் வெண்மையின் முன், வெண்டாமரையைப் புறக்கணித்துக் கொண்டும் தேவி விளங்குவதாகவும் கொள்ள வேண்டும். (51)

कर्पूरद्युतितस्करेण महसा कल्माषयत्याननं
श्रीकामाक्षि शिवप्रिये पतिरिव श्रीमन्दहासोऽपि ते ।
आलिङ्गत्यतिपीवरां स्तनतटीं बिम्बाधरं चुम्बति
प्रौढं रागभरं व्यनक्ति मनसो धैर्यं धुनीतेतराम् ॥

கர்ப்பூர–த்யுதி–தஸ்கரேணமஹஸா
கல்மாஷயந்த்யாநநம்
ஸ்ரீகாமாக்ஷி! சிவப்ரியே! பதிரிவ
ஸ்ரீமந்தஹாஸோ (அ) பிதே |
ஆலிங்கத்யதி பீவராம் ஸ்தன–தடீம்
பிம்பாதரம் சும்பதி
ப்ரௌடம் ராக–பரம் வ்யநக்தி
மனஸோ: தைர்யம் துநீதே தராம் ||

தேவி சிவபத்னி காமாக்ஷி ஆவாள். தேவியின் புன்சிரிப்பு சிவனைப் போலவே கர்பூர காந்தியைக் கவர்கிற ஒளியினால் முகத்தைக் கொஞ்சம் வெளிர் நிறமாகச் செய் கிறது. வெண்மையும் சிவப்பும் கலந்தால் வெளிர்சிவப்பு என்ற நிறம் கிடைக்கும். அந்தப் புன்னகையானது மிகவும் பெருத்த ஸ்தனங் களை ஆலிங்கனம் செய்து கொள்கிறது. அணைத்துக்கொள்கிறது. கோவைப் பழம் போன்ற உதட்டை முத்தமிடுகிறது. முதிர்ச்சியான, அதிகமான ஆசையை வெளிப்படுத்துகிறது. மனதின் தைர்யத்தை மிகவும் உலுக்கிக் குலைக்கிறது. புன்சிரிப்பை காமாக்ஷியின் பதிக்கு ஒப்பிட்டு இரண்டின் செயல் களையும் ஒற்றுமைபபடுத்திக் காண்பித்திருப்பது அதிசயமான விஷயமாகும். நாயகன் எப்படி, நாயகி அப்படி என்னும் உலக வழக்கின் உண்மை தேவ, தேவியரான இவர்களிடமிருந்தே பிறந்ததோ என்று தோன்றுகிறது. (52)

वैशद्येन च विश्वतापहरणक्रीडापटीयस्तया
पाण्डित्येन पचेलिमेन जगतां नेत्रोत्सवोत्पादने ।

कामाक्षि स्मितकन्दलैस्तव तुलामारोढुमुद्योगिनी
ज्योत्स्नासौ जलराशिपोषणतया दूष्यां प्रपन्ना दशाम् ॥

வைசத்யேந சவிச்வ-தாப-
ஹரண-க்ரீடா படீயஸ்தயா
பாண்டித்யேந பசேலிமேந ஜகதாம்
நேத்ரோத்ஸவோத்பாதநே |
காமாக்ஷி! ஸ்மித-கந்தலைஸ்தவ
துலாமாரோடு முத்யோகிநீ
ஜ்யோத்ஸ்நாஸௌ ஜலராசிபோஷண தயா
தூஷ்யாம் ப்ரபன்னா தசாம் ||

வைசத்யம்-வெண்மை, சுத்தம்; விச்வதாப ஹரணம் - உலகங்களின் உஷ்ணத்தைப் போக்குதல்; ஜலராசி போஷ ணம் - சமுத்திரம் பொங்கும்படி செய்தல்; ஜடராசி போஷ ணம் - ஜடர்களின் ராசியைப் போஷிக்கும்படி செய்தல்; இப்ப டியாக சிலேடையுடன் அமைந்த பாடல், வெண்ணிலவு ஸமுத் திரத்தை பொங்கி எழச்செய்கிறது. புன்னகையை, காமாக்ஷி தேவியின் புன்ன கையின் ஒற்றுமையைப் பெற வேண்டி வெண்மை நிறத்தாலும், உலகின் தாபத்தை அகற்றும் செயலில் கைதேர்ந்ததாகவும், உலகத்தார் கண்க ளுக்கு இன்பம் தருவதில் மிகத்திறமையுடையதாகவும் செயல்படுகிறது. வெண்ணிலவானது புன்சிரிப்புடன் போட்டி போட எவ்வளவு பாடுபட்டாலும் அது நடைபெறுவதில்லை. தேவியின் புன்னகை நிலவை இகழ்ந்ததாகவே விளங்குகிறது. (53)

लावण्याम्बुजिनीमृणालवलयैः शृङ्गारगर्जद्द्विप-
ग्रामण्यः श्रुतिचामरैस्तरुणिमस्वाराज्यबीजाङ्कुरैः ।
आनन्दामृतसिन्धुवीचिपृषतैरास्याब्जहंसैस्तव
श्रीकामाक्षि मथान मन्दहसितैर्मत्कं मनः कल्मषम् ॥

லாவண்யாம்புஜிநீ-ம்ருணாள-வலயை:
ச்ருங்கார - கர்ஜத்(கந்த)த்விப
க்ராமண்ய: ச்ருதிசாமரைஸ்தருணிம-
ஸ்வாராஜ்ய பீஜாங்குரை: |

ஆனந்தாம்ருத–ஸிந்து–வீசிப்ருஷதை:
ஆஸ்யாப்ஜ–ஹம்ஸைஸ்தவ
ஸ்ரீகாமாக்ஷி! மதாநமந்தஹஸிதை:
மத்கம் மந: கல்மஷம் ||

புன்சிரிப்பு என்பது இங்கு ஆனந்தம் என்ற அம்ருத ஸாக ரத்தின் சிறிய அலைகள் என்று கூறியிருக்கிறார். கவியானவர் மிகுந்த அன்புடன் தேவி யின் தியானத்தில் தோய்ந்து, அம்பி கையின் அருளால் புன்முறுவல் தரிசன அனுபவத்தை நம்மி டம் பகிர்ந்து கொள்வது தெற்றெனத் தெரிகிறது. ஸ்ரீமூகரின் கருணையால், ஆசியால் அவர் பெற்ற பேற்றை யாமும் பெறுவோம். (54)

उत्तुङ्गस्तनमण्डलीपरिचलन्माणिक्यहारच्छटा-
चञ्चच्छोणिमपुञ्जमध्यसरणिं मातः परिष्कुर्वती ।
या वैदग्ध्यमुपैति शङ्करजटाकान्तारवाटीपतत्-
स्वर्वापीपयसः स्मितद्युतिरसौ कामाक्षि ते मञ्जुला ॥

உத்துங்க–ஸ்தந–மண் டலீ–பரிசலந்–
மாணிக்ய ஹாரச்சடா–
சஞ்சத்–சோணிம–புஞ்ஜ–மத்ய –
ஸரணிம்மாத:பரிஷ்குர்வதி |
யாவைதக்த்ய முபைதி சங்கர–ஜடா
காந்தார வாமீ பதத்
ஸ்வர்வாபீ–பயஸ: ஸ்மிதத்யுதிரஸௌ
காமாக்ஷி! தே மஞ்ஜுளா ||

மாத: காமாக்ஷி, ஸ்ரீமாதா என்னும் காமாக்ஷியே என்று தேவியைத் தாயாகக் காண்கிறார். தேவியின் உயர்ந்த மார்பகங்களில் அசைந்தாடும் மாணிக்க மாலையின் கொத்துப்போல் திகழும் சிவப்புநிறக்குவியலின் நடுவை அழகுபடுத்தும், அதன் மேல் ஒளி வீசும் மந்தஹாஸம், சிவனின் சடைவரிசையாகிய காட்டின் நடுவே பாயும் கங்கை அதன் அலை நுரை அந்த சடைக்காட்டின் நடுவே விழுவது, தேவ கங்கை அதே நிலையை அடைகி றாள். தேவியின் புன்சிரிப்பு ஒன்றே மிகுந்த வனப்புடையதாக இது எல்லா அழகுகளையும் தாண்டிநிற்கிறது. (55)

सन्नामैकजुषा जनेन सुलभं संसूचयन्ती शनैः
उत्तुङ्गस्य चिरादनुग्रहतरोरुत्पत्स्यमानं फलम् ।
प्राथम्येन विकस्वरा कुसुमवत्प्रागल्भ्यमभ्येयुषी
कामाक्षि स्मितचातुरी तव मम क्षेमंकरी कल्पताम् ॥

ஸந்நாமைக ஜுஷா ஜனேன ஸுலபம்
ஸம் ஸூசயந்தீசநை:
உத்துங்கஸ்ய சிராதநுக்ரஹத
ரோருத்ஸ்யமாநம் பலம் |
ப்ராதம்யேந விகஸ்வரா குஸுமவத
ப்ராகல்ப்யமப்யேயுஷு
காமாக்ஷி! ஸ்மிதசாதுரீ தவ மம
க்ஷேமங்கரீ கல்பதாம் ||

நல்ல பெயரையடைந்த ஜனங்கள், அதாவது ஸாது என்ற ஒரே பெயரை அடைநதவர்கள். அடையக்கூடியதும், மிகவும் உயர்ந்த அருள் என்னும் மரத்தின் வெகுநாட்களுக்குப்பிறகு உண்டாகப் போகும் பழத்தை மெதுவாக முன்பே ஸூசனை செய்கிறதாகவும், முதன் முதலாக புஷ்பம் போல் மலர்ந்து பெருமிதத்தையடைகின்ற, தேவியின் புன்னகையின் திறம் நமக்கெல்லாம் க்ஷேமத்தை அளிக்கட்டும். (56)

धानुष्काग्रसरस्य लोलकुटिलभ्रूलेखया बिभ्रतो
लीलालोकशिलीमुखं नववयस्साम्राज्यलक्ष्मीपुषः ।
जेतुं मन्मथमर्दिनं जननि ते कामाक्षि हासाङ्कुरो
वल्गुर्विभ्रमभूभृतो वितनुते सेनापतिप्रक्रियाम् ॥

தானுஷ்காக்ர–ஸரஸ்ய லோல–
குடில–ப்ரூ–லேகயா பிப்ரதோ
லீலாலோக–சிலீமுகம் நவ–வயஸ்ஸாம்
ராஜ்ய லக்ஷ்மீபுஷ: |

ஜேதும் மன்மத–மர்த்தினம்
ஜநநிதே காமாக்ஷி ஹாஸாங்குர:
வல்குர் விப்ரம–பூப்ருதோ
விதநுதே ஸேநாபதி ப்ரக்ரியாம் ||

இந்தப்பாடலில் கவிராஜரின் கற்பனை மிகவும் வளம் பெற்றுக் காணப் படுகிறது. மன்மதனை ஜெயித்த பரமேச் வரனை ஜெயிப்பதற்கு என்பதில் பார்வதி, பரமேச்வரன் இருவருமே காமத்தை வென்றவர்கள் என்றும், அவர்கள் ஒருவரை ஒருவர் காமுறுவதைப் போல் காண்பிப்பது, பேசுவது எல்லாமே அவர்களின் திருவிளையாடலைக் குறிக்கவே ஏற்பட்டது. விப்ரமம் என்னும் அரசனுக்கு தேவி யின் அழகிய புன்முறுவலே சேனாதிபதியின் செயலைச் செய் கிறது. அந்த அரசன் வில்லாளிகளில் முதல்வன், அசைகின்ற வளைந்த புருவக் கொடியே வில், அழகிய பார்வையே அம்பு. இவ்வரசன் புதிய யௌவனம் என்னும் ஸாம்ராஜ்ய லக்ஷ் மியை அடைந்து பிரகாசிக்கிறான். ஸ்திரீகளின் ச்ருங்கார பாவமாகிய ரதியிலி ருந்து பிறந்த கிரியைகள் விலாஸம், விப்ரமம் என்று அமரம் கூறுகிறது. காமாக்ஷியின் இந்த விப்ரமத்தை ஒரு அரசனாக கவி உருவகப்படுத்தி அந்த அரசன் மன்மதனை ஜயிக்க எண்ணும்போது தேவியின் புன்சிரிப்பு ஸேனாதிபதியாக இருக்கும் தன்மையைத் தானாகவே அடைகிறது. (57)

यन्नाकम्पत कालकूटकबलीकारे चुचुम्बे न यत्
ग्लान्या चक्षुषि रूषितानलशिखे रुद्रस्य तत्तादृशम् ।
चेतो यत्प्रसभं स्मरज्वरशिखिज्वालेन लेलिह्यते
तत्कामाक्षि तव स्मितांशुकणिकाहेलाभवं प्राभवम् ॥

யந்நாகம்பத கால கூட –
கபலீகாரே–சுசும்மே நயத்
க்லான்யா சக்ஷுஷிரூஷிதானல–சிகே
ருத்ரஸ்ய தத்தாத்ருசம் |
சேதோ யத் ப்ரஸபம் ஸ்மர– ஜ்வர–
சிகி–ஜ்வாலேந லேலிஹ்யதே
தத்காமாக்ஷி தவஸ்மிதாம்சு–கணிகா–
ஹேலாபவம் ப்ராபவம் ||

தேவர்களும், அஸுரர்களும் அம்ருத மதனம் செய்தார்கள். காலகூட விஷம் முதலில் வெளிவந்தது. எல்லோரும் பயந்து ஓடினார்கள். பரமேஸ்வரன் உலகங்களை ரக்ஷிக்க வேண்டி அந்த விஷத்தை, மனதில் கொஞ்சமும் நடுக்கமின்றி சாப்பிட்டார். அந்த விஷத்தின் அக்னி ஜ்வாலையால் அலைக் கழிக்கப்பட்ட போதும் களைப்பினால் கண்கள் வாட்டமடைய வில்லை அப்படிப்பட்ட ருத்ரனின் மனதும் மன்மதாக்னி ஜ்வாலையால் பலவந்தமாய் ஆக்ரமிக்கப் படுகிறது என்றால் அது தேவிகாமாக்ஷியின் புன்சிரிப்பின் கிரணங்களின் திவலை யின் விளையாட்டால் ஏற்பட்ட மஹிமையே. (58)

संभिन्नेव सुपर्वलोकतटिनी वीचीचयैर्यामुनैः
संमिश्रेव शशाङ्कदीप्तिलहरी नीलेर्महानीरदैः ।
कामाक्षि स्फुरिता तव स्मितरुचिः कालाञ्जनस्पर्धिना
कालिम्ना कचरोचिषां व्यतिकरे काञ्चिद्दशामश्नुते ॥

ஸம்பிந்நேவ–ஸுபர்வ–லோக–
தடினீ வீசிசயைர்யாமுனை:
ஸம்மிச்ரேவ சசாங்க–தீப்தி–லஹரீ–
நீலைர் மஹாநீரதை: ।
காமாக்ஷி! ஸ்புரிதா தவஸ்மிதருசி:
காலாஞ்ஜந ஸ்பர்த்திநா
காளிம்நா கசரோசிஷாம் வ்யதிகரே
காஞ்சித் தசாமச்நுதே ॥

தேவி எப்பொழுதும் கண்ணில் மைதீட்டி உள்ளாள். தேவியின் கூந்தல் என்னும் அளகபாரமோ கருமைக்கே பேர் போனது. யமுனாநதியின் நிறம் கருப்பு. கங்கைகோ வெண்மை நிறத்தவள். கங்கையின் வெண்மை நிறத்து டன் யமுனை என்னும் கருநிறத்தவள் கலப்பதுபோலும் கரிய பெரிய மேகங் கள் இடையே சந்திரனது ஒளிப்பெருக்குப் போலவும் தேவியின் இளம் நகை யின் ஒளி, கண் மையுடன் போட்டி போடும் கருங்குழல்களின் கருமையுடன் சேரும்போது இன்னதென்று சொல்ல முடியாத ஒரு நிலை ஏற்படுகிறது. (59)

जानीमो जगदीश्वरप्रणयिनि त्वन्मन्दहासप्रभां
श्रीकामाक्षि सरोजिनीमभिनवामेषा यतः सर्वदा ।
आस्येन्दोरवलोकने पशुपतेरभ्येति संफुल्लतां
तन्द्रालुस्तदभाव एव तनुते तद्वैपरीत्यक्रमम् ॥

ஜாநீமோ ஜகதீஸ்வரப்ரணயினித்வன்
மந்த ஹாஸப்ரபாம்
ஸ்ரீகாமாக்ஷி! ஸரோஜிநீமபிநவா
மேஷாயதஸ் ஸர்வதா |
ஆஸ்யேந்தோரவலோகநே
பசுபதேரப்யேதி ஸம்புல்லதாம்
தந்த்ராளு: ததபாவஏவ தநுதே
தத்வைபரீத்யக்ரமம் ||

ஜகத்துககு ஈச்வரனான பரமசிவனது பத்தினியான ஸ்ரீகாமாக்ஷி தேவியின் புன்சிரிப்பின் காந்தியை புதியதான தாமரை ஓடையாக கவி வர்ணிக்கிறார். 'நலினீ' என்றால் தாமரை ஓடை. தேவியின் புன்னகை தாமரைக் குவியல். நெருக்கமான தாமரை பூத்த ஓடை. சாதாரணமாக சந்திரனைக் கண்டால் தாமரை கூம்பும். ஆனால் பசுபதி முகமென்னும் சந்திரனைக் கண்டால், தேவி என்னும் தாமரை மலரும். அந்த சந்திரனைக் காணாதபோது, தேவியின் முகத்தாமரை, அதில் தோன்றும் புன்சிரிப்பு சோம்பலுற்று மலர்ச்சி அடையாமல் அயர்வுற்றிருக்கும். (60)

यान्ती लोहितिमानमभ्रतटिनी धातुच्छटाकर्दमैः
भान्ती बालगभस्तिमालिकिरणैर्मेघावली शारदी ।
बिम्बोष्ठद्युतिपुञ्जचुम्बनकलाशोणायमानेन ते
कामाक्षि स्मितरोचिषा समदशामारोढुमाकाङ्क्षते ॥

யாந்தீ-லோஹிதிமாந மப்ரதடிநீ
தாதுச்சடா கர்த்தமை:
பாந்திபால-கபஸ்தி-மாலி-கிரணை:
மேகாவளீசாரதீ |
பிம்போஷ்டத்யுதி-புஞ்ஜ-சும்பந-
கலாசோணாயமானேனதே
காமாக்ஷி! ஸ்மிதரோசிஷா ஸமதசா
மாரோடுமா காங்க்ஷதே(தி) ||

ஆகாசகங்கை வரும் வழியில் காவிக்குவியல்களை அடித்துக்கொண்டு வருவதால் செந்நிறத்தை அடைகிறது. சரத் காலத்திய மேகக்கூட்டக்ஙள இளஞ்சூரியனின் ஒளிக ளால் சிவந்து விடுகிறது. அதே போல் காமாக்ஷி தேவி யின் கோவைக்கனி போன்ற இதழின் ஒளிக்கூட்டத்துடன் ஸமத்துவம் பெற மேலே கூறிய கங்கையும், மேகங்களும் விரும்புகிறது. (61)

श्रीकामाक्षि मुखेन्दुभूषणमिदं मन्दस्मितं तावकं
नेत्रानन्दकरं तथा हिमकरो गच्छेद्यथा तिग्मताम् ।
शीतं देवि तथा यथा हिमजलं सन्तापमुद्रास्पदं
श्वेतं किञ्च तथा यथा मलिनतां धत्ते च मुक्तामणिः ॥

ஸ்ரீகாமாக்ஷி முகேந்து பூஷணமிதம்–
மந்தஸ்மிதம் தாவகம்
நேத்ராநந்தகரம் ததா ஹிமகரோ
கச்சேத் யதா திக்மதாம் |
சீதம் தேவி! ததா யதா ஹிமஜலம்
ஸந்தாப முத்ராஸ்பதம்
ச்வேதம் கிஞ்ச ததா யதா மலிநதாம்
தத்தேச முக்தாமணி: ||

தேவியின் முகம் சந்திரன் போலும், அந்த முகத்திற்கு ஓர் அணியாகப் புன்சிரிப்பு விளங்குகிறது. இந்தப் புன்சிரிப்பு நம் தாபங்களை அடியோடு தவிர்ப்பதால், நிலவு நம் உடல் தாபங்களை நீக்கிக் குளிர்ச்சி கொடுத்தாலும், தேவி நீக்கும் தாபத்ரயங்களுடன் ஒப்பிட்டால் சந்திரன் உஷ்ணமளிப்ப வனாகவே ஆகிறான். அதே பனிஜலமும் தாபத்தைத் தணிக் காமல் சூடாகவே இருக்கிறது. தேவியின் மந்தஸ்மித வெளுப் பின் முன் உயர்ந்த நல்முத்துக் களும் ஒளிகுன்றி அழுக்கா கவே தென்படுகிறது. தேவி காமாக்ஷியின் புன்னகை என்னும் ஒளிக்கூட்டத்தின் முன் எதையுமே உவமையாக்க முடிய வில்லை. (62)

त्वन्मन्दस्मितमञ्जरीं प्रसृमरां कामाक्षि चन्द्रातपं
सन्तः संततमामनन्त्यमलता तल्लक्षणं लक्ष्यते ।
यन्नासौ विधुनोति तापमधिकं नाभ्यन्तरं मानसं
ध्वान्तं तत्खलु दुःखिनो वयममी केनेति नो विद्महे ॥

த்வந்–மந்தஸ்மித–மஞ்ஜரீம் ப்ரஸ்ருமராம்
காமாக்ஷி சந்த்ராதபம்
ஸந்தஸ்ஸந்ததமாமநந்த்யமலதா
தல்லக்ஷணம் லக்ஷ்யதே |
யந்நாஸௌ விதுநோதி தாப மதிகம்
நாப்யந்தரம் மாநஸ
த்வாந்தம் தத்கலு துக்கிநோ
வயமமீ கேநேதி ஜாநீமஹே ||

தேவி காமாக்ஷியின் பூங்கொத்துக்கள் போல் பரவியுள்ள புன்சிரிப்பை நிலாவாக ஆன்றோர்கள் எப்பொழுதும் சொல்கி றார்கள். அதற்கு அடையாள மாக வெண்மையும் காணப்படு கிறது. ஆயினும் இந்தப் புன்னகை நிலவு அதிக தாபத்தைப் போக்கவில்லையே! இது ஏன் என்று மனதில் மிகுந்த துக்க மடைந்த பாமரமக்களான நாங்கள் அறிந்து கொள்ளவும் முடியவில்லை. (63)

नम्रस्य प्रणयप्ररोहकलहच्छेदाय पादाब्जयोः
मन्दं चन्द्रकिशोरशेखरमणेः कामाक्षि रागेण ते ।
बन्धूकप्रसवश्रियं जितवतो बंहीयसीं तादृशीं
बिम्बोष्ठस्य रुचिं निरस्य हसितज्योत्स्ना वयस्यायते ॥

நம்ரஸ்ய ப்ரணய–ப்ரரோஹ–கலஹ–
ச்சேதாய பாதாப்ஜயோ:
மந்தம் சந்த்ர கிசோர சேகரமணே:
காமாக்ஷி ராகேணதே |
பந்தூக–ப்ரஸவ–ச்ரியம் ஜிதவதோ
பம்ஹீயஸீம் தாத்ருசீம்
பிம்போஷ்ட்ஸ்ய ருசிம் நிரஸ்ய ஹஸித–
ஜ்யோத்ஸ்நாவயஸ்யாயதே ||

ப்ரணயகலஹம், அது மிகுந்த அன்பினால் ஏற்படுகிறது. அதைப்போக்க சந்த்ர சேகரன் தேவியின் திருவடித்தாமரை களில் மெதுவாக வணங்குகிறார். ஊடல் தீர்ந்த தேவி புன்னகை புரிவது ப்ரணய கலஹத்தைத் தீர்க்க வந்த

தோழி போலாகிறது என்கிறார். கோபத்தால் தேவி மந்தஹாஸம் செய்யாம லிருந்தபோது உதட்டின் காந்தி, கோவைப்பழங் களை நிகர்த்து, செம்பரத்தம் பூப்போல் சிவந்திருக்கிறது. அதைக் கோபக்குறியாக கவி நினைக்கிறார். கோபத்தில் முகம் சிவப்பது என்பது இயல்பே. பரமசிவன் தேவியை வணங்கி யவுடன் தேவி புன்னகைக்கிறாள். உதடுகள் பிரிந்து வெளுப் பான புன்னகை தெரிகிறது. இதழ்கள் பிரிந்ததும் சிவப்பு நிறம் மங்கி வெண்மை தெரியும். அந்தப் புன்னகையை தேவ தேவி யரின் ஊடலைத் தீர்த்து வைக்க தூது வரும் தோழி என்று கவி உத்ப்ரேக்ஷிக்கிறார். (64)

मुक्तानां परिमोचनं विदधतस्तत्प्रीतिनिष्पादिनी
भूयो दूरत एव धूतमरुतस्तत्पालनं तन्वती ।
उद्भूतस्य जलान्तरादविरतं तद्दूरतां जग्मुषी
कामाक्षि स्मितमञ्जरी तव कथं कम्बोस्तुलामश्नुते ॥

முக்தாநாம் பரிமோசனம்
விததத: தத்ப்ரீதி நிஷ்பாதிநீ
பூயோதூரத ஏவ தூதமருதஸ்த்த்
பாலனம் தந்வதீ |
உத்பூதஸ்ய ஜலாந்தராதவிரதம்
தத்தூர தாம ஜக்முஷீ
காமாக்ஷி! ஸ்மித மஞ்ஜரீதவ கதம்
கம்போ: துலாமச்நுதே ||

தேவி காமாக்ஷியின் புன்னகையானது முக்தர்களுக்கு விடுதலை அளிக்கிறது. மருத்துக்கள் என்றும் தேவதைகளின் பரிபாலனத்தைச் செய்கிறது. ஆயி னும் அறிவில்லாதவர்க ளுக்கு தேவியின் புன்னகை வெகுதூரதத்திலேயே நிற்கிறது. (65)

श्रीकामाक्षि तव स्मितद्युतिझरीवैदग्ध्यलीलायितं
पश्यन्तोऽपि निरन्तरं सुविमलं मान्या जगन्मण्डले ।
लोकं हासयितुं किमर्थमनिशं प्राकाश्यमातन्वते
मन्दाक्षं विरहय्य वस्तुविभवो मन्दारचन्द्रादयः ॥

ஸ்ரீகாமாக்ஷிதவ–ஸ்மித–த்யுதி–ஜ்ஜரீ–
வைதக்த்ய–லீலாயிதம்
பச்யந்நோ(அ)பி நிரந்தரம்–ஸுவிமலம்
மாந்யா ஜகந் மண்டலே |
லோகம் ஹாஸயிதும் கிமர்த்தமநிசம்
ப்ராகாச்ய மாதந்விதே
மந்தாக்ஷம் விரஹய்ய வஸ்துவிபவோ
மந்தார சந்த்ராதய: ||

மந்தாரமாலை கழுத்திலும் சந்திரன் தலையிலும் தேவ, தேவியர் தரித்தி ருப்பதால் அவர்கள் பெருமை கொள்வது பொருத்தமே. ஆயினும் தேவியின் மந்தஹாஸக் கிரணப் பெருக்கின் அழகிய சிறந்த செயல்களைக் கண்ணுற்ற பின் வெட்கமின்றி ஏன் தான் உலகத்தோர் கண்டு சிரிக்கும்படி சந்திரன் போன்றோர் வெளிவருகிறதோ? உலகத்தில் சிலர் தன்னையே அம்பாள் என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். சிலர் என்னிடமே அம்பாள் இருக்கிறாள் என்றும் கூறுகிறார் கள். அவர்களுக்காகத்தான் மூககவி இந்தப்பாடலைச் செய் தார் போலும். ஆயினும் நிஜமான அம்பாள் ஒருநாள் கூறி னார்கள். தான் அம்பாளாக இருப்பவர், தன்னை அம்பாள் என்று ஒருநாளும் கூறிக்கொள்ள மாட்டார்கள். (66)

क्षीराब्धेरपि शैलराजतनये त्वन्मन्दहासस्य च
श्री कामाक्षि वलक्षिमोदयनिधेः किञ्चिद्भिदां ब्रूमहे ।
एकस्मै पुरुषाय देवि स ददौ लक्ष्मीं कदाचित्पुरा
सर्वेभ्योऽपि ददात्यसौ तु सततं लक्ष्मीं च वागीश्वरीम् ॥

க்ஷீராப்தேரபி சைலராஜதனயே!
த்வந்–மந்த ஹாஸஸ்ய ச
ஸ்ரீகாமாக்ஷி! வலக்ஷிமோதயநிதே:
கிஞ்சித் பிதாம் ப்ருமஹே |
ஏகஸ்மை புருஷாய தேவி ஸததௌ
லக்ஷ்மீம் கதாசித் புரா

ஸர்வேப்யோ(அ)பி ததாத்யஸௌ

து ஸததம் லக்ஷ்மீம் ச வாகீச்வரீம் ||

பர்வத ராஜகுமாரியான ஸ்ரீகாமாக்ஷி தேவியின் புன்சிரிப்புக்கும், வெண்மையின் தோற்றத்திற்கே இருப்பிடமான பாற் கடலுக்கும் என்ன பேதம் என்று பார்ப்போம். அந்தப் பாலாழி முன்பு ஒரு சமயம் ஒரு புருஷனுக்கு அதாவது விஷ்ணுவுக்கு பூமகள் என்னும் லக்ஷ்மியை அளித்தது. தேவியின் இப்புன்ன கையோ எல்லோருக்கும் லக்ஷ்மி என்னும் சம்பத்துக்களையும், ஸரஸ்வதி என்ற உயர்ந்த வாக்கையும் கொடுத்தருளுகிறது. (பொன்னோடு வாணி என்போர் இருவரும் பொருணற்கல்வி, தன்னோடு அருளும் திறநின் குற்றே வலைத் தாங்கி நின்ற, பின்னோ வலததன் முன்னோ தெளிந்திடப் பேசுக நீ, மன்னோடெழிலொற்றியூர் வாழ்வடிவுடை மாணிக்கமே.) (வடிவுடைமாணிக்கமாலை) (வள்ளலார்) (67)

श्रीकाञ्चीपुररत्नदीपकलिके तान्येव विश्वान्तरे

चाकोराणि चराचरेश्वरि परं धन्यानि मन्यामहे ।

कम्पातीरकुटुम्बचङ्क्रमकलाचुञ्चूनि कामाक्षि ते

नित्यं यानि मृदुस्मितेन्दुमहसां आस्वादं आतन्वते ॥

ஸ்ரீகாஞ்சீபுர ரத்ன தீப கலிகே!

தாந்யேவ விச்வாந்தரே

சாகோராணி சராசரேச்வரி!

பரம்தந்யாநி மன்யாமஹே |

கம்பாதீர—குடும்ப—சங்க்ரம—கலா

சூஞ்சூநி காமாக்ஷி!தே

நித்யம் யாநிம்ருது—ஸ்மிதேந்து—

மஹஸாமா ஸ்வாதமாதந்வதே ||

ஸ்ரீகாஞ்சீபுர மணிவிளக்குச் சுடரான ஸகல ஜகதீச்வரி யாகிய காமாக்ஷித் தாய் நடமாடும் பாக்யம் பெற்ற சகோரப் பக்ஷிகள் தேவியின் புன்சிரிப்பென்னும் சந்திரனின் ஒளி களைச் சுவைக்கும் பெறும்பேறு பெற்றவை. சாகோராணி என்று ஸ்ரீகாமாக்ஷியின் பக்கத்தில் எப்போதும் இருந்து கொண்டு தேவியின் மந்தஸ்மிதத்தின் அம்ருத கிரணங்க ளால் ஸதா அமிழ்த்தப்பட்டு அழியாப் பரமானந்தத் தில் இருக்கும் அம்பிகையின் பக்தர்களைக் குறித்து இந்தப் பாடல் உள்ளது. (68)

शैत्यप्रक्रममाश्रितोऽपि नमतां जाड्यप्रथां धूनयन्
रागव्यञ्जनपेशलोऽपि गिरिजे वैमल्यमुल्लासयन् ।
लीलालापपुरःसरोऽपि सततं वाचंयमान्प्रीणयन्
कामाक्षि स्मितरोचिषां तव समुल्लासः कथं वर्ण्यते ॥

சைத்ய-ப்ரக்ரம-மாச்ரிதோ(அ)பி
நமதாம் ஜாட்ய - ப்ரதாம் தூநயத்
ராக-வ்யஞ்ஜந-பேசலோ(அ)பி கிரிஜே
வைமல்ய முல்லாஸயந் |
லீலாலாப-புரஸ்ஸரோ(அ)பி ஸததம்
வாசம்யமாந் ப்ரீணயந்
காமாக்ஷி! ஸ்மிதரோசிஷாம் தவ
ஸமுல்லாஸ: கதம் வர்ண்யதே ||

தேவியின் மந்தஹாஸம் சிவந்த உதடுகளில் தவழ்வதால் அநுராகத்தை (ராகம்-சிவப்பு, ஆசை) வெளிப்படுத்தினாலும், வெண்மையை வளர்த்துக் கொண்டிருப்பதாகவும், அழகிய, விளையாட்டுப் பேச்சுக்களை பேசிக் கொண் டிருந்தாலும் வாக்கெனும் (பேச்சுக்களை அடக்கிய) இந்திரியத்தை அடக் கிய முனிவர்களைத் திருப்தி செய்து கொண்டு விளங்கு கிறது. தேவி அடியார்கள் தன்னைக்கண்டு ஒதுங்கி நில்லா மல் சகஜமாகப் பழகுவதை மிகவும் விரும்புவாள். ஸ்வபாவ மதுரா ல.ஸ.நா. 915 தேவி மதுரமான ஸ்வபாமுடை யவள். இயற்கையாக இனிமையாய் இருப்பவள். எல்லோராலும் விரும்பப்படு பவள். தேவியின் நவாவரண பூஜையில்தேவிக்கு நைவேத்யம் ஸமர்ப்பித்து, பானக நைவேத்யம் செய்த பின் சில மந்திரங்கள்சொல்வதுண்டு. அதாவது தேவி போஜன காலத்தில் சகிகளுடன் ஹாஸ்யமாகப் பேசித் சிரித்துக் கொண்டு, தோழிகளுடன் ஓர் இறுக்கத்தை தளர்த்தி, போஜனம் செய்வதாக உள்ளது. (69)

श्रोणीचञ्चलमेखलामुखरितं लीलागतं मन्थरं
भ्रूवल्लीचलनं कटाक्षवलनं मन्दाक्षवीक्षाचणम् ।
यद्वैदग्ध्यमुखेन मन्मथरिपुं संमोहयन्त्यञ्जसा
श्रीकामाक्षि तव स्मिताय सततं तस्मै नमस्कुर्महे ॥

ச்ரோணீ-சஞ்சல-மேகலா-முகரிதம்
லீலாகதம் மந்தரம்

ப்ரூவல்லீ–சலனம் கடாக்ஷ – வலனம்
மந்தாக்ஷ வீக்ஷாசனம் |
யத்வைதக்த்ய–முகேந மன்மதரிபும்
ஸம்மோஹயந்த்யஞ்ஜஸா
ஸ்ரீகாமாக்ஷி! தவஸ்மிதாய
ஸததம்தஸ்மை நமஸ்குர்மஹே ||

ஸ்ரீகாமாக்ஷி தேவியின் இடையில் அசையும் ஒட்யாண ஒலியுடன் கூடிய மெதுவான அழகிய நடையும், மனோஹர மான புருவக்கொடியின் அசைவும், நாணத்துடன் பார்ப்பதில் தேர்ச்சி பெற்ற கடைக்கண் வீச்சும் எந்தப் புன்னகைத் திறமை மூலமாக மன்மத விரோதியான பரமசிவனை எளிதில் மயக்குகின்றனவோ அந்தப் புன்சிரிப்பிற்கு எப்பொழுதும் நமஸ்காரம் செய்கின்றோம்.
ஸெந்தர்யலஹரி தமிழாக்கம் :

அழகு வெள்ளம்

முழுமதி நிகர்த்த முகம் அருள் பொழிய
முப்புரமெரித்த சிவன் மனம் நெகிழ
தழுவிய இடையில் மேகலை குலுங்க
தாளாநகில் கனம் இடை மெலத்துவள
கழை வில்லுடனே கடிமலர் அம்பும்
கையிலங்குச பாசமும் தரித்து
தொழுதிடும் அடியோர் முன் வந்தருளும்
தேவி என்முன் நீவரவேண்டும். (70)

श्रीकामाक्षि मनोज्ञमन्दहसितज्योतिष्प्ररोहे तव
स्फीतश्वेतिमसार्वभौमसरणिप्रागल्भ्यमभ्येयुषि ।
चन्द्रोऽयं युवराजतां कलयते चेटीधुरं चन्द्रिका
गङ्गा सा च सुधाझरी सहचरीसाधर्म्यमालम्बते ॥

ஸ்ரீகாமாக்ஷி! மநோக்ஞ–மந்த ஹஸித
ஜ்யோதிஷ் ப்ரரோஹேதவ
ஸ்பீத ச்வேதிம ஸார்வபௌம
ஸரணி–ப்ராகல்ப்ய மப்யேயுஷி |

சந்த்ரோ(அ)யம் யுவராஜதாம்
கலயதே சேடீதுரம் சந்த்ரிகா
கங்காஸாச ஸுதாஜரீ ஸஹசரீ
ஸாதர்ம்ய மாலம்பதே ||

ஸ்ரீகாமாக்ஷி தேவியின் மந்தஹாஸம் என்னும் ஜோதிக் கொழுந்து, செழித்த வெண்மையின் மேன்மை கொண்ட அரசாக்ஷியின் காம்பீர்யத்தை அடைந்திருக்கும்போது, அந்த சந்திரனானவன் இளவரசனாகப் பட்டததை அடைகிறான். நிலவு வேலைக்காரியின் பொறுப்பை ஏற்கிறது. கங்கையும், அதன் அமுதப்பெருக்கும் ஸஹசரிகளான உயிர்த்துணைவி களின் முறையைக் கடைப்பிடிக்கின்றன. (71)

ज्योत्स्ना किं तनुते फलं तनुमतामौष्ण्यप्रशान्तिं विना
त्वन्मन्दस्मितरोचिषा तनुमतां कामाक्षि रोचिष्णुना ।
सन्तापोऽपि निवार्यते नववचः प्राचुर्यमङ्कूर्यते
सौन्दर्यं परिपूर्यते जगति सा कीर्तिश्च सञ्चार्यते ॥

ஜ்யோத்ஸ்நா கிம் தநுதே பலம் தநுமதா
மௌஷ்ண்ய – ப்ரசாந்திம் விநா
த்வந்–மந்தஸ்மித–ரோசிஷா தநுமதாம்
காமாக்ஷி ரோசிஷ்ணுநா |
ஸந்தாபோ(அ)பி நிவார்யதே நவ–வச:(ய:)
ப்ராசுர்ய மங்கூர்யதே
ஸௌந்தர்யம்பரிபூர்யதே ஜகதிஸா
கீர்த்திஞ்ச ஸஞ்சார்யதே ||

நிலவானது குளிர்ச்சியை அளிக்கிறது. ஸ்ரீ காமாக்ஷி தேவி யின் ஜ்வலிக்கும் புன்சிரிப்பின் ஒளியோ மக்களின் ஸந்தா பத்தை, எல்லாவிதமான தாபக் கூட்டங்களையும் நிவிருத்தி செய்கிறது. புதிது, புதிதான கற்பனைகளுடன் பேசும் திறமை யையும், வாக்குசாதுர்யத் தையும் கொடுக்கிறது. அழகையும் நிரப்புகிறது. தேவி உபாஸகர்கள் கீர்த்தியிலும் சிறந்து விளங்குவார்கள். இப்படி எந்த விதத்தில் பார்த்தாலும் தேவி யின் மந்தஹாஸம் நிலவை விட உயர்ந்தது என்பதில் ஒரு சம்சயமுமின்றி தேவியின் மந்தஸ்மித அமுதில் நாமும் மூழ்கித்திளைப்போம். (72)

वैमल्यं कुमुदश्रियां हिमरुचः कान्त्यैव सन्धुक्ष्यते
ज्योत्स्नारोचिरपि प्रदोषसमयं प्राप्यैव सम्पद्यते ।
स्वच्छत्वं नवमौक्तिकस्य परमं संस्कारतो दृश्यते
कामाक्ष्याः स्मितदीधितेर्विशदिमा नैसर्गिको भासते ॥

வைமல்யம் குமுதச்ரியாம் ஹிமருச:
காந்த்யைவ ஸந்துக்ஷ்யதே
ஜ்யோத்ஸ்நா–ரோசிரபிப்ரதோஷ–ஸமயம்
ப்ராப்யைவ ஸம்பத்யதே |
ஸ்வச்சத்வம் நவ–மௌக்திகஸ்ய பரமம்
ஸம்ஸ்காரதோ த்ருச்யதே
காமாக்ஷ்யா: ஸ்மித–தீதிதே: விசதிமா
நைஸர்கிகோ பாஸதே ||

அல்லிமலர்களின் அழகிய வெண்மையான மலர்ச்சி மதியின் ஒளியினாலேயே வளர்க்கப்படுகறிது. நிலவின் ஒளியும் ப்ரதோஷ சமயம் என்னும் சாயாங்கால வேளைகளி லேயே ஏற்படுகிறது. புதிய முத்துக்கு உயர்ந்த வெண்மையும் அதைப்பாடம் செய்வதில், சீர்மைப்படுத்துவதாலேயே அந்த முத்துக்கு மேலான தூய்மை காணப்படுகிறது. ஆனால் தேவி காமாக்ஷியின் புன்னகைக் கிரணங்களோ இயற்கையாகவே வெண்மையுடன் விளங்குகின்றது. (73)

प्राकाश्यं परमेश्वरप्रणयिनि त्वन्मन्दहासश्रियः
श्रीकामाक्षि मम क्षिणोतु ममतावैचक्षणीमक्षयाम् ।
यद्भीत्वेय निलीयते हिमकरो मेघोदरे शुक्तिका-
गर्भे मौक्तिकमण्डली च सरसो मध्ये मृणाली च सा ॥

ப்ராகாச்யம் பரமேச்வர–ப்ரணயிநி!
த்வந்–மந்தஹாஸ–ச்ரிய:
ஸ்ரீகாமாக்ஷி! மம க்ஷிணோது மமதா
வைசக்ஷணீ மக்ஷயாம் |

யத்பீத்யேவ நிலீயதே ஹிமகரோ
மேகோதரே சுக்தி கா
கர்ப்பே மௌக்திக – மண்டலீ
சஸரஸோ மத்யே ம்ருணாளீசஸா ||

தேவியின் புன் சிரிப்பு, அதன் ஒளி, வெண்மை ஆகியவற் றிற்கு பயந்து சந்திரன் மேகத்தின் நடுவிலும், முத்துகள் சிப்பிகளுக்குள்ளும், புகழ்பெற்ற தாமரைக் கிழங்கு குளத் தின் நடுவிலேயும் மறைந்து கொள்கின்றதோ அந்த மந்த ஹாஸ ஒளியின் தோற்றம் நமது மமதையை அடியோடு களைய வேண்டும். (74)

हेरम्बे च गुहे च हर्षभरितं वात्सल्यमङ्कूरयत्
मारद्रोहिणि पूरुषे सहभुवं प्रेमाङ्कुरं व्यञ्जयत् ।
आनम्रेषु जनेषु पूर्णकरुणावैदग्ध्यमुत्तालयत्
कामाक्षि स्मितमञ्जसा तव कथंकारं मया कथ्यते ॥

ஹேரம்பேசகுஹேசஹர்ஷ–பரிதம்
வாத்ஸல்ய மங்கூரயத்
மார த்ரோஹினி பூருஷே ஸஹ–புவம்
ப்ரேமாங்குரம் வ்யஞ்ஜயத் |
ஆநம்ரேஷு ஜநேஷு பூர்ண–கருணா–
வைதக்த்ய முத்தாளயத்
காமாக்ஷி! ஸ்மித மஞ்ஜுஸா–தவ கதம்
காரம் மயாகத்யதே ||

தேவி விநாயகரிடமும், ஸுப்ரமண்யரிடமும் மிகுந்த அன்பு கொண்டு சந்தோஷத்துடன் விளங்குகிறாள். மன்மத சத்ரு வான (ஒரு காலத்தில் அப்படியிருந்தார். காமாக்ஷிதேவி ஆவிர்ப்பாவம் ஏற்பட்ட பின் மன்மதன் சிவனை ஜயித்து விட்டதால், பரமேஸ்வரன் காமேஸ்வரன் ஆகிவிட்டார்.) பரம சிவனிடம் இயற்கையாகவே பிரீதி பூண்டு அன்பு கொள்ளுப வளாகவே தேவி விளங்குகிறாள். தன்னை வணங்கும் ஜனங் களிடம் குன்றாத கருணை கொண்டு அன்பைக் கொந்த ளிக்கும் தேவியின் புன்னகையை நம்மால் வர்ணிக்கவே இயலவில்லை. தேவி பரமேச்வரனுடன், தன் இரு புதல்வர் களான கணபதி, ஸ்கந்தனுடன் அமர்ந்த திருக் கோலத்தை படங்களில் காணலாம். (75)

संक्रुद्धद्विजराजकोऽप्यविरतं कुर्वन् द्विजैः सङ्गमं
वाणीपद्धतिदूरगोऽपि सततं तत्साहचर्यं वहन् ।
अश्रान्तं पशुदुर्लभोऽपि कलयन्पत्यौ पशूनां रतिं
श्रीकामाक्षि तव स्मितामृतरसस्यन्दो मयि स्यन्दताम् ॥

ஸம்க்ருத்த–த்விஜ–ராஜகோऽபி
அவிரதம் குர்வந்த்விஜை ஸங்கமம்
வாணீபத்ததி தூரகோऽபி ஸததம்
தம்ஸாஹ சர்யம் வஹந் |
அச்ராந்தம் பசு துர்லபோऽபி
கலயந்பத்யௌ பசூனாம் ரதிம்
ஸ்ரீகாமாக்ஷி! தவ ஸ்மிததாம் ருத–ரஸ–
ஸ்யந்தோ மயி ஸ்யந்ததாம் ||

பிராம்மணர்கள் த்விஜர்கள் என்னும் இருபிறப்பாளர் கள். பற்கள் விழுந்து முளைப்பதால் அதற்கும் இருபிறப்பாளர் என்ற பெயர் பொருந்தும். தேவியின் பற்கள் 16 அக்ஷரங்கள் கொண்ட ஷோடசி 'த்விஜபங்க்தி' இருவரிசைகளாகப் பிரிந்து ஒளிவீசுகிறது. எனவே அவையும் த்விஜர்கள் தான். தேவியின் புன்சிரிப்பு வாணியின் வழிக்கு அப்பாலிருந்தாலும் அதாவது வார்த்தைகளால் குறிப்பிட முடியாதெனினும் வாணியோடு சேர்ந்து வாஸம் செய்கிறது. தேவியை அறிவிலிப் பசுக்களால் அடைய முடியாது. 'வித்யா விஹீன பசு' என்றபடி ஸ்ரீவித்தை. அதில்லாதவர்கள் பசுக்கள் ஆவார்கள். அப்படிப் பட்ட பசுக்களால் அடையமுடியாத தேவி பசுபதியான பரமேச் வரனிடம் மிகுந்த பிரேமையுடன் இருக்கிறாள். (76)

श्रीकामाक्षि महेश्वरे निरुपमप्रेमाङ्कुरप्रक्रमं
नित्यं यः प्रकटीकरोति सहजां उन्निद्रयन्माधुरीम् ।
तत्तादृक्तव मन्दहाससुषमा मातः कथं मानितां
तन्मूर्ध्ना सुरनिम्नगां च कलिकामिन्दोश्च तां निन्दति ॥

ஸ்ரீ காமாக்ஷி! மஹேச்வரே நிருபம
ப்ரேமாங்குர ப்ரக்ரமம்

நித்யம்: ப்ரகடீகரோதி ஸஹஜா
முந்நித்ரயந் மாதுரீம் |
தத்தாத்ருக் தவ மந்தஹாஸ (மஹிமா)
ஸூஷமாமாத: கதம் மாநிதாம்
தந்மூர்த்தா ஸுர. நிம்நகாம் சகலிகா
மிந்தோச்ச தாம் நிந்ததி ||

தேவியின் புன் சிரிப்பின் துளியே சந்த்ரனாகவும், த்ருஷ்டி யின் லேசமே ஸூரியனாகவும் இருப்பதாகச் சொல்வர். பரமேஸ் வரனின் சிரசால் வெகு மானிக்கப்பட்ட தேவநதியான கங்கை யையும், அவர் தலையில் சூடிக் கொண்ட சந்திரனின் கலை யையும் தேவியின் புன்னகை ஏன் இதழ்கிறது? பரமேச்வரன் தேவியின் ப்ரேமைக்கு உரியவர்; அவர் தலை மேல் தூக்கி வைத்துக் கொண்ட கங்கை, பிறை நிலா ஆகியவற்றை தேவி யின் புன்னகை ஏன் நிந்திக்க வேண்டும்? என்று கவி அதிச யப்படுகிறார். (77)

ये माधुर्यविहारमण्डपभुवो ये शैत्यमुद्राकराः
ये वैशद्यदशाविशेषसुभगास्ते मन्दहासाङ्कुराः ।
कामाक्ष्याः सहजं गुणत्रयमिदं पर्यायतः कुर्वतां
वाणीगुम्भनडम्बरे च हृदये कीर्तिप्ररोहे च मे ॥

யேமாதுர்ய–விஹார மண்டபபுவோ யே
சைத்ய முத்ரா கரா:
யே வைசத்ய–தசா– விசேஷ
ஸுபகாஸ்தேமந்தஹாஸாங்குரா: |
காமாக்ஷ்யா: ஸஹஜம்
குணத்ரயமிதம் பர்யாயத: குர்வதாம்
வாணீ–கும்பந–டம்பரே சஹ்ருதயே
கீர்த்தி ப்ரரோஹேசமே ||

எந்த புன்சிரிப்புக்கள் மாதுர்யம் என்ற இனிமையின் விளையாட்டு மண்டபங்களோ, அந்த மந்தஹாஸம் குறை வில்லாத குளிர்ச்சிக்கு இருப்பிடமோ, எந்தப் புன்னகை நிர்மலமாக, வெண்மையாக இருப்பதால் அதிக அழகு பெற்றுள்ளதோ, அந்த காமாக்ஷியின் இளநகை என்ற மந்த ஹாஸாங்குரங்கள்

இனிமை, தண்மை, வெண்மை என்ற இம்மூன்று குணங்களையும் முறையே எனது கவிதையிலும் (என்னைக் கவிஞனாக்கவும், காவியங்கள் புனையவும் வைக்க வேண்டும் என்பதும் காமாக்ஷி தாசர்கள் அப்படித்தான் இருப்பார்கள் என்பதும் தெளிவு; துணிபு) உள்ளத்திலும், புகழின் வளர்ச்சியிலும் இருக்கச் செய்ய வேண்டும் என்று நாம் தேவியிடம் பிரார்த்திப்போம். (78)

कामाक्ष्या मृदुलस्मितांशुनिकरा दाक्षान्तके वीक्षणे
मन्दाक्षग्रहिला हिमद्युतिमयूखाक्षेपदीक्षाङ्कुराः ।
दाक्ष्यं पक्ष्मलयन्तु माक्षिकगुडद्राक्षाभवं वाक्षु मे
सूक्ष्मं मोक्षपथं निरीक्षितुमपि प्रक्षालयेयुर्मनः ॥

காமாக்ஷ்யா ம்ருதுள ஸ்மிதாம்சு-நிகரா:
தா(த) க்ஷாந்தகே வீக்ஷணே
மந்தாக்ஷ-க்ரஹிலா ஹிமத்யுதி-
மயூகாக்ஷேப தீக்ஷாங்குரா: |
தாக்ஷ்யம் பக்ஷ்மளயந்து மாக்ஷிக-
குடத்ராக்ஷா பவம் (ஸமம்) வாக்ஷுமே
ஸுக்ஷ்மம் மோக்ஷபதம் நிரீக்ஷிதுமபி
ப்ரக்ஷாளயேயுர்மந: ||

தக்ஷனது பகைவரான பரமசிவனது பார்வை ஏற்படுகையில் மிகுந்த வெட்கம் உண்டாகிறது. வெட்கத்தால் ஓரக் கண்ணால் பார்ப்பது. தலை குனிதல் போல் நடித்தல், பரமேஸ்வரன் தேவியைப் பார்க்காதபோது, தேவி ஆசைதீர அவரை தரிசித்தல் போன்ற காக்ஷிகள் மனக்கண் முன் வருகிறது. சந்திரனிடம் என்ன கோபமோ, அவனது கிரணங்களைத் திரஸ்கரிப்பதில், பழிப்பதில் தீக்ஷை பூண்டு, அதாவது உறுதிபூண்டு செயல்படும் ஸ்ரீகாமாக்ஷி தேவியின் இளநகை ஒளிக் கதிர்க்கூட்டங்கள் எனது சொற்களில் மதுரமாக சொற்றொடர் ஏற்படும்படி தேன், வெல்லம், திராக்ஷை இவைகளின் திறனைத் தளிர்க்கச் செய்ய வேண்டும். மேலும் ஸுக்ஷ்மமான மோக்ஷமார்க்கத்தைப் பார்ப்ப தற்குத் தகுந்தபடி மனதை சுத்தப்படுத்த வேண்டும். (79)

जात्या शीतलशीतलानि मधुराण्येतानि पूतानि ते
गाङ्गानीव पयांसि देवि पटलान्यल्पस्मितज्योतिषाम् ।
एनः पङ्कपरम्परामलिनितां एकाम्रनाथप्रिये
श्रीकामाक्षि परं मदीयधिषणां प्रक्षालयन्तु क्षणात् ॥

ஜாத்யா சீதள சீதளாநி மதுராண்யே
தாநி பூதானிதே
காங்காநீவ பயாம்ஸிதேவி!
படலாந்யல்ப ஸ்மித ஜ்யோதிஷாம் |
ஏந:—பங்க—பரம்பரா—மலிநிதாம்
ஏகாம்ரநாத—ப்ரியே
ஸ்ரீகாமாக்ஷி! பரம் மதீய திஷணாம்
ப்ரக்ஷாளயந்து க்ஷணாத் ||

இமய மலையின், பனி உருகி கங்கையில் ப்ரவாஹம் வருவதால், அந்த ஜலம் மிகவும் தணுப்பாகவே இருக்கும். ஹரித்வார், ரிஷிகேசில் தெரியும். இரட்டைச் சொற்களாக 'சிதள, சீதளானி' என்று கூறுகிறார். அப்படிப்பட்ட தேவியின் மந்தஸ்மிதம் என்ற காந்திக்கூட்டங்கள், பாபமென்னும் சேற் றால் அழுக்கடைந்துள்ள என் புத்தியை நன்றாக பரிசுத்தப் படுத்தட்டும். இனிய குளிர்ந்த ப.ிசுத்தமான கங்கை ஜலம போன்ற மந்தஸ்மிதம் எனது பாபங்களை நீக்கி தூய அறிவை அளித்து தாமதமின்றி நன்றாக' பாவச்சேறுகளை நீக்கி சுத்தம் செய்யவேண்டும். (80)

अश्रान्तं परतन्त्रितः पशुपतिस्त्वन्मन्दहासाङ्कुरैः
श्रीकामाक्षि तदीयवर्णसमतासङ्गेन शङ्कामहे ।
इन्दुं नाकधुनीं च शेखरयते मालां च धत्ते नवैः
वैकुण्ठैरवकुण्ठनं न कुरुते धूलीचयैर्भास्मनैः ॥

அச்ராந்தம். பரதந்த்ரித: பசுபதி: த்வந்
மந்தஹா ஸாங்குரை:
ஸ்ரீகாமாக்ஷி! ததீய—வர்ண—ஸமதா—
ஸங்கேந சங்காமஹே |
இந்தும் நாகதுநீம் ச சேகரயதே
மாலாம் சதத்தே நவை
வைகுண்டை ரவகுண்டனம் சகுருதே
தூளீசயை: பாஸ்மநை: ||

சிவனாருக்கு எல்லாமே வெண்மை. வெள்ளை நிற ஊமத்தை, தும்பை, எருக்கு போன்ற புஷ்பங்கள், ரிஷபம் வாஹனம், வீபூதிப்பூச்சு இதைத் தான் சம்பந்தர் 'தோடுடைய செவியன், விடையேறி யோர்தூவெண்மதி, சூடி, காடுடைய சுடலைப் பொடி பூசி' என்று பாடினார். வெண்மையில் பிரியம் கொண்ட பரமேஸ்வரன் தேவியின் மந்தஸ்மித வெண்மை யால் பரவச மடைந்து கங்கை, சந்திரன், விபூதி போன்ற பொருட்களையும் தன் உடம்பில் (பிரம்ம கபாலமாலை) தரித்தார் போலும். (81)

श्रीकामाक्षि भवप्रिये मृदुवचःसौरभ्यमुद्रास्पदं
प्रौढप्रेमलतानवीनकुसुमं मन्दस्मितं तावकम् ।
मन्दं कन्दलति प्रियस्य वदनालोके समाभाषणे
श्लक्ष्णे कुड्मलति प्ररूढपुलके चाश्लेषणे फुल्लति ॥

ஸ்ரீகாமாக்ஷி! பவப்ரியே ம்ருதுவசஸ்
ஸௌரப்ய முத்ராஸ்பதம்
ப்ரௌட-ப்ரேம-லதா-நவீன-குஸுமம்
மந்தஸ்மிதம் தாவகம் |
மந்தம் கந்தலயதி ப்ரியஸ்ய
வதநாலோகே ஸமா பாஷணே
லக்ஷ்ணே குட்மலதி ப்ரரூட-புளகே
சாச்லேஷணே புல்லதி ||

ம்ருதுவான வார்த்தைகள் நல்ல வாஸனை பொருந்தி யவை என்று குறிப்பிடுகிறார். பின்னால் புஷ்பம் என்று குறிப் பிடுவதால் முன்னாலேயே வாஸனை யைப் பொருத்தி விட்டார். அப்படிப்பட்ட ம்ருது, வாஸனை பொருந்திய நன்கு வளர்ந்த அன்பு என்னும் கொடியின் புதிய புஷ்பம் போல் தேவியின் புன் சிரிப்பு, தன் பர்த்தாவின் முகத்தைப் பார்க் கும்போது தளிர்விடுகிறது. இனிய பேச்சு ஆரம்பிக்கும் போதும் அரும்பு விடுகிறது. தேவி பரமேஸ்வரனை மயிர் சிலிர்க்குமாறு மொட்டாகி நிற்கிறது. அணைத்துக் கொள்ளும் பொழுது அரும்பு மலர்கிறது. (82)

किं त्रैस्रोतसमम्बिके परिणतं स्रोतश्चतुर्थं नवं
पीयूषस्य समस्ततापहरणं किं वा द्वितीयं वपुः ।

किं स्विन्नैकटिकं गिरो मधुरिमाभ्यासाय नव्यं पयः
कामाक्षि स्मरशासनप्रियतमे मन्दस्मितं तावकम् ॥

கிம் த்ரைஸ்ரோதஸ மம்பிகே பரிணதம்
ஸ்ரோதச் சதுர்த்தம் நவம்
பியூஷஸ்ய ஸமஸ்த தாப ஹரணம்
கிம்வா த்வதீயம் வபு : |
கிம்ஸ்விந்நை கடிகம் கிரோ
மதுரிமாப்யாஸாய ந(க)வ்யம் பய:
காமாக்ஷி! ஸ்மர சாஸன–ப்ரியதமே
மந்தஸ்மிதம் தாவகம் ||

தேவியின் மந்தஸ்மிதம் என்ற புன்னகையோ கங்கை, யமுனை, சோண பத்ரா என்ற மூன்று நதிகளினின்றும் நாலா வதான பிரவாஹம் போல் எல்லாப் புண்ணியங்களையும் மனதால் நினைத்தமாத்திரம் அளிக்கிறது. அம்ருதம் போன்ற புன்னகைப் பிரவாஹம்; எல்லாப் பேறுகளையும் வழங்கு கிறது. இனிமைக்கு எடுத்துக் காட்டான 'பால்' என்று கூறு வோம். இனிமையைக் கற்றுக் கொள்ள உனதருகில் வந்த 'பாலோ' என்கிறார். (83)

भूषा वक्त्रसरोरुहस्य सहजा वाचां सखी शाश्वती
नीवी विभ्रमसन्ततेः पशुपतेः सौधी दृशां पारणा ।
जीवातुर्मदनश्रियः शशिरुचेः उच्चाटनी देवता
श्रीकामाक्षि गिरां अभूमिं अयते हासप्रभामञ्जरी ॥

பூஷா வக்த்ர–ஸரோருஹஸ்ய ஸஹ
ஜாவாசாம் ஸகீசாச்வதீ
நீவீ விப்ரம–ஸந்ததே: பசுபதே:ஸௌதீ
த்ருசாம் பாரணா |
ஜீவாது: மதந–ச்ரிய: சசிருசே
ருச்சாடநீ தேவதா
ஸ்ரீகாமாக்ஷி! கிராம பூமிமயதே
ஹாஸ–ப்ரபா மஞ்ஜரீ||

ஸ்ரீ காமாக்ஷி தேவியின் தாமரைப் பூபோன்ற முகத்திற்கு, மந்தஸ்மிதம் என்ற புன்னகை ஸ்வபாவமாகவே ஏற்பட்ட அலங்காரமாகவும், 'வாக்' என்னும் சொற்களுக்கு இணை பிரியாத தோழியாகவும், ச்ருங்கார பாவங்களான விலாஸம், விப்ரமம் முதலிய சேஷ்டைகளுக்கு மத்யஸ்தானமாகவும், மன்மதனுடைய செல்வச் செழிப்பிற்கு உயிரளிக்கும் உரமாகவும், பரமேஸ்வரீன் கண்களுக்கு அம்ருதம் போன்ற உணவாகவும், சந்திரனின் ஒளியை விரட்டும் தேவதையாகவும் தேவியின் மந்தஸ்மித ஒளிக்கூட்டமான பூங்கொத்து வார்த் தைகளால் வர்ணிக்க இயலாத நிலையை அடைகிறது. (84)

सूतिः श्वेतिमकन्दलस्य वसतिः शृङ्गारसारश्रियः

पूर्तिः सूक्तिझरीरसस्य लहरि कारुण्यपाथोनिधेः

वाटी काचन कौसुमी मधुरिमस्वाराज्यलक्ष्मास्तव

श्रीकामाक्षि ममास्तु मङ्गलकरी हासप्रभाचातुरी ॥

ஸூதி: ச்வேதிம கந்தலஸ்ய வஸதி:

ச்ருங்கார ஸார ச்ரிய:

பூர்த்தி: ஸூக்தி–ஜரீ ரஸஸ்ய லஹரி

காருண்ய பாதோநிதே: |

வாடீகாசன கௌஸுமீ மதுரிம–

ஸ்வாராஜ்ய லக்ஷ்ம்யாஸ்தவ

ஸ்ரீகாமாக்ஷி மமாஸ்து மங்கள கரீ

ஹாஸ–ப்ரபா சாதுரீ ||

ஸ்ரீகாமாக்ஷி தேவியின் புன்னகையானது வெண்மை நிறத்திய தளிருக்கு இருப்பிடமாக, வெண்மை நிறத்தை உண்டு பண்ணியதாகவே இருக்கிறது. சிறந்த ச்ருங்காரத் திற்கு இருப்பிடமாகவும், இனிமையான அருவி போன்ற 'அம்ருத ஜரி' போன்ற வாக்குப்பெருக்கும், கருணை என்ற கடலுக்கு அலைபோன்றும், இனிமை என்ற சாம்ராஜ்ய லக்ஷ்மிக்கு ஓர் உயர்ந்த புஷ்பச் சோலை போன்றும் தேவியின் புன்சிரிப்பின் பொலிவு திகழ்கிறது அந்தப் புன்னகை நமக்கு மங்களங்களை அளிக்கட்டும். (85)

उत्तुङ्गस्तनमण्डलस्य विलसल्लावण्यलीलानटी-

रङ्गस्य स्फुटमूर्ध्वसीमनि मुहुः प्राकाश्यमभ्येयुषी ।

श्रीकामाक्षि तव स्मितद्युतिततिर्बिम्बोष्ठकान्त्यङ्कुरैः

चित्रां विद्रुममुद्रिकां वितनुते मौक्तिं वितानश्रियम् ॥

உத்துங்க ஸ்தன மண்டலஸ்ய
விலஸல்லாவண்ய லீலா–நடீ
ரங்கஸ்ய ஸ்புட மூர்த்வஸீமநி
முஹுஃப்ராகாச்ய மப்யேயுஷீ |
ஸ்ரீகாமாக்ஷி தவஸ்மிதத்யுதிததி:
பிம்போஷ்ட காந்த்யக்குரை:
சித்ராம் வித்ரும–முத்திகாம் விதநுதே
மௌக்தீம் விதாநச்ரியம் ||

'ஸ்தனபார தலன் மத்ய பட்ட பந்தவலித்ரயா' ல.ஸ. நாமா 36, 'பருத்தநின் ஸ்தனத்தால் இடை ஓடியா வண்ணம் பொருத்திய பூணொக்கும் உதர மடிப்பு கள்' *(ல.ஸ.நா போற்றி) இப்படியாக சிறந்த சாமுத்திரிகா லக்ஷணத்துடன் தேவி யின் ஸ்தனங்கள் விப்ரமங்கள் (காதல் சேஷ்டை) என்ற நடன மாதின் அரங்கமேடையின் மேல்பக்கத்தில், அடிக்கடி தோன்றும் தேவியின் புன்சிரிப் பின் ஒளித்தொடர், கோவைப் பழம் போன்ற உதட்டின் காந்தியோடு சேர்ந்து பவழக்கொடி யுடன் கூடிய பலநிறமுள்ள முத்துக்களாலான அஸ்மான கிரியின் (மேல் பக்கம் செய்யப்படும் அலங்காரம்) சோபை யைச் செய்கிறது. (86)

जन्तूनां जनिदुःखमृत्युलहरीसन्तापनं कृन्ततः
प्रौढानुग्रहपूर्णशीतलरुचो नित्योदयं बिभ्रतः ।
श्रीकामाक्षि विसृत्वरा इव करा हासाङ्कुरास्ते हठात्
आलोकेन निहन्युरन्धतमसस्तोमस्य मे सन्ततिम् ॥

ஐந்தூனாம் ஜதி துக்க ம்ருத்யுலஹரீ
ஸந்தாபனம் க்ருந்தத:
ப்பெரளடாநுக்ரஹ பூர்ண சீதள. ருசி :
நித்யோதயம் பிப்ரத: |
ஸ்ரீகாமாக்ஷி! விஸ்ருத்வரா இவகரா:
ஹாஸாங்கு ராஸ்தே ஹடாத்
ஆலோகேந நிஹத்யுரந்தமஸ
ஸ்தோமஸ்ய மேஸந்ததிம் ||

ஸ்ரீகாமாக்ஷி தேவியின் பூர்ணமான அநுக்ரஹம் பூர்ண சந்திரனுக்கு ஒப்பானது. பூர்ண சந்திரனின் ஒளிக்கற்றை உடம்பின் தாபத்தைப் போக்குமே தவிர ஸமஸார தாபத்தைப் போக்காது. தேவியின் பூர்ண அனுக்ரஹம் தான் தாபத்தை, காடாந்த காரத்தை நிவர்த்திக்கும. சந்தரனுக்கு வளர்தல் தேய்தல் உண்டு தேவியின் பூர்ணநிலா அனுக்ரஹமோ எல்லாநாளும் இரவும், பகலும், உண்டு, அப்படிப் பட்ட பூர்ணானுக்ரஹம் என்ற நிலவின் கிரணங்கள் போல தேவி யின் புன்னகைக்கிரணங்கள் விளங்குகிறது. (87)

स्वाभाव्यात् तव वक्त्रमेव ललितं सन्तोषसम्पादनं
शम्भोः किं पुनरञ्चितस्मितरुचः पाण्डित्यपात्रीकृतम् ।
अम्भोजं स्वत एव सर्वजगतां चक्षुःप्रियम्भावुकं
कामाक्षि स्फुरिते शरद्विकसिते कीदृग्विधं भ्राजते ॥

ஸ்வாபாவ்யாத் தவ வக்த்ரமேவ லலிதம்
ஸந்தோஷ ஸம்பாதநம்
சம்போ: கிம்புந: அஞ்சித ஸ்மிதருச:
பாண்டித்ய பாத்ரீ க்ருதம் |
அம்போஜம் ஸ்தவ ஏவ ஸர்வ
ஜகதாம் சக்ஷுப்ரியம் பாவுகம்
காமாக்ஷி ஸ்புரிதே சரத்—விகஸிதே
கீத்ருக் விதம் ப்ராஜதே ||

இயற்கையாகவே வனப்பு மிகுந்த ஸ்ரீகாமாக்ஷிதேவியின் முகம் பரமசிவ னுக்கு இன்பத்தை விளைவிக்கிறது. தேவி 'ரதிரூபா' மஹாலாவண்ய ஸேவதி' அவைத்யாங்கி "சாரு ரூபா' சாருஹாஸா'மஹாரதி' 'மோஹினீ' 'ரஞ்ஜனி' 'ரமணலம் படா' 'சம்புமோஹினீ இப்படியாக தேவியின் அழகை வர்ணிக்கும் நாமாக்கள் லலிதா ஸஹஸ்ர நாமாவில் பார்த்தால் பட்டியல் நீண்டு கொண்டே போகும். அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி' என்பார் அபிராமி பட்டர். இப்படிப் பட்ட அழகிய முகமே அழகிய புன்னகையின் திறமைக்கு இருப்பிட மாகச் செய்யப்பட்டுவிட்டால், அது இன்பத்தை வாரிவழங் கும் என்பதைச் சொல்லவா வேண்டும்? புஷ்பங்க ளுக்குத் தலைமையாக விளங்குவது தாமரை என்கலாம். அது இயற்கையிலேயே நமக்கெல்லாம் மிதமான மணத்தை பரப்பிக் கண்களுக்கு இன்பம் தருகின்றது. சரத்காலத்தில் தாமரையின் மலர்ச்சி மிகவும் விகஸித்திருப்பதால் மேன்மை பெற்று விளங்குகிறது. அதுபோல் தேவியின் திருமுகமானது புன்சிரிப்புடன் விளங்கி பரமசிவனுக்கு அதிகமான இன் பத்தை அளிக்கிறது. (88)

पुंभिर्निर्मलमानसैर्विदधते मैत्रीरसं निर्मलं
कर्तुं कर्मलयं च निर्मलतमां कीर्तिं लभन्तेतराम् ।
सूक्तिं पक्ष्मलयन्ति निर्मलगुणां यत्तावकाः सेवकाः
तत्कामाक्षि तव स्मितस्य कलया नैर्मल्यसीमानिधेः ॥

பும்பி: நிர்மல–மாநஸை: விதததே
மைத்ரீ–ரஸம் நிர் மலம்
கர்த்தும் கர்மலயம் சநிர்மலதாம்
கீர்த்திம் லபந்தேதராம் |
ஸூக்திம் பக்ஷ்மலயந்தி நிர்மல–குணாம்
யத்தாவகா: ஸேவகா:
தத் காமாக்ஷி தவஸ்மிதஸ்ய கலயா
நைர் மல்ய–ஸீமாநிதே: ||

தேவி காமாக்ஷியின் அடியார்கள் தூய மனமுடைய மனிதர் களோடு மாசற்ற மாறா நட்புக்கொள்கிறார்கள் என்பதும், வினைகளை ஒழித்து மிகப் பரிசுத்தமான புகழை அடைகி றார்கள் என்பதும் கலக்கமின்றி தெளிவுள்ள அழகிய சொல் லைப் பெருகச் செய்கிறார்கள். இவ்வளவும் நடை பெறுவது தேவியின் மாசற்ற தன்மைக்கு இருப்பிடமான சிரிப்பின் ஒருதிவலை யால் தான். சிரிப்பில் ஒரு கலை யால்தான். (ஒரு பாகத்தால்தான்.) (89)

आकर्षन्नयनानि नाकिसदसां शैत्येन संस्तम्भयन्
इन्दुं किञ्च विमोहयन्पशुपतिं विश्वार्तिमुच्चाटयन् ।
हिंसन्संसृतिडम्बरं तव शिवे हासाह्वयो मान्त्रिकः
श्रीकामाक्षि मदार्तितापतमसो विद्वेषणे चेष्टताम् ॥

ஆகர்ஷந்நய நாநி நாகி ஸதஸாம்
சைத்யேந ஸமஸ்தம் பயந்
இந்தும் கிஞ்ச விமோஹயந் பசுபதிம்
விச்வார்த்தி முச்சாடயந் |

ஹிம்ஸந் ஸம்ஸ்ருதி-டம்பரம் தவ சிவே!
ஹாஸாஹ்வயோ மாந்த்ரிக:
ஸ்ரீகாமாக்ஷி! மதார்த்தி-தாப தமஸோ
வித்வேஷணே சேஷ்டதாம் ||

தேவியின் புன்சிரிப்பை ஓர் மந்திரவாதி என்று இந்தப் பாடலில் சித்த ரிக்கிறார். தேவ லோகத்தில் வசிக்கும் தேவதைகளின் கண்களை ஆக்ர்ஷ ணம், கவருவதாகவும், குளிர்ச்சியினால் சந்திரனை ஸ்தம்பனம், மரத்துப் போகச் செய்வதாகவும், பரமேஸ்வரனை மயங்கும்படி மோஹிக்கச் செய்வதாக வும், உலகத்தோரின் கஷ்டங்களை உச்சாடனம் செய்து விரட்டுவதாகவும் ஜனன, மரணமென்னும் ஸம்ஸாரக் கொடுமையை நாசம் செய்வதாகவும் தேவியின் புன்சிரிப்பு என்ற மந்திரவாதி நம் கஷ்டம், ஸந்தாபம், அக்ஞானம் இவைகளை த்வேஷணம் செய்யப்ரயத்தனப்பட வேண்டும். காமாக்ஷி கையில் உள்ள பஞ்ச பாணங்களும் பஞ்ச பூதங் கள்-பஞ்சதந்மாந்ரங்களாகும். கரும்பு வில்லில் புஷ்ப பாணங்களைப் பூட்டி நம் மேல் செலுத்துவாள். பக்தர்களின் நியாயமான வேண்டுகோள் என்றும் புறக்கணிக்கப் படுவ தன்று. ஜீவனின் மனோபாவப்படி செயல்படுகிறது. தேவியே மந்திரவாதி எனவே அவள் விடும் பாணங்கள் ஆகர்ஷணம், ஸ்தம்பனம், மோஹனம், உச்சாடனம், த்வேஷணம் ஆகிய செயல்களைப் புரிகிறது. மங்களமே வடிவானநம் அன்னை காமாக்ஷியின் கை ஆயுதங்கள் நம்மை அணைப்பவை. அடிப்பவை யல்ல.(90)

क्षेपीयः क्षपयन्तु कल्मषभयान्यस्माकम् अल्पस्मित-
ज्योतिर्मण्डलचङ्क्रमास्तव शिवे कामाक्षि रोचिष्णवः ।
पीडाकर्मठकर्म घर्म समयव्यापारतापानल-
श्रीपाता नवहर्षवर्षणसुधास्रोतस्विनीशीकराः ॥

க்ஷேபீய: க்ஷபயந்து கல்மஷ-பயாநி
அஸ்மாக மல்பஸ்மித
ஜ்யோதிர் மண்டல-சங்க்ரமாஸ்தவசிவே
காமாக்ஷி ரோசிஷ்ணவ: |
பீடா-கர்மட கர்ம-கர்ம-ஸமய-
வ்யாபார-தாபாநல
ச்ரீபாதா: நவ-வர்ஷ-ஹர்ஷண
ஸுதா-ஸ்ரோதஸ்வி நீ சீகரா ||

துன்பத்தையே விளைவிக்கும் கர்மங்கள் என்னும் கோடை காலத்தின செய்கைகளாலுண்டான தாபம் என்னும் அன லுக்கு அழிவைச் செய்வதாக வும், புதிய பொழிவால் களிப்புறச் செய்யும் அம்ருதநதியின் திவலைகளாக விளங்கும் இள நகைக் கூட்டம் அதி சீக்கிரத்தில் எங்களது பாப, பயங்களை அழிக்க வேண்டும். லலிதா ஸஹஸ்ரநாமாவில் 742 முதல் 749 வரை இந்த அனுபவத்தை அடுக்கடுக்காகக் கூறு கிறார்கள். தேவி சம்சாரம் என்னும் காட்டுத்தீயை அணைக் கும் அம்ருதமழை, பாபமென்னும் வனத்தை அழிக் கும் தீ, துர்ப் பாக்யம் என்ற பஞ்சுக்களை சுழற்காற்றாக சுழற்றும் காற்று, மூப்பு என்னும் இருட்டை விரட்டும் சூரியன், பாக்யம் எனும் கடல் பொங்க நிலவாக இருப்பவள், பக்தர்கள் மனதில் கார்மேகம் கண்ட மயில் போல் குதூகலிப்பு, ரோகம் என்னும் மலையை உடைக்கும் வஜ்ராயுதம், கடைசியாக ம்ருத்யு என்னும் மரத்தை வெட்டும் கோடரி; தேவி நம்மை எல்லா நிலைகளிலும் காப்பாற்றுகிறாள். (91)

श्रीकामाक्षि तव स्मितैन्दवमहः पूरे परिस्फूर्जति
प्रौढां वारिधिचातुरीं कलयते भक्तात्मनां प्रातिभम् ।
दौर्गत्यप्रसरास्तमः पटलिकासाधर्म्यमाबिभ्रते
किं किं कैरवसाहचर्यपदवीरीत्यां न धत्ते पदम् ॥

ஸ்ரீகாமாக்ஷி தவஸ்மிதைந்தவ
மஹ பூரே பரிஸ்பூர்ஜதி
ப்ரௌடாம் வாரிதி சாதுரீம் கலயதே
பக்தாத்மநாம் ப்ராதிபம் |
தௌர்கத்ய–ப்ரஸரா தம: படலிகா–
ஸாதர்ம்ய மாபிப்ரதே
கிம் கிம்கைரவ–ஸாஹசர்ய
பதவீரீத்யாம் நதத்தே பதம் ||

ஸ்ரீதேவியின் காமாக்ஷியின் புன்சிரிப்பு என்னும் சந்திர ஒளியானது அடியார்களின் மேல் வீசும்போது, அவர்களின் அறிவு, ப்ரதிபை நிலவைக் கண்ட கடல் போல் பொங்கிப் பொழிகிறது. அதே சமயம் நிலவைக் காணும்போது ஆம்பல் கூம்புவது போல் தேவியின் புன்சிரிப்பு துரதிருஷ் டங்கள் பெருக்கை விரட்டுகிறது. ஒரே நிலவு இப்படியாக இரண்டு வழியிலும் செயல்படுகிறது. தேவியின் புன்சிரிக்கு நமக்கு நல்ல வற்றைச் செய்து அல்லாததை விலக்கி வைக்கிறது. தேவியின் கருணை அளவற்றது. (92)

मन्दारादिषु मन्मथारिमहिषि प्राकाश्यरीतिं निजां
कादाचित्कतया विशङ्क्य बहुशो वैशद्यमुद्रागुणः ।
श्रीकामाक्षि तदीयसङ्गमकलामन्दीभवत्कौतुकः
सातत्येन तव स्मिते वितनुते स्वैरासनावासनाम् ॥

மந்தாராதிஷு மன்மதாரி மஹிஷி!
ப்ரகாச்யரீதிம் நிஜாம்
காதாசித்கதயா விசங்க்ய பஹுசோ
வைசத்ய–முத்ராகுண |
ஸ்ரீகாமாக்ஷி ததீய–ஸங்கம கலா
மந்தீபவத் கௌதுக:
ஸாதத்யேந தவஸ்மிதே விதநுதே
ஸ்வைராஸநா வாஸநாம் ||

மன்மதனின் எதிரியான பரமசிவனின் பட்டத்து ராணி ஸ்ரீகாமாக்ஷி தேவியின் புன்சிரிப்புக் காந்திக்கூட்டங்கள், மந்தாரம் போன்ற மலர்களில் தனது வெண்மையின் வெளியீடு, சிறப்பு அம்மலர்களுடன் சேர்வதில் ஆர்வம் சிலசமயங்களில் குன்றிவிடுவதால் தேவியிடம் எப்போதும் குடிகொண்டிருக்கிறது. தேவியின் புன்சிரிப்பில் வெண்மை நிறம் ஸ்திரமாக கவலை யற்று தொடர்ந்து வசித்து வருகிறது. (93)

इन्धाने भववीतिहोत्रनिवहे कर्मौघचण्डानिल-
प्रौढिम्ना बहुलीकृते निपतितं सन्तापचिन्ताकुलम् ।
मातर्मां परिषिञ्च किञ्चिदमलैः पीयूषवर्षैरिव
श्रीकामाक्षि तव स्मितद्युतिकणैः शैशिर्यलीलाकरैः ॥

இந்தானேபவ–வீதிஹோத்ர–நிவஹே
கர்மௌக சண்டா நில
ப்ரௌடிம்நா பஹுளீக்ருத நிபநிதம்
ஸந்தாப சிந்தாகுலம் |

மாதர்மாம் பரிஷிஞ்ச கிஞ்சிதமலை:
பீயூஷ–வர்ஷைரிவ
ஸ்ரீகாமாக்ஷி தவஸ் மித த்யுதி–கணை:
சைசிர்ய–லீலா கரை:||

அன்னையான ஸ்ரீகாமாக்ஷி தேவியிடம் வேண்டுவோமாக: ஜ்வலிக்கின்றதும், வினைக்கூட்டமென்னும் கொடுங்காற்றில் வலிமையால் அதிகப்பட்டதுமான ஸம்ஸார மென்னும் அனற்குவியலில் விழுந்தவனும், ஸந்தாபம், கவலை இவைகளால் கலங்கியவனுமான என்னை மாசற்றவைகளும், அமுத மழை போன்றவைகளும், குளிர்ச்சியின் விலா ஸத்திற்கு இருப்பிடமானவைகளுமான தேவியின் புன்ன கையின் ஒளித்திவலைகளால் என்னைச் சற்று நனைப் பாயம்மா! (94)

भाषाया रसनाग्रखेलनजुषः शृङ्गारमुद्रासखी-
लीलाजातरतेः सुखेन नियमस्नानाय मेनात्मजे ।
श्रीकामाक्षि सुधामयीव शिशिरा स्रोतस्विनी तावकी
गाढानन्दतरङ्गिता विजयते हासप्रभाचातुरी ॥

பாஷாயா: ரஸநாக்ர கேலன
ஜுஷ:ச்ருங்கார முத்ராஸகீ
லீலாஜாத–ரதே ஸுகேந நியம
ஸ்நாநாய மேநாத்மஜே |
ஸ்ரீகாமாக்ஷீ! ஸுதாமயீவ
சிசிராஸ்ரோதஸ்வீ தாவகீ
காடாநந்த தரங்கிதா விஜயதே
ஹாஸ ப்ரபா–சாதுரீ ||

மேனையின் திருக்குமாரியான ஸ்ரீகாமாக்ஷி தேவியின் மந்தஹாஸப் புன்னகை அமுதம் நிரம்பிய குளிர்ச்சியான ஒரு நதியைப் போல் காண்கிறது. ‘அவிச்ராந்தம் பத்யுர் குணகண கதாம் ரேடனஜபா ஜபா புஷ்பச்சாயா தவ ஜனனி ஜிஹ்வா ஜயதிஸா’ ஸௌந்தர்யலஹரி (64) தேவியின் நாக்கு, பதியான பரமேஸ்வரரின் குணாதிசயங்களை இடைவிடாமல் பேசிக் கொண்டிருப்பதால், அதையே ஜபம் போல் செய்வ தால் நாக்கு நுனியின் வசிக்கும் வெண்மை நிற ஸரஸ்வதி சிவப்பு நிறமாக மாறிவிடுகிறாள்.

பரமேஸ்வரனைப் பற்றிப் பேசுவதால் ச்ருங்கார ரஸததுடன் கூடிய பேச்சு ஒரு தோழி போல், அந்த அழகான செய்கைகளில் ஆவல் கொண்ட 'வாக்' என்னும் ஸரஸ்வதி தேவிக்கு நியம ஸ்நானம் செய்வதற் காக அமைந்த ஆழமான, அமுதினிய, குளிர்ச்சியான ஒரு நதிபோல் தேவியின் புன்சிரிப்பு விளங்குகிறது. (95)

सन्तापं विरलीकरोतु सकलं कामाक्षि मच्चेतना
मज्जन्ती मधुरस्मितामरधुनीकल्लोलजालेषु ते ।
नैरन्तर्यमुपेत्य मन्मथमरुल्लोलेषु येषु स्फुटं
प्रेमेन्दुः प्रतिबिम्बितो वितनुते कौतूहलं धूर्जटेः ॥

ஸந்தாபம் விரளீகரோது ஸகலம்
காமாக்ஷி! மச்சேதநா
மஜ்ஜந்தீ மதுர ஸ்மிதாமர துநீ
கல்லோல ஜாலேஷுதே |
நைரந்தர்ய முபேத்ய மன்மத மருல்
லோலேஷு யேஷு ஸ்புடம்
ப்ரேமேந்து: ப்ரதி பிம்பிதோ விதநுதே
கௌதூஹலம் தூர் ஜடே: ||

ஸ்ரீகாமாக்ஷி தேவியின் புன்சிரிப்பு என்ற அலைகளில், மன்மதன் (அவன் அனங்கன்; அவனுக்குத் தென்றலே தோழன் மந்தமாருதமே தேர், புஷ்பங் களே பாணம்) என்ற காற்றில் அசைந்தாடும் நிலவு, நிலவு அசைந்தாடினாலும் தேவியின் புன்னகையில் இடைவிடாமல் பிரதிபலிக்கிறது. காதலர்களுககு காமனும், ஸோமனும் ஸாமனும் வரப்ஸாதம் காமனுககு ஸோமன் துணபுரிவது வழக்கம். எனவே அன்பு, காதல் எனும் சந்திரன் அந்தப் புன்னகை என்னும் ஸ்படிகம் போன்ற நதியில் பிரதி பிம்பித்து சிவனாரின் ஆசையை வளர்க்கி றார்கள். ஏற்கனவே சிவன் நெற்றிக் கண்ணால் எரிந்துபோன வன்மங்களை, இப்பொழுது காமன் நன்றாகவே உபயோகப்படுத்துகிறான். (96)

चेतःक्षीरपयोधिमन्थनचलद्रागाख्यमन्थाचल-
क्षोभव्यापृतिसम्भवां जननि ते मन्दस्मितश्रीसुधाम् ।
स्वादं स्वादमुदीतकौतुकरसं नेत्रत्रयी शाङ्करी
श्रीकामाक्षि निरन्तरं परिणमत्यानन्दवीचीमयी ॥

சேத: க்ஷீர பயோதி மந்தந
சலத்–ராகாக்ய மந்தாசல
க்ஷேபா வ்யாப்ருதி–ஸம்பவாம்
ஜனனி! தே மந்தஸ்மித ஸ்ரீஸுதாம் |
ஸ்வாதம் ஸ்வாத முதீத கௌது
கரஸம் (ஸா) நேத்ர த்ரயீ சாங்கரீ
ஸ்ரீகாமாக்ஷி! நிரந்தரம்
பரிணமத்யாநந்த வீசீமயீ ||

'ஸ்ரீகாமாக்ஷி! நிரந்தரம் பரிண மத்யாநந்த வீசி மயீ.' தேவி யின் மனமே பாலாழி; தேவியின் மனத்தில் பொங்கும் காதலை மறைமுகமாகக் குறிப்பிடுகிறார். ஏனெனில் ஸ்திரிகள் ஆசையை நாணத்தில் மறைத்து விடுவார்கள். ஆசை என் னும் மந்திரமலையை மத்தாக்கிக் கடையும் போது வெண்ணை போல் திரண்டு வரும் அமுதமே தேவியின் உதடுகளில் மந்தஸ்மிதம் என்ற புன்னகை ஒளியாகும். இந்த அமுதத்தை முக்கண்ணர் மூன்று கண்களாலும் பருகுகிறார். நெற்றிக் கண்ணால் ஒரு நாள் காமனைக் காய்ந்த பாவம், பழி நீங்க தேவதேவன் மூன்று கண்களாலும் அமுதபானம் செய்கிறார். அமுதத்தை எடுத்து அருந்துவதற்குக் கொஞ்சம் நேரம் பிடிக்கும்; அதனால் சிவானாருக்கு அவசரம், மூன்று கண்களும் ஆவலுடன் இன்ப அலைகளாகி விடுகின்றன தானே பாற்கடலின் அலைகளாகி அமுதம் என்னும் புன்னகையை வேண்டிய மட்டும் பருகுகிறார். (97)

आलोके तव पञ्चसायकरिपोः उद्दामकौतूहल-
प्रेङ्खन्मारुतघट्टनप्रचलिताद् आनन्ददुग्धाम्बुधेः ।
काचिद्वीचिरुदञ्चति प्रतिनवा संवित्प्ररोहात्मिका
तां कामाक्षि कवीश्वराः स्मितं इति व्याकुर्वते सर्वदा ॥

ஆலோகே தவ பஞ்சஸாயகரிபோ:
உத்தாம கௌதூஹல
ப்ரேங்கந் மாருத–கட்டன–ப்ரசலிதா
நந்த துக்தாம் புதே:
காசித் வீசிருதஞ்சதி ப்ரதிநவா |
ஸம்வித் ப்ரரோஹாத்மிகா

தாம் காமாக்ஷி! கவீச்வரா: ஸ்மிதமிதி
வ்யா குர்வதே ஸர்வதோ ||

தேவியின் வடிவழகை வார்த்தைகளுககுட்படுத்துவது என்பது சிரமம் தான். அதுவும் இந்தப்பாடலில் சிவனின் பார்வைபடும் போது தேவிக்கு உத்ஸா ஹமென்ற காற்றின் மோதலால் பாலாழி அசைகிறது. அந்த அசைவில் பிறக்கும் ஆனந்தமே ஞானத்தின் அங்கு ரமாகிற புதிதாக ஓர் அலை அதையே கவிகள் அம்மையின் புன்னகை என்கிறார்கள். இவ்வளவு நிகழ்ச்சிகளும் நடைபெற காரணமானவர் ஒரு காலத்தில் பஞ்ச பாணனை எரித்த பரமசிவன் இதை ஒவ் வொரு பாடலிலும் காண்கிறோம். நிகழ்ச்சி நிரலில் முதலில் உள்ள பெயர் பரமசிவனுடையது. இதை நாம் வெகுவாக மனதில் கொள்ள வேண்டும். (98)

सूक्तिः शीलयते किमद्रितनये मन्दस्मितात् ते मुहुः
माधुर्यागमसंप्रदायं अथवा सूक्तेस्तु मन्दस्मितम् ।
इत्थं कामपि गाहते मम मनः सन्देहमार्गभ्रमीं
श्रीकामाक्षि न पारमार्थ्यसरणिस्फूर्तौ निधत्ते पदम् ॥

ஸூக்தி: சீலயதே கிமத்ரி–தநயே!
மந்தஸ்மிதாத் தேமுஹு
மாதுர்யாகம–ஸம்ப்ரதாய மதவா
ஸூக்தே ஸ்து (ர்நு) மந்தஸ்மிதம் |
இத்தம் காமபி காஹதே மம மன:
ஸந்தேஹ மார்கப்ரமீம்
ஸ்ரீகாமாக்ஷி ந பாரமார்த்ய ஸரணி–
ஸ்பூர்த்தௌ நிதத்தே பதம் ||

மலைமகளான ஸ்ரீ காமாக்ஷி தேவியிடம் வினவுகிறார்! இனிமை என்னும் சாஸ்திரத்தின் கருத்தை உனது அழகிய மொழி புன்னகையினின்று முறைப்படி கற்கின்றதா? அல்லது சொல்லிலிருந்து புன்முறுவல் கற்கின்றதா? மிகவும் சந்தேகத் தில் மனம் சுழலுகின்றது. உண்மையான வழி விளங்குவதில் ஓர் அடிகூட எடுத்து வைக்க இயலவில்லை. தேவி 'மஹா மாயை' வெகு நேரம் அவள் நினைவிலேயே மூழ்கி இருந் தால், பிரமையும் நீங்கும், பிரபையும் தோன்றும். அந்தநிலை அடைவதற்கு அருந்தவம் இயற்ற வேண்டும். தவம் என்றால் வீட்டைவிட்டு [illegible] என்றெல்லாம் பொருள்படாது. 'தனித்திரு' 'விழித்

திரு' 'பசித்திரு' இந்த மூன்று 'திரு'வும் அனுபவம் ஆனால் எல்லாத்'திரு'க்க ளையும் அடையலாம். (99)

क्रीडालोलकृपासरोरुहमुखीसौधाङ्गणेभ्यः कवि-
श्रेणीवाक्परिपाटिकामृतझरीसूतीगृहेभ्यः शिवे ।
निर्वाणाङ्कुरसार्वभौमपदवीसिंहासनेभ्यस्तव
श्रीकामाक्षि मनोज्ञमन्दहसितज्योतिष्कणेभ्यो नमः ॥

க்ரீடா–லோல–க்ருபா–ஸரோருஹ–முகீ
ஸெளதாங்ககணேப்ய கவி
ச்ரேணீ வாக்பரிபாடி காம்ருத ஜரீ
ஸூதி–க்ருஹேப்ய: சிவே |
நிர்வாணாங்குர–ஸார்வபௌம–பதவீ
ஸிம்ஹாஸ னேப்யஸ்தவ
ஸ்ரீகாமாக்ஷி! மநோக்ஞ–மந்த ஹஸித
ஜ்யோதிஷ்கணேப்யோநம: ||

மங்களந்தரும் ஸ்ரீகாமாக்ஷி தேவியின் மந்தஹாஸ ஒளித்தி வலைகளுக்கு நமஸ்காரம், விளையாட்டில் ஈடுபட்ட கருணை என்ற அழகி, தாமரை முகத் தாளுக்கு, (தேவி காமா க்ஷியே பாலாம்பாள் ஆகிறாள்) உப்பரிகை கொண்ட மாளிகை யும், கவிகளுடைய கூட்டத்தின் வாக்கு ஸாமர்த்யமென்கிற அம்ருதப் பெருக்குக்கு உற்பத்தி ஸ்தானங்களாகவும், மோக்ஷ ஆரம்பமாகிற ஸாம்ராஜ்ய வழியின் ஸிம்ஹாஸனங்கள் போன்ற தேவியின் மனதைக் கவரும் மந்த ஹாஸத்தின் ஒளித்தி வலைகளுக்கு நமஸ்காரம். (100)

आर्यामेव विभावयन्मनसि यः पादारविन्दं पुरः
पश्यन्नारभते स्तुतिं स नियतं लब्ध्वा कटाक्षच्छविम् ।
कामाक्ष्या मृदुलस्मितांशुलहरीज्योत्स्नावयस्यान्वितां
आरोहत्यपवर्गसौधवलभीं आनन्दवीचीमयीम् ॥

ஆர்யாமேவ விபாவயந்
மநஸிய: பாதார விந்தம் புர:

பச்யந்நாரபதே ஸ்துதிம் ஸநியதம்
லப்த்வா கடாக்ஷச்சவிம் |
காமாக்ஷ்யா ம்ருதுலஸ் மிதாம்சுல ஹரீ
ஜ்யோத்ஸ்நாவயஸ் யாந் விதாம்
ஆரோஹத்யபவர்க ஸௌத வலபீம்
ஆனந்த வீசி மயீம் ||

எந்தப் புண்ணியவான் ஆர்யை என்னும் அம்பிகையையே தியானித்து, கமலத்திற்கு ஒப்பான அவளுடைய திருவடியை எதிரில் பார்த்துக்கொண்டு, ஸ்துதியை ஆரம்பிக்கிறானோ அவன் நிச்சயமாய் அவன் காமாக்ஷியின் கடைக் கண் பார்வையை அடைந்து இளநகையின் ஒளிப் பெருக்காகும் நிலவு என்னும் தோழியுடன் கூடியதும், ஆனந்த அலைகளின் மயமு மான மோக்ஷ மென்னும் மேல்மாடியில் ஏறி உலவுகிறான். இந்தச்லோக பாராயணபலன் மறுபடி வற்புறுத்தப்படு கிறது. ஆர்யாசதகத்தை மனதில் கொண்டு, பாதார விந்த சதகத்தை படித்து, ஸ்துதி சதகத்தை எவன் படிகக ஆரம்பிக் கிறானோ அவன் தேவி யின் கடாக்ஷத்தின் ஒளி போன்ற கடாக்ஷ சதகத்தைப் படித்து, தேவியின் புன்னகை ஒளிக்கு தோழி போன்ற மந்தஸ்மித சதகத்தைப் படித்து ஆனந்த மயமான மோக்ஷத்தை அடைகிறான். (101)

इमां पञ्चशतीं यस्तु नित्यं भक्तियुतः पठेत् ।
श्री कामाक्षी भवेत् तस्य प्रसन्ना चं वरप्रदा ॥
இமாம் பஞ்சசதீம் யஸ்து நித்யம் பக்தியுத: படேத் |
ஸ்ரீகாமாக்ஷி பவேத் தஸ்ய ப்ரஸந்தா சவரப்ரதா ||

இந்த பஞ்ச சதியை எவர் நித்யம் பக்தியுடன் படிக்கிறாரோ, அவர்கள் ஸ்ரீ காமாக்ஷிதேவியின் தரிசனம் பெற்று சகல வரங்களையும் அடைவார்கள்.

श्री काञ्ची नगरी कामकोटि पीठाधिपः प्रभुः ।
जीयात् जगद्गुरुः सैषः श्री मूकेन्द्रसरस्वती ॥
ஸ்ரீகாஞ்சி நகரீ காமகோடி பீடாதிப: ப்ரபு:|
ஜீயாத் ஜகத்குரு: ஸைஷ ஸ்ரீ மூகேந்த்ர ஸரஸ்வதீ ||

ஸ்ரீகாஞ்சீநகர காமகோடி பீடாதி பதியும் பிரபுவும், ஜகத்குருவுமான அந்த ஸ்ரீமூகேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள், ஸர்வோத் க்ருஷ்டராக விளங்க வேண்டும்.

சிவமயம்

# SRI MOOKA PANCHASHATHI

## (SANSKRIT - TAMIL WITH MEANING)




# GIRI

ISBN No. : 81-7950-386-0







Price Rs.99.00